சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இப்புத்தகத்திலடங்கியவை.







உ

சிவமயம்.

# பிரகடனவிஞ்ஞாபனம்.



| | | ரூ. | அணா. |
|---|---|---|---|
| ௧ | சிவஞானபோதமாபாடியம். | ௨ | 0 |
| ௨ | திருக்கோவையாருண்மை. | 0 | ௮ |
| ௩ | பாரதம் ஆதிபருவவுரை. | ௩ | 0 |
| ௪ | சூடாமணிநிகண்டு *௧௨ தொகுதி. | ௧ | 0 |
| ௫ | மேற்படி ௧0 தொகுதி. | 0 | ௧௨ |
| ௬ | மேற்படி ௧௧ வது ௧௨ வது. | 0 | ௪ |
| ௭ | திருவாதவூரடிகள்புராணமூலம். | 0 | ௪ |
| ௮ | விநாயகபுராணவுரை. விமலர்விநாயகரருள்பெறுபடலம் வரையும் உள்ளது. | ௨ | 0 |

முதலிரண்டு தொகுதியும் பெயர்ப்பொருளோடும் பன்னிரண்டாவது உரையோடும் உயர்ந்த ௬0 பவுண்டுக் கிளேஸ்காகிதத்தில் பதிப்பிக்கப்பட்டன.

இவை சென்னபட்டணம் ஆயலூர் முத்தையாமுதலிவீதி ௩௭ வது கதவிலக்கமுள்ள சைவவித்தியாநுபாலனயந்திரசாலையில் விற்கப்படும். வீ. பி. மூலமாகவும் அனுப்பப்படும்.

இப்பொழுது அச்சிற் பதிப்பிக்கத் தொடங்கிய நூல்கள் தேவாரம் முதலிய பன்னிருதிருமுறைகள்.

---

☞ கைச்சாத்தனுப்பினோர் இன்னுங் காலம் நீட்டிக்கல்தகாதெனத் தெரித்து மிக நெருக்கினமையால் இதிற் சேர்த்தற்காக எழுதி முடித்த அநேகவிஷயங்களைப் பதிப்பியாது நிறுத்திவிட்டேன்.

இங்ஙனம்.

சுவாமிநாதபண்டிதர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.



# பொல்லாப்பிள்ளையார்.



நான்கடியும் ஒப்பனவாய்வந்த கொச்சக ஒருபோகு.

தடந்தாட் கொத்த தமனியச் சிலம்பு
படந்தாழ் கச்சைப் பாம்பொடு * தழீஇ
வென்றாவி நந்தாதை வியந்துகைத் துடிகொட்ட
நின்றாடும் பொல்லார்தா ளிணைந்தார்தா முய்ந்தாரே.

தழீஇ தழுவ என்பதன்றிரிபு. வென் தாவி எனப் பிரிக்க. தழுவத் தாவி நின்று கொட்ட ஆடும் பொல்லார் என வினைமுடிபு செய்க.

பொள்ளார் பொல்லார் என மரீஇயிற்று. உளிமுதலியவற்றால் போழ்ந்து செய்யப்படாதவர் என்பது கருத்து. எனவே சுயம்பு மூர்த்தி என்றதாம்.

இங்கே கூறிய பொல்லாப் பிள்ளையார் "நல்லார்தொ ழும்வெண்ணெய் நல்லூர்ச்சி வாலயத்துள்" எழுந்தருளியிருக்கும் பிள்ளையார் என்று உணர்க. இவரே மெய்கண்ட தேவநாயனாருக்குச் சூர்ணியுரை செவியறிவுறுத்த பரமாசாரியர்.

திருநாரையூர்ச் சிவாலயத்துள் எழுந்தருளியிருக்கும் பொல்லாப்பிள்ளையார் நம்பியாண்டார்நம்பிக்கு வேதம் முதலிய சகல கலைகளையும் ஓதுவித்துத், தேவாரத் திருமுறைகள் இருக்குமிடம், சிதம்பரத்திலே கனகசபைக்குப் புறக்கடையின் பக்கத்திலே சமயகுரவர்கள் மூவருடைய கைகளின் அடையாளத்தையுடைய அறையென்று தெரித்துத், திருத்தொண்டர் சரித்திரத்தையும் செவியறி வுறுத்த பரமாசாரியர்.

சி வ ம ய ம்.

திருச்சிற்றம்பலம்.

# மு க வு ரை.

## திருநந்திதேவர்.

சங்கரன் றெரிக்க *மற்றத் தனிச்சிவ ஞான போதப்
புங்கநூ லுணர்ந்து பின்னர்ப் பொலிவுறு மகச்சந் தானப்
பங்கமில் புறச்சந் தான பரம்பரை யதனின் வைத்து
நங்களுக் களித்த நந்தி நளினமென் கழல்கள் போற்றி.

## சிவஞானபோதச்சிறப்பு.

வேதம் பசுவதன்பால் மெய்யா கமநால்வ
ரோதுந் தமிழதனி னுள்ளுறுநெய்—போதமிகு
நெய்யி னுறுசுவையா நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் றிறம்.

அகண்டாகார நித்த வியாபக சச்சிதானந்தப் பிழம்பாகிய சிவபெருமான் தாம், "ஆரண மாக மங்க ளருளினு லுருவு கொண்டு" அருளிச்செய்யாதெர்ழியிற் "கதிப்பவ ரில்லை யாகும்" எனத் திருவுளங்கொண்டு "ஒருநாமம் ஓருருவம் ஒன்றுமில" ராயினும் ஆன்மாக்கண்மீது வைத்த கைம்மாறற்ற பெருங்கருணையினாலே "ஆயிரந்திருநாமம்" முதலியவற்றை உடையராய்ச் சகளீகரித்துச் சதாசிவமூர்த்தியாய் நின்று தற்புருடம் முதலிய நான்கு முகங்களினுல் இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் ஈசானமுகமாகிய உச்சிமுகத்தினுல் காமிகம் முதலிய இருபத்தெட்டுச் சிவாகமங்களையும் பிரதமமகா சிருட்டி யாரம்பகாலத்திலே தோற்றுவித்தருளினுர்.

அவ்வேதாகமங்கள் முறையே உலகர்க்கும் சத்திநிபாதர்க்கும் உரித்தாய பொதுநூலுஞ் சிறப்புநூலுமாம். அவை சூத்திரமும் பாடியமும் போறலின் ஒருபொருளனவேயாம். இக்கருத்துப்பற்றியே நீலகண்டசிவாசாரியரும் வேதாந்தசூத்திரத்திற்குத் தாம் இயற்றிய பாடியத்துட் பதியதிகரணத்திலே "யாம் வேதசிவாகமங்கட்குப் பேதங் காண்கின்றிலம், வேதமுஞ் சிவாகமமாம்" என்று அங்ஙனம் கூறிப்போந்ததூஉம் என்க. "வேதமோ டாகமமெய்யா மிறைவனூ—லோதும் பொதுவுஞ் சிறப்புமென் றுன்னுக—நாதனுரையிவை நாடி லிரண்டந்தம்—பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே" என்ற திருமூலநாயனுர் திருவுள்ளக்கிடக்கையும் அதுவே.

---

* மற்று அ என்புழி அகரம் - பண்டறிசுட்டு.

வேதம் என்னுஞ் சொல் அறிதற்கருவி எனப் பொருள்படும். எனவே, பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களையும் அறிதற்குக் கருவியாயுள்ளது என்பது கருத்து.

ஆகமம் என்பது (பரமாப்தரினின்றும்) வந்தது எனப் பொருள்படும். இன்னும், ஆ என்பது பாசம் எனவும், க என்பது பசு எனவும், ம என்பது பதி எனவும் பொருள்படுதலால் ஆகமம் என்பதற்குத் திரிபதார்த்தலக்ஷணத்தை உணர்த்தும் நூல் என்பதே சிறந்தபொருள் என்க. ஆ என்பது சிவஞானமும், க என்பது மோக்ஷமும், ம என்பது மலநாசமுமாம் ஆதலால் ஆன்மாக்களுக்கு மலத்தை நாசம்பண்ணிச் சிவஞானத்தை உதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுத்தல் பற்றி ஆகமம் எனப் பெயராயிற்று என்று கூறுதலும் ஒன்று.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசக சுவாமிகள் என்னுஞ் சைவசமயாசாரியர்கள் நால்வரும் சிவபிரான் திருவருளினாலே தமிழ்நாடு உய்தற்பொருட்டுத் திருவவதாரஞ் செய்தருளி அவ்வேதாகமங்களின் சாரத்தை ஒருங்குதிரட்டித் தேவார திருவாசகங்களாகிய திராவிடவேதங்களாக அருளிச்செய்தனர்.

அதன்பின் மெய்கண்டதேவ நாயனார் திருவெண்காட்டடிகள் திருவருளினாற் * சாமுசித்தராய்த் திருவவதாரஞ் செய்து வேதாகமங்களினதும் தேவாரதிருவாசகங்களினதும் சாரத்திற் சாரமாயுள்ள சிவஞானபோத நூலைத் தமிழில் மொழிபெயர்த்துக் கூறி வார்த்திகம் எனப்படும் பொழிப்புரையுஞ் செய்தருளினார்.

இச்சிவஞானபோதத்தை முதனூலாகக் கொண்டு திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞானசித்தியார், இருபாவிருபஃது, உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப்பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறிவிளக்கம், சங்கற்பநிராகரணம் என்னும் பதின்மூன்றுசாத்திரங்களும் தோன்றின. சிவஞானபோதம் முதலிய இப்பதினான்கும் சைவசித்தாந்த சாத்திரங்களென்று அவ்வாறுயர்த்துக் கூறப்படுவன.

சிவஞானபோதம் ஏனைப் பதின்மூன்று சாஸ்திரங்களுக்கும் தாயகமாய் இருத்தலின் அவற்றைக் கற்றலாற் பெறும் பேறு இஃதொன்றனைக் கற்றலாற் பெறுதல் ஒருதலை என்றுணர்க.

இனித், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் முதலிய சமயாசாரியர்களும் மெய்கண்டதேவநாயனார் முதலிய சித்தாந்தநூலாசிரியர்களும் "காணுங் கரணங்களெல்லாம்பே ரின்பமெனப்—பேணு மடியார்" ஆகலின், அவர் பசுகரணம் பதிகரணமாக நிகழப் பெற்றவர் என்பதூஉம், "நஞ்செய லற்றிந்த நாமற்றவர்" ஆகலின், அவர்தஞ் செயலெல்லாம் சிவன்செயலென்பதூஉம் பெறப்பட்டன.

* சாமுசித்தராவார் முற்பிறப்பிலே சரியை கிரியை யோகங்களைச் செய்து நிருமலாந்தக்கரணராகி மீளப் பிறக்கும்பொழுது அந்த ஞானத்தோடு பிறந்து சிவபாவனை பண்ணுவோர்.

படவே, அவர் அருளிச்செய்த நூல்களெல்லாம் பதிவாக்கியங்களென்பது தாமேபோதரும். போதரச், சிவபிரானே ஆன்மாக்களின் அறிவாற்றல் ஆயுள் முதலியவற்றிற்கு ஏற்பக் காலந்தோறும் முப்பொருளியல்பு கூறும் நூல்களை விரித்துந் தொகுத்தும் அங்ஙனம் அருளிச்செய்தார் என்பது கடைப்பிடிக்க.

"அருணூலு மாரணமு மல்லாது மைந்தின் - பொருணூ றெரியப் புகின்" எனத் திருவருட்பயனுள் ஓதப்படுதலின், வேதாகமம் முதலிய எல்லா நூல்களும் பஞ்சாக்கரத்தால் உணர்த்தப்படும் பதி பசு பாசம் என்னுந் திரிபதார்த்த இலக்கணங்களையே கூறப்புகுந்தன என்பது தெற்றென விளங்கும். அவையெல்லாம் முப்பொருளின் தடத்த சொரூபங்களாகிய பொதுவியல்பு சிறப்பியல்புகளைத் தனித்தனியும் சரிதவாயிலாகவுங் கூறுவனவாக, இச்சிவஞானபோதம் அவ்விரண்டியல்புகளையும் ஒருங்குவைத்து நேரே கூறுதலான் அவ்வெல்லா நூல்கட்குஞ் சிரத்தானமாய்ச் சிறந்து விளங்கும் அரும்பெருந் திவ்விய மகத்துவ நூலாம் என்பது சத்தியம்.

இன்னும், ஆகமப்பொருள்கள் ஒன்றோடொன்று முரணுவனவாக மலைந்து வினவிய நந்திபெருமானுக்கு அம்மலைவு தீர்தற்பொருட்டுச் சிவபெருமான் உபதேசித்தருளப்பெற்றதும் இச்சிவஞானபோதமே.

கண்ணுவர் கருக்கர் முதலிய பண்ணவர்கணங்கட்கு வேதப்பொருளை அறிவுறுத்தற்பொருட்டு எழுந்தருளிவந்த தக்ஷிணாமூர்த்தி தமது அருமைத் திருக்கரத்திற் றரிக்கப்பெற்றதும் இச்சிவஞானபோதமே.

திருக்கைலாசபதியாகிய சிவபெருமான், மாணிக்கவாசகசுவாமிகளை ஆட்கொண்டருளித் தீக்கைப்பேறளித்துத் திருவடிஞானம் வாயிலாகச் சிவமாந்தன்மைப் பெரும்பேறெய்துவிக்கத் திருவுளங்கொண்டு, மாறுடச்சட்டை சாத்திப் பரமாசாரியமூர்த்தியாய் அக்கைலையினின்றும் எழுந்தருளிவந்து, திருப்பெருந்துறையிற் குருந்தவிருக்கத்தின்கீழ் வீற்றிருந்தருளியபொழுது, தமது அருமைத்திருக்கரத்திற் றுங்கப்பெற்றதும் இச்சிவஞானபோதமே.

மாணிக்கவாசகசுவாமிகள், அங்ஙனம் எழுந்தருளியிருந்த பரமாசாரியமூர்த்தியாகிய சிவபிரானைத், திருவருள் செலுத்தச் சென்று அடைந்தமாத்திரத்தே "செங்கைமீது—பொருத்தமுறும் புத்தகமே தையா" என்று வினவ, அப்பிரானூர் தமது அருமைத்திருவாக்கினாலே "பொய்ம்மையிலாச் சிவஞான போதம்" என்று விடையிறுக்கப் பெற்றதூஉம், "என்றலுமே சிவமேது ஞானமேதிங் கிலங்கியிடும் போதமே தியம்பு வீரே—லென்றுவட நீழலில்வந் திருந்தார் நீரே யடியேனு முமக்கடிமை யாவேன்" என்று சுவாமிகள் விண்ணப்பஞ் செய்ய, *"நின்றசிவ மொன்றதனைத் தேர்தன் ஞான நிகழ்போதந் தேர்ந்ததனைத் தெளிதலாம்" என்று நற்பொருள் வினவி நிற்கும் அச்சுவாமிகள் சிந்தையுருகும்படி அப்பிரானூற் பொருளருளிச்செய்யப்பெற்றதூஉம் இச்சிவஞானபோதமே.

---

* இதற்குச் சிவஞானபோத மாபாடியகாரர் கொண்ட கருத்து வேறு என்பதைச் "சிவஞானபோதம் என்பதூஉம் இக்காரணத்தாற்பெற்ற பெயரென்பது வடமொழிச் சிவஞானபோதத் திறுதிச்சூத்திரத்தோதியவாறுபற்றி உணர்க" எனக் கூறியதனால் அறிக.

மலர்தலை யுலகிற் புறவிருளின் நீக்கிப் பொருள்களைக் கண்ணுக்குக் காட்டுதற்குப் பன்னிருவகைத்தாய ஞாயிறுபோல, அநாதிமூலமலவிருளின் நீக்கிச் சிவபரம் பொருளை ஆன்மாவிற்குக்காட்டி அநுபூதியின் நிலை பெறுவித்தற்குப் பன்னிருசூத்திர ஞானஞாயிறாய் எழுந்ததும் இச்சிவஞானபோதமே.

இன்னும், இது பிறவிப்பிணிதீர்த்தற்குத் திவ்விய ஔடதமாய் உள்ளது. ஞானம் யோகம் கிரியை சரியை என்னும் இவற்றை உணர்த்துதலிற் சிவசங்கிதை என்னும் பொதுப்பெயர் பெறுதற்கும் உரியது. பதி பசு பாசம் என்னும் திரிபதார்த்தமாகிய *அபிதேயத்தோடு †அபிதாயகமாகுஞ் சம்பந்தமுடையது. திரிபதார்த்தலக்கணமாகிய விடயமுடையது. திரிபதார்த்தஞானத்தாற் சாதிக்கப்படும் தீக்கை முதலியவற்றை உணர்த்தும் முகத்தானே நித்திய நிரதிசயாநந்தப் பெருவாழ்வாகிய மோக்ஷமே பயனாக உடையது.

இத்துணை விசேடநூலாகிய இச்சிவஞானபோதத்தை நாடோறும் அன்புடன் அருச்சித்துப் பாராயணஞ்செய்வோர் சகலபாவங்களினின்றும் விடப்பட்டு நித்தியானந்தப்பெருவாழ்வாகிய முத்தியைப் பெறுவர்கள். முத்திக்கு உபாயம் இதற்கு மேலாகச் சொல்லற்பாலன வேறொருநூலினும் இல்லை. இது சத்தியம்! சத்தியம்! முக்காலுஞ் சத்தியம்.

இதற்குப்பிரமாணம்.

அஹந்யஹநி யோऽதீதே விதிவச்சிவஸம்ஹிதாம்|
ஸஹந்தி ஸகலாந் பாபாந் தமஸ்ஸூர்யோ யதா||

எவன் சிவசங்கிதையைத் தினந்தோறும் நியமமுடையனாய் ஓதுகின்றானோ அவன் சகலபாவங்களையும் சூரியன் இருளை நீக்குமாறுபோலக் கெடுக்கின்றான்.

## சிவஞானசித்தியார்.

ஞானநூ றனையோத லோது வித்த
    னற்பொருளைக் கேட்பித்த றான்கேட்ட னன்று
வீனமிலாப் பொருளதனைச் சிந்தித்த லைந்து
    மிறைவனடி யடைவிக்கு மெழின்ஞான பூசை
யூனமிலாக் கன்மங்க டபஞ்செபங்க டியான
    மொன்றுக்கொன் றுயருமிவை யூட்டுவது போக
மானவையான் மேலான ஞானத்தா லரனை
    யருச்சிப்பர் வீடெய்த வறிந்தோ ரெல்லாம்.

இந்நூலிற் கூறப்படும் பன்னிரண்டு சூத்திரத்துள், முதல் இரண்டு மூன்று என்னும் மூன்றையும் பிரமாணவியலென வைத்து, முதற் சூத்திரத்தால் உலகிற்கு நிமித்தகாரணனாகிய பதியுண்மைக்குப் பிரமாணமும், இரண்டாஞ் சூத்

* அபிதேயம் - பெயரிட்டுவழங்கப்படுவது. † அபிதாயகம் - பெயரிட்டுவழங்குவது.

திரத்தாற் பாசவுண்மைக்குப் பிரமாணமும், மூன்றாஞ் சூத்திரத்தாற் பசுவுண்மைக்குப் பிரமாணமும், நான்கு ஐந்து ஆறு என்னும் மூன்றையும் இலக்கணவியலென வைத்து, நான்காஞ் சூத்திரத்தாற் பசுவிலக்கணமும், ஐந்தாஞ் சூத்திரத்தாற் பாசவிலக்கணமும், ஆறாஞ்சூத்திரத்தாற் பதியிலக்கணமும், ஏழு எட்டு ஒன்பது என்னும் மூன்றையும் சாதனவியலென வைத்து, ஏழாஞ் சூத்திரத்தாற்சாதித்துப் பெறுதற்குரிய அதிகாரமுடையது இதுவென்பதும், எட்டாஞ்சூத்திரத்தாற் சிறந்த கருவி எனப்படுஞ் சாதனம் இதுவென்பதும், ஒன்பதாஞ் சூத்திரத்தாற் சாதகஞ்செய்யுமாறு இதுவென்பதும், பத்துப் பதினொன்று பன்னிரண்டு என்னும் மூன்றையும் பயனியலென வைத்து, பத்தாஞ் சூத்திரத்தாற் பெத்த நீக்கப்பயனும், பதினொராஞ் சூத்திரத்தால் முத்திப்பயனும், பன்னிரண்டாஞ் சூத்திரத்தாற் பெத்தநீக்கமும் முத்தியும் பெற்றவர்க்குச் சீவன்முத்திநிலைக்கண் நிகழுமியல்பும் வகுத்துக் கூறப்படும்.

இத்துணைப் பெருமை வாய்ந்த அருமருந்தன்ன இச்சிவஞானபோதத்திற்கு ஆதியிலே திருநாரையூரில் எழுந்தருளியிருக்கின்ற பொல்லாப்பிள்ளையாரால் சூர்ணி ஆகிய கருத்துரையும் மெய்கண்டதேவநாயனாரால் வார்த்திகம் எனப் பெயரிய பொழிப்புரையுஞ் செய்தருளப்பட்டன.

பின்னர்ப் பாண்டிப்பெருமாள் என்னும் ஆசிரியரால் ஓர் உரை இயற்றப்பட்டுள்ளது. அதன்பின்னர்த் திருக்கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து மாதவச் சிவஞானயோகிகளால் ஒரு சிற்றுரையும் சிவஞானபோத மாபாடியம் எனப் பெயரிய ஒருபேருரையும் செய்தருளப்பட்டன.

இப்பேருரை, இச்சிவஞானபோதத்திற்கும் இதன் முதனூலாகிய வடமொழிச்சிவஞானபோதத்திற்கும் வழிநூல் சார்புநூல்களாகிய ஏனைச் சித்தாந்தசாத்திரங்களுக்கும் உள்ள பொருளொருமையை இனிது விளக்கி இதற்குச் சிறந்த ஓரணிகலனாயுள்ளது.

வேதாந்தசூத்திரத்திற்கு நீலகண்டபாடியம் முதலியனபோலப் பொருள்களை, விஷயம் சம்சயம் பூர்வபக்ஷம் சித்தாந்தநிர்ணயம் சங்கதி என்னும் ஐந்துறுப்புக்களையும் உடைய அதிகரணங்களாகப் பகுத்து, எவரும் ஒருசிறிதும் சந்தேகமுறாவண்ணம் தருக்கவியாகரண மீமாஞ்சைகள்கொண்டும் வேதாகமங்களாகிய அதிப்பிரபலப்பிரமாணங்கள் கொண்டும் நன்குதெளியுமாறு கடாவிடைகளால் இனிது விளக்கிக்காட்டுதலின் திராவிடமாபாடியம் என்று எவராலுஞ் சிறப்பித்துச் சொல்லப்படுவது.

சுவேதாச்சுவதரம் முதலிய சைவோபநிடதங்களெல்லாம் சுத்தாத்துவித சித்தாந்தப்பொருளையே சாதிப்பன என்பதை அவ்வவற்றின்வாக்கியங்களால் இனிது விளக்கி, வேதமுஞ் சிவாகமமும் வேறென்று கூறிப் பிணங்குவோர் பிணக்கை மாற்றுவது.

சிவாகமவாக்கியங்களைத் தத்தமக்கு வேண்டியவாறெல்லாம் இடர்ப்படுத்தி நலிந்து பொருள்கொண்டு அதனையே மெய்ப்பொருளென்று காட்டி வஞ்சிக்கும் சமவாதசைவர் கொள்கையை வேரோடுகளைவது.

எல்லாமதங்களின் சொரூபங்களையுந் தன்னுள் அடக்கிக் காட்டுவது.

புறப்புறம் புறம் அகப்புறம் அகம் என்னுஞ் சமயக்கொள்கைகளை அளவைகளான்மறுத்துச் சுத்தாத்துவித சித்தாந்தத்தைத் தாபிப்பது.

தேவாரம் திருவாசகம் முதலிய பன்னிரு திருமுறைகளிலுள்ள திருப்பாடல்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டி அவற்றின் மெய்ப்பொருளை வெள்ளிடை மலைப்போற் றெள்ளிதிற் புலப்படுத்துவது.

இலக்கண இலக்கியப்பொருட் டிறவுகோலாயுள்ளது.

கற்போர்க்கு உண்ணவுண்ணத் தெவிட்டாத தெள்ளமுதம் போன்றது.

பத்திரசமும் முத்திரசமும் பழுத்தொழுகும் பான்மையது.

சைவசமயிகளுக்கெல்லாம் கிடைத்தற்கரிய பெரிய சிந்தாமணியாயுள்ளது.

இன்னோரன்ன பிறமகத்துவங்களும் வாய்க்கப்பெற்ற இப்பாடியத்தின் முதலிலுள்ள சிலபாகங்கள் இற்றைக்கு இருபது வருடங்களுக்குமுன்னர் யாழ்ப்பாணத்திலே ஸ்ரீ௸ ஸ்ரீ. ஆறுமுகநாவலரவர்கள் சைவவித்தியாசாலை முதலுபாத்தியாயராகிய ஸ்ரீமத். மா-வைத்தியலிங்கபிள்ளை அவர்களிடத்து யான் பெற்றுப் பார்த்தபொழுது அதன்பொருணுணுக்கம் முதலியன எனக்குக் கழிபேருவகை பயந்தமையின் அதனை முற்றும்பெற்று வாசித்துணர்ந்து பெரும்பய னடையவேண்டும் என்னும் வேணவாவினால் விழுங்கப்பட்டிருந்தேன்.

பின்பு இந்தியாவுக்குவந்த காலந்தொடங்கி அதனைப்பெறமுயன்று ஆங்காங்கு விசாரணைசெய்து வருகையில் ஸ்ரீமத். சபாபதிநாவலரவர்களிடம் அப்பாடியம் இருப்பதாகக்கேள்வியுற்று அவர்கள்பாற் சென்று அதைக்குறித்துக் கலந்து பேசினேன். அவர்கள் இரண்டாயிரம் ரூபாவுக்குக் குறைந்தாற் பிரதி கொடுக்கப்படமாட்டாது என்றார்கள். அத்தொகை கொடுத்துவாங்குதற்கும் சம்மதமுள்ளவனாயினேன்.

அஃதங்ஙனமாக, அதனையறிந்த எனது அந்தரங்க நண்பரொருவர் அந்நாவலரவர்களுக்கு அப்பாடியத்தை எழுதிக்கொடுத்தவர் மூலமாக விலைக்குக் கொடுக்கப்படும் பிரதி பலவிஷயங்கள் நீக்கியும் பலபிழைகள் செறித்தும் எழுதப்பட்டமையை அறிந்து அவ்வுண்மையை எனக்குத்தெரிவித்து அவர்களிடத்துள்ள மூன்று பிரதிகளையும் ஒருங்கு கேட்கும்படி கூறினர். அங்ஙனங் கேட்டபொழுது அதற்கு அவர்கள் உடன்படாமையினால் யான் வாங்க விரும்பிய கருத்தைத் தவிர்ந்தேன்.

பின் ஒருவித்துவானிடம் இப்பொழுது அச்சிட்டபாகம் முழுதும் இருக்கின்றதெனக் கேள்வியுற்று அவரிடத்துச் சென்று ஒருபெருந்தொகைப் பொருள் கொடுத்து வாங்கி அதனை ஒருபிரதி பண்ணிக்கொண்டு மூலப்பிரதியை அவரிடம் கொடுத்துவிட்டேன்.

இங்ஙனம் பெருந்தொகைப்பொருள் கொடுத்து அரிதிற்பெற்ற பிரதி பூர்த்தி உடைத்தன்றாயினும் செல் முதலியவற்றாற் கேடுறுமாயின் பின் அது

தானும் பெறுதற்கரிதெனக் கருதியும்,வேதோபப்பிருங்கணங்களாகிய புராணம் முதலியனவே சைவநூல்கள் எனவும் அவைகளிலுள்ள வர்ணனைகளும் குறிப்பான் வேறுபொருளுணருமாறு கூறப்பட்ட சரிதங்களுமே சுத்தாத்துவித சைவசித்தாந்தத்துண்மைப்பொருளெனவுங் கொண்டு மயங்குவார்க்கு அம்மயக்கம் நீங்கிச் சைவநூலுணர்ச்சி தலைப்படற்பொருட்டும் அவ்வொரு பிரதியையே பரிசோதனைசெய்து என் சிற்றறிவிற்கெட்டிய வண்ணம் ஒருவாறு செப்பஞ்செய்து அச்சிட்டு முடித்தேன்.

குருவினாலே செயற்பாலனவாகிய பரீக்ஷைகளெல்லாஞ் செய்யப்பட்டுப் பக்குவமுடையராய்ச் சமயம் விசேடம் நிருவாணம் என்னும் மூன்றுதீக்கையும் பெற்றவரே இந்த ஞானநூலை ஓதுதற்கதிகாரிகளாவர். இதனைக் குருமுகமாயறிதலின்றித் தமது மதிநுட்பத்தால் ஆராயப்புகுவோர் சந்தேக விபரீதமறத் தெளிந்து கொள்ளார். அதுவன்றியும் பதிவாக்கியங்களிற் குற்றமேற்றித் தாம் நரகத்திற்கு ஆளாவர். இதுபற்றியன்றே இவைகளைக் குருவினிடத்தே பெறுக எனச் சைவாகமங்கள் விதித்ததூஉம் என்க.

அநுபவமுடைய தேசிகருணர்த்த உணர்தற்பாலதாகிய இந்நூலுரையைச் சிற்றறிவுடைய பசுவர்க்கத்துட் பட்ட சிறியேன் அச்சிடத்தொடங்கியது அறிவான்ற பெரியோர்க்கெல்லாம் ஏ ஏ இவனறிவிருந்தவாறென்னை? என்று எள்ளி நகையாடற்கேதுவாம்.

அறிஞர்கள் இப்பதிப்பிற் காணப்படும் பிழைகளையும் அவற்றின் திருத்தங்களையும் பெருந்தயை கூர்ந்து தெரிவிப்பார்களாயின் அந்நன்றியைமறவாது அவற்றை இரண்டாம் பதிப்பிற் பிரசுரஞ்செய்து யாவர்க்கும் பயன்படச் செய்வேன்.

இப்பாடியம் அச்சிட ஆரம்பித்த காலத்திலே அதற்குமாறுகச் சிலர் திருக்கைலாசபரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்து ஸ்ரீ ஸ்ரீ மகாசந்நிதானத்திற்கு நேரிலும் கடிதவாயிலாகவும் கற்பித்து வெளிப்படுத்திய கோள்களைப் பொருட்படுத்தாது அவர் நாணுமாறு தமது பெருந்தகைமையும் பேருபகாரமும் பொதுநன்மையும் முன்பின் மாறுபடாவண்ணம் உற்றுநோக்கி விடையளித்தருளிய அச்சந்நிதானத்தின் அதிதுல்லிய நுட்பபுத்தியும், பெருங்கருணையும் என்னாலும் மற்றெவராலும் எக்காலத்தும் மறக்கற்பாலனவல்ல.

சைவசமயிக ளெல்லாருக்கும் பயன்படும்படி தொடங்கிய இவ்வரியபெரிய நற்கருமத்திற்கு விபூதிருத்திராக்ஷத்திற்கு உரிமை பூண்ட சைவர்களாகிய சிலர்செய்த பேரிடையூறுகளெல்லாவற்றையும் நீக்கி இதனை நிறைவேறும்படி செய்தருளிய எல்லாம்வல்ல முழுமுதற்கடவுளாகிய பரமசிவனுடைய திருவடிகளை மனம்வாக்குக் காயங்களாற் சிந்தித்து வந்தித்து வணங்குகின்றேன்.

இங்ஙனம்

சுவாமிநாதபண்டிதர்.

# கிடைத்தபாடியப்பிரதிகள்.

## மதுரை.

திருஞானசம்பந்தசுவாமிகள் திருமடத்துப் பிரதி. க

## திருமயிலை.

மகாவித்துவான் ஸ்ரீமான் - தணிகாசலமுதலியாரவர்கள் பிரதி. க

## யாழ்ப்பாணம்.

ஸ்ரீமத் - வைத்தியலிங்க உபாத்தியாயரவர்கள் பிரதி. க

ஸ்ரீமத் - பொன்னம்பலதேசிகரவர்கள் அச்சிட்ட பிரதி. க

இவை மங்கலவாழ்த்துமுதல் முதற்சூத்திரத்து இரண்டாம் அதிகாணம் வரை உள்ள பாடியம் அடங்கப்பெற்றன. ஆறுஞ்சூத்திரத்துச் சிலபகுதிகளும் இன்னசூத்திரத்தைச்சார்ந்தனவென்றறியப்படாத சிலபகுதிகளும் கையெழுத்துப்பிரதிகளிலுள்ளன.

## கும்பகோணம்.

வித்துவான் ஸ்ரீமத் - அருணாசலச்செட்டியாரவர்கள் பிரதி. க

## வேதாரணியம்.

ஸ்ரீமத் - நாகநாதக்குருக்களவர்கள் பிரதி. க

இவை ஆறுஞ்சூத்திரத்திலுள்ள சிலபகுதிகள் அடங்கப்பெற்றன.

## திருமாகறல்.

வித்துவான் ஸ்ரீமத் - கார்த்திகேயமுதலியாரவர்கள் பிரதி. க

இது பலபாடியக்குறிப்புக்கள் அடங்கப்பெற்றது.

## சென்னை.

ஸ்ரீமத் - சித்தாந்தசரபமாகிய அட்டாவதானம் பூவை கலியாணசுந்தரமுதலியாரவர்கள் பிரதி. க

இது பஞ்சாக்கினிவித்தை முதலிய சிலகுறிப்புக்கள் அடங்கப்பெற்றது.

## திருமயிலை.

வித்துவான் ஸ்ரீமத் - சண்முகப்பிள்ளை அவர்கள் அச்சிட்ட பிரதி. க

இது அத்துவிதப்பகுதியும் கருடபாவனைப்பகுதியும் அடங்கப்பெற்றது.

இப்பிரதிகளைத் தந்து உதவிய சிவஞானச்செல்வர்களாகிய இவர்களது பெருநன்றியை யான் எக்காலத்தும் மறவேன். இப்பாடியத்தாற் பயனடையும் ஏனையோரும் அதனை மறக்கற்பாலரல்லர். திருமடத்துப் பிரதியும் தணிகாசலமுதலியாரவர்கள்பிரதியும் பரிசோதனைக்கு இன்றியமையாதனவாய் இருந்தன.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஸ்ரீலஸ்ரீ

ஆறுமுகநாவலரவர்கள்

மாணாக்கரும் சித்தாந்தபானுவும்

வடமொழிதென்மொழி இரண்டினும் வல்லுநரும்

கவர்மெண்டு அக்கவுண்டண்டு உத்தியோகத்திலமர்ந்திருந்து இப்பொழுது

உபகாரவேதனம்பெற்று ஆறுதலடைந்திருப்பவருமாகிய

திருமயிலை மகாவித்துவான்

ஸ்ரீமான் - தணிகாசலமுதலியாரவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்பூத்த கல்லாலின் கீழிருந்து சிவயோகஞ் சிறப்பச் செய்யு
நீர்பூத்த சடிலனந்தி நிகழ்த்தியவா சங்கையினை நீக்க வேண்டி
நார்பூத்த வுளக்கருணை நானிலத்தி னன்குமடை திறந்து பாயப்
பேர்பூத்த சிவஞான போதமதைப் பிணக்கறவே பேசி னானல். (க)

மெய்கண்டா ரந்நூலை விழுத்தமிழிற் சொற்றருளி மேன்மை யாகப் [செய்தே
பொய்கண்டார் மதங்களெலாம் போயொடுங்க வார்த்திகப்பேர்ப் பொழிப்புஞ்
கைகண்ட முண்மையெனக் கலைவாணர் காதலிப்பக் கருணை யாலே
செய்கண்டார் மேதினியிற் றிகழ்வித்துச் சித்தாந்தந் தெளிவித் தாரால். (உ)

அகத்தியனார் வரத்துதித்தே யருங்கலைக ளொருங்குணர்ந்த வறிவி னாலே
சகத்தியலை மிகச்சிறிய பருவத்திற் றகர்த்தெறிந்த சால்பான் மிக்கோர்
மகத்துவஞ்சேர் கைலாய பரம்பரையின் வருமேலோர் வைப்பா யோங்கி
மிகத்தவஞ்செ யாவடுதண் டுறைமடத்து மணிவிளக்காய் மேவி னாரே. (ங)

அன்னவரே சிவஞான மாமுனிவ ரென்றறைபு மருமை யாள
ரின்னவரே சிவஞான போதத்தை யெமக்களித்த வெழிலார் வெண்ணெய்
மன்னவரே யெனவதற்குச் சிற்றுரையும் பாடியமும் வாய்ப்பச் செய்தா
ரென்னெவரே யவற்றருமை பெருமைகளை யெடுத்துநனி யியம்ப வல்லார். (ச)

கற்கண்டோ சர்க்கரையோ கண்ணிமையார் நல்லமிர்தோ காமதேனு
விற்கண்ட பாலமிர்தோ தேனமிர்தோ வேண்டுபலச் சாற்ற மிர்தோ
தற்கண்ட வடியவர்க்குச் சாம்பசிவன் கொடுத்தருளுந் தண்ணெனன் மாண்போ
வெற்கண்டு நேருரைப்ப னிந்தமகா பாடியத்தி னினிமைக் கம்மா. (ரு)

எக்கலையின் முடிபொருளு மிதனினனி யிலகுதலா லிதனை மிக்க
வக்கலைக ளெலாந்திரண்ட பொக்கிஷமென் றறைவதற்கோ ரைய மில்லை
முக்கணவ னறிந்திடுவ னிவ்வுண்மை முழுமலத்தாற் பீடித் தோர்கள்
தக்கபடி யுணரவுனிற் றவம்பலநாட் டனித்துறைந்து சார்தல் வேண்டும். (சு)

முன்னூல்கண் முழுதுணர்ந்த மெய்கண்டார் போலொருநூன் முற்று வானுந்
தன்னேரில் சிவஞான முனிவரர்போ லோருரையைத் தரவல் லானு
மிந்நூலுக் கொப்பதொரு நன்னூலு மிந்தமகா பாடி யம்போ
னன்னுவ லவர்போற்று பாடியமு நானிலத்தி லில்லை யில்லை. (எ)

இவ்வரிய பாடியத்தை யெத்தனையோ பலநாளா யெங்குந் தேடி
யெவ்வமிலா வொருபுலவ னிடத்திருத்த லறிந்துபொரு ளின்பா லீந்து
கவ்வையகன் றதுபெற்றுக் கருதருஞ்சிற் றுரையினொடு கவினச் சேர்த்துச்
செவ்வனனி காவிகித வழுக்களைந்து சிறந்தபல குறிப்புஞ் சேர்த்தே. (அ)

தமிழ்நிலத்துச் சைவரெலாஞ் சார்பிறவிப் பயனடையச் சைவ மோங்க
விமிழ்திரைசூ ழிவ்வுலகி லெம்மதமுந் தலைதாழ்க்க விறைவன் சீர்த்தி
யமிழ்தினினி தாகமிக வன்பரெலா மறிந்தேத்த வைய னுண்மை
கமழ்தரவச் சினிலேற்றிக் காசினியில் வெளிப்படுத்த கருணை வள்ளல். (கூ)

திருக்கோண மலைதிருக்கே தீச்சரமென் றிரண்டினையு மிரண்டு கண்ணு
வுருக்கோளி விளங்கியொளி ரியாழ்ப்பாணத் துயர்வண்ணைப் பதியிற் சீர்த்திப்
பெருக்கோல மிடுசின்னத் தம்பிவேள் பெருந்தவத்திற் பெற்ற தோன்ற
றருக்கோடு பகைமுதலாச் சார்குற்ற வேர்களைந்த சால்பான் மிக்கோன். (க0)

நந்தூருங் கரதலத்து நாரணனே முதல்வானோர் நலிவு தீர்ப்பா
னிந்தூருஞ் சடைமுடியா னெழிலாறு முகனெனவே யாங்க ணெண்ண
வந்தூருஞ் செந்தூரில் வண்டமிழ்க்கல் லூரியொன்று வைத்து விண்மேன்
முந்தூரும் பன்மாட மொய்யொளிசேர் சென்னையினின் முதன்மை யாக. ()

கண்டவர்க ணச்சிடவோ ரியந்திரத்தைத் தாபித்துக் கவினூர் நூல்க
ளெண்டகவே பதிப்பித்து விலைகுறைய வெல்லோர்க்கு மீந்து நிற்பான்
மண்டலத்திற் சைவநலங் குடிகொள்ள வளருண்மைச் சாமி நாத
பண்டிதனும் பெருநாம மெண்டிசையும் பரந்துலவும் பாவ லோனே. (கஉ)



யாழ்ப்பாணத்து நீர்வேலி

ஸ்ரீ ல ஸ்ரீ

சங்கரபண்டிதரவர்கள் குமாரராகிய

# ஸ்ரீமத் - சிவப்பிரகாசபண்டிதரவர்கள்

இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பொலனிதழி நிலவுமணி புரிசடையெம் பரசிவனார் புகன்மெய் வாக்காய்
கலனதனி னிலைபெறுமெய்ஞ் ஞானகலை யானசிவ ஞான போதம்
பலனிலவு பலவகையா கமப்பொருளு மமைந்துளதாய்ப் பழுதி லாத
வலனுடைய புலவர்புகழ் வண்மையொடா ரியத்தினனி வயங்கு மன்றே. (௧)

சிவபெருமான் றனதுச்சித் திருமுகத்தின் வரவருள்செய் சிவாக மங்க
ளவைமுழுதி னுளஞான வரும்பாதத் திரும்பொருளை யையந் தீர
வெவருமுறை பொதுச்சிறப்பென் றிரண்டியலா வகுத்தருளி இரௌர வத்திற்
பவமகலப் பன்னிரண்டு சூத்திரத்தாற் பகர்ந்துளதப் பனுவ லம்மா. (௨)

மன்னுமதை வெண்ணெயமர் மையகலு மெய்கண்ட வள்ள லார்தாம்
பன்னுதமி ழின்மொழியாற் பார்த்துணர வார்த்திகப்பேர் பகர்பொ ழிப்போ
டிந்நிலமேன் முன்னியற்றி யினிதருள்செய் தனரதனை யெவருந் தேரத்
தென்னுறுமா பாடியமுஞ் சிற்றுரையு மற்றுரைத்த செல்வ னுவான். (௩)

அகத்தியனார் வரப்பிரசா தத்தினவ தரித்ததகை யறிஞர் சிங்கஞ்
சகத்தெவரு மிகத்துதிக்கச் சால்புறுபன் னூலுரைக டந்த தீபஞ்
சுகத்திருவை யிகத்திலரு டோமிறிரு வாவடுதண் டுறையா தீனந்
தகத்துலங்க மகத்துவஞ்செய் தவயோகி சிவஞானத் தம்பி ரானே. (௪)

அப்பெருமான் செப்புரைகண் மற்றிரண்டிட் சிற்றுரையை யறிஞர் போற்று
மொப்பில்புக ழாறுமுக நாவலவ னச்சிலிட்டா னுவந்து முன்னே
வைப்புறுமா பாடியந்தா னெப்பரிசும் வெளியின்வரா மரபிற் றுகித்
துப்புறலின் றேடுகளிற் றங்கியதா லிங்கரித்தாய் தோன்றிற் றன்றே. (௫)

அனையமகா பாடியத்தி னருமையொடு பெருமையுணர்ந் தாத ரத்தா
னினைவினொடு நனியெடுத்துக் காலிகித முரணழித்து நெறியால் யார்க்கு
மனமுறவே யெளிதினுப யோகமுறப் பலகுறிப்பு மருவச் சேர்த்திட்
டினிதினச்சிற் புனைவனென்றே யிடையறு விடாமுயற்சி யெழுந்து தூண்ட.

விண்ணுறையும் புலவரென வியன்றமிழாங் கடல்கடைந்து விடாது நின்றே
யெண்ணரிய பொருளமிர்த மெடுத்துண்டு நரைதிரைமூப் பிகந்து வைகும்
புண்ணியமெய்ப் புலவர்தமைத் தமர்களெனப் புத்தேளிர் புகுந்து நோக்கி
யெண்ணுதலாற் கண்ணிமையா ரிவர்களென வியம்புவிக்கும் யாழ்ப்பா ணத்தில்

வண்ணைநகர் தன்னினனி சைவர்புரி புண்ணியத்தின் வான்ப யன்போ
னண்ணியெழி லாறுமுக நாவலன்பா லுணர்மருக னல்லோர் போற்றுங்
கண்ணியபொன் னம்பலப்பேர்க் கலைஞர்சிரோ மணிபாற்றென் கலைக ளெல்லா
முண்ணிகழும் பரிவொடுகற் றெண்ணுதெளி வடைபுலமை யொளிரநின்றோன்

உலகநல னிலையிலதென் றுவர்த்துநைட் டிகநெறியே யுறுதி யாக்கொண்
டலகிலமா ணாக்கர்தமக் கிலகுபல கலைபயிற்றி யரனை நாளும்
வலனுறவர்ச் சனையியற்றிப் பரசமய நிராகரித்து வளர்சை வத்தை
மலருலகி னிலையுறுத்தன் மாவிரத மாக்கொண்டு வாழும் வள்ளல். (௯)

பேருயர்செந் தூரினிற்சுப் பிரமணிய பெருமான்றன் பெயரி னாலே
சீருயர்கல் லூரியொன்று செவ்வணிறீஇ யத்தருமஞ் சிறந்து நாளும்
பாருயர மூலதனஞ் சாருதற்கென் றேசென்னைப் பதியின் மாட்டே
யேருயர்சை வவித்யாநு பாலனயந் திரசாலை யினிதின் வைத்தோன். (௧௦)

பண்டருதே வாரமுதற் கண்டதிரு முறைகளெல்லாம் பலநல் லேடு
கொண்டினிது சோதனைசெய் தெண்டகவச் சிடமுயலுங் குணத்தோன் றூய
தொண்டருளங் குடிகொண்டோன் கண்டிகைவெண் ணீறணிவோன் சுவாமிநாத
பண்டிதனும் பெரும்பெயரோ னெண்டிசையும் புகழ்படைத்த பண்பான் மிக்கோன்

திணிபிறவிப் பிணிதெறுமப் பாடியமா மருமருந்திற் றேடிப் பெற்ற
மணியுறழ்பா கங்கடமை யணியுறுத்தி யரியபத மருவு மர்த்த
மணியுறுமேற் கோள்விளக்கங் குணமுறுபல் குறிப்பெனலா மனுபா னங்க
ளணவுறச்சேர்த் தெவருமெளி துணவினிதா யச்சினிடை யளித்திட் டானே.



மதுரைத் தமிழ்ச்சங்கத்துவித்துவானும் சித்தாந்தசரபமுமாகிய

## அஷ்டாவதானம்

ஸ்ரீமத்

# பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

## இயற்றியது.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அனுதிமல பெத்தரனு பந்தகன் மம்பலவி னூர்த லாலே
மனுதிகர ணங்களுக்கெட் டாதவிறை பன்மார்க்க வகைவி ளங்கத்
தனுதிதய சங்கற்பத் தாலுன்னிப் பஃறேவர் தமக்கு மேற்றம்
நுனுதிகமற் றேயுணர நான்மறைகள் பொதுவாக நுவன்ற பின்னர். (௧)

சத்திநிபா தத்துற்றுப் பரிபாக மேயடைந்த சைவ சீலர்
நித்தியவி வேகத்தா லேசூழ்ந்து முத்திநிலை நேர்தற் கேற்ற
வுத்தமநற் றிருவருளி னிற்றிளைத்துத் தன்சரணை யுணர்தற் காக
வித்தகவா கமங்களிரு பானெட்டுச் சிறப்பாக விளம்பி னானால். (௨)

கடலனைய விவ்வபா கலையிருத யத்திலங்குங் கருத்தை யார்க்கு
மடலுறுநந் திருநந்தி யம்பெருமா னடைவாக வகிலத் தோர்க்குத்
திடமுறநன் குணர்த்திடுவான் றன்மரபி னில்விளக்கச் செவ்வே யந்தத்
தொடர்புறவந் தவதரித்த கைலாய பரம்பரையிற் றேற்ற முற்று. (௩)

திருஞான சம்பந்த தேசிகோத் தமவள்ள றிரும்ப வந்திங்
கொருமான வடிவங்கொண் டானென்ன வுலகனைத்து முரைக்கப் புண்ய
தருவான மெய்கண்டா னவ்வாக மங்களினிற் றனித்தி லங்கு
முருவாகுஞ் சிவஞான போதத்தைத் தென்றமிழி லோங்கச் செய்தான். (௪)

மன்னர்மன் னவர்பணிசற் சைவதபோ தனர்ஞானம் வழங்க வென்றும்
மன்னியநல் லுயர்திருவா வடுதுறையா தீனத்து வதிந்து மேலோர்
பன்னுதமிழ் மொழிக்கும்வட மொழிக்குமொரு தலைவனெனப் பகர நின்ற
முன்னருஞ்சீர்ச் சித்தாந்த பானுநஞ் சிவஞான முனிவ ரன்றுன். (௫)

சங்கரர்ரா மானுஜர்மத் துவர்பாடி யங்களெலாந் தத்த ளிக்கத்
தங்கியயேக வலவிசிஷ்ட மறுதலையத் துவிதந்தந் தலைக விழ்க்கத்
துங்கமுறு சிவஞான போதவிரு தயத்துண்மை சூழ்ந்த தற்கு
மங்களசுத் தாத்துவித திராவிடமா பாடியத்தை வரைந்து வைத்தான். (௬)

இப்பனுவ லரனுண்மை யறிவிக்குந் தீபமென வேய்ந்த தென்கோ
செப்பரிய சிவாதிக்ய நிறைந்தபொக் கிஷமென்னச் சிறந்த தென்கோ
வொப்புயர்வில் ஞானசா தனவொழுக்க நிலயமதா யுயர்ந்த தென்கோ
திப்பியநல் லருளனைத்து மிகவருளுங் கற்பகமாத் திகழ்ந்த தென்கோ. (௭)

திவ்வியமெய் கண்டபரம் பரைஞான தருவாகத் திகழா நின்ற
விவ்வரிய பாடியத்தைக் காண்பேமா வெனவறிஞ ரேங்கி யேங்கி
யெவ்வமுறுங் காலவர்க ளானந்த மாகடலி லினிது மூழ்கிச்
செவ்வையுற வேநோக்கிச் சித்தாந்தப் பேரமுதத் திரளை யுண்ண. (௮)

வேதமுய ராகமபு ராணங்க ளுடன்வைத்து விசுத்த மாகச்
சோதனைபற் பலநாளா விமைகொட்டா தேயாய்ந்து துகளு றுமே
மாதளம தானதவ ளக்கடிதந் தனிலச்சு மன்னச் செய்து
சாதகமா வெவருமுப யோகிக்க நயவிலையிற் றந்தா னம்மா. (௯)

உலகுதனக் கொருமுதல்வ னறுமுகநற் குமரேச னுவந்து நாளு
நலவடியார்க் கருள்சுரக்குந் திருச்செந்தூர்ப் பெரும்பதியி னலமிக் கோங்க
வலமுறுசெந் தமிழ்க்கழகம் வயங்கநிறீஇ வளர்க்கவதை வளமார் சென்னைத்
தலனெருயந் திரசாலை தாபித்து நடாத்திவரு தரும சீலன். (௧௦)

திருமுறையாம் பெருமறைப்பா ராயணமே முறைமையினிற் றினமுஞ் செய்வா
னருநெறிசேர் சிவனடிய ரானுருவ மெனவுண்மை யறிவிற் கொள்வான்
பொருவருபஞ் சாக்கரவெண் ணீறுமணி சாதனமே பொருளாச் சூழ்வா
னொருபெரிய தனிப்பரமன் றிருவருளை யேநாடு முள்ள மிக்கான். (௧௧)

வளம்பரவு மிலக்கியவி லக்கணஞ்சாத் திரந்தருக்கம் வாய்ப்ப கற்று
ளுளமகிழச் சிவபூசை சிவதரும மேநடத்து மொழுக்கம் பூண்டான் [ன்
விளங்குபொறை நனியடக்கம் வாய்மையரு ளின்சொல்கொடைமிக்க தூயோ
விளம்பரிய நற்சுவாமி நாதபண் டிதசிம்ம விபுதன் மாதோ. (௧௨)



யாழ்ப்பாணத்துச் சுன்னாகம்

## வித்துவசிரோமணியாகிய

## ஸ்ரீமத்

# அ - குமாரசுவாமிப்புலவரவர்கள்

## இயற்றியது.



பூவருக்கு நறுங்கடுக்கை புனைசடிலன் குருமுதன்மை பூண்ட தேவன்
மூவருக்கு மொருமுதல்வன் சீகண்ட பரமேச மூர்த்தி முன்னாட்
டேவருக்கு முனிவருக்கு மனிதருக்கு முத்திநெறி சிந்தை செய்வோ
ரேவருக்கும் பரம்பரையிற் பயன்படுவான் றிருவுளத்தி லெண்ணி மாதோ.(௧)

அவஞான முரணகற்றி யாகமசா ரங்களெலா மடக்கி நின்ற
சிவஞான போதமெனுஞ் சித்தாந்த சூத்திரத்தின் றெளிவை முற்றத்
துவஞான சிந்தையுறு நந்திபிராற் கருள்செய்தான் றோமி னந்தி
தவஞான மகத்துவஞ்சேர் சனற்குமர முனிவரற்குச் சாற்றி னானே. (௨)

நந்திபிரான் பாலுணர்ந்த சனற்குமர முனிவரனு நயந்து கேட்பான்
முந்தியுறு பக்குவசத் தியஞான தரிசனிக்கு மொழிய வன்றான்
வந்தனைசெய் பரஞ்சோதி முனிக்குரைத்தா னவன்கயிலை மலையி னின்று
மிந்தநிலத் திடைவந்து திருவெண்ணெய் நல்லூரை யினிது மேவி. (௩)

கோதகன்ற வேளாளர் குலவிளக்காய் வரோதயனுய்க் கூடு முண்மைப்
போதமுடன் வளரவளர் மெய்கண்ட தேவனுக்குப் போதித் தைய
நீதமிழிற் பெயர்த்துரையு நிகழ்த்துதியென் றுரைத்தருளி நீங்க வந்த
மேதகையா மெய்கண்ட தேவனுமம் மொழிசிரத்தின் மேலாக் கொண்டு. (௪)

மாறிரண்டு புகலுநெறி நிலைபாறச் சைவநெறி மாண்பு வீறப்
பேறிரண்டு முயிர்களுறச் சாதனமு மிலக்கணமும் பிரமா ணத்தோ
டாறிரண்டு சூத்திரத்தி லமைத்தருளி வார்த்திகமு மறைந்தா னந்நூல்
வேறிரண்டு பெயர்பெறுமோ சிவஞான போதமென விளங்கிற் றன்றே. (௫)

அந்நூலின் பாலமைந்த வாகமநூற் பொருளுண்மை யரிய வேத
மெய்ந்நூலின் பொருளுண்மை வியன்கருவி நூலுண்மை வேறு நுண்மை
யெந்நூலின் பாலுமிலை யுரையிலையே யிதன்பொருளை யாவர் தேர்வா
ரிந்நூலுக் குரைவகுத்த லினியதொரு பெருநன்றி யென்று கொண்டு. (௬)

ஆரியமே யருந்தமிழே யென்னுமிரு கடல்களுக்கு மந்தங் கண்ட
சீரியன்றத் துவஞானி சிவஞான முனிவனென்று சேண்போ யோங்கும்
பேரியலுந் தவயோகி பேருரைசிற் றுரையென்று பேச நின்ற
வீருரையுஞ் செய்தளித்தா னவற்றருமை பெருமைகளை யாரே சொல்வார். (எ)

காராவிடஞ்சேர் மகனளித்தோன் கயிலையுறை தருநாளிற் கைக்கொண் டுந்த
வராவிடஞ்சேர் மிடறுடையோ னருளடைந்த பாணினிமுன் னளித்த நூற்
பராவிடமிக் குயர்வுபெறு பதஞ்சலிமா பாடியம்போற் பயிலும் பண்பாற்
றிராவிடமா பாடியமாந் திருப்பெயரும் பேருரைக்குச் செப்பு வாரே. [குப் (அ)

இத்துணையு மிப்பொருண்மை யுரைத்திலமற் றெவர்க்குநினக் கீது மீது
சத்தியமென் றறுமுகற்குப் பரமேசன் முன்னளித்த சருவ ஞான
வுத்தரமே வாதுளமே முதலியவா கமவசன முறுதி காட்டி
யெத்தனையோ பலப்பலவாய்ப் பேருரையி னிடையிடையே யிலங்கு மாலோ.

ஆகமவாக் கியமொன்றோ வருந்தமிழ்ச்சித் தாந்தமுட னுறி ரண்டு
பாகமுறு திருமுறையின் வாக்கியமு மிலக்கணமும் பழநூற் காட்டும்
பாகுபடு பலசமய கண்டனமுந் துணிவுரையும் பரந்து நின்றே
மோகமய லகற்றியுரை யாசிரிய னூலுணர்வின் மொய்ம்புங் காட்டும். (௧0)

அவ்வுரையு ளகப்பட்ட பெரும்பாகஞ் சிற்றுரையோ டமையச் சேர்த்துச்
செவ்வனுற வாராய்ந்து வழுவகற்றிப் பலகுறிப்புந் தெளியக் காட்டி
யிவ்வுலகோர் பெறவச்சி னிடைதுலக்கி யினிதளித்தான் யாவ னென்னிற்
சைவமலி யாழ்ப்பாண வண்ணைநகர் வருசின்னத் தம்பி பாலன். (௧௧)

பண்டையுள சான்றோர்க ளிலக்கணமு மிலக்கியமும் பயின்றோ னன்பு
கொண்டுசிவ னடிபணிவோன் சைவமதம் வளரமுயல் கொள்கை யாளன்
தண்டமிழிற் சித்தாந்த சாத்திரமுங் கற்றுணர்ந்தோன் சாமி நாத
பண்டிதனும் பெயருடையோன் பகிரங்க மாதல்பெறும் பயனு மென்றே. (௧௨)

சிறப்புப்பாயிர முடிந்தது.

---

உ

சிவமயம்,

திருச்சிற்றம்பலம்.

# தென்முகத்தெய்வப்பரமாசாரியர்

## தோத்திரம்.



ஆசிரியத்தளை விராய்வந்த கொச்சக வொருபோகு.

கல்லாலந் தண்ணிழற்கீழ்ச் சிவஞானத் தெளிவருளுங் காமர் காட்சி, நல்லானை நல்லா ளொருபாக மாகிய ஞானத் தானை, யெல்லாரு மேத்தத் தகுவானை யெஞ்ஞான்றுஞ் சொல்லாள் வாருக், கெல்லாஞ் சுகமல்ல தில்லை தொழுமின் கண்டீர்.

இந்நூலால் நந்திபெருமானுக்கு மலைவுதீர்த்தருளிய பரமாசாரியர் இத்தக்ஷிணாமூர்த்தியே.

கண்ணுவர் கருக்கர் முதலிய பண்ணவர்க்கு வேதப்பொருளை அருளிச்செய்த பரமாசாரியரும் இத்தக்ஷிணாமூர்த்தியே.

சனகாதி முனிவர்க்கு ஞானபாதப் பொருளைச் சின்முத்திரையினற் றெளிவித்தருளிய பரமாசாரியரும் இத்தக்ஷிணாமூர்த்தியே.



# தக்ஷிணாமூர்த்தி தியானம்.

திருவிளையாடற் புராணம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சீதளப் பளிக்கு மேனியும் பளிக்குச் செழுமலை பதித்ததுப் பன்ன, பாதமுஞ் செவ்வாய் மலருமுக் கண்ணும் பங்கயச் செங்கர நான்கும், வேதபுத் தகமு மமுதகும் பமுந்தன் விழிமணி வடமுமெய்ஞ் ஞான, போதமுத் திரையுந் தரித்ததோர் தனிமைப் போதன்முன் றாழ்ந்தெழுந் தேத்தா.

(இ - ள்.) சுத்தப்படிக சங்காசரூபமும், செம்பவளமன்ன திருவடியும், செங்கமலமன்ன திருவாயும், மூன்று திருக்கண்களும், செங்கமலமன்ன நான்கு திருக்கரங்களும், அவற்றில் முறையே வலத்தில் உருத்திராக்ஷமணிவடமும் சின்முத்திரையும் இடத்தில் அமிர்தகும்பமும் வேதபுத்தகமும் தரித்த தனி முதற் குரவரான தக்ஷிணாமூர்த்தி சந்நிதியில் வணங்கி எழுந்து துதித்து,— எ - று.

கண்கவரும் வெண்ணிறத் திருமேனி யென்பார் 'சீதளப்பளிக்கு மேனி' யென்றார். பாதம் பளிக்குமலையிற் பதித்த பவளம்போலு மென்றலின், மேனி பளிக்குமலை போன்றதென்க.

மெய்ஞ்ஞான போதமுத்திரை,—தத்துவ ஞானத்தைப் போதிக்கும் முத்திரை, எனவே சின்முத்திரையென்றதாம். தத்துவஞானத்தை முத்திரை போதித்தலாவது, இறைவன் முனிவர்க்குத் தத்துவங்களை யுரைத்து உரையிறந்த பொருளையுணர்த்துழி, சின்முத்திரைக் கையனாய்த் தானே யிருந்து காட்ட, ஊமைத் தசும்புள் நீர் நிறைந்தாற் போல மாணுக்கர்க்கு ஆனந்தமயமான உள்ளொளி நிறைதலாம்.

வேதபுத்தகம் - பதி பசு பாசம் என்னும் முப்பொருளியல்பு நன்குணர்தற்குக்கருவியாகிய புத்தகம். என்றது சிவஞானபோதத்தை என்றுணர்க. வேதம் - அறிதற்கருவி.

அற்றேல், தக்ஷிணாமூர்த்தி தியான சொரூபங் கூறுகின்ற காரணம் முதலிய ஆகமங்களினும் புராணங்களினும் அவர் திருகரத்தில் தாங்கியிருப்பது "ஞானபுத்தகம்" "வித்தியாபுத்தகம்" "சர்வ விஞ்ஞான ரத்தினங்கட்கோர் கோசமான புத்தகம்" "புத்தகம்" எனவே கூறுதலான் அவற்றோடு முரணும் போலுமெனின், அறியாது கூறினாய்; ஞானபுத்தகம் வித்தியாபுத்தகம் சர்வவிஞ்ஞானங்கட்கோர் கோசமானபுத்தகம் என்பன சிவஞானபோதநூல் என்னுந் துணையேயன்றி வேறு பொருள் பயக்குமாறின்மையானும், வடமொழியாலாஸ்யமான்மியத்தில் புத்தகம் என வாளா கூறியதனை ஈண்டு இன்னதென விளக்குதற்பொருட்டே ஆசிரியர் அறிதற்கருவியெனப் பொருள்படும் வேதம்என்னும் அடைபுணர்த்தோதினாராகலானும், வேதாகமங்களை முதல்

வன் அருளிச்செய்தது ஆன்மாக்கள் பொருட்டன்றித் தம்பொருட்டன் றாக லான் அவற்றிற்கு வேறாய் ஆன்மாக்கட்குப் பயன்படுதலின்றி ஓர் நூலுண் டென்றற்குப் பிரமாணமின்மையானும், வேதாகமங்களுள் எல்லாநூல்களும் அடங்கும் என்றற்குப் பிரமாணம் உண்மையானும் ஞானபுத்தகம் முதலிய நாமத்தாற் கூறப்பட்டது வேதாகமங்களின் சாரமாயுள்ள சிவஞானபோதமே என்பது பெறப்படுதலான் முரணுமாறு யாண்டையதென் றொழிக.

இன்னும், வேதம் என்னும்பெயர் யோகரூடி நாமத்தால் இருக்குமுதலிய நான்கிற்கும் வழங்கப்படுமாயினும், கௌணவிருத்தியால் ஆகமங்கட்கும் வழ ங்கப்படுதலான், அவ்வொற்றுமைபற்றி அவற்றின் ஞானபாதப்பொருளைக் கூறுதற்கெழுந்ததாயினும் சிறுபான்மை ஆங்காங்கு இயைபுபற்றி ஏனை யோ கம் முதலிய மூன்றுபாதப் பொருள்களையும் கூறும் இச்சிவஞானபோதமும் வேதமெனப்பட்டது என்றலும் ஒன்று.

இனி, சூதசங்கிதையில் கூறியாங்கு இச்சிவஞானபோதமே சர்வவிஞ் ஞானங்களாகிய இரத்தினங்கட்கு ஓர்கோசமாதலைச் சிறிது காட்டுதும்:—

"பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண் டுய்கெனக்
குடிலை யென்னுந் தடவய லுப்ப
ணருள்வித் திட்டுக் கருணைநீர் பாய்ச்சி
வேத மென்னும் பாதபம் வளர்த்தனை
பாதப மதனிற் படுபயன் பலவே
அவற்றுள்,
இலைகொண் டுவந்தனர் பலரே யிலையொரீஇத்
தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ
யரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை
விரும்பினர் கொண்டுகொண் டுவந்தனர் பலரே
யவ்வா றுறுப்பு மிவ்வாறு பயப்ப
வோரும்வே தாந்தமென் றுச்சியிற் பழுத்த
சாரங் கொண்ட சைவசித் தாந்தத்
தேனமு தருந்தினர் சிலரே."

என்னுந் திருவாக்கானும், "வேதம் பசு" என்னும் மேலை வெண்பா வானும் வேதாகமம் முதலிய எல்லாநூல்களிலும் கூறப்படும் விஞ்ஞானங்க ளும் இதிலடங்குமாறு தெற்றெனக் காண்க.

இவ்வாறன்றி வேறுரைப்பனவெல்லாம், "வேதநூல் சைவநூ லென்றிர ண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவற்றின் விரிந்த நூல்கள்" என்பதுமுதலிய சுருதிகளோடும் பிறவற்றோடும் முரணுமென்று விடுக்க.

சிவமயம்.

# நூல்வரலாறு.

சிவபெருமான் மாசங்காரகாலத்தின் இறுதியிலே உலகங்களை மீளப் படைத்து வேதாகமங்களையுந் தோற்றுவித்துச் சீகண்டருத்திரர் வாயிலாக நந்திபெருமானுக்கு இருபத்தெட்டாகமங்களையும் செவியறிவுறுத்தருளினர். அவற்றைக் கேட்டருளிய நந்திபெருமான் சீகண்டருத்திரரை வணங்கிநின்று, சிவாகமந்தோறும் சரியை யாதி நாற்பாதப் பொருள்களும் சிறுபான்மை வெவ்வேறாகக் கூறப்பட்டன. அவற்றுள், உண்மையாவது இதுவென்று அருளிச் செய்யவேண்டுமென்று இரந்து விண்ணப்பஞ் செய்து வினயவழிச், சீகண்டருத்திரர் கருணைமீக்கூர்ந்து, நன்றே வினயினய்; அனந்ததேவர் எமக்கருளிச் செய்தவாறே கூறுகின்றும்; கேட்பாயாகவென்று அருளிச்செய்து, கற்பந்தோறும் படைப்பு வேறுபாடும் கேட்போர் கருத்து வேறுபாடும் பற்றி அவற்றிற் கிரியைச் சரியைமுதலிய மூன்றுபாதப்பொருள்களும் ஆகமங்களில் வெவ்வேறாகக் கூறப்பட்டன. ஆகலான் அவற்றுள் எவ்வாகமத்தின் முறை யார்யார் தீக்கை பெற்றார் அவரவர் அவ்வாகமத்தின் முறை அநுட்டிக்க. எக்கோயில் எவ்வாகமத்தின்முறை பிரதிட்டை செய்யப்பட்டது அக்கோயிற்கு அவ்வாகமுறையே பூசை விழாமுதலியன நடத்துக. மாறிச்செய்யிற் குற்றமாம்.

இனி, ஞானபாதமாவது பொருட்டன்மை உணர்த்துவதாகலின், அது வேறுபடுதல் பொருந்தாமையான், அவையெல்லாந் தூலாருந்ததி நெறிபற்றிக் கூறப்பட்டனவன்றி மாறுகொளக் கூறப்பட்டனவல்ல வென்பதை வகுத்துணர்த்துதற்பொருட்டு, இரௌரவாகமத்துட் பன்னிருசூத்திரத்தாற் கூறப்பட்டது சிவஞானபோத மென்பதோர்படலம். அது கேட்டார்க்கு எல்லாவாகமப் பொருள்களும் வேறுபாடின்றி இனிது விளங்கு மெனக் கூறி, அச்சிவஞானபோதத்தை நந்திபெருமானுக்குச் செவியறி வுறுத்தருளினர். நந்திபெருமானும் அதுகேட்டதுணையானே எல்லா ஐயமும் நீங்கி மெய்ப்பொருள் தெளிந்து பின்னர் அதனைத் தம்மாணுக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சனற்குமார முனிகட்குச் செவியறிவுறுத்தருளினர். அவர் தம்மாணுக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சத்தியஞானதரிசனிகளுக்குச் செவியறிவுறுத்தருளினர். அவர் தம்மாணுக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த பரஞ்சோதி முனி

கட்குச் செவியறிவுறுத்தருளினார். அவர் தமிழ்நாடுசெய்த தவத்தானே சாமுசித்தராய் அவதரித்து மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையாராய்த் திருவெண்ணெய் நல்லூரில் நன்மாமனார் வீட்டில் வீற்றிருந்த மெய்கண்டதேவர்பால் எழுந்தருளிவந்து சிவஞானபோதத்தைக் கொடுத்து, "இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்துய்தற்பொருட்டுத் தமிழின் மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைக்க" என்றருளிப், பொழிப்புரைக்குமாறுஞ் சத்தியஞானதரிசனிகள் பாற் றுங்கேட்டவாறே செவியறிவுறுத்தருளி நீங்க, அவரும் அவ்வாறே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளித், தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த அருணந்திசிவாசாரியர்க்குச் செவியறிவுறுத்தருளினார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த மறைஞானசம்பந்த சிவாசாரியர்க்குச் செவியறிவுறுத்தருளினார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த கொற்றவன்குடி உமாபதிசிவாசாரியர்க்குச் செவியறிவுறுத்தருளினார். இங்ஙனம் வருகின்றது நூல்.

நூல்வரலாறு முடிந்தது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நூலாசிரியர் வரலாறு.

## மெய்கண்டதேவர்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

குறிய வாடியிற் பெரியவா நிழல்செறி கொள்கையாய்ப் போதச்
சிறிய சூத்திரத் தரியமா பொருளெலாஞ் செறித்துநா முய்வா
னறிய நல்கிய மெய்கண்ட தேவன தருண்மடை திறக்கு
நறிய சீறடிக் கமலநன் ஞண்மலர் சென்னியி னமப்பாம்.

நடுநாட்டிலே, திருப்பெண்ணாகடத்திலே, பரம்பரைச்சைவ வேளாளர் குலதிலகரும், சிவபத்தி அடியார்பத்திகளினும் கல்வி செல்வங்களினுஞ் சிறந்தவரும், அச்சுதர்களப்பாளர் என்னும் பெயருடையவரும் ஆகிய ஒருவர் இருந்தார். அவர் நெடுங்காலம் பிள்ளைப்பேறின்மையால், அதற்கு உரிய அரிய விரதாதிகளையெல்லாம், ஆதிசைவரும் சகலாகமபண்டிதரும் ஆகிய தம்முடைய குலாசாரியர் உணர்த்த உணர்ந்து அநுட்டித்து வந்தனர். வந்தும் சித்திபெருது வருந்தி, பின்னும் சகலாகமபண்டிதரிடத்தில் விண்ணப்பஞ்செய்தனர். அதனை உணர்ந்த சகலாகமபண்டிதர் உற்றுநோக்கித் தமிழ்வேதமாகிய தேவாரத்தை, விதிப்படி அருச்சித்து வணங்கி அச்சுதர்களப்பாளரைக்கொண்டு அதிலே கயிறுசாத்துவித்தனர். சாத்துவித்தவழி, திருஞானசம்பந்தமூர்த்திநாயனர் திருவாய்மலர்ந்தருளிய "கண்காட்டு நுதலானும்" என்னுந் திருவெண்காட்டின்மேலதாகிய திருப்பதிகத்திலே, அருட்சத்தியாகிய உமாதேவியார் திருநாமசம்பந்தமான "பேயடையா பிரிவெய்தும்" என்னுந் திருப்பாடல் உதயமாயிற்று. அதிலுள்ள "வெண்காட்டு முக்குளநீர் தோய்வினையார் பிள்ளையினேடு 'உள்ளநினைவாயினவே வரம்பெறுவர் ஒன்றும் ஐயுறவேண்டா" என்பதன்பொருளைச் சகலாகமபண்டிதர் நோக்கி, மிகமகிழ்ந்து கொண்டாடி அச்சுதர்களப்பாளர்க்கு உரைத்தருளினர்.

அதன்பின் அச்சுதர்களப்பாளர் ஆசிரியரிடத்தே விடைபெற்றுக்கொண்டு, திருவெண்காடு என்னுந்திருப்பதியைத் தம்முடைய மனைவியாரோடு அடைந்து, திருக்கோயிற்றிருவீதியிலுள்ள, சோமசூரியாக்கினி என்னும் முச்சுடர்களின் திருநாமம் பெற்ற முக்குளத்திலே, விதிப்படி ஸ்நானம்பண்ணி, சுவேதாரணியரையும் பிரமவித்தியாநாயகியாரையும் தரிசித்து வழிபடுவாராயினர்.

அங்ஙனம் வழிபடும் நாளிலே, ஒருநாட் சுவேதாரணியர் அச்சுதர்களப்பாளருக்குச் சொப்பனத்திலே தோன்றி, "உனக்கு இப்பிறவியிலே, பிள்ளைப்பேறு அரியதாயினும், சர்வாபீஷ்டமும் தரத்தக்கதாய், நமக்கு மிக்க பிரீதியுடையதாயுள்ள தேவாரத்தைப் பரமப்பிரமாணமாகக்கொண்டு, நீ ஒழுகுகின்றமையால், அத்தேவாரத்தைப் பாடிச் சைவஸ்தாபனஞ் செய்த ஞானசம்பந்தன் என்றே சொல்லும்படி நமது திருவருளினாலே, இன்னும் தமிழ்நாடு உய்யும்வண்ணம், அத்தேவாரத்தின் மெய்ப்பொருளை உள்ளடக்கிய சைவசித்தாந்தசாத்திரத்தை வெளிப்படுத்திச் சைவஸ்தாபனஞ் செய்யத்தக்கவனாக உன்னிடத்தில் ஒரு சற்புத்திரன் அவதரிப்பான்" என்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினார். உடனே விழித்தெழுந்த அச்சுதர்களப்பாளர் பெருமகிழ்ச்சிகொண்டு மனைவியாருக்கு அச்சந்தோஷ சமாசாரத்தைத் தெரிவித்து, அவரோடு தாமும் பேரன்புடன் சுவேதாரணியரையும், பிரமவித்தியாநாயகியாரையும் வழிபட்டு வசித்தார். அங்ஙனம் வசிக்கும் நாளிலே, சுவேதாரணியருடைய பெருங்கருணையினாலே, உலகமெல்லாம் உய்யும்படி அவர் மனைவியார்து அருமைத்திருவயிற்றிலே, கருப்போற்பத்தியாகிய பெரும்பேறு உளதாயிற்று.

அச்சுதர்களப்பாளர் அதனையுணர்ந்து, திருவருளைத் துதித்து, உள்ளத்தின் மூளுகின்ற பெருமகிழ்ச்சியோடு சிவாகமவிதிப்படி செய்யவேண்டுஞ் சடங்குகளைப் பத்துமாசங்களினுஞ் சிறப்பாகச்செய்து பேரின்பத்தை நுகருநாளிலே, மிகமேலாகிய சுபதினத்திலே, பரசமயத்தருக்குநீங்கவும், எல்லாரும் அத்துவிதத்துண்மை அறியவும், வடமொழிச்சிவஞானபோதந் தென்மொழியினும் வழங்கவும், சிவனடியார் எஞ்ஞான்றும் பேரானந்தம் பெற்றோங்கவும், பலவுலகங்களுள்ளும் பூலோகமும், அப்பூலோகத்துள்ள எந்நாடுகளுள்ளும் தென்னாடுமே சிறக்கவும் ஒரு சற்புத்திரர் திருவவதாரஞ்செய்தார். நந்தையார் அவருக்கு உரியபருவத்திலே சுவேதவனப்பெருமான் திருவருளாற் பிறந்தமையின் சுவேதவனப்பெருமாள் என்னுந் திருநாமம் சாத்தினர்.

அதன்பின்பு அச்சுதர்களப்பாளரும் அவர்மனைவியாரும் சுவேதாரணியரையும் பிரமவித்தியாநாயகியாரையும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு தமது அருமைத்திருக்குமாரரோடு தங்கள் ஜனனபூமியாகிய திருப்பெண்ணாகடத்தை அடைந்தார்கள்.

அச்சமாசாரத்தைக் கேள்வியுற்ற அந்நகரவாசிகளெல்லாரும் அத்திருக்குமாரரை நாடோறும் வந்து தரிசித்துக் களிபேருவகையடைவாராயினர். சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத்திருநாமமுடைய அவர் பிறைமதிபோல வளரும் நாளிலே திருவெண்ணெய்நல்லூரில்வசிக்கும் அவரது நன்மாமனார் வேணவாவோடும் அவரைத் தமது இல்லத்திற்கு எடுத்துக்கொண்டுபோய்ப் பேரன்போடு வளர்க்க வளர்ந்து, இரண்டு பிராயத்திற்றானே மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையாய் எழுந்தருளியிருந்தார்.

இருக்கும் நாளிலே, பரஞ்சோதிமுனிவர் திருக்கைலாசமலையினின்று நீங்கி, திருவெண்ணெய்நல்லூரை அடைந்து, அம்மெய்யுணர்வுடையாரைச் சந்தித்து, சிவஞானபோதத்தை நல்கி, இதனை எண்டிசையோர் உணர்ந்து உய்

தற்பொருட்டு, மொழிபெயர்த்துப் பொழிப்பும் உரைக்கவென்றருளிப் பொழிப்புரைக்குமாறும் சத்தியஞானதரிசனிகள்பால், தாங்கேட்டவாறே வகுத்தருளிச்செய்து, பொய்ச்சமயங்களின் நெறி இது இது என்று கண்டு கழிப்பித்து, மெய்ச்சமயமாகிய சைவத்தின் உண்மை உணர்ந்து, அதனை ஸ்தாபனஞ்செய்யும் காரணத்திற்கும், தம்முடைய ஆசிரியர் சத்தியஞானதரிசனிகள் திருநாமத்திற்கும் இணங்க, அம்மெய்யுணர்வுடையாருக்கு மெய்கண்டதேவர் எனச் சிறப்புத் திருநாமம் சாத்தி நீங்கினார்.

பின்பு மெய்கண்டதேவர் அத்திருவெண்ணெய்நல்லூரில் எழுந்தருளியிருக்கின்ற சுயம்புமூர்த்தியாகிய பொல்லாப்பிள்ளையாருடைய சந்நிதியில் சிவஞானபோதத்தைச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடி, சிவபிரான் திருவருளும், ஆசிரியர் பரஞ்சோதிமுனிவர் கருத்தும் நோக்கி, தமிழ்நாடு உய்யும்வண்ணம், அவ்வடமொழிச் சிவஞானபோதத்தைத் தமிழில் மொழிபெயர்த்து, வார்த்திகமென்னும் பொழிப்புரையுஞ்செய்து பல அற்புதங்களை விளக்கி, சைவஸ்தாபனஞ்செய்து, தம்முடைய மாணாக்கர் நாற்பத்தொன்பதின்மருள்ளும் சிறந்தவரும், திருத்துறையூரிலே அவதரித்தருளிய ஆதிசைவரும், சகலாகமபண்டிதரென்னுங் காரணப்பெயருடையவருமாகிய அருணந்திசிவாசாரியருக்கு அளித்தருளி, நெடுங்காலம் சிவயோகத்திலமர்ந்து, திருவெண்ணெய்நல்லூராகிய அத்திருப்பதியிலே ஐப்பசிமாதத்துச் சுவாதிநக்ஷத்திரத்திலே அகண்டாகார நித்தவியாபக சச்சிதானந்தப்பிழம்பாகிய சிவபெருமானோடு இரண்டறக்கலத்தலாகிய சுத்தாத்துவிதமுத்தியை அடைந்தனர்.

இவர்காலம் இற்றைக்கு ஏறக்குறைய ௬௫௦ வருடங்களுக்கு முன்னென்ப.

நூலாசிரியர்வரலாறு முடிந்தது.

---

சந்தானகுரவர்நால்வர் திருநக்ஷத்திரம்.

சித்திரை யத்த முமாபதி யாவணித் திங்கடனி
லுத்திரஞ் சீர்கொண் மறைஞான சம்பந்த ரோதுகன்னிச்
சுத்தமெய்ப் பூர மருணந்தி யையப்பசிச் சோதிதனில்
வித்தக மெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உரையாசிரியர் வரலாறு.

## திராவிடமாபாடியமுனிவர்.

தரவுந் தாழிசையும் பெற்றுவந்த கொச்சகக் கலிப்பா.

தரவு.

உலகெலாம் புகழோங்க வுண்மையெலா மெடுத்துரைத்தெம்
அலகிலாத் தமிழ்முனியென் றறிஞரெலா மேத்தெடுப்பத்
தென்றிசையின் பெருந்தவத்தாற் றிருவவதா ரம்புரிந்து
மன்றினிய தாய்ப்புரைய வருளிருத்து மொருபெருமான்
வடமொழியுந் தென்மொழியு மற்றையுள வாமொழியுங்
கடல்குடித்த முனிநேரக் கண்டருளுஞ் சித்தாந்தி
பங்கயத்தி லுறைவோனும் பசுங்கடலிற் றுயில்வோனும்
புங்கவரு முணர்வரிய போதப்பே ருரைசெய்த
தவமோன பெருமையெலா நிலமொழியச் சாலாத
சிவஞானப் பெருமுனியாந் தேவே நீ கேட்டருள்க!

தாழிசை.

ஆக்களனு முயிர்ப்போத மடிவதுநந் துறையென்றே
நீக்கரிய தண்டுறையே நின்குடியாக் கொண்டனையே.
தமிழ்தமிழென் றெல்லோருந் தாலசைக்கு மிம்மகிமை
யமிழ்தம்போ னீயளித்த வறத்தருளின் பிச்சையதே.
எச்சமயத் தெவர்தாமு நின்வாய்மை யெண்ணிலரேற்
பிச்சரவ ரெப்பயனும் பெற்றிலாப் பெற்றியரே.
தீந்தமிழும் பாடியமாஞ் செவ்வணியைப் பூண்பதற்கிங்
கீந்தவனு நீயன்றே யித்துணையோ நின்பெருமை.
ஒப்பதிகம் பெறற்கரிய வுன்றாட்குப் பன்முறையாஞ்
செப்பமுற மிகுவணக்கஞ் செய்தரோ வுய்குவமே.

பாண்டிவளநாட்டிலே, பொதியமலைச் சாரலிலே, பாவநாசமென்னுந் திருப்பதியைச்சார்ந்த விக்கிரமசிங்கபுரத்திலே, அகத்தியமகாமுனிவரிடத்தே ஏழுதலைமுறையளவும் அருட்புலமை நிரம்பும் வண்ணம் வரம்பெற்ற பாரம்பரைச்சைவ வேளாளர் குலத்திலே, சிவபத்தி அடியார்பத்திகளிற் சிறந்தவரும் கல்வி செல்வம் என்னும் இரண்டும் ஒருங்குடையவரும் ஆகிய ஆனந்தக்கூத்தர் என்பவரொருவர் இருந்தார். அவர்மனைவியார் கற்பிலே தமக்கு உயர்வொப்பில்லாத மயிலம்மையாரென்று எவராலுஞ் சிறப்பித்துச் சொல்லப்படுபவர். அவரது திருவயிற்றிலே, ஏழாவதுதலைமுறையாகத் தமிழ்நாடுசெய்த தவத்தானே, ஒருசற்புத்திரர் திருவவதாரஞ்செய்து முக்களாலிங்கர் என்னும் பிள்ளைத்திருநாமம் சாத்தப்பெற்று ஒழுக்கம் அன்பு அருள் முதலிய நற்குணங்களோடு வளருவாராயினர்.

பின்பு முக்களாலிங்கர் ஐந்துபிராயத்திலே, பிதாவினாலே வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுப் பள்ளிக்கூடத்தில் அமர்ந்து கற்பாராயினர். அங்ஙனம் கற்குங்காலத்திலே, திருவாவடுதுறை ஆதீனத்திலிருந்து சிவஸ்தலயாத்திரையாகப் புறப்பட்ட சிலமுனிவர்கள் விக்கிரமசிங்கபுரத்து வீதியிலே சென்றார்கள். பள்ளிக்கூடத்தினின்றும் வந்த முக்களாலிங்கர் அம்முனிவர்களைச் சந்தித்துத் தரிசித்து வணங்கி, "சுவாமிகாள் அடியேன் வீட்டிற்கு எழுந்தருளித் திருவமுதுசெய்து, பின்பு சென்றருளல்வேண்டும்" என்று பிரார்த்திக்க, அம்முனிவர்கள் ஆண்டின் இளையரும் அறிவின் முதியருமாகிய முக்களாலிங்கர் பிரார்த்தனைக்கு இரங்கி, விருப்பத்தோடு உடன்பட்டு அவருடன் அவரது வீட்டுக்குப்போயினர். அங்கே தமது புத்திரர் அருமைக்கருத்தையுணர்ந்து அருந்ததியினுஞ்சிறந்த மயிலம்மையார் அன்போடு உபசரிக்கத் திருவமுதுசெய்து, அவரது கற்பின் திறத்தையும், சிவனடியார்க்குச்செய்யுந் திருத்தொண்டின் திறத்தையும், "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்—பெய்யெனப் பெய்யு மழை." என்னுந் திருக்குறளுக்கு இலக்கியமாக நாயகனையே தெய்வமெனக்கொண்டு ஒழுகும் நலத்தினையும் சிறப்பித்து, "அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றுந்—திருந்த வமுதளிக்குஞ் செல்வி-பொருந்தவே—யானந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு—மானந் தவாத மயில்." என்னுஞ்செய்யுளை இயற்றிச் சென்றருளினார்கள். அதன்பின்பு புறத்தேபோயிருந்த ஆனந்தக்கூத்தர் வீட்டிற்கு வந்தபோது நிகழ்ந்த அரியசெயல்களைக் கேள்வியுற்றுப் பேரின்பக்கடலிலே முழுகினர்.

பின்னர் ஆனந்தக்கூத்தர் புத்திரராகிய முக்களாலிங்கரோடு ஆதீனமுனிவர்களிடத்தேபோய் வணங்கியவழிச் சத்திநிபாதமுடைய புத்திரர் பிறவிப் பெருந்துன்பக்கடலினின்றுங் கரையேறக்கருதி, அம்முனிவர்களோடு தாஞ் செல்லவேண்டுமென்னுங் குறிப்பினைத் தந்தையாருக்கு உணர்த்த, அவர் புத்திரரைப்பிரியச் சிறிதும் மனமில்லாதிருந்தும் ஒருவாறிசைந்து அவரை அவர்களோடு விடுத்து வீட்டுக்குத்திரும்பினர்.

தந்தையார் நீங்கியபின்பு, முக்களாலிங்கர் ஆதீனத்து முனிவர்களோடு வழிக்கொண்டு மார்க்கங்களிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு,

சோழநாட்டிலுள்ள திருவாவடுதுறையை அடைந்து, மடாலயத்தினுள்ளே புகுந்து, ஆதீனபரமமுதற்குரவராகிய நமச்சிவாயமூர்த்திகளைத் தரிசித்துத் திருவருணோக்கம் பெற்றுக்கொண்டு, அப்பொழுது சின்னப்பட்டத்தில் எழுந்தருளியிருந்த ஞானுசாரியராகிய பின்வேலப்பதேசிகரை ஒடுக்கத்திலேபோய்த்தரிசித்துப் பேரன்போடு வணங்கினர்.

வணங்கியமுக்களாலிங்கர் ஞானதேசிகரிடத்தே சைவசந்நியாசமும் சிவதீக்ஷையும் சிவஞானயோகிகளென்னுந் தீக்ஷாநாமமும்பெற்று மெய்கண்டசாத்திரம் பண்டாரசாத்திரங்களைக் கேட்டருளினர். சிவஞானயோகிகள் அகத்தியமகாமுனிவர் வரத்தால் அவதரித்தருளியவராகலின், எளிதிலே வடமொழிக்கடலும் தென்மொழிக்கடலும் முற்றுமுருங்குணர்ந்து மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய் அமர்ந்தருளினர். வேலப்பதேசிகர் சிவஞானயோகிகளுக்கு மெய்யுபதேசஞ் செய்தருளிய ஞானுசாரியரென்பது "எவ்வெவகோட்படுபொருளு மஞ்செழுத்தி னடக்கியவற் றியல்பு காட்டி—மெய்வகையஞ்சவத்தையினு நிற்குமுறை யோதுமுறை விளங்கத் தேற்றி—யவ்வெழுத்தினுள்வீடு மறிவித்துச் சிவபோகத் தழுத்தி நாயேன்—செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்." எனக் காஞ்சிப்புராணத்துட் கூறியவாற்றால் இனிது விளங்கும்.

சிவஞானயோகிகள் ஜமதக்கினி முனிவருடைய புத்திரரும், அகத்தியமகாமுனிவருடைய முதன்மாணக்கரும், இடைச்சங்கப் புலவர் ஐம்பத்தொன்பதின்மருள் ஒருவருமாகிய திருணதூமாக்கினி என்னுந் தொல்காப்பியமுனிவர் அருளிச்செய்த இலக்கணநூலாகிய தொல்காப்பியத்திற்கு உரையாசிரியராகிய இளம்பூரணர்செய்த உரையாகிய இளம்பூரணமும், சேனுவரையர்செய்த உரையாகிய சேனுவரையமும், நச்சினார்க்கினியர்செய்த உரையாகிய நச்சினார்க்கினியமும் எனப்படும் மூன்றுரைகளினுமுள்ள ஆசங்கைகளை நீக்கித் தெளிவிக்கும்பொருட்டு அத்தொல்காப்பியத்தின் பாயிரத்திற்கும், முதற்சூத்திரத்திற்கும் சூத்திரவிருத்தியெனப் பெயரிய பாடியமும், வடமொழித்தருக்கசங்கிரக அன்னம்பட்டீயங்களின் மொழிபெயர்ப்பும், நன்னூலுக்குச்சங்கரநமச்சிவாயப்புலவர்செய்த புத்துரையாகிய விருத்தியுரைத் திருத்தமும் செய்தருளினர். இவை மூன்றும் திராவிடமாபாடியத்திற்கு அங்கங்கள் எனப்படும்.

பின்பு சர்வாத்மசம்புசிவாசாரியர் அருளிச்செய்த சத்தியரூப சித்தாந்தப்பிரகாசிகையின் மொழிபெயர்ப்பும், மெய்கண்டதேவர் மொழிபெயர்த்தருளிய சிவஞானபோதத்திற்கு ஆசிரியர் அமைத்தருளிய மெய்ப்பொருள் விளங்கும்வண்ணம் திராவிடமகாபாடியமெனப் பெயரிய விருத்தியுரையும், இலகுவியாக்கியானமாகிய சிற்றுரையும், அருணந்திசிவாசாரியர் அருளிச்செய்த சிவஞானசித்தியார் சுபக்கத்திற்குப் பொழிப்புரையும், காஞ்சிப்புராணத்தின் முதற்காண்ட மொழிபெயர்ப்பும், சிவாக்கிய சோழமகாராஜா காலத்திலே கஞ்சனூரிலே அவதரித்தருளிய ஆசாரியசரணராகிய அரதத்தசிவசாரியர் வைணவமதத்தை நிராகரித்துச் சைவமதஸ்தாபனஞ் செய்யும்பொருட்டு, நெருப்பிலே பழுக்கக்காய்ச்சிய இருப்புமுக்காலியிலே எழுந்தருளியிருந்து;

சிவபெருமானே பரம்பொருளென இருபத்திரண்டு ஏதுக்களாலேநாட்டியரு ளிய சுலோகபஞ்சகத்தின் மொழிபெயர்ப்பும், அப்பயதீக்ஷிதர் அருளிச்செய்த சிவதத்துவ விவேகமூல சுலோகங்களின் மொழிபெயர்ப்பும்செய்தருளினார்.

பின்பு பெரும்பாலும் உண்மைநாயன்மார் சரிதம் முதலியவற்றைத் தழுவிப் பூருவார்த்தமும் அதற்கு எடுத்துக்காட்டாகத் திருவள்ளுவநாயனார் திருக்குறள் உத்தரார்த்தமுமாகக்கொண்டு சோமேசர்மீது முதுமொழிவெண்பா, யமகரூபமான திருவேகம்பரந்தாதி, திருக்குரூபமான திருமுல்லைவாயிலந்தாதி, குளத்தூர்ப்பதிற்றுப்பத்தந்தாதி, கலைசைப்பதிற்றுப்பத்தந்தாதி, இளசைப்பதிற்றுப்பத்தந்தாதி, கச்சி ஆனந்தருத்திரேசர்பதிகம், திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு, செங்கழுநீர்விநாயகர் பிள்ளைத்தமிழ், அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ், செப்பறைப்பதி அகிலாண்டேசுவரிபதிகம், மார்கழிமதித் திருவாதிரையுற்சவத்திலே தேவாரம்முதலிய அருட்பாக்கள் ஐந்தும் திருக்காப்பிடப்பட்டுத் திருவெம்பாவையென்னுந் திருவாசகத்திருப்பதிகம் ஒன்றுமே ஆன்மார்த்த பரார்த்த சிவபூஜாகாலங்களில் ஓதப்பெற்றுவருஞ் சம்பிரதாயத்தால் நித்தநியமமந்திரமாகத் திருத்தொண்டர் திருநாமத்தை ஓதியுய்யவேண்டுவோர் கருத்துத்தடையுறுவண்ணந் திருத்தொண்டர் திருநாமக்கோவை, ஆதிபரமாசாரியராகிய நமச்சிவாயமூர்த்திகண்மீது மாலை முதலிய பிரபந்தங்களைச் செய்தருளினார்.

பின்பு மரபட்டவணை எனப்பெயர்பெற்ற திருவாவடுதுறை ஆதீன சாம்பிரதாயக்கட்டளையைத் தருமபுர ஆதீனத்தார் மறுத்தெழுதியதற்கு "மறுப்பின் மறுப்பு" என ஓர் கண்டனமுஞ், காஞ்சீபுரத்தில் யாத்திரையாக வந்தருளிய திருவண்ணாமலைஆதீனத்துப் பண்டாரசந்நிதிகள் சிவஞானசித்தியாரில் "என்னைவிப்பவத்திற் சேரா வகையெடுத்து" என்னுஞ் செய்யுளில் "எடுத்து" என்னுஞ் சொல்லுக்குப் பொருள் என்னை? என்று தம்மாதீனத்து ஞானப்பிரகாசமுனிவர் இயற்றிய சிவசமவாதவுரையின் உயர்வு தொனிக்கும்வண்ணம், சிவஞானயோகிகளிடத்தே வினவுவித்தபொழுது, "எடுத்து" என்னுஞ்சொல்லுக்குச் "சிவசமவாதவுரைமறுப்பு" என ஓர் கண்டனமும், அதன்மேற் பிரதிகண்டனம் உண்டாயவழி மேன்மறுத்த மறுப்பு, குதர்க்கவுரையாளராற் போழப்படாதவாறு "எடுத்து என்னுஞ்சொல்லுக்கிட்ட வயிரக்குப்பாயம்" என ஓர் கண்டனமுஞ், சிவஞானசித்தியாருக்கு ஞானப்பிரகாசமுனிவர் இயற்றிய உரை முற்றும் போலியுரை என விளக்கச் "சிவசமவாதவுரை மறுப்பு" என ஓர் கண்டனமுஞ் செய்தருளினார்.

பின்பு கம்பராமாயணகாவியம் ஒன்றுமே தமிழிற் சிறந்திருப்பதெனச் செருக்கோடு கூறிய காஞ்சீபுரத்து வைணவர்கள் வாயை அடைக்கக்கருதி அக்கம்பராமாயணத்து நாந்திச்செய்யுளாகிய "நாடியபொருள்கைகூடும்" என்னும் பாட்டு முற்றும் குற்றமே எனச் சங்கைசெய்தவழி, அவ்வைணவர்கள் அச்சங்கைக்கு உத்தரஞ்சொல்ல இயலாமல் வருந்தித் தெரியாது பிதற்றினோம் எனச் சொல்லி வணங்கித் துதித்தவழி, சிவஞானயோகிகள் மகிழ்ந்து உத்தரங்கூறி, அவ்வைணவர்களை உவப்பித்தருளினார். அச்சங்கையுத்தர

ங்களை வரைந்த நூலுக்கு, "கம்பராமாயணமுதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி" என்று பெயர் வழங்கிவருகின்றது.

பின்பு திருவாரூர் வைத்தியநாதநாவலர் இயற்றிய இலக்கணவிளக்கத்தில், எழுத்ததிகாரம் சொல்லதிகாரம் முதலியவற்றிலுள்ள வழுக்களை வெளியிடக்கருதி இலக்கணவிளக்கச்சூறாவளி என ஒன்று செய்தருளினர்.

பின்பு சிவஞானசுவாமிகள் திருநாவுக்கரசுநாயனர் கடலினின்றுங் கரையேறிய திருப்பாதிரிப்புலியூரில் யாத்திரையாக எழுந்தருளியிருக்குங் காலத்திலே சிவாலயத்தின்கண்ணே, சிலவித்துவான்களும் பிரபுக்களுங் கூடிய சபையில் ஒருபிரபு நூறுபொன்னைக் கிழியாகக் கட்டிவைத்து, "கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ" என்று ஈற்றடியெடுத்துக் கொடுத்துச், "செய்யுளைப் பூர்த்திசெய்பவர் இப்பொற்கிழியை எடுத்துக்கொள்ளலாம்" என்று சொன்னர். அந்நிகழ்ச்சியைச் சுவாமிதரிசனத்தின்பொருட்டுச் சிவாலயத்துக்கு எழுந்தருளிய சுவாமிகள் அறிந்து, ஒரு ஏழைப்பிராமணனைநோக்கி அப்பொற்கிழியை எடுத்துக்கொள்ளும்படி கட்டளையிட்டு, "வரையேற விட்டமுதஞ் சேந்தனிட வருந்தினைவல் வினமென்றூனு—முரையேற விட்டமுத லாகுமோ வெனைச்சித்தென் றுரைக்கி லென்னு—நரையேற விட்டமுத ளைவனைக் கொண்டுநறும் புலிசை மேவுங்—கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ." என்று செய்யுளைப் பூர்த்திசெய்தருளினர்.

இங்ஙனம் உலகோபகாரமாகப் பலவுரைகளையும் பலநூல்களையும் பலகண்டனங்களையும் செய்து பலநன்மாணாக்கர்களுக்குப் போதித்து, வடமொழியினுந் தென்மொழி சிறந்ததென்னும்படி அபிவிருத்திசெய்து, தவமே திருவுருக்கொண்டாற்போல விளங்கிச் சிவப்பேற்றிற்குக் காரணமாகிய நிட்டையில் வீற்றிருந்தருளிய திராவிடமகாபாடிய கர்த்தராகிய சிவஞானயோகிகள் திருவாவடுதுறையிலே சித்திரைமாசத்து ஆயிலியநக்ஷத்திரத்திலே சிவபரிபூரணதசையை அடைந்தனர்.

உரையாசிரியர்வரலாறு

முற்றுப்பெற்றது.

---

சிவஞானசுவாமிகள் திருநக்ஷத்திரம்.

மன்னும் விசுவா வசுவருட மேடமதி
யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்
திருவாள னெங்கோன் சிவஞான தேவன்
றிருமேனி நீங்கு தினம்.

---

உ

சிவமயம்.

# சூசீபத்திரம்.







## க. பொதுவியல்பு.

### க. பிரமாணவியல்.



### ௨. இலக்கணவியல்.



§



## ௨. சிறப்பியல்பு.

### ௩. சாதனவியல்.



### ௪. பயனியல்.



ஆ சூத்திரம் க௨ -க்கு அதிகாரணம் ௩௧.

# வெண்பாத்தொகை.

சூத்திரம் அதிகரணம் வெண்பா என்னும்

இவற்றின் முழுத்தொகை.

நேரிசை வெண்பா.

சூத்திரமீ ராறினுக்குச் சூரணிமுப் பானென்பா [கை
னேத்தவெண்பா வெண்பா னிரண்டனைத்துஞ்-சேர்த்ததொ
நூற்றுமுப்பான் மூன்றிவற்றை நுண்ணுணர்வி னுய்ந்துணர்
வேற்றுருக்கொள் ளாருறுவர் வீடு. [ந்தோர்

அதிகரணவெண்பாத்தொகை.

நேரிசை வெண்பா.

ஐயொருப தேழேழு மாங்கமைந்த நாலாறு
மையொன்ப தோரெட்டோ டாறுறுந்—துய்யவெட்டோ
டெண்பத்து மொன்றுஞ் சிவஞான போதத்தின்
மன்னருளும் வெண்பா வகை.

சூர்ணித்தொகை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மூன்றுநான் கேழு மூன்றே முடிந்தபி னிரண்டி ரண்டே
மூன்றுநான் மூன்று நன்மூய் முடிந்தபி னிரண்டி ரண்டே
யேன்றநான் கீறு தாமே யிவையீரா றிலகத் துள்ளே
யேன்றமுப் பானென் பானே யெனக்கர னிரங்கி னனே.

சூத்திரக்கருத்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

முதற்பதி யரனே யைந்து முன்னத்து விதமி ரண்டே
யிதற்பினே யனுமா னத்தா லெண்ணிலா வுயிர்கண் மூன்றே
யதற்பினே யவத்தை நான்கே யகமறுத் திடலே யைந்தே
செகற்பதி பிரித்த லாறே தெரிவித்த லுயிரை யேழே.

மறைப்பினை நீக்கி ஞான வாரியை நினைத்த லெட்டே
சிறப்புடை யுபாயந் தம்மாற் றெளிவித்த லுயிரை யொன்பா
னறுத்திடன் மலங்கள் பத்தே யழுந்தலே சிவத்தி லொன்றே
திறப்பணி கொளலி ரண்டே சிவஞான போதஞ் சித்தி.

சிவமயம்.

# சூர்ணிக்கொத்து.

## முதற்சூத்திரம்.

௧.—சகம் பிறப்பிருப்பிறப்பாகிய முத்தொழிலையுடையது.

௨.—அது அரனாலே உடையது.

௩.—மற்றிருவரும் முத்தொழிற்படுவர்கள்.

## இரண்டாஞ்சூத்திரம்.

௧.—அரன் உயிர்களின் இரண்டற நிற்பன்.

௨.—உயிர்களுக்குக் கன்மபலனை அரனே கொடுப்பன்.

௩.—உயிர்கள் அச்சு மாறியே பிறக்கும்.

௪.—அரன் சருவ வியாபகன்.

## மூன்றாஞ்சூத்திரம்.

௧.—இல்லையென்கிற அறிவுடனே சொல்லுகையினாலே அறிவுயிர் உண்டு.

௨.—எனது உடல் என்று பொருட்பிறிதின்கிழமையாகச் சொல்லுகையினாலே, உடற்கு வேறாய் உயிருண்டு.

௩.—ஐந்தையும் ஒருவனே அறிதலின், ஒவ்வொன்றைமாத்திரம் அறிகிற ஐந்திற்கு வேறாய் உயிர் உண்டு.

௪.—கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே, அக்கனவுடற்கு வேறாய் உயிர் உண்டு.

௫.—நித்திரையிலும் பிராணவாயுத் தொழில் பண்ணவுஞ் சரீரத்துக்குப் புசிப்புந் தொழிலும் இல்லாதபடியினாலே, பிராணவாயுவுக்கு வேறாய் உயிர் உண்டு.

௬.—மறந்து மறந்து நினைக்கிறபடியினாலே மறவாமல் இருக்கிற அரனுக்கு வேறாய் உயிர் உண்டு.

௭.—எல்லாத்தத்துவங்களுக்கும் வேறு வேறு பெயர் இருக்கையினாலே, அந்தந்தத் தத்துவங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

## நான்காஞ்சூத்திரம்.

க.—அந்தக்கரணங்களுக்கு உயிர் உட்கூடினாலன்றித் தொழில் இல்லாதபடியினாலே, அந்தக்கரணங்களுக்கு வேறாய் உயிர் உண்டு.

உ.—மலமறைப்பால் உயிருக்கு அறிவு இல்லை.

ங.—உயிர் மூன்றவத்தைப்படும்.



## ஐந்தாஞ்சூத்திரம்.

க.—உயிராலே தத்துவங்களெல்லாந் தொழில் செய்யும்.

உ.—அரனாலே உயிர்களெல்லாம் அறியும்.



## ஆறாஞ்சூத்திரம்.

க.—உயிரறிவினாலே அறியப்பட்டதெல்லாம் அழியும்.

உ.—அப்பிரமேயமாக அறியப்பட்டவனே அரன்.



## ஏழாஞ்சூத்திரம்.

க.—அரன் பாசத்தை அநுபவியான்.

உ.—பாசம் அரனை அநுபவியாது.

ங.—உயிர் அவ்வரனை அடையும்; அநுபவிக்கும்.



## எட்டாஞ்சூத்திரம்.

க.—உயிருக்கு நல்லறிவு தவத்தினாலேயே வரும்.

உ.—உயிருக்குச் சற்குருவாய் வருவது அரனே.

ங.—உயிர் பஞ்சேந்திரியங்களைப் பற்றுகையினாலே தன்னையும் அறியமாட்டாது.

ச.—உயிர் பஞ்சேந்திரியங்களிலே பற்றற்றால் தன்னையும் அறியும்.



## ஒன்பதாஞ்சூத்திரம்.

க.—உயிர் அரன் ஞானத்தினாலேயே அரனைக் காணும்.

உ.—உயிர் பாசத்திலே பற்றற்றால், அரன் வெளிப்படுவன்.

ங.—பஞ்சாக்ஷரசெபம் பண்ணினால், வாசனாமலம் போம்.



## பத்தாஞ்சூத்திரம்.

௧.—அரனுடன் ஒன்றாகி நில்.

௨.—உன்றொழிலெல்லாம் அரன் பணி என்று கொள்.



## பதினொராஞ்சூத்திரம்.

௧.—ஞானிக்கு வருகிற விடயங்களை அரனே அநுபவிப்பன்.

௨.—அரனை மறவாமல் அன்பு இருந்தால் அவனிடத்திலே ஐக்கமாய்ப் போவன்.



## பன்னிரண்டாஞ்சூத்திரம்.

௧.—மும்மலங்களையுங் களைக.

௨.—சிவஞானிகளுடனே கூடுக.

௩.—சிவஞானிகளையுஞ் சிவலிங்கத்தையுஞ் சிவனெனவே தேறி வழிபடுக.

௪.—வழிபடாமையை ஒழிக.

ஆக சூத்திரம் ௧௨ - க்குச் ஞர்ணிக்கொத்து. ௩௧.

முற்றுப்பெற்றது.



சிவமயம்.

## வடமொழிச்

# சிவஞானபோதம்.

## மூலமும் தமிழுரையும்.



இந்நூல் நந்திபெருமானுக்குக் காமிகம் முதலிய இருபத்தெட்டாகமங்களின் பொருளொருமை உணர்த்துதற்கு எழுந்த நூலாகலின் அவ்வாகமங்களின் சாரமாயுள்ளதாம். பன்னிரண்டு சூத்திரமுடையது. இதிற் கூறப்படும் பொருள் பதி பசு பாசம் என்னும் திரிபதார்த்தங்களாம். அவற்றுள், முதற்சூத்திரம் பதி உண்மைக்குப் பிரமாணம் கூறுகின்றது.

𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾 𑌜𑌗𑌤𑌃 𑌕𑌾𑌰𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍।
𑌅𑌸𑍍𑌤𑌿𑌕𑌰𑍍𑌤𑌾𑌸𑌹𑍃𑌤𑍍𑌵𑍈𑌤𑌤𑍍 𑌸𑍃𑌜𑌤𑍍𑌯𑌸𑍍𑌯𑌪𑍍𑌰𑌭𑍁𑌰𑍍𑌹𑌰𑌃॥

இ - ள். 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌂𑌨𑌪𑍁𑌂𑌸𑌕𑌾𑌦𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 - பெண் ஆண் அலிகளின் ஆதித்தன்மையினாலே,—𑌕𑌾𑌰𑍍𑌯𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌤𑍍 - காரியமாந்தன்மையை (அநுமானித்து) உணர்தலால் (உண்டாகிய செய்யப்படுந் தன்மையால்),—𑌜𑌗𑌤𑌃 - தோன்றியொடுங்கும் தன்மையுடைய பிரபஞ்சத்திற்கு,—𑌕𑌰𑍍𑌤𑌾 𑌅𑌸𑍍𑌤𑌿 - தோற்றுதலைச்செய்யும் நிமித்தகாரணனாகிய கருத்தா ஒருவன் உளன்,—𑌸𑌃 𑌏𑌤𑌤𑍍 𑌹𑍃𑌤𑍍𑌵𑌾 𑌸𑍃𑌜𑌤𑌿 - அவன் இப்பிரபஞ்சத்தை ஒடுக்கி (மீள) உளதாக்குவன்,—𑌅𑌸𑍍𑌯 𑌹𑌰𑌃 𑌪𑍍𑌰𑌭𑍁𑌃 - இதனால் சங்காரத்தொழிலைச் செய்யுங் கடவுளாகிய சிவனே முதற்கடவுள். எ - று.

ஆதித்தன்மையாவது உற்பத்தியும், அவயவப்பகுப்புடைமையும், அசேதனமாய்ப் பலவாதலும் முதலியனவாம். இங்ஙனம் கூறப்பட்ட ஆதித்தன்மையினாலே பிரபஞ்சம் காரியமாதலும் காரியமாதலினால் கருத்தாவை உடைத்தாதலும் பெறப்பட்டது.

இனி, ஏதுவுடையதும், அநித்தியமும், அவ்வியாபகமும், கிரியையுடையதும், அநேகமாவதும், சார்புடையதும், குறியுடையதும், அவயவமுடையதும், பிறர்வயமுடையது மாயுள்ளது காரியமென்றும் அதனின்வேறாயது காரணமென்றும் சாங்கியநூலுட் கூறப்பட்டது.

ஆகலான், உருவமுடைமையானும், பிரிவுடைமையானும், பிறவற்றினிடையே நிற்றலானும், அவயவமுடைமையானும், கட்புலப்படநின்ற கடம் முதலியவற்றின் நிலைபோலத் தோற்ற ஒடுக்கங்களை முன்னும் பின்னும் உடைமையானும், அசேதனத்தன்மையோடு கூடிய பன்மையானும் சாதிக்கப்பட்ட காரியத்தன்மையையுடைய பிரபஞ்சம் கருத்தாவையுடையதேயாம்.

இதனால் காரியமாய்க் காணப்படும் பிரபஞ்சத்திற்குக் கருத்தா ஒருவன் உளன் என்பது அநுமான அளவையாற் சாதிக்கப்பட்டது.

அந்ய ஸந் வ்யாப்திதோ நந்ய: கர்த்தா கர்மாநுஸாரத: |
கரோதி ஸம்ஸ்ருதிம் பும்ஸாம் ஆஜ்ஞயா ஸமவேதயா ||

இ - ள். கர்த்தா - மேற்கூறிய சங்காரகாரணனாகிய சிவன்,—அந்ய: ஸந் - (பொருட்டன்மையால் உயிர்களுக்கு) வேறாயினும்,—வ்யாப்தித: அநந்ய: - வியாபகத்தினாலே வேற்றுமையின்றி அவ்வுயிர்களேயாய்,—ஆஜ்ஞயா ஸமவேதயா - ஆணையென்னும் பரியாயப்பெயருடைய தன்னை விட்டுநீங்காத சிற்சத்தியினாலே,—பும்ஸாம் - ஆன்மாக்களுக்கு,—கர்மாநுஸாரத: - அவற்றின் இருவினைகளுக்கு ஈடாக,—ஸம்ஸ்ருதிம் கரோதி - சிருட்டிமுதலிய பஞ்சகிருத்தியங்களைச் செய்கின்றான்.

அச்சிவன் பொருட்டன்மையால் உயிர்களின் வேறாயினும் கலப்பினால் அவ்வுயிர்களேயாய் நின்று தன்னை விட்டுநீங்காத சிற்சத்தியைக்கொண்டு அவை இருவினைக்கீடாக இறத்தல் பிறத்தல்களைப்புரியும் வண்ணம் செய்வன் என்பதாம்.

ஈண்டுச் சமவேதசத்தி என்றது திரோதான சத்தியை என்க. அச்சத்தி மலத்தை செலுத்துதலினால் மலம் என்று உபசரித்துக் கூறப்படும். கன்மங்கூறவே அக்கன்மத்துக்குப் பற்றுக்கோடாகிய மாயையும் அவ்விரண்டற்கும் மூலமாகிய ஆணவமலமும் பெறப்படும்.

மேற்சூத்திரத்தாற் பெறுவிக்கப்பட்ட கருத்தா உயிர்களின்பொருட்டுப் பஞ்சகிருத்தியஞ் செய்யுமாறு கூறும் முகத்தானே ஆணவம் காமியம் சுத்தமாயை அசுத்தமாயை திரோதானசத்தி என்னும் பஞ்சபாசங்களினுண்மை சாதிக்கப்பட்டது.

நேதீதி இதமமேதி உக்தேரக்ஷோபரமதோ போதாத் |
ஸ்வாபே நிர்போகதோ போதே போத்ருத்வாதஸ்த்யாத்மா தநௌ ||

இ - ள். ந இதி த: - ஆன்மா இலது என்றலானும்,—இதம் மம உக்தே: - (உடம்பை யான் எனத் தற்கிழமைப்பொருள் பட வழங்குமாறின்றி) எனது எனப் பிறிதின்கிழமைப்பொருள் பட வழங்குதலின் மிகுதிப்பாட்டானும்,—அக்ஷ போத: - ஐம்பொறிகளைக்கொண்டு அறிதலானும்,—உபரதி போத: - ஐம்பொறிகளும் ஒடுங்கின சொப்பனத்தானத்தில் நிகழ்ந்தவற்றை (நனவின்கண் மயங்கி) அறிதலினானும்,—ஸ்வாபே நிர்போகத: - (சுழுத்தியும் துரியமுமாகிய) நித்திரையிலே (விடயங்களினிடமாகவரும்) இன்பத்துன்பநுகர்ச்சி இன்மையானும்,—போதே போத்ருத்வாத் ...

வத்தையில் (அறிவிக்க) அறிதலுடைமையானும்,—தநௌ - இவையனைத்துங் கூடிய கூட்டமாகிய உடம்பின்கண்ணே,—அந்ய: அஸ்தி - இவற்றின் வேறாய் உயிரென்பது ஒன்று உண்டு. எ - று.

தனு - வியாபிக்கப்படுவது.

இதனால் இலதென்றன் முதலிய அறுவகை ஏதுக்களானும் தனு என்னும் பெயராற் பெறப்படும் குறிப்பேதுவானும் முறையே சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி, விஞ்ஞானான்மவாதி, சமூகான்மவாதி என்னும் ஏழுவரையும் மறுத்து இவற்றின் வேறாய் உயிர் எனப்படுவது ஒன்று உண்டு என்பது சாதித்தவாறு.

ஆத்மாந்த:கரணாத³ந்யோऽப்யந்விதோ மந்த்ரிராஜவத்|
அவஸ்தா²பஞ்சகஸ்த²: ஸ்யாத்³ருத்³த⁴ஸ்வஜ்ஞக்ரிய:||

இ - ள். ருத்³த⁴ஸ்வஜ்ஞக்ரிய: ஆத்மா - ஆணவமலத்தினால் மறைக்கப்பட்ட தன் ஞானசத்தி கிரியாசத்திகளையுடைய ஆன்மாவானவன்,—அந்த:கரணாத் அந்ய: அபி - அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் இவற்றின் வேறாயினும்,—மந்த்ரி ராஜவத் - (நுண்ணுணர்வின்மையிற் சூழ்ச்சித்துணைவராகிய) அமைச்சரோடு கூடி நின்று தந்தொழில் நடாத்தும் அரசன்போல,—அந்வித: - (அறிவு நிகழுமாறு) அவ்வந்தக்கரணம் முதலியவற்றோடு தான் வியஞ்சகமும் * வியங்கியமும் ஆகிய சம்பந்தத்தாற் கூடினவனாகி,—அவஸ்தா²பஞ்சகஸ்த²: ஸ்யாத் - சாக்கிரம் முதலிய ஐந்தவத்தையில் நிற்பவனாவன். எ - று.

மந்திரி பரிவாரம் முதலியோருடன் கூடிப் புறவிடயங்களை யறிந்த அரசன் புறத்தே பரிவாரங்களையும் அகத்தே மந்திரியையும் பிரித்து அந்தப்புரத்துச் செல்லுமாறுபோல, முப்பத்தைந்து கருவிகளோடு கூடிப் புறவிடயங்களை அறிந்து இலாடத்தானத்தினின்ற ஆன்மா மூலாதாரத்தில் அடங்கும் முறைமையில் ஆங்காங்கு நிற்றற்குரிய கருவிகளைப் பிரித்துச் சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி துரியம் துரியாதீதமென்னும் ஐந்தவத்தையடையும். எனவே, கருவிகளோடு கூடி அவத்தையுறுதல் ஆன்மாவின் தடத்தலக்கணம் என்பதாம்.

வித³ந்த்யக்ஷாணி பும்ஸாதி⁴ஷ்டா²நு ந ஸ்வயம் ஸோऽபி ஶம்பு⁴நா|
தத³தி⁴கா ஶ்ரீஶிவஶ்ருத்ய ஜ்ஞாநயோர்வஸ்து தஜ்ஞயேத்||

இ - ள். அக்ஷாணி பும்ஸா அதி⁴ஷ்டா²நு வித³ந்தி - மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் இந்திரியங்கள் புருடனால் (பிரேரிக்கப்பட்டனவாய்த்) தத்தம் விடயங்களை அறிகின்றன. இங்ஙனமன்றி,—ஸ்வயம் ந வித³ந்தி - தாமே அறியமாட்டா. அதுபோல,—ஸ: அபி ஶம்பு⁴நா வேத்தி - அவ்வான்மாவும் தனக்குப்பிரேரகனாகிய சிவனால் வினைப்பயன்களை அறிந்து அனுபவிக்கும். இங்ங

* வியங்கியம் - விளக்கப்படுவ[illegible]

னமன்றி,—ஸ்வயம் ந வெத்தி - தானே அறிந்து அனுபவிக்கமாட்டாது,— ஶிவஃ விகாரீ இதி செத் - சிவன் (அங்ஙனம் பிரேரித்தலால் வியாபார முடையனாதலின்) விகாரமுடையன் என்னில்,—ஸஃ - அவன்,—காந்தஃ அயஃ வத் - காந்தம் (தான் விகாரமின்றி நின்று) இரும்பைத் தன் சந்நிதிமாத்திரை யின் வலித்துக்கொள்ளுமாறுபோல,—தம் நயெத் - அவ்வான்மாவைத் தான் விகாரமின்றிநின்று தன் சங்கற்பமாத்திரையிற் பிரேரிப்பன்,—தத் ந- ஆகலான் அதுபற்றி அவன் விகாரமுடையனல்லன். எ - று.

இந்திரியங்கள் ஆன்மாவால் அறிவு விளங்கப்பெறுதல்போல ஆன்மாவும் சிவனால் அறிவு விளங்கப்பெறும் என்பதாம்.

> அத்ருஶ்யத்வாதஸத்பாவொத்ருஶ்யத்வாஜ்ஜடபாவதஃ|
> ஶம்பொஸ்தத்வ்யதிரெகேண ஜ்ஞெயம்ரூபம்விதுர்புதாஃ||

இ - ள். ஶம்பொஃ ரூபம் - சிவனுடைய சொரூபமானது,—அத்ருஶ்ய த்வாத் - (ஒருவாற்றானும்) காணப்படாததாயின்,—தஸ்ய அஸத்பாவஃ ஸ்யாத்-(அதற்கு முயற்கோடுபோல) இலதாந்தன்மை உண்டாம்,—த்ருஶ்யத்வாத் - (கடபடாதிகள்போலச்) சுட்டியறியப்படுவதாயின்,—தஸ்ய ஜடபா வஃ ஸ்யாத் - (யாதுசுட்டியறியப்படுவது அது சடம் என்னும் வியாப்தியுண்மை யான்) அதற்குச் சடத்தன்மையுண்டாம். ஆதலால்,—தத் வ்யதிரெகேண - அறியப்படாததும் அறியப்படுவதும் என்னும் அவற்றின் வேறான அநுபூதி ஞானத்தால்,—ஜ்ஞெயம் இதி புதாஃ விதுஃ - அறியப்படுமென்று ஞானிகள் அறிவார்கள். எ - று.

சிவசொரூபம் பாசஞான பசுஞானங்களானறியப்படாது சிவஞானமொன்றானே அறியப்படும் என்பதாம்.

> நாவித்வஸந்நிதிஃ வெத்தி நவித்தஉபெஉபயொஃ|
> ப்ரபஞ்சஶிவயொர்வெத்தா யஃஸ ஆத்மா தயொர்ப்ருதக் ||

இ - ள். சித் ஸந்நிதௌ அசித் ந வெத்தி - சிவனாகிய சித்தின் சந்நிதியில் பிரபஞ்சமாகிய அசித்து அறியமாட்டாது. (விளங்கித்தோன்றாது என்றபடி) ஆதலின்,—தே உபெ உபயொஃ ந வித்தஃ - சிவமும் பிரபஞ்சமும் என்னும் இரண்டும் ஒன்றை ஒன்று அறியமாட்டா,—யஃ ப்ரபஞ்ச ஶிவயொஃ வெத்தா - எவன் பிரபஞ்சத்தையும் சிவனையும் அறிகின்றானோ,—ஸஃ-அவன்,— தயொஃ ப்ருதக் ஆத்மா ஸ்யாத் - அவ்விரண்டற்கும் வேறாகிய ஆன்மாவாம். எ - று.

சித்தும் அசித்தும் மறுதலைப்பொருள் ஆதலின் சித்தாகிய சிவம் அசித்தாகிய பிரபஞ்சத்தை அறியமாட்டாது. அசித்தாகிய பிரபஞ்சம் சித்தாகிய சிவத்தை அறியமாட்டாது. ஆதலால், இவ்விரண்டையும் சிவசத்தியினாலே அதுவதுவாய் நின்று அறியும் பொருள் ஆன்மா என்றவாறும். எனவே, சார்ந்ததன்வண்ணமாய் நிற்றல் ஆன்மாவின் சொரூபலக்கணமென்பதாம்.

ஸ்தித்வா ஸஹேந்த்ரியவ்யாதைஸ்த்வம் ந வேத்ஸீதி போதித:|
முக்த்வைதாந் குருணாநந்யோ க்ருதீ ப்ராப்நோதி தத்பதம்||

இ - ள். க்ருதீ - முன்செய்துகொள்ளப்பட்ட புண்ணியமுடைய ஆன்மாவானவன்,—குருணா - ஞானாசாரியனாலே,—இந்த்ரிய வ்யாதை: ஸஹ ஸ்தித்வா - ஐம்பொறிகளாகிய வேடரோடு கூடியிருந்து,—த்வம் ந வேத்ஸி இதி போதித: - உன்பெருமையை நீ அறிகின்றிலை (உன் பெருமையாவது இது) என்று அறிவுறுக்கப்பட்டவனாகி,—ஏதாந் முக்த்வா - இவ்வைம்பொறிகளாகிய வேடுவர்களை விட்டு,—அநந்ய: தத் பதம் ப்ராப்நோதி - வேற்றுமையில்லாதவனாகி அச்சிவனுடைய திருவடியை (ஞானக்கிரியா சொரூபமாகிய அறுகுணங்களை) அடைகின்றான். எ - று.

ஐம்பொறி வசப்பட்டு அலைந்த உயிர் முன்செய்த புண்ணிய விசேடத்தால் சிவன் குருவடிவங்கொண்டு எழுந்தருளி வந்து தீக்ஷைசெய்து உபதேசிக்க அவ்வைம்பொறிகளை விட்டு அச்சிவன் திருவடியைத் தலைப்படும் என்பதாம்.

சித்த்ருசாத்மநி த்ருஷ்ட்வேசம் த்யக்த்வா வ்ருத்திம் மரீசிகாம்|
லப்த்வா சிவபதச்சாயாம் த்யாயேத் பஞ்சாக்ஷரம் ஸுதீ:||

இ - ள். ஸுதீ: - நற்புத்திமானவன்,—ஆத்மநி சித் த்ருசா ஈசம் த்ருஷ்ட்வா - (பாச அறிவினாலும் பசு அறிவினாலும் உணரப்படாத) முதல்வனைச் சிவஞானமாகிய கண்ணினாலே தன் அறிவின்கண்ணே கண்டு,—வ்ருத்திம் மரீசிகாம் த்யக்த்வா - விருத்தியாகிய பிரபஞ்சமென்னும் கானலை விட்டு,—சிவபதச்சாயாம் லப்த்வா - சிவன் திருவடிநீழலையடைந்து,—பஞ்சாக்ஷரம் த்யாயேத் - முத்திபஞ்சாக்ஷரத்தைத் தியானிக்கக்கடவன். எ - று.

தியானித்தல் - சுத்தமானதமாகச் செபித்தல்.

குருவினால் தீக்ஷை செய்யப்பெற்றுச் சிவனைத் தலைப்பட்டவன் தன்னறிவின்கண்ணே அச்சிவனைத்தியானிக்க, அதனால் உயிரைப் பற்றிய பாசம் நீங்கும். அதுநீங்கவே, சிவஞானம் பிறவித்துயராகிய வெப்பத்துக்கு நிழலாய் வெளிப்படும். அங்ஙனம் வெளிப்படப் பெற்றவன் அந்நிலை சலியாமைப்பொருட்டுப் பஞ்சாக்ஷரமந்திரத்தைச் செபிக்கவேண்டும் என்பதாம்.

ஶிவேநைகத்வம் கதஸ்ஸந் தததீநஸ்வவ்ருத்திக: |
மலமாயாத்யஸம்ஸ்ப்ருஷ்டோ பவதி ஸ்வாநுபூதிமாந் ||

இ - ள். ஶிவேந ஏகத்வம் கத: ஸந் - சிவனோடு ஒற்றுமைப்பட்டுச் சின்மாத்திரையாகச் சேஷித்துநின்ற புருஷன்,— தததீநஸ்வவ்ருத்திக: - அச்சிவனுக்குக் கீழ்ப்பட்ட தன் தொழிலையுடையவனும்,— மலமாயாத்யஸம்ஸ்ப்ருஷ்ட: - மலம் மாயை முதலியவற்றால் தீண்டப்படாதவனுமாகி,— ஸ்வாநுபூதிமாந் பவதி - சுவானுபூதியாகிய சிவபோகமுடையவனாவன். எ - று.

சிவனோடு ஒற்றுமைப்பட்டு நின்று அச்சிவன் பணி வழுவாது நிற்கவே மலமாயை கன்மங்கள் நீங்கிச் சிவபோகத்தையடைவன் என்பதாம்.

த்ருஶோர்தர்ஶயிதா சாத்மா தஸ்ய தர்ஶயிதா ஶிவ: |
தஸ்மாத்தஸ்மிந்பராம் பக்திம் குர்யாதாத்மோபகாரகே ||

இ - ள். த்ருஶோ: தர்ஶயிதா ச ஆத்மா - கண்களுக்கு உருவத்தைக் காட்டுபவனும் காண்பவனும் ஆன்மாவேயாம். (அதுபோல),— தஸ்ய தர்ஶயிதா ஶிவ: - அவ்வான்மாவுக்கு விடயத்தைக் காட்டுபவனும் காண்பவனும் சிவனே,— தஸ்மாத் - ஆதலால்,— ஆத்மோபகாரகே தஸ்மிந் - தனக்கு உபகாரியாகிய அச்சிவனிடத்தில்,— பராம் பக்திம் குர்யாத் - மேலானபத்தியைச் செய்யக்கடவன். எ - று.

கண் ஒரு உருவத்தை அறியும்படி உயிர் அதனோடு ஒற்றுமைப்பட்டு நின்று அதற்கு காட்டுமுபகாரஞ் செய்வது மாத்திரமன்றி கண்டு முபகரிக்கும். அதுபோல,உயிர் ஒருவிடயத்தை அறியும்படி இறைவன் அதனோடொற்றித்து நின்று அதற்கு அவ்விடயத்தைக்காட்டி உபகரித்தல் மாத்திரையன்றிக் கண்டும் உபகரிப்பன். இங்ஙனம் உபகரிக்குந் தன்மையை மறவாமைப்பொருட்டு அவனை வழிபடுக. என்பதாம்.

முக்த்யை ப்ராப்ய ஸதஸ்தேஷாம் பஜேத்வேஷம் ஶிவாலயம் |
ஏவம் வித்யாச்சிவஜ்ஞாநபோதே ஶைவார்த்தநிர்ணயம் ||

இ - ள். முக்த்யை ஸத: ப்ராப்ய - முத்தியின்பொருட்டுச் சிவன்முத்தர்களை அடைந்து,— தேஷாம் வேஷம் ஶிவாலயம் ச பஜேத் - அவர்களுடைய திருவேடத்தையும் திருக்கோயிலையும் வழிபடுக,— ஏவம் - இவ்வாறே,— ஶிவஜ்ஞாநபோதே - சிவஞானபோதமென்னும் இந்நூலில்,— ஶைவார்த்த நிர்ணயம் வித்யாத் - சைவாகமங்களின் பொருள் நிச்சயத்தை அறிக. எ - று.

முற்றுப்பெற்றது.

---

சிவமயம்.

# குருவணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பண்ணிசைவெம் பரிதிமதி திலதயிலந் தீயிரும்பு பாணி யுப்பு, விண்ணனில முடலுயிர்நீர் நிழலுச்சிப் பளிங்குபகல் விளக்குப் பானீர், கண்ணிரவி யுணர்வொளிபோற் பிரிவரிய வத்துவிதக் கலவி காட்டித், தண்ணளிவைத் தெனையாண்ட துறைசைநமச் சிவாயகுரு சரணம் போற்றி,

சந்தான மங்கல வாழ்த்து.

கயிலாய பரம்பரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெண்ணெய்ப், பயில்வாய்மை மெய்கண்டான் சந்நிதிக்கோர் மெய்ஞ்ஞான பானு வாகிக், குயிலாரும் பொழிற்றிருவா வடு துறைவாழ் குருநமச்சி வாயதேவன், சயிலாதி மரபுடையோன் றிருமரபு நீடூழி தழைக மாதோ.

சித்தாந்தமகாசூத்திரம், பரப்பிரம சூத்திரம் என்று அறிஞரானு யர்த்தோதப் பெறும் வடமொழிச் சிவஞானபோத மொழிபெயர்ப்பாகிய இத்தென்மொழிச் சிவஞானபோதத்திற்கு விருத்தியுரை யென்னும் மாபாடியஞ்செய்வான்புக்க மாதவப் பெருந்தகை யாசிரியத் தண்டமிழ் முனிவரனார், தமக்கவ்வுண்மைப்பொருள்களையெல்லாஞ் செவியறிவுறுத்தும், அறிவுறுத்தப் பெற்ற அவையிற்றை விழைவுற்றுச் சித்தாந்தநெறி நிற்பார் பலர்க்கும் இவ் வுரைமுகத்தான் உணர்த்தி நிற்க எனப் பணித்தும் பல்லாற்றானும் மேன்மே லூக்கிவேண்டுவ படுத்துங் காரணராய் நின்ற தங்குருமரபிற் றூய ஞானமா குரவர்ப் பணிதன் முறைமைபற்றிக் குருவணக்கங் கூறியருளின ரென்க.

அற்றேல், சித்தாந்தசைவ சிவஞானபோத திராவிடமாபாடியகர்த்த ராம் இவ்வண்ணலாசிரியர், தமக்கு ஞானதீக்கை புரிந்து அப்பொருளெல்லாஞ் செவியறிவுறுத்திய ஞானகுரவர் பின்வேலப்பதேசிகசுவாமிகளே யாகவும், அன்னவர்ப்போற்றாது அன்னோர்க்கு முந்துபு வீற்றமர்ந்து மெய்யுணர்வுறுத் து மிளிர்ந்த நமச்சிவாயகுருநாதசுவாமிகளை வணங்கிய தெற்றாலோவெனின்,— தெரிக்குதும். இப்பாடியகர்த்தர் தங்குரு சந்தானம், "சயிலாதிமரபு" என்றுங் குத் திருக்கயிலாயத் தென்றிரு முகத்தெய்வதந் தொடங்கி நிகழ்வுறீஇ, இப்

பூவுழை மெய்கண்டதேவநாயனாராம் இச்சிவஞானபோதநூலினைச் செய்தருளியாரை முன்னாகப்பெற்று நடக்குமாற்றானே "மெய்கண்டசந்தானம்" "மெய்கண்ட ஆதீனம்" என வழங்கப்பெறீஇ விளங்குவதாயினும்,

> மடமந்தாநகாளீசமபிதச்ச சதுர்மடா:|
> ஆமர்த்தகீ கோளகீதி ததாபுஷ்பகிரிஸ்ததா||
> ரணபத்ரச்ச விச்ரேயஸ் தேஷாமேதே ஹ்யதீச்வரா:|
>
> மடமந்தாநகாளீச மபிதச்ச சதுர்மடா:
> ஆமர்த்தகீ கோளகீதி ததாபுஷ்ப கிரிஸ்ததா
> ரணபத்ரச்ச விச்ரேயஸ் தேஷாமேதே ஹ்யதீச்வரா:

எனவரூஉம் அசிதாகமத் திருவாக்கின்படி பாவிந்தைகயென்று முண்ட கோபநிடதம் முதலிய ஆதிசச்சுருதிகளுரைக்குஞ்சிவாகம சித்தாந்தப் பொருள்களையெல்லாம் உலகிற்கு உபகரிப்பான் றோன்றி, மந்தானகாளீசம் என்னும் மாபட்டினத்தே சிறந்து விளங்கும் ஆமர்த்தகி, கோளகி, புட்பகிரி, இரணபத்திரம் என்னும் நால்வகைச் சைவமடங்கள் சிவண, ஞானக்கோமுத்திபுரம், நவகோடிசித்தவாசநகரம் முதலிய திருப்பெயர்கள் பூண்ட திருவாவடுதுறைப் பதிக்கண் இம்மாபாடியகாரரும், இவர்தம் ஆசாரியரும் அமர்ந்து இத்தகைய மெய்ப்பொருளாராய்ச்சி செய்து மெய்யுணர் வுறுத்தற் கிடமாதாக, தேவரும் வியக்குமோர் சைவமடாலயத்தை இரீஇயினாரும், முப்பொருளாராய்ச்சிக்குஞ் சைவசித்தாந்தக்காப்பிற்கும் வேண்டும் வேண்டும் பலபொருட்சாதகங்கணிறீஇயினாரும் அவராகலானும், அவர்ப்பின் றோன்றிய குரவர்முதல் தங்குரவர்காறும் அன்ன மூர்த்திகளையே முற்கொண்டு வணங்கிவந்தமையானும், தங்குரவர் வழக்கு மஃதே யாகலானும், இப்பாடியமுனீந்திரரும் நன்னமச்சிவாய தேசிக சற்குரு மூர்த்திகடம் பொன்னடி பராயினரென்பது.

அற்றேல், நூலியாக்கு மாசிரியாராயினோர் தாமியாப்பான்கொண்ட நூல்கடடையின்றி இனிதுமுற்றி நனியுறுபயன் கொடுக்கவேண்டி இருவகைக் கடவுளரு ளொருவர்ப் பராவல் ஆன்றோர்வழக்கும் நூற்கிடக்கையு மென்பது கண்டாம்; அங்ஙனமன்றி இவரொப்பத் தொல்லையுரையாசிரியர் தாமும் நூல் வணக்கத்திற்கு வேறும் வணக்கஞ் செய்து போந்ததுண்டாமோ எனின், ஒல்காப்பெரும்புகழ்த் தொல்காப்பியத்தின் சொற்பொருள் கண்டார முரையாசிரியர் சேனாவரையரும், தாமுரையுரைக்கத் தொடங்குமுன்னே, "நன்றே ஞான்கினொன்றுகைம் மிகூஉங்–களிறுவளர் பெருங்கா டாயினு–மொளி பெரிது சிறந்தன் றளியவென் னெஞ்சே" என்றற் றொடக்கத்தனவற்றான் வழுத்தியதூஉம், "கரும்பு மிளநீருங் கட்டிக் கனியும்–விரும்பும் விநாயகனை வேண்டி" எனப்பிறர் வணங்கியதூஉம் உணர்ந்து அவ்வுண்மை கடைப்பிடிக்க. இங்ஙனமே வடமொழிக்கட் பாடியஞ்செய்தாருள், வியாசசூத்திரமாகிய உத்தரமீமாஞ்சைக்குப் பாடியஞ்செய்வான் புகுந்த சைவமுனீந்திர நீலகண்டசிவாசாரிய சுவாமிகளும், இவரேமானப் பாடிய வணக்கமாக,

[illegible]
[illegible]

ஓந்நமோஹம் பதார்த்தாய லோகாநாம் ஸித்தி ஹேதவே
ஸச்சிதானந்த ரூபாய சிவாய பரமாத்மநே

என்று சிவனை வணங்கிப் போந்ததூஉம், உபநிடதவியாக்கியானஞ்செய்த சிரங்கராமாநுசர் என்னும் விசிட்டாத்துவித பாடியகாரரும், தம் உரை முகத்தே,

[illegible]
[illegible]

அதசீகுச்சஸச்சாய மஞ்சிதோர ஸ்தலம் ஸ்ரீயா
அஞ்சநாசலச்ருங்கார மஞ்சலிர் மமகாஹதாம்

என்று விஷ்ணுவை வணங்கிப் போந்ததூஉம், அவர்மானத் துவைதபாடியகாரரும், அவப்பிரஞ்சம் நிகழாது இருதஞ் சித்தித்தற்பொருட்டுத் தம் பாடியமுகத்தே,

[illegible]
[illegible]

ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ஆநந்தம் ப்ரம்ம ஸர்வ சக்த்யேகம்
ஸர்வைர்தேவை ரீட்யம் விஷ்ண்வாக்யம் ஸர்வதைமி சுப்ரேஷ்டம்

என்று விஷ்ணுவை வணங்கியதூஉம் உணர்ந்து, இவ்வழக்கு இருமொழிக்கண்ணும் பயில்வுறூஉம் பெருவரவிற்றுமாபினதென்று தெற்றெனத்தெளிக.

அற்றேல், அன்னது தெற்றெனத் தெளிந்து மகிழ்மீக்கூர்ந்தேம், மற்றொன்று உசாவுதும், அவ்வியல்பானே நூல்வணக்கத்திற்கு வேறாகத்தாம் வணக்கங் கூறப்போந்த முனிவர்பெருமான் முதற்கண் துதிக்கற்பாலராங்களிற்றுத்தெய்வம், அன்றிப் பரமகுரவத் தென்முகத்தெய்வம் என்னும் இவர்ப் பராவுதலை யொரீஇச் சந்தானகுரவ ரொருவர்ப் பழிச்சலாமாறென்னையோ வெனின், அவ்வையப் பாட்டினையு மொழித்து மேற்செல்லுதும்.

சமயாதீத மெனப்படூஉஞ் சித்தாந்த மெய்ந்நெறிக்கணின்றூர், "தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த" எனவும், "அஞ்ஞான வச்சகலர்க்

கக்குருவாய்-மெய்ஞ்ஞானம்—பின்னுணர்த்தும்” எனவும் இச்சிவஞானபோதம் உரைத்தாங்கும்,

[illegible]

[illegible]

அதாதி வித்யம் ஆசார்ய: பூர்வரூபம்
பித்ருதேவோபவ ஆசார்யதேவோபவ

எனத், தைத்திரீயச் சுருதி யுரைத்தாங்கும், ஞானகுரவனையே இறைவனெனக் கோடலானும், அவற்பணிதலே இறைவணக்கமாகி அத்துவிதமுத்தியென்னும் அரும்பேற்றை அளிக்கும் ஞானசாதன மாதலானும், “குரு” என்னும் மொழிக்குப் பாசவிருளை ஓட்டுவோனெனக் காரணங் கோடலானும், இக்குரவர் மற்றையசமயகுரவர்போலாது சித்தாந்தசைவச் சிவனியல்களையுணர்த்துஞ் சிவஞானகுரவராகலானும், அரனடியார்க்கு இருபான்மூன்றிலக்கணங்களையும் விதிக்கவந்த சங்கரசங்கிதை என்னும் வேதோபபிருங்கணமானது,

[illegible]

[illegible]

ப்ரதமம் பஸ்ம ருத்ராக்ஷ தாரணம் சமுதீரிதம்
த்விதீயம் குரு சேவாச

சிவனடியாருக்கு முதலாவதிலக்கணம் விபூதி கண்டிகை தரித்தலெனவும், இரண்டாவதிலக்கணம் குருவைவழிபடுதல் எனவுங் கூறுமாற்றானும்,

[illegible]

அதாச்வலாயநோ ஹவை பகவந்தம் பரமேஷ்டிநம் பரிஸமேத் யோவாச.

என்று யசுர்வேதசாகையானே புகழப்பெற்ற மகாவிருடியார்க்கே குருவழிபாடு செய்கவெனக் கிளக்கப்படு மெனின் மற்றையோர்க்கு அஃதின்றியமையாதென்பது சொல்லாமேயமைதலானும், வாயுசங்கிதை இரண்டாம் பாகத்திலே பதின்மூன்றும் அத்தியாயத்திலே,

[illegible]

[illegible]

𑌯𑌥𑍈𑌕 𑌵𑌹𑍍𑌨𑌿𑌸𑌂 𑌪𑌰𑍍𑌕𑌾𑌨𑍍 𑌮𑌲𑌂 𑌤𑍍𑌯𑌜𑌤𑌿 𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌮𑍍।
𑌤𑌥𑍈𑌵 𑌗𑍁𑌰𑍁𑌸𑌂𑌪𑌰𑍍𑌕𑌾𑌤𑍍 𑌪𑌾𑌪𑌂 𑌤𑍍𑌯𑌜𑌤𑌿 𑌮𑌾𑌨𑌵𑌃॥

𑌯𑌥𑌾𑌵𑌹𑍍𑌨𑌿 𑌸𑌮𑍀𑌪𑌸𑍍𑌥𑍋 𑌘𑍃𑌤𑌕𑍁𑌮𑍍𑌭𑍋 𑌵𑌿𑌲𑍀𑌯𑌤𑍇।
𑌤𑌥𑌾𑌪𑌾𑌪𑌂 𑌵𑌿𑌲𑍀𑌯𑍇𑌤 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌸𑍍𑌯 𑌸𑌮𑍀𑌪𑌤𑌃॥

𑌯𑌥𑌾𑌪𑍍𑌰𑌜𑍍𑌵𑌲𑌿𑌤𑍋 𑌵𑌹𑍍𑌨𑌿𑌃 𑌶𑍁𑌷𑍍𑌕𑌕𑌾𑌷𑍍𑌠𑌂 𑌚 𑌨𑌿𑌰𑍍𑌦𑌹𑍇𑌤𑍍।
𑌤𑌥𑌾𑌯𑌮𑍍𑌪𑌿 𑌸𑌂𑌤𑍁𑌷𑍍𑌟𑍋 𑌗𑍁𑌰𑍁𑌃 𑌪𑌾𑌪𑌂 𑌕𑍍𑌷𑌣𑌾𑌤𑍍 𑌦𑌹𑍇𑌤𑍍॥

𑌮𑌨𑌸𑌾 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌵𑌾𑌚𑌾 𑌗𑍁𑌰𑍋𑌃 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌨 𑌕𑌾𑌰𑌯𑍇𑌤𑍍।
𑌤𑌸𑍍𑌯 𑌕𑍍𑌰𑍋𑌧𑍇𑌨 𑌦𑌹𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌹𑍍𑌯𑌾𑌯𑍁𑌃 𑌶𑍍𑌰𑍀𑌜𑍍𑌞𑌾𑌨 𑌸𑌤𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃॥

*பாபிநாஞ்ச யதாஸங்கஸ் தத்பாபாத் பதிதோ பவேத்*
*தத்வதாசார்ய ஸங்கேந தத்தர்ம பலபாக் பவேத்*

*யதைக வஹ்நிஸம் பர்க்காந் மலந் த்யஜதி காஞ்சநம்*
*ததைவ குருசம் பர்க்காத் பாபம் த்யஜதி மாநவ:*

*யதாவஹ்நி சமீபஸ்தோ க்ருதகும்போ விலீயதே*
*ததாபாபம் விலீயேத ஆசார்யஸ்ய சமீபத:*

*யதாப்ர ச்வலிதோ வஹ்நி: சுஷ்ககாஷ்டஞ்ச நிர்தஹேத்*
*ததாய மபிசந் துஷ்டோ குரு: பாபம் க்ஷணாத் தஹேத்*

*மநஸா கர்மணா வாசா குரோ: க்ரோதம் நகாரயேத்*
*தஸ்ய க்ரோதேந தஹ்யந்தே ஹ்யாயு: ஸ்ரீஜ்ஞாந சத்கிரியா:*

*தீவினையாளர் சம்பந்தத்தானே ஒருவன் எங்ஙனம் பதிதனாகின்றானோ அங்ஙனமே குருவின் சேர்க்கையாற் புண்ணியபலன்களை யடைகின்றான். தீயின் சேர்க்கையானே பொன்னானது களிம்பைப் போக்கிக்கொள்வ தேய்ப்ப, குரு வழிபாட்டானே மனிதர்கள் பாவங்களைக் கழிக்கின்றார்கள். நெருப்பின் சமீபத்துள்ள நெய்க்குடம் எங்ஙனம் இலயமடைகின்றதோ, அங்ஙனமே குருவின் சமீபத்திலிருப்பவன் தன் பாவங்கள்யாவும் இலய மடையப் பெறுவான். கொழுந்துவிட்டெரியும் நெருப்பானது உலர்ந்த விறகுகளை எங்ஙனம் எரிக்குமோ, அங்ஙனமே மேலாம் உவகைப்பாட்டினையுடைய இந்தக்குரவனும் சடன்றன் பாவங்களைக் கணப்போதிலே தகிக்கின்றான். மனம், வாக்குக்,*

காயம் என்னும் மூவகைக் கரணங்களானுங் குருவைப் பிழைத்த லாகாது. அவருடைய சினத்தானே ஆயுளும், வெறுக்கையும், மெய்யுணர்வும், நற்றொழிலெனப்படூஉம் புண்ணியங்களுஞ் சுடப்படுகின்றன. என்று உரைத்தலானே, ஆயுள், செல்வம், தத்துவவுணர்ச்சி, புண்ணியங்களென்னும் இவைகள் மேன்மேலும் வளருமாறும், மலவிருள் தேயுமாறும் நன்னெறிகாட்டி உய்வித்த குருச் செய்த நன்றியை எஞ்ஞான்றும் மறவாது, மனம் வாக்குக்கள் ஒருமைப்படக் காயத்தினால் அவரை வணங்குதலும் இன்றியமையாது வேண்டப் படுமாகலானும்,

𑌯𑌂𑌯𑌂 𑌲𑍋𑌕𑌂 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌂𑌵𑌿𑌭𑌾𑌤𑌿 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌃 𑌕𑌾𑌮𑌯𑌤𑍇 𑌯𑌾𑌂𑌶𑍍𑌚
𑌕𑌾𑌮𑌾𑌨𑍍| 𑌤𑌂𑌤𑌂 𑌲𑍋𑌕𑌂 𑌜𑌯𑌤𑍇 𑌤𑌾𑌂𑌶𑍍𑌚 𑌕𑌾𑌮𑌾𑌨𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾 𑌦𑌾𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌂
𑌹𑍍𑌯𑌰𑍍𑌚𑌯𑍇𑌦𑍍𑌭𑌼𑌤𑌿𑌕𑌾𑌮𑌃||

யம்யம் லோகம் மனஸா ஸம்விபாதி விசுத்த ஸத்வ: காமயதே யாஞ்ச காமான், தந்தம் லோகம் ஜயதே தாஞ்ச காமான் தஸ்மா தாத்மஜ்ஞம் ஹ்யர்ச்சயேத் பூதிகாம:

எவன் எவ்வெவ்வுலகினை மெய்யுணர்வானே நினைந்து விசுத்த சத்துவமுடையனாகி, எவ்வெப்பயனை விழைகின்றானோ அவன் அவ்வவ்வுலகங்களை அடைந்து அவ்வப்பயன்களைப் பெறுகின்றான் ஆகலின், பரசிவனை உள்ளவாறுணர்ந்த அத்தன்மையனாகிய சிவஞானியைத் திருவருட்செல்வம்விழைவுறூஉம் ஒவ்வொருவரும் பணிவாராக என வேதமகாவசனங்கள் முழங்குதலானும், அங்ஙனமே சிவாகமங்களாகிய பரவித்தைகளும் முழங்கலானும் குரவனை தெய்வ மெனக்கொண்டு வணங்கியதெனக் கடைப்பிடிக்க.

"அத்துவிதக் கலவி காட்டித்—தண்ணளிவைத் தெனையாண்ட நமச்சிவாயகுரு" எனவே, ஒன்றற் கொன்று முரணேவென்றையம் நிகழ்தருமாறு பொருள்களைப் போதிக்கும் மறைகளானும், பரவித்தைகளாஞ் சிவாகமங்களானு முணர்தற் பாலதாம் அத்துவிதத்தி னுண்மைப் பொருளைத் தமக்கு அறிவித்தருளி, அதனானே சிவஞானத்தைத் தோற்றுவித்துத் தம்மை யாண்டருளியோரென்பதூஉம், அங்ஙன முள்ள ஞானகுரவர் அதுவாயிலானே பெறற்கருங் கைவல்லியமாம் அத்துவித முத்தியைத் தம்மை விரும்பினார்க் கருளும் ஆற்றலுடையா ரென்பதூஉம், அதுபெயர் மாத்திரையானுஞ் செவ்வனேபுலப்படும் என்பதூஉம், பேரின்பமுதவுந் தண்ணளி யுடையவரே குரு

வென்பதூஉம், அவரை வணங்குவார்க்குச் சிவஞானப் பேறும், அதன்சாதனங்களும் பிறக்குமென்பதூஉந் தெளித்தருளியவாறு காண்க.

உலகத்திலே சித்தாந்த வித்தைகளை வெளிப்படுத்தி, அவற்றானே பக்குவான்மாக்களுக்கு மெய்யுணர்வு உதிப்பித்தற்பொருட்டுச் சிவாவதாரமாகத் தோன்றிய சைவாசாரியர்கள் இருபத்தெண்ம ரிருப்பவும், அவர்களுட் கல்யாணகுருவும்,"நாநாகம விதாயி" எனச் சிறப்புப் பெயர் பெற்றவருமாகிய சுவேதாசாரியர் ஒருவரையே, வியாசசூத்திர மாபாடியஞ் செய்தாருட் சைவபாடியம் இயற்றிய நீலகண்டசிவாசாரியசுவாமிகளும், தம் பாஷியமுகத்தில்,

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌵𑍇𑌤𑌾𑌭𑌿𑌧𑌾𑌨𑌾𑌯 𑌨𑌾𑌨𑌾𑌗𑌮𑌵𑌿𑌧𑌾𑌯𑌿𑌨𑍇 |
𑌕𑍈𑌵𑌲𑍍𑌯𑌕𑌲𑍍𑌪𑌤𑌰𑌵𑍇 𑌕𑌲𑍍𑌯𑌾𑌣𑌗𑌰𑌵𑍇 𑌨𑌮𑌃 ||

நம: ச்வேதாபிதாநாய நாநாகம விதாயிநே
கைவல்ய கல்பதரவே கல்யாண குரவே நம:

ஒன்றற்கொன்று விரோதம்போலத்தோன்றும் வேதாந்தங்களை விரோதமின்றிப் போதித்தலினாலே "நாநாகமவிதாயி" என்று சிறப்புப்பெயர் பெற்றவரும், மோக்ஷங்கொடுக்குங் கற்பகதருவும், இம்மை மறுமைப் பயன்களாகிய போகங்களெனப்படும் நல்வாழ்வைக்கொடுக்குங் குருவுமாகிய சுவேதாசாரியரை நமஸ்கரிக்கின்றேன் என வணங்கிப் போந்தாங்கு, சந்தான பரம்பரைக் குரவர்கள், வேலப்பதேசிகசுவாமிகள், இராமலிங்கதேசிகசுவாமிகள், மாசிலாமணிதேசிகசுவாமிகள், குமாரசாமிதேசிகசுவாமிகள், முன்வேலப்பதேசிகசுவாமிகள், உருத்திரகோடிதேசிகசுவாமிகள், தக்ஷிணாமூர்த்திதேசிகசுவாமிகள், அம்பலவாணதேசிகசுவாமிகள், மறைஞானதேசிகசுவாமிகள், பஞ்சாக்கரதேசிகமூர்த்திகள், சித்தர்சிவப்பிரகாசதேசிகசுவாமிகள், சிவப்பிரகாசதேசிகசுவாமிகள் என்றின்னோர் பலரிருப்பவும், நமச்சிவாயதேசிகசுவாமிகளாங் குரவர் ஒருவரையே இப்பாடிய முனிவரருந் தம் பாடிய முகத்தே துதித்துப் போந்தா ரென்க. என்னை? சுவேதாசாரியர் மான இவரும் முன்னுரைத்தாங்குச் சைவசித்தாந்த வித்தியாதார மூர்த்திகளாய், நாநாகமவிதாயி என்றற்குஞ் சால்புடையாராய், கல்யாணகுரவராய், தரிசித்த மாத்திரையே மெய்யுணர்வுபாலிக்கும் வரத வடிவராய் விளங்கலானென்க.

வியாசசூத்திரபாடியங்களுட் சீகண்டபாடிய மென்னுஞ் சைவபாடியத்திலே இணையின்றிப் பொலிந்துவிளங்குஞ் சிவபெருமானது உற்கருட மணி

களை யெல்லாம் எடுத்து விளக்கவந்த சிவார்க்கமணிதீபிகையாரும், தெய்வ வணக்கம் புகலாது, இத்திராவிடமாபாடியகாரர்ப் புரைய, சுவேதாசாரிய சுவாமிகளையுந் தம் வியாக்கியானமுதலிலே,

𑌮𑌹𑌾𑌪𑌾𑌶𑍁𑌪𑌤𑌜𑍍𑌞𑌾𑌨 𑌸𑌂𑌪𑍍𑌰𑌦𑌾𑌯𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌕𑌾𑌨𑍍।
𑌅𑌂𑌶𑌾𑌵𑌤𑌾𑌰𑌾 𑌨𑍀𑌶𑌸𑍍𑌯𑌯𑍋𑌗𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌾𑌨𑍁𑌪𑌾𑌸𑍍𑌮𑌹𑍇॥

*மகாபாசுபதஜ்ஞானஸம்பரதாயப்ரவர்த்தகாந்*
*அம்சாவதாரா நீசஸய யோகாசார்யா நுபாஸ்மஹே*

(மகாபாசுபத ஞானமென்னுஞ் சிவஞானசம்பிரதாயப் பிரவர்த்தகர்களும், சிவபெருமானது அமிச அவதார முடையவர்களுமான சுவேதாசாரியர் முதலாகவுள்ள சிவயோக ஆசாரியர்களை உபாசிக்கின்றேம்) என்று வணக்க முரைத்தருளியதனுனும் பெறப்படும்.

படவே, வடமொழிக்க ணவிருஞ் சித்தாந்தமகாவித்தைகளைப் பிரவர்த்தித்தவர் சுவேதாசாரியர் என்பதூஉம், தென்மொழிக்கட் படூஉஞ் சித்தாந்த மகாவித்தைகளைச் சிறப்பாகவும் வடமொழிக்கட் படூஉஞ் சித்தாந்த மகாவித்தைகளைப் பொதுவாகவுங்கொண்டு பிரவர்த்தித்தவர் நமச்சிவாயசுவாமிகள் எனப்பெயரிய குருமூர்த்திகள் என்பதூஉம் போதரல் காண்க.

இவ்வியல்பினையுடைய நமச்சிவாய குருமூர்த்திகளைப் பணிந்த முனிவரர் அவ்வளவின் அமையாது இரண்டாந் திருவித்தத்தானே அவரையும், அவர் மரபில்வந்தாரையும், வருவாரையும் வாழ்த்தியது என்னை யெனின் கூறுதும்:

சிகண்டபாடியம் எனப்படும் சைவபாடியகாரர் சுவேதாசாரியர் ஒருவரையே வாழ்த்தினாராக அதற்கு வியாக்கியானஞ் செய்த சிவார்க்கமணி தீபிகையார் அவருடன் அவர் மரபினரையுஞ் சேர்த்து வாழ்த்திய நியாயம்பற்றி இம்முனிவரும் அக்குருமூர்த்திகளுடன் அவர் மரபின்வந்த தங்குருமுதலாயினோரையும் சேர்த்து வாழ்த்தினரென்க.

அல்லதூஉம், இந்நிலவுலகத்தின்கண்ணே ஆன்மாக்களின் பலபகைப்பட்ட கன்மங்கட்கு ஏற்பப் பன்முகமாகப் பரந்துவிளங்கும் மற்றைய சமயகுரவர் மரபுகள்போலாது உண்மைப்பொருளும் அருளும் உடைய திருக்கைலாயபரம்பரை எனப்படும் இத்திருமரபு யாம்பெற்றபேறு இவ்வையகம் பெறுத

ற்பொருட்டு அழிவெய்தலின்றி எஞ்ஞான்றும் தழைத்து நிற்க என்னும் கழி பேரிரக்கத்தால் வாழ்த்தியருளியதூஉமாம்.

தமிழ்நூலார் வாழ்த்தென்று கூறுதலை வடநூலார் மங்களம் எனவும் ஆசீர்வாதம் எனவுங் கூறுவர். இவ்வாறேசைவபாடியகாரர்,

𑌭𑌵𑌤𑍁 𑌸𑌭𑌵𑌤𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑍈 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌸𑌰𑍍𑌵𑌮𑌙𑍍𑌗𑌲𑍋𑌪𑍇𑌤𑌃।
𑌚𑌿𑌦𑌚𑌿𑌨𑍍𑌮𑌯𑌪𑍍𑌰𑌪𑌞𑍍𑌚𑌶𑍍𑌶𑍇𑌷𑍋𑌶𑍇𑌷𑍋𑌽𑌪𑌿 𑌯𑌸𑍍𑌯𑍈𑌷𑌃॥

பவதுஸ பவதாம் சித்யை பரமாத்மா ஸர்வமங்களோ பேத:
சிதசிந் மயப்ரபஞ்சச் சேஷோ சேஷோர்பி யஸ்யைஷ:

அறிவுடைப்பொருள் அறிவில்பொருள் என்னு மிருவகைப் பிரபஞ்சங் களையும் அமிசமாக உள்ளவரும் எல்லாமங்கள குணங்களோடும் கூடினவரும் பார்வதீசமேதரும் பாலக்குமியுடன் இசைந்தவரும் ஆகிய சிவபெருமான் இப்பாடியத்தைக்கேட்கும் உங்களுக்கு அநுக்கிரகம் புரிந்து இஷ்டசித்தியின் பொருட்டும் துணையாவாராக என ஆசீர்வாதம் கூறியதூஉம் உணர்ந்து கொள்க.

"பண்ணிசைவெம்பரிதிமதி" என்னுந் திருவிருத்தம் பாடியகாரர்தங் குருவணக்கம் என்பதூஉம், "கயிலாயபரம்பரை" எனவரூஉம் திருவிருத்தம் பாடியகாரர் தம்மரபைப்போற்றுமுகத்தானே "தழைக" என வாழ்த்திய மங்கலவாழ்த்தென்பதூஉம் போந்தவாறு காண்க.

குருவணக்கம்

முற்றிற்று.

---

# விஞ்ஞாபனம்.



☞ நூலாரம்பந்தொடங்கி இந்த எழுத்திற் பதிக்கப் பட்டனவெல்லாம் மெய்கண்டதேவநாயனார் திருவாக்குக்கள். ஆறுஞ்சூத்திரத்துக் கருத்துரை மறப்பெனும் பகைவனால் இவ்வெழுத்திற் பதிப்பிக்கப்படாமற்றடுக்கப்பட்டது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதமாபாடியத்திரட்டு.

## சிறப்புப்பாயிரம்.

சைவாகமங்களின் உளவாகிய நாற்பாதங்களுள்வைத்து ஞானபாதத்தோதிய பொருளினை ஆராயும் ஆராய்ச்சி இந்நூலின்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது. இவ்வாராய்ச்சிக்குப் பயன் யாதோ? எனவும், இது கேட்டற்கு உரியார் யாவர்? எனவும், இதனால் நுதலப்படும்பொருள் யாது? எனவும், இதனைப் பயப்பிக்குங் கருவியாய் இதற்குமுன் ஒருதலையான் உணர்தற்பாலது யாது? எனவும், இதனைவழங்குதற்கு இட்ட பெயர் யாது? எனவும், இஃது யாண்டு வழங்குவது எனவும், இதன் முதனூல் யாது? எனவும், இந்நூல் செய்தார் யாவர்? எனவும், பலவாற்றான் ஆசங்கை நிகழுமன்றே; அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட்டு இந்நூல் முகத்து உரைக்கப்படுவதாகிய சிறப்புப் பாயிரம்:—

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னுண்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

எனவரும்.

உயர் சிவஞானபோதம் என்றது ஏனை மூன்றுபாதத்தை ஆராயும் நூல்கட்கு மேற்பட்ட சிவஞானபோதம் என்றவாறு. எனவே, அந்நூல்கள் உணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்பது பெற்றாம். பெறவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை ஓதி அதன்பின் ஏனை மூன்றுபாதங்களை ஆராயும் நூல் முறையே கேட்டு அவ்வாறொழுகி மனந்தூயராய் நித்தியாநித்

திய உணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவா மிக்குண்டாயவழி, அவர்க்கு இந்நூல் உணர்த்துக என்பது போந்ததெனக் கொள்க.

இப்பாயிரப்பொருள், நூல் இறுதியில் 'எந்தைசனற்குமரன்' என்னும் வெண்பாவாற் பெறப்படுதலின், ஈண்டுங் கூறுதல் கூறியதுகூறலாம்பிற வெனின்,—ஆகாது; 'எந்தை சனற்குமரன்' என்பதனாற் பெறப்பட்டதனையே மாணாக்கர்க்கு நூல் முகத்து உணர்த்துதற்பொருட்டு ஈண்டுத் தந்துரைத்ததாகலான் என்பது. மிருகேந்திரத்து இறுதியிற் கூறும் வரலாற்றினை நாராயணகண்டவாசிரியர் நூல்முகத்துத் தந்துரைத்ததூஉம் இக்கருத்தேபற்றி என்க.

இந்நூல் நந்திபெருமான் பெறுதற்கு வரலாறு என்னை? எனின், கூறுதும். மாசங்கார முடிவின்கண் உலகங்களை மீளப் படைத்தற்பொருட்டுப் பரமான்மாவாகிய பரமசிவத்தினுடைய பராசத்தி குடிலையை நோக்கியவழி, வேதாகமங்கள் குடிலையினின்று நாதவடிவாயும், அதன்பின் விந்துவடிவாயும், அதன்பின் அக்கரவடிவாயும் முறையே தோன்றின. பின் அவற்றைச் சொற்றொடர்ப்படுத்துச் செய்யுளாக்கிப் பிறர்க்கு அருளிச்செய்தற்பொருட்டுப், பரமசிவன் ஈசானம் முதலிய பஞ்சப்பிரம மனுக்களாகிய சத்திகளே திருமுடிமுதலிய அவயவங்களாகச் சகளநிட்களத் திருமேனி கொண்டருளிச், சதாசிவமூர்த்தியாய் நின்று, தற்புருடம் முதலிய நான்கு திருமுகங்களினின்று வேதங்களைத்தோற்றுவித்து, அவ்வேதங்களை அனந்ததேவர் வழியானே பிரமனுக்கு அருளிச்செய்து, ஈசானமுகத்தினின்று சிவாகமங்களைத் தோற்றுவித்து அச்சிவாகமங்களைப் *பிரதிசங்கிதை முறையானே பிரணவர் முதலிய பதின்மரும் மகாருத்திரர் முதலிய பதினெண்மரும் ஆகிய இருபத்தெண்மருக்குஞ் சிவபேதம் உருத்திரபேதம் எனப் பகுத்து ஒரோவொன்று ஒவ்வொருவருக்கு அருளிச்செய்து, பின்பு † மகௌகமுறையானே அவ்விருபத்தெட்டினையும் வித்தியேசர் எண்மரின் முதல்வராகிய அனந்ததேவர்க்கு அருளிச்செய்தான். அவற்றை அனந்ததேவர் நூற்றுப்பதினெட்டு உருத்திரரின் முதல்வராகிய சீகண்டருத்திரருக்கு அருளிச்செய்தார். அவற்றைச் சீகண்டருத்திரர் கணங்கட்குந் தேவர்க்கும் முனிவர்க்கும் அளித்தற்பொருட்டு முதற்கண் நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார்.

அங்ஙனம் ஆகமங்களெல்லாங் கேட்டருளிய நந்திபெருமான் சீகண்ட முதல்வரை வணங்கி நின்று, சிவாகமந்தோறுஞ் சரியை முதலிய நாற்பாதங்களுஞ் சிறுபான்மை வேறுவேறாகக் கூறப்பட்டன. அவற்றுள், உண்மையாவது இது என்று அருளிச்செய்யவேண்டும் என இரந்து விண்ணப்பஞ்செய்து வினாயவழிச், சீகண்டருத்திரமுதல்வர் கருணைகூர்ந்து "நன்றே வினாயினாய்! அனந்ததேவர் எமக்கு அருளிச்செய்தவாறே கூறுகின்றோம்; கேட்பாயாக" என்றருளிக், கற்பந்தோறும் படைப்புவேறுபாடுங் கேட்போர் கருத்துவேறுபாடும் பற்றி அவற்றிற்கு இயையச் சரியை முதலிய மூன்று பாத

*பிரதிசங்கிதைமுறை ஒருவிஷயத்தை வேறுவேறு வகுத்துக் கூறுதல். † மகௌகமுறை வேறுவேறு வகுக்கப்பட்ட பலவற்றைத் திரட்டிக் கூறுதல்.

ங்களும் ஆகமங்களில் வெவ்வேறாகக் கூறப்பட்டன. ஆகலான், அவற்றுள், எவ்வாகமத்தின்வழி யார் தீக்கைபெற்றார், அவ்வாகமத்தின்வழி அவர் ஒழுகற்பாலர்.

இனி, ஞானபாதமாவது பொருட்டன்மை உணர்த்துவதாகலின், அது பலதிறப்படுதல் பொருந்தாமையின், அவையெல்லாந் தூலாருந்ததிமுறை பற்றிக் கூறப்பட்டனவன்றி மாறுகோளல்ல என்பது வகுத்துணர்த்துதற் பொருட்டு இரௌரவாகமத்துள் பன்னிருசூத்திரத்தாற் கூறப்பட்டது "சிவ ஞானபோதம்" என்பதோர் படலம். அது கேட்டார்க்கு எல்லாவாகமப் பொருள்களும் மாறுகோளின்றி இனிது விளங்கும் எனக் கூறி அச்சிவஞான போதத்தை நந்திபெருமானுக்கு அருளிச்செய்தார்.

நந்திபெருமானும் அதுகேட்டதுணையானே எல்லா ஐயமும் நீங்கி மெய்ப்பொருள் தெளிந்து பின்னர்த் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சனற்குமாரமுனிகட்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்தார். அவர் தம்மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த பரஞ்சோதிமாமுனிகட்கு அருளிச்செய்தார். அவர் தமிழ்நாடுசெய்த தவத்தானே திருவெண்ணெய்நல்லூரில் அவதரித்தருளி மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய் எழுந்தருளியிருந்த மெய்கண்டதேவர்பால் வந்து சிவஞானபோதத்தை நல்கி, "இதனை ஈண்டுள்ளோர் உணர்ந்து உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச்செய்து பொழிப்புரைக்க" என்றருளிப், பொழிப்பு உரைக்குமாறுஞ் சத்தியஞானதரிசனிகள்பால் தாங் கேட்டவாறே வகுத்தருளிச்செய்து நீங்க, அவரும் அவ்வாறே மொழிபெயர்த்துப் பொழிப்புரையுஞ் செய்தருளித், தம்முடைய மாணாக்கர் பல்லோருள்ளுஞ் சிறந்த அருணந்திசிவாசாரியர்க்கு அளித்தருளினார். இஃது இந்நூல் வந்த வரலாறு எனக் கொள்க.

பொழிப்புரையை வடநூலார் வார்த்திகம் என்பர். பொழிப்பு எனினுங் காண்டிகை எனினும் ஒக்கும். பொழிப்புரை பிண்டப்பொழிப்பு எனவும் கண்ணழித்துரைக்கும் பொழிப்புரை எனவும் இருவகைப்படும். அவற்றுள், இது கண்ணழித்துக் கடாவிடைகளான் உரைக்கும் பொழிப்புரை என உணர்ந்துகொள்க.

இனி, ஆசிரியர் வார்த்திகப்பொழிப்பு உரைச்செய்யுளானும் பாச்செய்யுளானுஞ் செய்யப்படும் என்னும் வடமொழிமதம் பற்றி ஈண்டுக் கருத்துரையும் மேற்கோளும் ஏதுவும் உரைச்செய்யுளான் உரைத்தார்; உதாரணம் பாச்செய்யுளான் உரைத்தார்.

இச்சிவஞானபோதத்து முன்னாறு சூத்திரங்களானே பெத்தத்தின் நின்ற நிலைபற்றி இலக்கணங் கூறுதலின், அவை பொதுவியல்பு எனவும், பின்னாறு சூத்திரங்களானே முத்தியின் நின்ற நிலைபற்றி இலக்கணங் கூறுதலின், அவை சிறப்பியல்பு எனவுமாம்.

இனி, பொதுவியல்பு உணர்த்தும் நூல்கள் பொது எனவுஞ் சிறப்பியல்பு உணர்த்தும் நூல்கள் சிறப்பு எனவுங் கூறப்படும். சிறப்பியல்பு சகசமாய் உள்ளதாகலின், உண்மை எனவும்படும்.

பொதுவியல்பு, அளவைமுகத்தானும் இலக்கணமுகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத்தான் உணரப்படும். சிறப்பியல்பு, சாதனமுகத்தானும் பயன்முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் நான்குதிறத்தான் உணரப்படும்.

கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகளை வடநூலார் முறையே சிரவணம் மனனம் நிதித்தியாசனம் நிட்டை என்ப.

பலபொருட்குப் பொதுவாகிய இலக்கணம் பொதுவியல்பு என்றும் ஒருபொருட்கே உரிய இலக்கணஞ் சிறப்பியல்பு என்றும் அளவைநூலாற் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறு; தடத்தலக்கணம் சொரூபலக்கணம் என்னும் வடசொற்குப் பரியாயப் பெயராய் ஈண்டுக் கூறப்படும் பொதுவியல்பு சிறப்பியல்பு வேறு எனத் தெரிந்துணர்ந்துகொள்க. இவ்விருவேறு வகைக்குஞ் சொல்லொருமை மாத்திரையே பற்றி மயங்கற்க.

சிவஞானபோதம் இங்ஙனம் பொதுவியல்புஞ் சிறப்பியல்பும் ஒருங்கு உணர்த்தலின், முழுமுதனூலாம்.

இனி, சிவஞானசித்தி சிவப்பிரகாசம் என்பன முறையே இவ்விலக்கணம்பெற்ற வழிநூலும் புடைநூலுமாம்.

மொழிபெயர்த்துக்கூறும் நூல்களில் ஞானமிர்தம் முதலியன பெரும்பாலும் பொதுவியல்பு மாத்திரையே கூறுதலின், பொதுநூலாம்.

திருவுந்தி திருக்களிற்றுப்படி முதலியன சிறப்பியல்பு மாத்திரையே கூறுதலின், உண்மைநூலாம்.

வடமொழியினும் பௌட்கரம் மிருகேந்திரம் முதலிய சிவாகமங்கள் பெத்தத்தில் நின்ற நிலைபற்றி இலக்கணங் கூறுதலின், அவை பொதுநூலாம்.

சருவஞானோத்தரம் முதலிய சிவாகமங்கள் முத்தியில் நின்ற நிலைபற்றி இலக்கணங் கூறுதலின், அவை உண்மைநூலாம்.

உபநிடதங்களினுஞ் சுபாலம் முதலிய உபநிடதம் உலகந் தோன்றி ஒடுங்கும் முறைமையுந் தோற்றி ஒடுக்குதற்கு ஒரு கருத்தா உண்டு என்னும் மாத்திரையும் போல்வன உணர்த்துதலின், பொது எனப்படும்.

சாந்தோக்கியம் முதலிய உபநிடதங்கள் இருவகையுங் கூறுதலின், பொதுவுஞ் சிறப்புமாம்.

அதர்வசிகை அதர்வசிரம் சுவேதாச்சுவதரம் முதலிய உபநிடதங்கள் முத்திநிலையேபற்றிச் சாதனமும் பயனுங் கூறுதலின், உண்மை எனப்படும்.

அதர்வசிகை முதலிய உபநிடதங்களிற் கூறும் பொருள்களுஞ் சிவாகமப்பொருளை நோக்கும்வழிச் சூத்திரமும் பாடியமும் போலத் தூலாருந்ததிமுறையாம். இக்கருத்துப் பற்றியே வேதம் பொதுநூல் எனவும் ஆகமஞ் சிறப்புநூல் எனவுந் திருமந்திரம் முதலியவற்றிற் கூறப்பட்டன என்று உணர்க. "வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்" என்றதூஉம் இம்முறை தெரிந்துகோடற்கு என்க. இவ்வுண்மை உணர்ந்து பொருள்கோடலே உரைகோள் முறையாம்.

இனி, இவ்வுண்மை உணர்ந்து பொருள் கொள்ளமாட்டாதார் உபநிடதங்கள் ஒன்றோடொன்று முரணும் எனவும் உபநிடதமுஞ் சிவாகமமுந் தம்முள் முரணும் எனவும், சிவாகமத்துள்ளும் ஒன்றோடொன்று முரணும் எனவும் மயங்கி, ஒன்றன் பொருளேபற்றி ஏனையவற்றை இகழ்வர்.

அற்றேல், அஃது அங்ஙனமாக; வேதாந்தசித்தாந்த நூல்கள் அங்ஙனம் இருவேறுவகைப்படுத்துக் கூறவேண்டியது என்னை? சிறப்பியல்பு ஒன்றே கூற அமையுமாலோ எனின்,—அமையாது; ஆன்மாக்கள் அங்ஙனந் தத்தமக்குரிய சோபானமுறையின் அறிந்து வருந் தன்மைக்கேற்பத் தூலாருந்ததிநியாயமாக உணர்த்தவேண்டும் ஆதலின் என்க. "புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும் புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச்சிரம—வறத்துறைகளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்—சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச் சிரப்பொருளை மிகத்தெளிந்துஞ் சென்றாற் சைவத்—திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ் செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வர்." என்றதூஉம் இவ்வியல்பு நோக்கியே என்க.

இங்ஙனம் இவ்விருவகை இயல்பும் வேறுவேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது, ஒரோவொன்றேபற்றி ஐக்கியவாதம் முதற் பலதிறத்தான் வேறுபட்டுத் தம்முள் மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காது அவற்றின் பொருளொருமை உணர்த்துதற்கு எழுந்தது இச்சிவஞானபோதம் என்றறிக. இஃது அறியாதார் எல்லாவாகமப் பொருளையும் பன்னிருசூத்திரத்தால் தொகுத்து விளக்குதற்கு எழுந்தது இந்நூல் என்றுரைப்ப.

மிருகேந்திரத்தின் முதற்கண்ணதாகிய ஒருசூத்திரத்தானே எல்லா ஆகமப்பொருளுந் தொகுத்தெடுத்து விளக்கப்பட்டன என்பது ஆண்டே அறியக்கிடத்தலானும், மற்றும் அங்ஙனந் தொகுத்துக்கூறும் ஆகமங்கள் பலவுள ஆதலானும், அதுபற்றி இதன்கட் போந்த விசேடம் இன்மையானும், 'நாடிக் கண்டு மயர்வற அளித்த சிவஞானபோதம் என்பதற்குத் தாற்பரியம் அது வாகாமையானும், அவர் உரைப்பன எல்லாம் போலியென்று ஒழிக.

சிவஞானபோதம் என்பதும் இக்காரணத்தாற் பெற்ற பெயர். அஃது எவ்வாறென்னின்,—"உயர்ஞான மிரண்டா மாறு மலமகல வகலாத மன்னுபோதத்—திருவருளொன் றென்றதனைத் தெளிய வோதுஞ் சிவாகமமென் றுலகறியச் செப்பு நூலே." என்ப ஆகலின், பரஞானம் அபரஞானம் என்றிரண்டுஞ் சிவஞானம் எனப்படும். அவற்றுள், பரஞானத்தைப் போதிப்பது எல்

ல்லா ஆகமங்கட்கும் பொது ஆகலின், ஈண்டுச் சிவஞானம் என்றது அவ்வ பரஞானமாகிய சிவஞானமேயாம். போதம் என்றது அவற்றின் நிச்சயப் பொருள் இது என உணர்த்துதலாம். ஆகவே, சைவாகமங்களின் பொருள் நிச்சயம் உணர்த்துவது சிவஞானபோதம் எனக் காரணக்குறியாயிற்று என்று உணர்க. இப்பொருள் வடமொழிச் சிவஞானபோதத்துப் பன்னிரண்டாஞ் சூத்திரத்திற் பிற்பாதியிற் கூறியவாறுபற்றி உரைக்கப்பட்டது.

சிவஞானம் எனப் பொதுப்படக் கூறினுந் தலைமைபற்றி ஞானபாதமே கொள்ளப்படும். ஞானபாதத்திற்குத் தலைமை "கிரியையென மருவுமவை யாவு ஞானங் கிடைத்தற்கு நிமித்தம்" என்பதனால் அறிக.

அற்றேல், ஏனை மூன்றுபாதப் பொருள்களை ஆராயும் நூல்கள் யாவை? எனின்,—அவை சோமசம்புசிவாசாரியர் செய்த கிரியாகாண்டக்கிரமாவலி முதலியவாம் என்க. அற்றேல், ஞானபாதப்பொருள் ஆராய்ச்சிநூலும் பிற்காலத்து ஆசிரியன்மாரே கூற அமையும்; ஆகமத்துட் கூறவேண்டாம் பிறவெனின், ஆசிரியன்மார் அவை அனுட்டிக்கும் முறை ஆராயப்புகுந்தாரன்றி அவற்றிற்குப் பொருளொருமை கூறப் புகுந்தாரல்லர். அவை சிறுபான்மை தம்முள் வேறுபாடுடைய என்றும், "யார் யார் எவ்வாகமத்தின் முறையே தீக்கை பெற்றார் அவரவர் அவ்வாகமத்தின் முறையே அனுட்டிக்க" என்றும் "எக்கோயில் எவ்வாகமத்தின்முறை பிரதிட்டை செய்யப்பட்டது அக்கோயிலுக்கு அவ்வாகமத்தின்முறையே பூசை விழா முதலிய நடாத்துக" என்றும், "மாறிச் செய்யிற் குற்றம்" என்றும், ஆகமங்களே கூறுதலின், அவற்றிற்குப் பொருளொருமை காட்டலாகாமையின், கற்பபேதத்தானும், ஆன்மாக்கள் கருத்துவேறுபாட்டானும், அவ்வவற்றிற்கு ஏற்பச் சிறுபான்மை தம்முள் வேறுபடக் கூறுதல் பொருத்தமுடைத்து என்பதுபற்றி அவற்றைக் கூறும் ஆகமங்கள் சிறுபான்மை அங்ஙனம் வேறுபட நிகழ்ந்தன.

இனி, ஞானபாதமாவது பொருட்டன்மை உணர்த்துவதாகலின், ஆண்டு வேறுபடுதல் பொருந்தாதாயினும், ஆன்மாக்களின் மலபரிபாக தாரதம்மியத்திற்கு ஏற்பத் தூலாருந்ததி முறைமைத்தாக உணர்த்துதல் மரபு என்பது பற்றி, அங்ஙனங் கூறும் ஆகமங்களை நோக்குவோர் அவை ஒன்றோடொன்று முரணுவனபோலக் கருதி மயங்குவர். அங்ஙனம் மயங்காமைப்பொருட்டு ஞானபாதப் பொருள்களையெல்லாம் பொது உண்மை என இருவகைப்படுத்து ஆராய்ச்சி செய்து ஒருதலையான் உணர்த்த வேண்டுதலின், அஃது ஏனையோரால் ஆகாமையின் வேண்டும் என்க. அங்ஙனம் முரணுவனபோலத் தோன்றுவன யாவை? எனின், சுவாயம்புவம் முதலியவற்றிற் பதார்த்தம் "ஏழு" என்றலும், பௌட்கரம் முதலியவற்றின் "ஆறு" என்றலும், பராக்கியை முதலியவற்றின் "ஐந்து" என்றலும், சருவஞானோத்தரம் முதலியவற்றின் "நான்கு" என்றலும், இரௌரவம் மிருகேந்திரம் முதலியவற்றின் "மூன்று" என்றலும் போல்வனவாம் என்க. அவையெல்லாம் மூன்று என்றதனுள் அடங்குதலின், முப்பொருள் என்றலே எல்லா ஆகமங்கட்குந் துணிபு எனக் காட்டுதல் போல்வன பொருளொருமை கூறுதலாம் என்பது.



# வேதாகமப்பிராமாணியம்.

வைதிகரில் ஒருசாரார் "வேதம் பிரமாணநூல்" என்றும், "சிவாகமம் பிரமாணநூல் அன்று" என்றுங் கூறுவர். சைவரில் ஒருசாரார் "சிவாகமம் பிரமாணநூல்" என்றும், "வேதம் அதுபோல்வதோர் பிரமாணநூல் அன்று" என்றுங் கூறுவர். நீலகண்ட ஆசிரியர் அப்பயதீக்கிதர் முதலிய சிவாத்துவித சைவாசாரியர்கள் நீலகண்டபாடியம், சிவாதித்தமணிதீபிகை, சிவதத்துவ விவேகம் முதலியவற்றில், அவ்வைதிகரை மறுத்துச் சிவாகமப்பிராமாணியம் வலியுறுத்து உரைத்தார். அரதத்தசிவாசாரியர் உமாபதிசிவாசாரியர் முதலிய வைதிகசித்தாந்த சைவாசாரியர் சதுர்வேததாற்பரியசங்கிரகம், பவுட்கரவிருத்தி முதலியவற்றில், வேதாகமப்பிராமாணியம் வலியுறுத்து உரைத்தார். அவ்வாறெல்லாம் ஆசிரியர் சிவஞானயோகிகள் சிவஞானமாபாடியத்து உபோற்காதத்துள் எடுத்துக்காட்டித் தந்துணிபு நிலையிட்டு உரைத்தார். அம்மாபாடிய உரையை அவ்வாறே ஈண்டு எடுத்துக்காட்டும் முகத்தால், வேதாகமங்கள் ஒற்றுமையுடைய முதனூல்களாதல் விளக்குதும்.

வேதங்கள் ஒருவராற் செய்யப்படாது நிலைபேறு உடைமையானும், ஆன்றோரால் தழுவப்படுதலானும், குற்றமின்றிப் பிரமாணமாம் என்பது துணியப்படும். ஆகமங்கள் அவ்வாறு நித்தமன்றி ஒருவராற் செய்யப்பட்டமையானும், பிரமப்பொருள் வேதமொன்றானே உணரப்படும் என்பது எல்லார்க்கும் ஒப்பமுடிந்தமையானும், அங்ஙனமாயினும் மிருதிநூல் முதலியன போல வேதம் முதனூலாகக்கொண்டு ஆகமங்கள் செய்யப்பட்டனவெனின், அது நும்மனோர்க்குக் கொள்கை அன்மையானும், அங்ஙனங் கொள்ளின், வேதப்பொருள் உணர்ந்து நூல்செய்த மனுமுதலியோர்போல ஆகமஞ்செய்த இறைவனுக்கு முற்றுணர்வின்மை பெறப்படுதலானும், அவ்வாறன்றி முற்றுணர்வு இயல்பாகவுடைய இறைவனாற் செய்யப்பட்டமையின் ஆகமங்கள் பிரமாணமெனக்கூறின், முற்றுணர்வுடைய இறைவனுண்மை துணிந்தபின்னர் அவனாற் செய்யப்பட்டமையின் ஆகமம் பிரமாணமெனத் துணியப்படும்; ஆகமம் பிரமாணமெனத் துணிந்தபின்னர் அதனால் இறைவனுண்மை துணியப்படுமென, *"ஒன்றனையொன்றுபற்றுதல்" என்னுங் குற்றமாமாகலானும், மம் பிரமாணம் என்பது தெளியப்படாதாம்.

அல்லதூஉம், வாசிட்டலைங்கத்திற் "பாஞ்சராத்திரம் புகழ்ந்தெடுத்தொருசிலர் பகர்வார்" என்பது முதலாகத் தந்திரவழி ஒழுகுவோரை எடுத்துக் கூறி "அவர் மா மூடர்" எனவும், பாற்மபுராணத்தில் வசிட்டனுக்குந் திலீபனுக்குங் கூற்று நிகழ்வுழித் "திராவிட தேசந் தன்னிற் சித்திர சேன னென்பான்" என்று எடுத்துக்கொண்டு, "சித்திர சேனன் என்னும் அரசன் பாசண்டர்கூற்றே பற்றி வைதிக ஒழுக்கத்தைக் கைவிட்டுப் பாசுபதவழி ஒழுகி நரகத்தில் வீழ்ந்தான்" எனவும், வாசிட்டலைங்கத்திற் "சாண்டில்லியன் என்பான் ஒருவன் தறுகண்ணனுப் பிறர்மனை நயந்து வாசுதேவனைத் தீங்குநெறியானே வழிபட்டு நிரயத்தில் வீழ்ந்தான்" எனவுஞ், சூதசங்கிதையில்,

* இதனை வடநூலார் அந்நியோந்நியாச்சிரயதோஷம் என்பர்

"மொழிபாஞ்ச ராத்திரங்கா பாலங் காளா முகஞ்சாத்தம் பவுத்தமா ருகதந் தன்னிற்—கழிபாசு பதநூல்சாம் பவத்திற் றீக்கை காதலிப்பீர் வேதியரிற் கடையர் காணீர்" என்றற்றொடக்கத்தால் "தந்திரவழி ஒழுகுதல் பொய்த் தொழில் உணர்ந்து வெகுண்ட கவுதமன் சாபப்பயன்" எனவும், கூர்மபுராண த்தில், "அனைவரு மான்றனை யரியை யண்மி" என்று எடுத்துக்கொண்டு "அறு முனிவர் இட்ட சாபவயத்தானே வேட்பித்தல் முதலியவற்றின் அதிகாரமி ன்மையான் விருத்தியின்றி வருந்துவோர்க்கு விருத்தியின்பொருட்டுத் தந்தி ரஞ் செய்யப்பட்டது" எனவும், அதனுள், "மோகநூ லிருவேமுஞ் செய் வோம் விடைக்கொடியாய்" என்பதனால் ஆகமங்கள் மோகிப்பிக்கும் நூல் என வுங் கூறுதலால், ஆகமம் பிரமாணமல்ல என்பதே தெற்றென விளங்குமாக லின், அவை வீடுபேறுமுதலிய மறுமைப்பயன் பயப்பிக்குமாறு என்னை? எனின், கூறுதும்:—

வேதம் நித்தம் என்பதற்குப் பிரமாணம் இன்மையானும், தோற்றக்கே டுகள் காணப்படுதலான் அநித்தம் என்பதே துணியப்படுதலானும், "அந்தக் ககரமே இது" என்னும் மறித்துணர்வு "அந்தச் சுடரே இது" என்பதுபோலச் சாதியொருமைபற்றி நிகழ்வதேயாம் ஆகலானும், அவ்வாறன்றி எழுத்துக் கள் நித்தமெனக் கொள்ளினும் அவை ஒன்றோடொன்று தொடர்ப்பாடுற்று வருஞ் சொற்கள் அநித்தமே ஆகலானும், உலகத்திற்குத் தோற்ற ஒடுக்கங் கள் உண்மையிற் பிரவாக நித்தம் என்பதும் பொருந்தாமையானும், எல்லா உயிர்கள்மாட்டும் பேரருளுடைய பரமசிவனாற் செய்யப்பட்டமை பற்றியே வேதங்கட்குப் பிரமாண உண்மை கொள்ளப்படும். அம்முறையானே சிவாக மங்களும் பிரமாணமாதல் துணியப்படும். அது வேதம் முதல் உலோகாயதநூல் இறுதியாகிய எல்லா நெறியும் பரமசிவனாற் செய்யப்பட்டமையானும், இறு திக்காலத்துப் பரமசிவனிடத்து ஒடுங்கியவேதம் படைப்புக்காலத்து முன்போ லவே தோன்றுதலானும், நித்தம் என்று உபசரித்துக் கூறப்படும் ஆகலின், சிவாகமங்களை நித்தமென்பதும் இக்கருத்தேபற்றி என்க. அங்ஙனம் அல்லா க்கால், "வேதம் பரமசிவனாற் செய்யப்பட்டது" என்னுஞ் சுருதிகளோடும், "அட்டாதச வித்தைக்கு முதற் கருத்தாவாகிய சூலபாணி" என்றற்றொடக் கத்துப் புராணவசனங்களோடும், ஈண்டுக்கூறும் அனுமான அளவையோடும் முரணுமாறு அறிக.

ஒருவன், இன்னேன் வந்தேன் என்புழி அவனும் அவன் வாய்மொழி யும்போல முதல்வனும் முதல்வனாற் செய்யப்படும் வேதாகமங்களுந் தம்முட் காரக ஏதுவும் ஞாபக ஏதுவுமாகிய வேறுபாடுடைமையின், இன்னோன்னவை "ஒன்றனை யொன்று பற்றுதல்" என்னுங் குற்றமாகா என்க. இனி, ஆன்றோரால் தழுவப்பட்டமைபற்றி வேதஞ் சிவாகமம் இரண்டும் பிரமாணமெனத் துணிந் தபின்னர் அவற்றானே அவை பரமசிவனாற் செய்யப்பட்டன என்பது துணி யப்படும் ஆகலானும் ஒன்றனையொன்றுபற்றுதல் ஆகாமையும் உணர்க. ஆன் றோரால் தழுவப்படுதல் ஆகமப்பகுதியின் இன்றாலெனின், அற்றன்று; "சுற க்கம் வேண்டியோன் சோதிட்டோமத்தான் வேட்க" என்றற் றொடக்கத்துச் சுருதிகட்கு அவை வேட்குமாறு வகுத்துக் கூறுஞ் சுருதிகளும் அத்தன்மைய

வாகிய கற்பசூத்திரங்களும் இன்றியமையாது வேண்டப்படுமாறு போல, வேதத்துள் விதிக்கப்படுஞ் சிவபூசை முதலிய விதிகட்கும் அவற்றை வகுத்துக் கூறுங் காமிகம் முதலிய சிவாகமங்கள் இன்றியமையாது வேண்டப்பட்டு நிற்றலின், அவை ஆன்றோரால் தழுவப்படுதல் ஒருதலையாகலான் என்க. இது சதுர்வேத தாற்பரிய சங்கிரகத்தில் அரதத்தாசாரியர் கூறியவாற்றான் அறிக.

அங்ஙனமாயினும் தீக்கைப்பேறு ஆன்றோரால் தழுவப்படாமையின், அப்பகுதியிற் பிரமாணமாமாறு என்னை? எனின்,—அற்றன்று; சுவேதன் உபமன்னியன் அகத்தியன் முதலியோர்க்குத் தீக்கைப்பேறு காண்டலான் என்க. உபமன்னியன் அகத்தியன் முதலியோர்பாற் கண்ணன் இராமன் முதலியோர்க்குத் தீக்கைப்பேறு அரிவஞ்சம் பாரதம் பாற்மபுராணம் முதலியவற்றின் விரித்துக் கூறியவாறுங் காண்க. அஃது எல்லாரும் பெறுமை, எல்லாருக்கும் மலபரிபாகம் இன்மையாற், *பரமகஞ்ச சந்நியாசம்போல, அதற்கு உரிய அதிகாரிகள் சிலரேயாகலான் என்பது.

அற்றேல், வாமநூல் முதலாயினவும் பரமசிவனாற் செய்யப்பட்டமையின், காமிகம் முதலியவற்றோடு ஒப்பப் பிரமாணமாதல் வேண்டப்படும் பிறவெனின்,—படாது; அவற்றுட் கூறுஞ் சுரைக்குடந் தாபித்தல் முதலிய ஆசாரங்கள் வேதத்துள் எடுத்தோதி விலக்கப்பட்டமையின், சவுத்திராமணி யாகத்தில் சுரை ஏற்றல் வேதத்துள் விதிக்கப்பட்டதாயினும் ஏனையோர்க்கே ஆயவாறுபோல, அவையும் ஏனையோர்க்கே உரிய என்பது பெறுதுமாகலின், அவையும் அவற்றிற்கு உரிய அதிகாரிகள் வேறுபாட்டாற் பிரமாணமாம் எனக்கொள்ளப்படும் என்க. அங்ஙனமாயின், அது வேதவிதியோடு முரணுமாலோ எனின்,—அவற்றுட் கூறுங் கிரியைகட்கு வேதநெறியில் தப்பிய மாந்தர் அதிகாரிகள் எனப் பிரித்து வைத்தலான் முரணாது என்க. இது காந்தத்துட் கூறப்பட்டது.

இனிப், பொருள்கள் முரணியவழி வலியவற்றான் மெலியவை கண்டிக்கப்படும் எனக்கொள்க. எல்லாநெறியும் இறைவனாற் செய்யப்பட்டமையான் விசேடம் இன்மையின், அவற்றுள், ஒன்றற்கொன்று வன்மை மென்மை கூறின், இதுவே மாறுகொளக்கூறலாமால் எனின்,—அற்றன்று; அவற்றைப் பின் வழிப்படுத்து நூல்செய்தோர் தாரதம்மியத்தானே அவற்றிற்கு வன்மை மென்மை கூறுதல் அமைபுமாகலின், பின்னூல் செய்தார் அவ்வந்நெறியிற் கூறும் பொருள்களை அம்மொழியின் தாற்பரியம் அறியாது மயங்கி அவற்றோடு மாறுகொளத் தொகுத்தும் விரித்துஞ் செய்தாராகலின், அவை மென்மை எனப்பட்டன. மாறுகோளில் கூற்றின் எல்லாம் பிரமாணமேயாம் என்க.

இனி, வேதத்தினுஞ் சிவாகமத்தினும் இந்திரன்முதலியோர் அவ்வாறு வழிப்படுத்து வேறு நூல் செய்யாது, வேதத்திற்கு வியாசர் முதலியோரும் ஆகமத்துக்குப் பிரணவர் முதலியோரும் போலச் சம்பிரதாயமாத்திரமே

* பரமகஞ்சசந்நியாசம்—குடீசகம் பெகூதகம் ஹம்ஸம் என்னும் மூன்றினும் மேலாய் நான்காவதாய் உள்ளது; அது நிட்டை புரியும் பக்குவர்க்கு உரியது.

விளக்கினாராகலின், அவ்விரண்டினுள் வன்மை மென்மைகள் கூறுதல் பொருந்தாமையின், அவற்றுள், ஒரோவழி மாறுகோள்போலத் தோன்றியவழி, வேதவாக்கியங்கள் தம்முள் மாறுபட்டவழிக் கருத்துவேறுபாடு பற்றிக் கூறியதெனத் தெரிந்துரைத்துக் கொள்வதுபோல, அவை முரணுதவாறு தெரிந்துரைத்துக்கொள்வதன்றி அவை ஒன்றுெனான்று மறுக்கப்படா என்க.

இவ்வாறன்றி, இன்னும் ஒருவாற்ருன் விடுக்குமாறு:—சாருவாகம் முதலிய எல்லாச் சமயமும் பரமசிவனாற் செய்யப்பட்டமையிற் பிரமாணமேயாமாயினும், அவற்றுள், முதற்கண் மிகவும் மந்த உணர்வினராய் உலக இன்பமே பெரும்பயன் எனவுந் தமக்குப் புறம்பாகிய மக்கள் முதலியோரே ஆன்மா எனவும் அபிமானஞ் செய்து உழலும் அதிகாரிகளுக்குப், பரமசிவன் இரங்கித், துன்பம் முதலியவற்றோடு விரவுதலான் உலக இன்பம் பேருறுதிப்பயனன்று எனவும் மக்கள் முதலியோர் ஆன்மா அல்லர் எனவும் உணர்த்தி, அவர்களுணர்வு அவ்வளவில் நிலைபெறுதற்பொருட்டு நுட்பப்பொருள் உணர்த்தப்புகிற் கொள்ளமாட்டாமையால் தூலவுடம்பே ஆன்மா 'எனவும் அவ்வுடம்பு நசித்தலே பேருறுதிப்பயன் எனவும் அறிவுறுத்தருளினான். பின்பு அங்ஙனம் அறிவுறுத்த நெறியே ஒழுகிப் பரமசிவன் திருவருட்கு உரியராய் மலசத்தியிற் சிறிது நீங்கி, உடம்பே ஆன்மா உடம்பு நசித்தலே பெரும்பயன் என்பவற்றின் ஐயப்பாடு தோன்றிய அதிகாரிகளுக்கு, உடம்பு முதலியன ஆன்மாவல்ல என்று மறுத்தற்பொருட்டுப் புத்தநூல் அறிவுறுத்தருளினான். இவ்வாறே மேலுஞ் சோபானமுறையான் உபதேசித்தருளியதென மாறுபாடின்மை உணர்ந்துகொள்ளப்படும்.

இங்ஙனஞ் சாருவாகம் முதலியநூல்களைச் சோபானமுறையாற் கொள்ளவே, அதிகாரி தாரதம்மியத்தான் மேலுள்ள நூல்கள் கீழுள்ள நூல்களை மறுக்கும் முகத்தால் தோன்றினவாகலின், மாறுகோளில்லை என்பதூஉம், அவையும் ஒருவாற்ருற் பிரமாணமேயாம் என்பதூஉம் போந்தமை உணர்க.

இது, தயித்திரியத்தில் அதிகாரிபேதம்பற்றி "அன்னமய கோசம் பிரமம்" என்றும், அதனை மறுத்து மேல் அதனிற் சூக்குமமாகிய "பிராணமய கோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "மனோமய கோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "விஞ்ஞானமய கோசம் பிரமம்" என்றும், அதற்குமேல் "ஆனந்தமய கோசம் பிரமம்" என்றும், ஒன்றற்கொன்று சூக்குமமாய் உணர்த்துதல் போலவும், கவுசிதக உபநிடதத்தில் அதிகாரிபேதத்தால் இந்திரன் தயித்தியனுக்குத் தன்னையே பிரமமாகக் கூறியது போலவுங் கொள்க. அங்ஙனம் புல்லை எதிரே காட்டி ஆக்களைப் பிடிக்குமாறு போலச் சோபானமுறைமை பற்றிக் கூறியது என்பதும், அவை எல்லாம் ஒருவாற்ருற் பிரமாணம் என்பதும் சூதசங்கிதையிற் காண்க.

இங்ஙனங் கூறியவாற்ருனே, வேதமுஞ் சித்தாந்த சைவாகமமும் என்னும் இரண்டுமே உத்தமநூல் எனவும், ஏனைச் சாருவாகம் முதற் பாஞ்சராத்திரம் இறுதியாகிய நூல்களெல்லாம் இவ்விரண்டினோடும் மாறுபட்டவழி மறுக்கப்படும் எனவும், அவற்றுள்ளும் வழிநூல் செய்தார் தாரதம்மியத்தாற்

கீழ்க்கீழ் நூல்கள் மேன்மேல் நூல்களான் மறுக்கப்படும் எனவும் உணர்ந்து கொள்க.

இனித், "தந்திரவழி ஒழுகினோர் மூடர்" எனவும், "நிரயத்தில் வீழ்ந்தார்" எனவும், "அவை சாபப்பயன்" எனவும், "விருத்திப் பொருட்டு" எனவும், "மோகநூல்" எனவும் புராணங்களிற் கூறியது, வேதப்பொருளோடு மாறுகொளக் கூறும் பாசுபதம் பாஞ்சராத்திரம் முதலிய புறச்சமயங்களையாம்: வேதப்பொருளையே விரித்துக்கூறப் புகுந்த வேதசாரமாகிய சித்தாந்த சைவாகமங்களை அன்று என உணர்க. இதுவும் வாயவ்வியசங்கிதை சனற்குமாரசங்கிதை கூர்மபுராணம் மகுடாகமம் முதலியவற்றுட் கூறியவாறு.

இனிப், புறச்சமயவழி ஒழுகினோரை அங்ஙனம் இழித்துக்கூறியதூஉம், அந்நெறி ஒழுகுதல்பற்றி அன்று; மற்றென்னெனின், அவற்றையே பொருளாகக் கொண்டு வேதநெறியை நிந்தித்தமைபற்றி என்க. அதுவும் ஆண்டே கூறப்பட்டது. புறச்சமயநூல்கள் விருத்திப்பொருட்டுச் செய்யப்பட்டன என்பதூஉம், உடலோம்புதற் பொருட்டென்றது அன்று; விருத்தி, ஒழுக்கமுமாமாகலிற் சாபத்தால் வேதநெறியின் நீங்கினோர் ஆசரித்தற்பொருட்டு என்றவாறும். மோகநூல் என்றதூஉம், மணிமந்திரமருந்து முதலியவற்றான் விம்மிதம் பயக்கும் நூல் என்றவாறேயாம்.

இனி, வேதமுஞ் சிவாகமமும் ஒன்றேயாயினும் இருபகுதிப்பட்டது, வேதம் மூன்றுவருணத்தாருக்குஞ் சிவாகமம் நான்குவருணத்தாருக்கும் பொதுவாதல் பற்றியாதலாற் சிவாகமங்கள் பிரமாணம் என்பது தெற்றென உணர்க. இங்ஙனஞ் சைவாகமங்களுக்குப் பிராமாணியம் பவுட்கரவுரையின் உமாபதிசிவாசாரியர் காட்டியவாறே காண்க.

நீலகண்டபாடியத்திற் பதியதிகரணத்திற் காட்டுமாறு:—

"சிவாகமங்களில் ஒருசாரன பரப்பிரமங் கேவலம் நிமித்தகாரணம் எனக் கூறும்; அதனை மறுத்தற்கு எழுந்தது இவ்வதிகரணம் என்று உரைப்பாருமுளர்; அது பொருந்தாது; யாம் வேதத்திற்குஞ் சிவாகமத்திற்கும் வேற்றுமை கண்டிலம்; சிவனாற் செய்யப்படுதலின் வேதமுஞ் சிவாகமம் எனவழங்கப்படும் ஆதலாற் சிவாகமம் மூன்றுவருணத்துக்கே உரித்தாயதும் நான்குவருணத்துக்கே உரித்தாயதும் என இருவகைப்படும்; அவற்றுள், முன்னையது வேதம் எனவும் பின்னையது சிவாகமம் எனவும் வழங்கப்பட்டன; இவ்விரண்டும் செய்த கருத்தன் சிவன் ஒருவனேயாம்; இவ்வாறு சுருதியினும் புராணங்களினுஞ் சிவாகமங்களினுங் கூறப்பட்டது; பஞ்சப்பிரமம் பிரணவம் பஞ்சாக்கரம் பிராசாதம் முதலிய மந்திரங்களும், பதி பசு பாசம் முதலிய பொருள் வழக்கமும், திருநீற்றின் உத்தூளனந் திரிபுண்டரம் உருத்திராக்கந் தரித்தல் சிவலிங்கபூசை முதலிய தருமங்களும், பிறவும் வேதஞ் சிவாகமம் இரண்டினும் ஒப்பக்காண்டலான், அவ்விரண்டும் பிரமாணமே ஆகலானும், கருத்தா ஒருவனே ஆகலான் அவ்விரண்டிற்கும் பொருள் ஒன்றேயாகலின் அவற்றுள்ளும் மாறுபாடின்மையானும், இவ்வதிகரணங் கேவலம் நிமித்த

மாத்திரமே இறைவன் எனக்கூறும் இரணியகருப்பநூலாகிய யோகசாத்திரத்தை மறுத்தற்கு எழுந்தது எனவே யாங் கூறுதும்" என்று இவ்வாறு நீலகண்ட ஆசாரியாராற் காட்டப்பட்டது. இதனை விரித்துச் சிவாதித்தமணிதீபிகை சிவதத்துவவிவேகம் முதலிய நூலுடையார் சிவாகமங்கட்குப் பிராமாணியங் காட்டியவாறும் அந்நூல்களுட் காண்க.

"வேதஞ் சிவாகமம் என இருபகுதிப்பட்டது, மூன்று வருணத்திற்கும் உரிமையாதலும் நான்குவருணத்திற்கும் உரிமையாதலும் பற்றி" என நீலகண்டபாடியத்திற் கூறப்பட்டது.

*"வேதநூல் சைவநூ லென்றிரண்டே நூல்கள் வேறுரைக்கு நூலிவ ற்றின் விரிந்த நூல்க—ளாதிநூ லநாதியம லன்றருநூ லிரண்டு மாரணநூல் பொதுச்சைவ மருஞ்சிறப்பு நூலா—நீதியினு லுலகர்க்குஞ் சத்திநிபா தர்க்கு நிகழ்த்தியது நீண்மறையி னொழிபொருள்வே தாந்தத்—தீதில்பொருள் கொண்டுரைக்கு நூல்சைவம் பிறநூ றிகழ்பூர்வஞ் சிவாகமங்கள் சித்தாந்த மாகும்" எனவும், †"உலகியல் வேதநூ லொழுக்க மென்பது—நிலவுமெய்ந் நெறிசிவ நெறிய தென்பதும்" எனவும் கூறுப ஆகலின், அங்ஙனந் நூலாருந் ததி முறைமை பற்றிக் கூறுதலின் இருபகுதிப்பட்டது எனவே யாங் கோடும்.

இனிச், சைவரில் ஒருசாரார் சைவாகமங்களில், "உலகநூல், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம்" என நூல்களை ஐவகைப்படுத்து, "மாந்திரம் ஒழிந்த நான்கும் புறநூல்" என வைதிகத்தினையும் அவற்றுடன் விலக்குதலானும், "வேதாந்தத்தில் ஏகனே ஆன்மா" என வேதாந்தத்தைப் புறச்சமயங்களோடு எடுத்தோதி மறுத்தலானும், வேதம் பிரமாணமன்று என்பர். அது பகுத்துணர்வில்லாதார் கூற்றேயாம் என்று மறுக்க. என்னை? ஆண்டு வைதிகம் என்றது மீமாஞ்சைநூலும் வைசேடிகநூலும் நையாயிக நூலும் என்னும் மூன்றுமேயாம் எனவும், புறச்சமயங்களோடு வைத்து எண்ணிய வேதாந்தமாவது ஏகான்மவாதங்கூறும் வியாசநூல் எனவும், சித்தாந்தப்பிரகாசிகையிற் சர்வான்மசம்புசிவாசாரியர் கூறுதலான், அது வேறு என்பது தெற்றென விளங்குமாகலின், ஆண்டு வேதம் என்றதூஉம் மீமாஞ்சைநூலே எனக் கொள்க; வேதத்துள் விதித்த கருமகாண்டத்தை ஆராய்ச்சி செய்தலின் அதற்கும் அப்பெயராயிற்று. அங்ஙனங் கொள்ளாக்கால், வேதசாரஞ் சிவாகமம் ஆதலாற் "சைவாசாரத்திற்கு உரியோன் வைதிகன்" எனவும், "வேதாந்தப்பொருளைத் தெளித்துக் கூறுவது சித்தாந்தம்" எனவும், "பிறநூல் பிறபொருள்களைக்கூறும்" எனவும், வேதத்தோடு ஒற்றுமை உடைமை பற்றியே சிவாகமங்கட்குப் பிரமாணமாதல் கூறும் வசனங்களோடும் முரணுமாறு அறிக.

"பாசுபதம்" என்பது ‡யோகப்பெயராற் சைவாகமங்கட்கும் ¶உரூடப்பெயராற் பாசுபதாகமங்கட்கும் ஆமாறுபோல, "வேதாந்தம்" என்பது யோகப்பெயரான் வேதத்தின் முடிபாகிய உபநிடதங்களைக் கூறும்; உரூடப்பெ

* சிவஞானசித்தி. அ-ம் சூ. கடு. † பெரியபுராணம், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம். அஉ0. ‡ யோகம் - காரணம். ¶ உரூடம் - இடுகுறி.

யரான் அவற்றை எடுத்துச் செய்த ஏகான்மவாதநூலைக் கூறும். ஆதலின், அவ்விருவேறுவகையுந் தெரிந்துணர்ந்து கொள்க.

வேதம் ஓதுதற்கண்ணும் வைதிகாசாரத்தின்கண்ணும் உபநயனப் பேறுடையார்க்கன்றி அதிகாரமின்மைபோலச் சைவாகமம் ஓதுதற்கண்ணுஞ் சைவாசாரத்தின்கண்ணுஞ் சிவதீக்கைப் பேறுடையார்க்கன்றி அதிகாரம் இல்லையெனக் கொள்க.



## சரியாபாதம்முதலியவற்றுட் கூறப்படுவன.

வேதத்திற் கூறுங் கருமகாண்டப் பொருட்கு இன்றியமையாது வேண்டப்பட்டு எஞ்சி நின்றனவாய பொருள்களையும் வேதமுடிபாய உபநிடதத்தின் சாரமாய் உள்ள பொருள்களையும் வேறு எடுத்துக்கொண்டு இனிது விளக்குதலின், சிவாகமஞ் சித்தாந்த சாத்திரம் என்று வழங்கப்படும். இச்சித்தாந்த ஆகமங்கள் சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாதம் என நான்கு பாதங்கள் உடையனவாம்.

இவற்றுள், சரியாபாதத்துள் பிராயச்சித்த விதியும், பவித்திர விதியும், சிவலிங்க இலக்கணமும், நந்தி முதலிய கணநாதர் இலக்கணமும், செபமாலை யோகபட்டந் தண்டங் கமண்டலம் முதலியவற்றின் இலக்கணமும், அந்தியேட்டி விதியும், சிராத்த விதியும் கூறப்படும்.

கிரியாபாதத்துள், மந்திரங்களினது உத்தாரணஞ் சந்தியாவந்தனம் பூசை செபம் ஓமங்களும், சமயம் விசேடம் நிருவாணம் ஆசாரியாபிடேகங்களும், புத்தி முத்திகளுக்கு உபாயமான தீக்கையும் கூறப்படும்.

யோகபாதத்துள், முப்பத்தாறு தத்துவங்களும், தத்துவேசுரரும், ஆன்மாவும், பரமசிவனும், சத்தியும், சகத்திற்குக் காரணமான மாயை மாமாயைகளைக் காணும் வல்லமையும், அணிமாதி சித்திகள் உண்டாம் முறைமையும், இயமம் நியமம் ஆசனம் பிராணாயாமம் பிரத்தியாகாரந் தாரணை தியானஞ் சமாதிகளினுடைய முறைமையும், மூலாதாரம் முதலிய ஆதாரங்களின் முறையும் கூறப்படும்.

ஞானபாதத்துள், பரமசிவனுடைய சொரூபமும், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என்னும் ஆன்மாக்களின் சொரூபமும், ஆணவங் கான்மியம் மாயேயம் வைந்தவந் திரோதானசத்தி என்னும் பாசங்களின் சொரூபமும், சத்தியின் சொரூபமும், சிவதத்துவம் முதற் பிருதிவி தத்துவம் வரை முப்பத்தாறு தத்துவங்களினது உற்பத்தியும், இவை ஆன்மாக்கள் போகம் புசிக்கைக்குக் கருவியாம் முறையும், புவனங்கள் புவனேசுவரர் சொரூபங்களும், புவனங்களின் யோசனைப் பிரமாணங்களும், அதமப் பிரளயம் மத்திமப் பிரளயம் மகாப்பிரளயங்களின் சொரூபங்களும், அதமப் பிரளயங்களின் பின்னர்ச் சிருட்டி

யாம் முறைமையும், பாசுபதம் மாவிரதம் காபாலிகம் முதலிய மதங்களின் சொரூபங்களும் கூறப்படும்.



## பிரமன்முதலியோர்காரணரல்லர்.

இனிப், பிரமன் முதலிய மூவரையும் முறையே "படைப்புக்கடவுள் திதிக் கடவுள் சங்காரக்கடவுள்" எனவும், "சாக்கிரமூர்த்தி சொப்பனமூர்த்தி சுழுத்திமூர்த்தி" எனவுங் கூறிப், பரமசிவனைத் "துரியமூர்த்தி" என உபநிடதங்கள் எல்லாம் மூவரின் வேறாக வைத்து ஓதுதலின், அப்பரப்பிரம முழு முதல்வனே நாயனாரால் "ஆதிபகவன்" என்று அங்ஙனம் விசேடிக்கப்பட்டான் என்பது தெற்றென உணர்ந்துகொள்க. இன்னும், மால் அயன் உருத்திரன் என்னும் மூவரையும் முறையே "சாத்துவிககுணமூர்த்தி இராசதகுணமூர்த்தி தாமதகுணமூர்த்தி" என்று ஓதிப், பரமசிவனைக் "குணரிதன்" என்று அவ்வாறு உபநிடதம் முதலியன ஓதுதலானும் அம்முழு முதல்வனே ஆதி சத்தத்தால் விசேடிக்கப்பட்ட பகவன் என்பது துணிபாம் என்க.

இனிச், சங்காரவுருத்திரனுஞ் சங்கரித்தற்றொழிலின் பொருட்டுத் தாமதகுணத்தை மேற்கொண்டதல்லது இயல்பாகத் தாமதகுணமுடையன் அல்லன்; தாமதகுணத்தின் காரியமாகிய துயில் மயக்கம் வஞ்சம் முதலியன அக்கடவுண்மாட்டு இன்மையின். துயில் மயக்கம் வஞ்சம் முதலியன மாயோனுக்கு உளவாதல் புராண இதிகாசங்களிற் கேட்கப்படுதலின், அக்கடவுளுக்குச் சாத்துவிககுணங் கூறியது காத்தற்றொழின் மாத்திரைக்கே எனக் கொள்க. இன்னோரன்னவை எல்லாம் பிரமதருக்கத்தவத்துள் விரித்துக் காட்டியவாற்றான் அறிக.

மாயோனுக்குக் காத்தற்றொழிலும் பிருதிவி முதற் பிரகிருதிமாயைகாறும் வியாபித்து நிற்கும் பிரதிட்டாகலை பரியந்தமே என்க. என்னை? நிவிர்த்தி பிரதிட்டை வித்தை சாந்தி சாந்தியதீதை என்னும் ஐங்கலைகளான் வியாபிக்கப்பட்ட தத்துவ புவனங்களுக்கு முறையே பிரமன் மால் உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்னும் ஐவரும் அதிகாரிகள் என ஆகமங்கள் ஓதுதலின் என்க.

பிரகிருதிக்கு மேலுந் தத்துவ புவனங்கள் உண்மை சைவோபநிடதங்களினுங் கேட்கப்படுதலின், அது சைவாகமப்பொருள் என்று புறங்கூறுதல் ஏலாது என்க.

புராணங்களினும் பாரதத்தினும் மாயோனுக்கும் பிரமனுக்குந் தாழ்வாக உருத்திரப்பெயராற் கூறப்படுவோர் காத்தற்றொழிலும் படைத்தற்றொழிலும் இனிது நடாத்துதற்பொருட்டுச் சங்கார உருத்திரன் கூறாய் அவர்பால் தோன்றிய நீலலோகிதன் முதலிய அவதாரமூர்த்திகளேயாம் என்க. அது பாரத தாற்பரியசங்கிரகம் முதலியவற்றுட் காண்க.

அதர்வசிகை முதலிய உபநிடதங்களில் "பரமசிவன் மும்மூர்த்திகளையும் படைத்தான்" என்பதுபோலக் குணமூர்த்திகளை அங்ஙனங் கூறுது தம்மை

ஒழித்து ஒழிந்த இருவரையும் படைத்தார் எனவே கூறுதலின், அவர் முழு முதல்வர் ஆகாமை கடைப்பிடிக்க. * "அயனை முன்படைத் திடுமொரு கற்பத் தரியை முன்படைத் திடுமொரு கற்பத்—தயரு ருத்திரன் றனைமுனம் படைப்ப னொருகற் பமற்றொரு கற்பந் தன்னின்—மூயனு மூவரை யொருங்குடன் படைப்பன் முன்பிறந்தவர் மற்றிரு வரையுஞ்—செயலி னுற்படைக் கவுமருள் புரிவன் சிவபி ரானெனி லேற்றமிங் கெவனோ." எனச் சிவதத்துவவிவேகத் திற் கூறியதனையும் ஈண்டு விரித்து உரைத்துக்கொள்க.

பாரதத்தில் "அளவில் பேரொளிப் பகவனுஞ் சிவனுக் கச்சுத னன்மா வாம்" என்றது, அபேதம்பட உபசரித்துக் கூறியதாம். ஆண்டு ஆன்மா என்றது அந்தரியாமி என்னும் பொருட்டெனக் கொள்ளின், "அளவில் பேரொளிப் பகவன்" என்று உயர்த்துக்கூறியதனோடு முரணுமாறு அறிக. பாரதத்தின் மோக்க தருமத்தில் "ஆதலா லெனக்கான் மாவே யாமுருத் திரனை முன்னர்க்—காதலாற் பூசிக்கின்றேன் யான்" எனக் கண்ணன் கூறியவாக்கியத்திற் சிவபிரானைத் தனக்கு ஆன்மா என்றது அந்தரியாமி என்னும் பொருட்டேயாம்; தன்னாற் பூசிக்கப்படுங் கடவுளாதற்கு உரியது அதுவே ஆகலான் என்க.

இனி, வேதத்துள் கருமகாண்டத்தில் "விண்டு பரமன், அங்கி அவமன், அவ்விருவருக்கும் இடையே எல்லாத் தேவரும்" என்றது, ஆண்டுச் செய்வதொரு வேள்விவிசேடத்தில் அவிப்பாகம் ஏற்கும் முறையில் விண்டு முந்தினவன்; அங்கி பிந்தினவன்; அவ்விருவருக்கும் இடையே ஏனைத்தேவரெல்லாம் என்னும் பொருட்டாகலின், ஆண்டுப் பரம அவம என்பன ஆதி அந்தம் எனவே பொருள்படுமாறு காண்க. அவ்வாறன்றி ஆண்டு விண்டு பரமன் என்றதற்கு விண்டு எல்லாக்கடவுளருக்கும் மேற்பட்டவன் என்றும், அங்கி அவமன் என்றதற்கு அங்கி எல்லாக் கடவுளருக்கும் கீழ்ப்பட்டவன் என்றும் பொருள் கொள்ளின், "அங்கி கடவுளருக்கு மேற்பட்டவன்" என்று ஆண்டாண்டுக் கூறுஞ் சுருதி மிருதி புராணங்கள் பலவற்றோடும் முரணும் என்றொழிக. இவ்வாறு முன்பின் முரணுமைப் பொருள்கொள்ள அறியாது "விண்டு ஆன்மா" என்றதுபற்றியும், "விண்டு பரமன்" என்றதுபற்றியும், விண்டுவுக்கு முதன்மை கோடல் பொருந்தாமை அறிக. இன்னும் வருவன எல்லாம் இவ்வாறே ஓர்ந்துணர்க. ஈண்டுக் கூறியவாற்றானுந் துரியமூர்த்தியான பரமசிவனே ஆதிபகவன் என்று அவ்வாறு ஓதப்பட்டான் எனத் தெளிந்துகொள்க.

பாஞ்சராத்திரிகள் இன்னுங் கூறுமாறு;—அரசன் உலாப்போதுங்காலைத் தொகுதிதொகுதியாகச் செல்வாருள் அரசனாவான் இவன் என்பது ஆடை அணி யானை குதிரை முதலிய வைபவம்பற்றித் துணியப்படாதாம்; என்னை? அவை அமைச்சர் படைத்தலைவர் முதலியோர்க்கும் பொது; அல்லதூஉம், அரசன் உவகையுற்றுழி அமைச்சர் முதலாயினோர்க்குத் தன்னினும் மிக்க வரிசை அளித்தலும் உண்டாகலின். அதுபோல, வேதத்துட் கூறப்படுங் கடவுளருள் பரப்பிரமப் பொருளாவான் இவன் என்பது ஏனைப் பெருமைகளால் துணியப்படாதாம். மற்றுக் கிரீடங் கவித்து வெண்கொற்றக்குடை நிழற்கீழ்

* சிவதத்துவவிவேகத்தில் இது காணப்படவில்லை.

வருதல் ஒன்றேபற்றி அரசனுவான் இவன் என்பது துணியப்படுமாறுபோலக் காரணவாக்கியங்களுட் படைப்பு முதலியவற்றிற்குக் காரணமாகக் கூறப்படுதல் ஒன்றேபற்றி அவனே பரப்பிரமம் என்பது துணியப்படும். காரணப்பொருளாவான் நாராயணனே என்பது சுபாலம் முதலிய உபநிடதங்களிற் காணப்படும்.

அற்றேல், சிலவுபநிடதங்களிற் காரணப்பொருள் "சத்து" என்றும் "பிரமம்" என்றும் "ஆன்மா" என்றும் அங்ஙனம் பொதுவகையானும், "இரணியகருப்பன்" என்றுஞ் "சிவன்" என்றும் "உருத்திரன்" என்றும் இங்ஙனஞ் சிறப்புவகையானும், வெவ்வேறு பெயரான் எடுத்தோதவும்படுமாலோ எனின்,—அற்றன்று, சுபாலம் முதலியவற்றுட் காரணப்பொருள் நாராயணன் என்றது உலகந் தோன்றும் முறைமை எடுத்துக்கொண்டவழிக் கூறப்பட்டதாகலான் அதுவே உண்மைப்பொருள் எனவுஞ், சத்துப் பிரமம் ஆன்மா என்றற்றொடக்கத்துப் பொதுப்பெயர்கள் *சாகபசு நியாயம்பற்றி நாராயணனையே உணர்த்தி நிற்கும்; அங்ஙனமன்றி இடுகுறிப்பெயர் காரணத்தை விலக்கும் எனக்கொள்ளினும் ஆகுபெயராய்த்தான், மாயோனுடைய ஆயிரம் பெயர்களுள் சிவன் முதலிய நாமங்களும் எடுத்தோதுதலின் இடுகுறியாய்த்தான், நாராயணனையே உணர்த்திநிற்கும் எனவுங் கொள்ளப்படும்.

அற்றேல், நாராயணன் முதலிய மாயோன் பெயர்களுங் காரணக்குறியாய்ச் சிவனையே உணர்த்திநிற்கும் ஆதலின், காரணப்பொருள் சிவன் என்னும் உபநிடதங்களே வலியுடைய என மாறிக்கொள்ளிற் படும் இழுக்கு என்னை? எனின்,—அற்றன்று, மாயோன் பெயருள் ஏனைய எல்லாங் காரணப்பெயராய் வேறொரு கடவுளை உணர்த்தும் எனக் கொள்ளினும், நாராயணன் என்னும் பெயர் இடுகுறிப்பெயராதலே அன்றி ஏனைய பெயர்கள்போலக் காரணப்பெயராகும் என்றற்கு ஏலாது. அஃது எங்ஙனம்? எனின்,—நாரம் என்பது நீர்; அயனம் என்பது இடம்; நாரம் அயனமாக உடையவன் நாராயணன் என அன்மொழித்தொகையாய் இருமொழியும் புணர்ந்தவழி, ரகரத்தின்முன் வந்த நகரம் ஒருமொழிக்கண்ணதாயின், ணகரமாய்த் திரியும்; உயிரெழுத்துக்களும், யகர வகரங்களும், ககர பகர வருக்கங்களும், இடையே நிற்பினும், அங்ஙனந் திரியும்; ரகரம் நிலைமொழிக்கண்ணதாக நகரம் வருமொழிக்கண்ணதேல், இடுகுறிப்பெயராயின், ணகரமாய்த் திரியும் என்பது பாணினிசூத்திரம் ஆகலின், நாராயணன் என்பதனைக் காரணக்குறியாக்குவார்க்கு நகரம் ணகரமாகத் திரியும் என்றற்கு ஓத்தில்லை என்பது. அற்றாகலினன்றே சிவன் முதலிய பெயர்போல அவயவப்பொருள் பற்றிக் காரணக்குறியாய் மற்றொருகடவுளை உணர்த்துதல் பெறாத நாராயணன் என்னுஞ் சிறப்புப்பெயராற் சுபாலம் முதலியவற்றில் எடுத்தோதியதூஉம் என்று இங்ஙனம் பிதற்றுவர். இவை அனைத்துஞ் சுவேதாச்சுவதரம் முதலிய உபநிடதங்களை ஓதி உணராத மடவோர் கூற்றேயாம் என்று மறுக்க.

---

* சாகபசுநியாயமாவது:—முன் பசு எனப் பொதுப்படக் கூறிப்பின் சாகபசு எனச்சிறப்பித்துக் கூறுதலால் முன் சொன்னபசுவும் சாகமே எனப் பொருள்படநிற்கும் ஓர் நெறியாம். சாகம் - வெள்ளாடு.

படைப்பு முதலியவற்றிற்குக் காரணமாதல் ஒன்றே பிரமத்திற்குச் சிறந்த இலக்கணம் என்பது ஒக்கும். அதுபற்றியன்றே பரப்பிரமப்பொருள் பரமசிவனே எனத் துணிந்தாம் என்க. சுபாலம் முதலிய உபநிடதங்கள் உலகந்தோன்றி ஒடுங்கும் முறைமை உணர்த்தப் புகுந்தன அன்றிக் காரணப் பொருளை உணர்த்தப் புகுந்தன அல்ல. இடையே இயைபு பற்றிக் காரணப் பொருளும் உடன் கூறப்பட்டது.

சுவேதாச்சுவதரத்தில் அவ்வாறன்றிச் சுபாலம் முதலியவற்றுள் பொதுவகையான் உணர்ந்த காரணப்பொருளைச் சிறப்புவகையான் உணர்தற்பொருட்டுக், "காரணமாகிய பிரமம் யாது?" என முனிவர் வினவும்வினவை முதற்கண் எடுத்துக்கொண்டு, உபநிடதம் முழுவதும் பரமசிவனுக்கு உரிய சிறப்புப் பெயர்களாற் பரமேசுரன் பெருமை விளங்கக் கூறுதலானும், இவ்வாறு ஏனை உபநிடதங்களுள் முதற்கண் எடுத்துக்கொள்ளாமையானும், ஏனை உபநிடதங்களினுஞ் சுவேதாச்சுவதரம் வலியுடைத்து ஆகலான், அதனுட் கூறப்படுங் காரணப்பொருளாகிய பரமசிவனே பரப்பிரமம் எனவும், ஏனைக் காரணவாக்கியங்களுட் கூறும் பெயர்கள் எல்லாஞ் சாகபசு நியாயத்தாற் பரமசிவனையே உணர்த்தி நிற்கும் எனவும், இரணியகருப்பன் நாராயணன் முதலிய சிறப்புப் பெயர்களும் அவயவப்பொருள்பற்றிக் காரணப்பெயராய்த்தான், அங்ஙனமன்றி ஆகுபெயராய்த்தான், பரமசிவனையே உணர்த்தி நிற்கும் எனவும் உணர்க. எல்லாப்பெயரும் பரமசிவன் பெயர் என்பதே வேதத்தின் துணிபு என்பது ஆண்டுக் காண்க.

நாராயணன் என்னும் பெயர் மாயோனுக்கு இடுகுறியாகலினன்றே இயைபுபற்றிப் பரமசிவனை உணர்த்தும்வழி ஆகுபெயர் எனக் கொண்டாம் என்பது. கங்கையின் இடைச்சேரி என்புழிக் கங்கை என்பது இடுகுறியாய் வெள்ளத்தினை உணர்த்தி நிற்றலான்றே கரையை உணர்த்தும்வழி இயைபுபற்றி ஆகுபெயர் எனக் கொண்டதூஉம் என்க. கரையினை உணர்த்தும்வழியும் ஆற்றலான் உணர்த்துமாயின், ஆகுபெயர் என்றற்கு ஏலாமை அறிக. இங்ஙனம் நாராயணன் என்பது மாயோனுக்கு இடுகுறிப்பெயராய்நின்றே கங்கையினிடைச்சேரி என்புழிப்போல இயைபு பற்றி ஆகுபெயராய்ப் பரமசிவனை உணர்த்தும் எனக் கோடலின், ஆண்டு ணகரமாய்த் திரிதற்கு இழுக்கு இன்மையின் நாராயணன் என்னுஞ் சொல் அவயவப்பொருள்பற்றிக் காரணக்குறியாதற்கு ஏலாது எனக் கொண்டவழியும், அவர் கருத்துநிரம்புமாறு இல்லை என்க. இவை சிவதத்துவவிவேகத்தும் சிவஞானமாபாடியத்தும் ஓதியவாறுபற்றி உரைக்கப்பட்டன.

### நாராயணசப்தார்த்தம்.

இன்னும் சிவஞானமாபாடியத்துள், ஆசிரியர் சிவஞானயோகிகள் "உண்மையால் நோக்குங்கால் நாராயணன் என்பது அவயவப்பொருள் பற்றிக் காரணக்குறியாய் நின்றே பரமசிவனை உணர்த்தும் என்பது காட்டுதும்" என்று எடுத்துக்கொண்டு "நரருடைய தொகுதி நாரம்" எனத் "தொகுதிப் பொருள் பற்றி அண் விகுதி வரும்" என்னும் பாணினி சூத்திரக்கால் அண்

விகுதி பெற்று நிற்ப, அதன்மேல் ஆசாரப்பொருள் உணர்த்துங் ககர ஙகர இத்துக்களையுடைய யகர விகுதி வந்து அயல் நீண்டு நாராய் என நின்றவழி, அதுவும் பகுதித்தன்மைப்படுதலின், அதன்மேல் வினைமுதற் பொருளுண்மை உணர்த்தும் லகர டகர இத்துக்களை உடைய யுகர விகுதி அந எனத் திரிந்து நாராயந என நின்றவழி, "வினைப்பெயர் விகுதியின் நின்ற நகரம் ணகரமாய்த் திரியும்" என்பதனால் அங்ஙனந் திரிந்து நாராயணன் என ஒருமொழியாய் உயிர்த்தொகையை ஒத்து நிற்பன் என்னும் பொருட்டாய்க் காரணக்குறியாயவாறு காண்க. இங்ஙனம் நாராயணன் என்பது லகர டகர இத்துக்களை உடைய யுகரவீற்றுச் சொல்லாதலினன்றே பெண்பாலில் நாராயணீ என ஙகர பகர இத்துக்களை உடைய ஈகாரவிகுதி ஈற்றான் யாண்டும் வழங்குவதூஉம் என்க. யுகர விகுதி ஈற்றுச்சொல் எனக் கொள்ளாக்கால், நாராயணீ என ஈகார விகுதி பெறுதற்கு விதியின்மை உணர்க. நாராயணன் என்னும் வடமொழிக்கு இங்ஙனம் விகுதிமேல் விகுதி புணர்த்துச் செய்கை செய்வன எல்லாம் வடமொழிவியாகரணம் வல்லார்வாய்க் கேட்டுணர்க. இன்னும் விரிக்கிற் பெருகும் என்று ஒழிக. இத்து ஆவது, செய்கை செய்தன் முதலியவற்றிற்குக் கருவியாக முதனூல் ஆசிரியனாற் படைத்திட்டுக் கொள்ளப்பட்ட கருவிச் சாரியை. "இரணியகருப்பன் காரணப்பொருள் என்பாரையும் இவ்வாறே கூறி மறுக்க" என்று இவ்வாறு நாராயணநாமம் காரணக்குறியாய்ப் பரமசிவனை உணர்த்துமாறு சாதித்தார்.

"உயர்கா யத்திரிக் குரியபொரு ளாகலிற்—றசரதன் மதலை தாபித் தேத்தலிற்—கண்ணன் கயிலையி னண்ணிநின் றிரப்பப்—புகழ்ச்சியி னமைந்த மகப்பே றுதவலிற்—றனுது விழியுட னொராயிரங் கமலப்—புதுமலர் கொண்டரிபூசனை யாற்றலி—னுங்கவற் கிரங்கி யாழியீந் தருடலி—னைங்கணைக் கிழவனை யழல்விருந் தாக்கலி—னமைப்பருங் கடுவிட மமுதுசெய் திடுதலிற்—றென்றிசைத் தலைவனைச் செகுத்துயிர் பருகலி—னவுணர் முப்புர மழியவில் வாங்கலிற்—றக்கன் வேள்வி தகர்த்தருள் செய்தலிற்—றனஞ்சயன் றனக்குத் தன்படை வழங்கலின்—மானுட மடங்கலை வலிதபக் கோறலின்—மாயோன் மகவே வாகிய காலைத்—தடமுலை திளைத்துச் சாத்தனைத் தருதலி—னாழ்கடல் வரைப்பி னுன்றோ ரனேக—ரன்புமீ தூர வருச்சனை யாற்றலி—னன்கிரு செல்வமு மாங்கவர்க் கருடலி—னையிரு பிறப்பினு மரியருச்சித்தலி—னிருவரு மன்னமு மேனமு மாகி—யடிமுடி தேட வழற்பிழம் பாகலிற்—பிறப்பிறப் பாதி யுயிர்க்குண மின்மையிற்—கங்கைசூழ் கிடந்த காசிமால் வரைப்பிற்—பொய்புகல் வியாதன் கைதம் பித்தலின்—முப்புர மிறுப்புழி முகுந்தப் புத்தேள்—மால்விடை யாகி ஞாலமொடு தாங்கலி—னயன்சிர மாலை யளவில வணிதலின்—ஞானமும் வீடும் பேணினர்க் குதவலிற்—பசுபதிப் பெயரிய தனிமுதற் கடவு—ளும்பர்க ளெவர்க்கு முயர்ந்தோ—னென்பது தெளிக வியல்புணர்ந் தோரே" என அரதத்தாசாரியர் அருளிச்செய்ததனையும் ஈண்டு விரித்துரைத்துப் பரமசிவ பரத்துவம் இனிது தெளிந்துகொள்க. இங்ஙனங் காத்தற் கடவுளாகிய நாராயணனும், படைத்தற் கடவுளாகிய இரணியகருப்பனும் பரமகாரணராகாமை தெரிக்கவே, இவரோடு

ஒருங்கு எண்ணப்படுஞ் சங்காரக்கடவுளாகிய உருத்திரனும் பரமகாரணன் ஆகான் என்பது தானேபோதரும் என்க.



## அத்துவிதபாவனை.

வேதாகமங்கள் *"பிரமாகம்" என்றும், †"சிவோகம்" என்றும் பாவிக்கும்படி கூறியது யாதுகாரணம் பற்றி எனின், பசுக்கள் பாச விமோசனம் உற்றுத் தமக்கு அந்தரியாமியும் வியாபியுமான பரமசிவத்துவம் தங்கண் அபிவியத்தி உறும்பொருட்டு உபாசிக்க, வேதாகமங்களில் அங்ஙனம் அத்துவித பாவனை விதிக்கப்பட்டது. ஆகலின், அதுகொண்டுதானே ஏகான்மவாதஞ் சாதித்தல் சாலாது என்க.

"பிரமாகம்" சிவோகம்" என்னும் அத்துவித பாவனையால் ஆன்மாக்கள் சிவகுணங்கள் தங்கண் விளங்கப்பெற்றுச் சிவமாய் இருப்பன அன்றிக் கெட்டு ஒன்றாய் ஒழியா. அரதத்தாசிரியர்க்கும் இதுவே கருத்தாதல் "வேதத்தில் ஆண்டாண்டுப் பிரமப்பொருளாகிய சிவபிரானுக்கும் ஆன்மாவிற்கும் அத்துவித பாவனை கூறப்படுமாறு என்னை? என்று ஆசங்கித்து எடுத்துக்கொண்டு கருடனும் மாந்திரிகனுந் தம்முள் வேறுதல் வெளிப்படையாயினுங் கருடோகம் என்னும் அத்துவித பாவனை விடநிவிர்த்திப்பொருட்டு வேண்டப்படும். அதுபோலப், பிரமப்பொருளாகிய பரமசிவனும் ஆன்மாவுந் தம்முள் வேறுதல் வெளிப்படையாயினும் மலநிவிர்த்திப்பொருட்டு வேதத்தில் அத்துவித பாவனை கூறப்பட்டது. அதுகொண்டுதானே நிருபசரித ஐக்கியங் கூறுதல் சாலாது என்பது" என்று அங்ஙனஞ் சதுர்வேததாற்பரியசங்கிரகத்து ஓதியவாற்றான் அறிக.

### எண் குண முடைமை.

இனிச், சிவபிரானுக்குச் சருவஞ்ஞத்துவம் முதலிய எண்குணமுடைமை சொரூப இயல்பு எனப்படுஞ் சிவத்துவமாம். இவ்வெண்குண சொரூப சிவத்துவப் பேறே முத்திநிலையில் ஆன்மாவிற்கு ஆன்மலாபம் எனப்படுஞ் சாயுச்சியப் பெரும் பேறும். சிவபிரான் எண்குணமுடையனாதல் ‡"கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்—றாளை வணங்காத் தலை" எனவும், ¶"எட்டு வான்குணத்தீசனெம்மான்றனை" எனவும், §"இறையவனை மறையவனை யெண்குணத்தி னானை" எனவுங் கூறிய திருவாக்குக்களான் அறிக.

அற்றேல், சிவபிரான் எண்குண சொரூபனாயின் அவன்றன்னை "நிர்க்குணன்" "குணாதீதன்" என்று வேதாகமங்கள் ஓதுதல் பொருந்தாதால் எனின், வேதாகமங்கள் பரமான்மாவை "நிர்க்குணன்" "குணாதீதன்" என்று ஓதியது, சாத்துவிக இராசத தாமதம் என்னும் மாயாகுணங்கள் இல்லாதவன் என்னுங் கருத்துப்பற்றி அல்லது முற்றறிவு முதலிய சிற்குணங்கள் இல்லாதவன் என்னுங் கருத்துப்பற்றி அன்று ஆகலின் அது பொருந்துவதாம்; மற்

* பிரமாகம் - பிரமம் நான். † சிவோகம் - சிவன் நான். ‡ திருக்குறள். க.
¶ திருநாவுக்கரசுநாயனார் தேவாரம். § சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம் திருக்கானாட்டுமுள்ளூர். ரு. இரும்புயர்ந்த.

றுப் பொருந்தாமை யாண்டையது என்க. இச்சிற்குணங்களும் இல்லா இயல்பே அவனுக்குச் சொரூபம் எனின், சத்தாகை சித்தாகை ஆனந்தரூபமாகையுஞ் சருவஞ்ஞத்துவம் முதலியவற்றை அகப்படுத்து நிற்குஞ் சிற்குணங்கள் ஆகலின், பரப்பிரமப் பொருள் அவற்றை இலக்கணமாக உடைத்து என்றலுஞ் சொரூப இயல்பு ஆகாதாம். அதுவேயு மன்றி அங்ஙனம் வேண்டுவார் பிரமப்பொருள் ஓரியல்பும் இல்லா வெறும்பாழ் என்றாராய் நிரீச்சுரவாதிகட்குச் சகபாடிகளாயும் ஒழிவர் என்க. எண்குணங்களாவன, சருவஞ்ஞத்துவம், திருத்தி, அநாதிபோதம், சுவதந்திரம், அலுத்தசத்தி, அனந்தசத்தி, நிராமயான்மா, விசுத்ததேகம் என்பனவாம். திருத்தி எனினும் பூர்த்தி எனினும் ஒக்கும். அநாதிபோதம் அநாதிமுத்தத்துவம் எனவும் வழங்கப்படும். இவையே இறைவற்குச் சிவத்துவம் எனப்படும் எண்குணமாமாறு "சருவஞ்ஞதா" என்பதை முதலாக உடைய சருவஞ்ஞானோத்தராகம வசனத்தான் அறிக. இவ்வெண்குணங்களுள், நிராமயான்மாவை அநாதிபோதத்தினும், விசுத்ததேகத்தினை அலுத்தசத்தியினும் அடக்கி அறுகுணங்களாகவும் ஓதுப. இவ்வறுகுணங்கள் சத்து சித்து ஆனந்தம் என மூன்றாய் அடங்குமாறும் ஓர்ந்து உணர்க.

பரப்பிரமத்தை மலம்பந்தியாதெனல்.

இனி. நின்மலமான பரப்பிரமப்பொருள் அவிச்சையாற் கட்டுண்டு சீவான்மா என நின்று, "பிரமாகம்" பாவனை பேணி, மறித்தும் பிரமமாம் எனின், நின்மலமான பிரமப்பொருளை அவிச்சையான மலங் கட்டுறுத்தமாட்டாது. கட்டுறுத்தும் எனின், நின்மல பரப்பிரமப் பொருளாமாறு இல்லை. அன்றியும் சீவற்கு வீடுபேறு உளதாயவழியும் அஃது அதனைக் கட்டுறுத்தும் எனப்பட்டு வீடுபேறு என்பது போலியாய் முடியும் என்க.

அற்றேல், நிராலம்பஞ் சருவசாரம் முதலிய ஒருசார் உபநிடதங்கள் அங்ஙனம் ஓதியவாறு என்னை? எனின், சுவேதாச்சுவதரம் முதலிய சைவோபநிடதங்கள் சீவான்மாப் பிரமம் போல அநாதிநித்தியப்பொருள் என்றும், அப்பிரமந் தனக்கு அந்தரியாமியாயும் வியாபியாயும் நின்று உபகரிக்க அநாதிமல வினைக்கிடாகப் பிறப்பு இறப்பு உற்று வினைப்போகம் புசிக்கும் முறையின் மலபரிபாகம் எய்திப் பரமசிவன் திருவருளுற்றுக் கட்டு நீங்கி முற்றறிவு எய்தி மெய்யுணர்ந்து மல வாசனையும் நீங்கிச் சிவபரப்பிரமப் பொருளோடு அத்துவிதமாய் நின்று முடிவு காண்கில்லாப் பேரின்பத்தினை நுகராநிற்கும் என்றும், எடுத்து ஒருதலைப்படுத்து ஓதுதலின், நிராலம்பஞ் சருவசாரம் முதலிய உபநிடதங்களிற் பிரம சத்தத்தால் எடுத்து ஓதப்பட்ட சித்துப், பரசித்தான பரப்பிரமம் அன்று. அபரசித்தான ஆன்மாவே அவிச்சையாற் பந்தமுற்றுச் சாதக முறையிற் பிரமோபாசனை பேணிப் பிரமமாம் என்று அவ்வுபநிடதங்களால் அங்ஙனம் ஓதப்பட்டது. இங்ஙனமாகலின், அவ் வுபநிடதங்களுஞ் சைவாகமங்களுந் திராவிடவேதங்களுந் தம்முள் அரணுற்று நடப்பன அன்றி முரணுற்றுக் கிடப்பன அல்ல என்று நுண்ணுணர்வான் நோக்கி உணர்ந்து கொள்க.

ஆன்மாவை உபசாரமாகப் பிரமசத்தத்தால் ஓதல் அமையும் எனல்.

அற்றேல், அஃதாக அபரசித்தான ஆன்மாவைப் பரசித்தினுக்கு உரிய பிரமசத்தத்தால் அவை எடுத்து ஓதுதல் சாலுமோ எனின், பரசித்தான பரப்பிரமம் அபரசித்தான ஆன்மாவுக்கு அந்தரியாமியாய் அதுவே தானாய் நின்று உபகரித்தலின், அவ்வொற்றுமை பற்றிப் பரப்பிரம நாமத்தாற் சீவான்மாவை அங்ஙனம் அவை உபசரித்து வழங்கினவாகலின், அது சால்பேயாம் என்க. கீதாசாரியனாகிய கண்ணன் பரப்பிரமமான சிவன் அருட்பெற்றியைச் சிவோகம்பாவனை ஒற்றுமைபற்றி "நானே சடசித்தெல்லாம் ஆனேன்" என்று தன்பெற்றியாகக் கொண்டு கூறியதூஉம் இதற்குச் சான்றாம் என்க.



## உடல்பொருளாவிகள் சிவனுடைமை.

இனி, உடல் பொருள் ஆவி மூன்றும் ஞானதீக்கையின் முதல்வனுக்கு எனத் தானஞ்செய்து அளித்தலான் முன்செயற்கையால் தன்னுடைமையாய் நின்ற இம்மூன்றுந் தானஞ் செய்த பின்னர்த் தனக்கு இன்றிச் சிவனுக்கு உடைமையாயவாறு பெற்றாம். பெறவே, ஆண்டுப் பொருள் என்றது உடம்புபோல் ஒற்றுமை உடைத்தாய்த் தன்னால் நுகரக் கிடந்த உடல்வினையே அன்றி முன்பே தன்னால் துறக்கப்பட்டு ஒழிந்த புறப்பொருள் அன்று என்பது தாமே போதருதலானும், அவ்வாறன்றி ஆண்டுப் பொருள் என்றது எல்லாவற்றிற்கும் பொது எனக் கொள்ளினும் உடல்வினையும் அவற்றுள் அடங்குதலானும் அங்ஙனம் முதல்வனுக்கென்று ஈந்த உடல்வினையை மீளவுந் தான் நுகரக் கருதுவோன் அவ்வாறு தானஞ்செய்து அளித்த ஆன்மாவை மீளவுஞ் சுதந்திரனாகக் கருதுஞ் சிவசமவாதியோடு ஒப்பவனாம் ஆகலின் முதல்வனுக்கென்று அளித்த பொருளைத் தான் நுகரக் கருதுதல் பெரியோர் இழுக்காதல் அறிக.

இன்னுந் தன் உடம்பே தனக்கின்றி முதல்வனுக்கு உடைமையாக ஈந்த வழி அவ்வுடம்பு இடமாக வரும் வினைப்பயனைத் தான் நுகர்தற்கு உரிமையின்மை அறிக. இன்னுந் தானே தனக்குச் சுதந்திரமின்றிச் சிவனுக்கு உடைமையாயவழித் தான் மற்றொன்றனை நுகருமாறு யாண்டையது என்க. தன்னால் அளிக்கப்பட்ட பொருள் மூன்றும் முதல்வன் ஏன்றுகொண்டான் என்பது *"அன்றே யென்ற னாவியும்" எனவும், †"உடலிடங் கொண்டா யினியுன்னை" எனவும், ‡"உடலிடங் கொண்டா யானிதற்கு" எனவும், ¶"ஏன்றவுடற்கன்ம" எனவும், § "ஏன்றவுடற் பழவினைகள்" எனவும், 0 "ஏன்றவினை" எனவும், "ஏன்றுகொண்டா யென்னை" எனவும், **"நாமொழிந்து சிவமான" எனவும் ஓதியவாற்றான் அறிக.



* திருவாசகம், குழைத்தபத்து. எ. † மேற்படி, கோயிற்றிருப்பதிகம். ரு. குறையிலா. ‡ மேற்படி. க0. தந்ததுன்றன்னை. ¶ சிற்றம்பலநாடிகள், சாத்திரக்கொத்து. வெண்பா. ருஉ. § சிவப்பிரகாசம், உண்மை. க0. கு. க0. எல்லையில். 0 திருவருட்பயன். [illegible]

## மாயாவாதிமதமறுதலை.

இனி, ஏகான்மவாதிகளுள் ஒருசாராரான மாயாவாதிகள், மாயையாவது மெய்ப்பொருள் என்றுஞ் சொல்லப்படாது, பொய்ப்பொருள் என்றுஞ் சொல்லப்படாது, அநிருவசனமாய் நிற்பது ஒன்று எனவும், அற்றாகலினன்றே மாயை எனப் பெயர் பெற்றது எனவும், அத்தன்மைத்தாகிய மாயையிற் சித்தாகிய பரப்பிரமங் கண்ணாடியின் நிழல்போல அத்தியாசமாய்த் தோன்றும் எனவும், அங்ஙனந் தோன்றியவழிப் பேய்த்தேர் நீராகவுங் கயிறு பாம்பாகவுந் திரிவுகாட்சியாற் காணப்படுமாறுபோல அத்தோற்றம் மண் புனல் அனல் கால் முதலிய பிரபஞ்சமாய்க் காணப்படும் எனவும், இங்ஙனமாகலிற் சித்தினுடைய விவர்த்தனமே சகம் எனவுங் கூறுவர்.

மெய்ப்பொருளும் அன்றிப் பொய்ப்பொருளும் அன்றி நிற்பது ஒன்று உண்டு என்று எடுத்துக் காட்டுதற்கு ஒரு பொருள் இன்மையின், வழியளவைக்கு ஏலாமையான், வழி அளவைக்கு ஏலாது ஆகவே உரை அளவைக்கும் ஏலாதாகலானும், பேய்த்தேரிற் றோன்றும் நீர் மாத்திரையே அசத்தியமாவதன்றி உள்பொருளாய்த் தோன்றுவதாகிய பேய்த்தேர் அநிருவசனம் ஆகாமையின் அஃது ஆண்டைக்கு எடுத்துக் காட்டாதல் செல்லாமையானும், மாயை அநிருவசனம் என்பது ஒரு சமயத்தார்க்குங் கொள்கை அன்மையானும், அஃது ஒன்றாக வைத்து மறுக்கற்பாற் றன்று என்று ஒழிக.

அல்லதூஉம், விவர்த்தனவாதிகள் ஒன்று பிறிதொன்றுபோலத் தோன்றுதல் விவர்த்தனம் என்பர். அஃது அசத்தியமேயாம். பிரபஞ்சஞ் சத்தியம் என்பது காட்சி முதலிய எல்லா அளவைகளானுந் துணியப்படுதலின், அத்தன்மைத்தாகிய பிரபஞ்சஞ் சித்தினுடைய விவர்த்தனமாமாறு யாண்டையது என்க. இதனானும் மாயை அநிருவசனம் அன்று என்பது தெற்றென உணர்க. என்னை? மாயை அநிருவசனமாயின், அதன் காரியமாகிய பிரபஞ்சஞ் சூனியமாதல் வேண்டும் ஆகலான் என்பது.

அந்நேரல், பிரபஞ்சஞ் சத்தியம் என்றற்குப் பிரமாணம் என்னை? காட்சியே பிரமாணம் எனின்,—அற்றன்று; காட்சியானே நிகழ்காலத்துப் பிரபஞ்சஞ் சத்தியம் என்று உணரப்படுமாயினும் முக்காலத்தினும் ஒருதன்மைத்தாகிய சத்தியப்பொருள் பிரபஞ்சம் என்பது அதனால் உணரப்படாமையின். அன்றியுங் காட்சியளவையான் இது குடம் இஃது ஆடை என விதி முகத்தாற் காணப்படுவதன்றி, இஃது ஆடை அன்று இது குடம் அன்று என மறுதலைமுகத்தாற் காணப்படாமையின், அன்மையாதல் உணர்ந்தன்றிப் பேதந் தோன்றாமையின், பேதப் பிரபஞ்சம் உண்மைக்குக் காட்சியளவை பிரமாணம் அன்று.

அந்நேரல், ஆடை குடத்தின் வேறு குடம் ஆடையின் வேறு என்னுங் காட்சி எல்லார்க்கும் ஒப்ப முடிந்ததாகலிற் பேதப் பிரபஞ்ச உண்மைக்குக் காட்சியளவை பிரமாணம் அன்று என்றல் பொருந்தாது எனின்,—அற்றன்று; அத்தன்மைத்தாகிய காட்சி சவிகற்பமாகலின், சவிகற்பமெல்லாம் மயக்கமாகலான் என்க. பேதப் பிரபஞ்ச உண்மைக்குக் காட்சியளவை பிரமா

ணம் இன்றாகவே, அவினாபாவமாகிய ஏது உணர்தற்கு இடமின்மையின், வழியளவை பிரமாணம் அன்று. அவ்விரண்டிற்கும் மாறுபாடாகிய பொருளின் ஆகம அளவையும் பிரமாணம் ஆகாது என்க.

இன்னும், இஃது இதனின் வேறு என்னுஞ் சவிகற்பக்காட்சி பிரமாணம் என்பார்க்கும் அபேத உணர்வு நிகழ்ந்தன்றிப் பேத உணர்ச்சி நிகழாது; எய்தியதற்கன்றி விலக்கின்மையின். அங்ஙனமாகவே, முற்படத் தோன்றும் அபேத உணர்ச்சி பிரமாணம் என்பது ஒருதலையாகக் கோடல் வேண்டும். வேண்டவே, பிற்படத் தோன்றும் பேத உணர்ச்சி அதனை அவாய்நிற்றலின் பிரமாண மாகாமை அறிக. அபேத உணர்ச்சி காட்சியளவையானே பெறப்படுதலின் குடம் ஆடையின் வேறன்று, திரவியமாகலால்; ஆடைபோலும். என்னும் அனுமானமும், வேற்றுமை இன்றிக் கூறும் வேதவாக்கியங்களும், அதற்குப் பிரமாணமாம் என்க. ஆகவே, வான் வளி தீ நீர் முதலியனவாக நீ வேற்றுமைபடக் கூறும் வாக்கியங்கள் எல்லாம் இவ்வளவைகளோடு முரணுதலின், உபசாரமே அன்றிப் பொருள்படா என்பது கண்டுகொள்க.

இங்ஙனம் பேத உணர்ச்சிக்குப் பிரமாணம் இன்மையிற் பேதப் பிரபஞ்சமாகிய பிரமேயம் இன்மையுந் தானே போதரும். அவ்விரண்டும் உள எனக் கொள்ளினும், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்தம் என்னை? தாதான்மியமோ? காரணகாரியத்தன்மையோ? சையோகமோ? சமவாயமோ? வேறொன்றோ? எனக் கடாயினார்க்குத், தாதான்மியமாவது ஒன்றுதானே ஒருவாற்றான் இருவகைப்பட்டுப் பிரிப்பின்றி நிற்றற்கு உரித்தாதல் ஆகலின். அத்தன்மைத்தாகிய தாதான்மிய சம்பந்தங் குடஞானத்திற்குங் குடத்திற்கும் உண்டு எனின்,—குடஞானம் போலக் குடமும் அகத்தின்கண் உளதாதல் வேண்டும். குடம் புறத்தின்கண்ணதாகலுங் குடஞானம் அகத்தின்கண்ணதாதலும் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தமையின், அவற்றிற்குத் தாதான்மியங் கூறல் பொருந்தாமையானும், காரண காரியத் தன்மையே சம்பந்தம் எனின்,—காரணகாரியங்களில் ஒன்று உள்வழி ஒன்று இன்றாதல் பொருந்தாமையின், கனவின்கட் குடஞானம் முதலிய உணர்வு உண்மையின், குடம் முதலியனவும் ஆண்டு உளவாதல் வேண்டும். அஃது இன்மையானும், விடயமும் விடயிப்பதுமாந் தன்மை சம்பந்தம் எனின்,—விடயமாவது இது என்று அறியவாராமையானும், சம்பந்தமே பெறப்படாமையின், பேதப் பிரபஞ்சம் பிரமிதிக்குப் புலனாகாமையானும், பிரபஞ்சம் அசத்தியப் பொருளே ஆகலான், அவற்றிற்குக் காரணமாகிய மாயை அநிருவசனம் என்றல் பொருத்தமுடைத்து என்று, இங்ஙனம் மாயாவாதிகள் கடாவிடைகளாற் சாதிப்பார் ஆகலின், ஆண்டு இழுக்கு என்னை? எனின்,—கூறுதும்.

பிரபஞ்சஞ் சத்தியப்பொருள் என்பதற்குக் காட்சியளவையே பிரமாணமாம். கயிற்றை அரவு எனக் காணுந் திரிவுகாட்சியிற் போல மாசறுகாட்சியின் வேறுபடுதல் இன்மையின், நிகழ்காலத்திற் கண்டது முக்காலத்தினும் ஒக்கும் ஆகலானும், நிருவிகற்பக் காட்சியின் விதிமுகத்தாற் பேதம் அறியப்படாதாயினுங் குற்றியோ மகனோ என்னும் ஐயத்தின் பின்னர் இது குற்றியே மகனன்று என [illegible]

ப்படுதலானும், திரிவுகாட்சியிற் கயிறு பாம்பு போலவும் மாலை போலவும் ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு காலத்தில் தோன்றும்; அதுபோலன்றி மாசறு காட்சியின் எல்லார்க்கும் எக்காலத்துங் குடங் குடமேயாய்த் தோன்றுவதல்லது வேறுபடத் தோன்றாமையிற் சவிகற்பக் காட்சி பிரமாணமே ஆகலானும், அன்றியுங் கயிற்றுக்கும் அரவிற்குங் கோணி நீண்டு கிடத்தல் முதலிய இலக்கண ஒப்புமையான் ஆண்டு ஒன்றை ஒன்றாகத் திரியக் காண்டல் பொருந்தும்; அதுபோலச், சித்தாகிய பிரமத்தைக் குடம் முதலிய பொருளாகத் திரியக்காண்டற்குத் தம்முள் ஒப்புமை இன்மையின் அதனையும் அவ்வாறு திரிவுகாட்சி என்றல் பொருந்தாமையானும், சவிகற்பக் காட்சிக்கும் நிருவிகற்பக் காட்சி காரணமாகலிற் காரணத்து உள்ளதே காரியத்தினும் உண்மையாற் பெயர் சாதி குணம் முதலிய பேத உணர்ச்சி நிருவிகற்பக் காட்சியின் இன்றாயில் சவிகற்பக்காட்சியினும் இன்றாய் முடியுமாகலின், நிருவிகற்பக் காட்சியினுஞ் சூக்குமமாய்ப் பேதந் தோன்றும் ஆகலானும், அதுபற்றி எய்தியதற்கே விலக்காகலின் பேதம் உணர்ந்தன்றிப் பேதமின்மை உணர்தல் கூடாமையின் அபேத ஞானமும் பேத ஞானத்தை அவாவி நிற்றலின், அபேத ஞானம் முற்படத் தோன்றுதல் பற்றிப் பிரமாணம் என்றல் பொருந்தாமையானும், ஆடை குடத்திற்கு வேறு என்றற்றொடக்கத்துப் பேத உணர்ச்சி முக்காலத்தினும் வேறுபடாமையின், ஆடை குடத்தின் வேறன்று என்றற்றொடக்கத்து அபேத உணர்ச்சி எதிர்காலத்தின் வேறுபடுதலின், வேறுபடாமையும் வேறுபடுதலும் பற்றியே பிரமாணம் என்றும் அப்பிரமாணம் என்றுங் கோடல் பொருத்தமுடைத்து ஆகலானும், காட்சியளவையே பேத உணர்ச்சிக்குப் பிரமாணமாதல் அறிக. ஆகவே, அபேதஞ் சாதித்தற்கு முற்கூறிய அனுமானமும் போலியாயவாறு காண்க. அங்ஙனம் அல்லாக்கால், அவ்வனுமானத்தானே ஆடை எடுக்கச் சென்றான் குடத்தை எடுத்து வருதல் வேண்டும் என்று ஒழிக. இதனானே அபேதங் கூறும் ஆகமங்களும் உபசாரம் என்பது கண்டு கொள்க.

இன்னும், பிரபஞ்சம் மித்தை எனத் துணிவதற்குக் கொண்ட பிரமாணம் மெய்யோ? பொய்யோ? எனக் கடாயினார்க்கு மெய் எனிற் பிரபஞ்சத்துட்பட்ட பிரமாணம் மெய் எனவே அம்முறையாற் பிரபஞ்சமும் மெய்யேயாம். பொய் எனிற் பொய் பிரமாணம் ஆகாமையிற் பிரபஞ்சம் மெய்ப்பொருள் என்பது தானே போதரும்.

அற்றேல், பிரமிதிக்கும் பிரமேயத்திற்குஞ் சம்பந்தம் என்னை? எனின்,—அறியப்படுவதும் அறிவதும் ஆகிய விடய விடயித் தன்மையே சம்பந்தமென்று உணர்க. விடயவிடயித்தன்மை சம்பந்தமன்று என்பையாயின், நீ பிரபஞ்சம் மித்தை என்று உணரும் உணர்விற்கு அது விடயமாகாமையிற் பிரபஞ்சம் மித்தை அன்று எனப்பட்டு உனக்கே வழுவாம் என்று ஒழிக.

அற்றேல், விடயமாவது யாது? எனின்,—எவ்வுணர்வு நிகழ்ந்துழி எப்பொருள் விளங்கும் அஃது அதற்கு விடயம் என்க. விளங்குதல் விளங்குதற்கு உரிமையாதல். ஆகவே, இங்ஙனங் கூறியவாற்றால் பிரமாணமுஞ் சம்பந்த

ரும் உண்மையின் பிரமேயமாகிய பிரபஞ்சம் மெய்ப்பொருளே ஆகலான் அத ற்கு முதற்காரணமாகிய மாயையும் மெய்ப்பொருளாவதன்றி அநிருவசனமா தல் பொருந்தாமை அறிக.

இனி, வேதத்துள் ஓரிடத்தும் பிரமப்பொருளை "உபாதானம்" என்னுஞ் சொல்லால் எடுத்தோதக் காணுமையால், பிரமம் பிரபஞ்சத்திற்குப் பரமாதார வியாபக நிமித்தம் என்பதே வேதத்துக்கும் கருத்தாம் என்க. இன்னும், அவ் வம் முதற்காரணங்களின் குணமெல்லாம் அவ்வக்காரியங்கட்கும் உள என்பது நியமமாதலின், சித்தாகிய பிரமத்தில் தோன்றிய பிரபஞ்சமும் சித்தாதல் வே ண்டும் அன்றிச் சடமாதல் பொருந்தாது என்க.

அற்றேல், பாலில் உண்டாகிய தயிருக்குப் பாலின் குணமும் நெல்லில் உண்டாகிய பதர் பலாலங்கட்கு நெல்லின் குணமும் கொம்பில் உண்டாகிய புல்லுக்குக் கொம்பின் குணமும் சிலம்பியில் உண்டாகிய நூலுக்குச் சிலம்பி யின் குணமுங் கோமயத்தில் உண்டாகிய தேளுக்குக் கோமயத்தின் குண முங் காணுமையின், காரணத்தின் குணமே காரியத்திற்குங் கோடும் என்னும் நியமம் பொருந்தாதால் எனின்,—அற்றன்று; ஒன்றன் குணம் ஒன்றற்காதல் இன்மையின், காரணத்தின் குணமே காரியத்திற்கும் என்பதற்குத் தாற்பரி யம், காரணத்தின் குணங்களோடு ஒத்த குணங்களே காரியத்திற்கு உளவா தல் அன்றி அவற்றிற்கு மறுதலையான குணங்கள் உளவாகா என்பதேயாம் ஆகலான், ஈண்டு எடுத்துக்காட்டியவற்றுள் நியமத்துக்கு இழுக்கின்மை அறிக. சிலம்பியில் நூல் வருதற்குச் சூக்கும காரணஞ் சிலம்பி வயிற்றின் உண்மை யானுங் கோமயத்தில் தோன்றியது தேளின் உடம்பே ஆகலானும், இன்னோ ரன்னவை எல்லாம் பிறவிப்பேதம் ஆகலானும், ஆண்டு ஐயப்பாடின்மைகண்டு கொள்க.

ஈண்டுக் கூறியவாற்றான் மாயையே பிரபஞ்சத்திற்கு முதற்காரணம் என் பதூஉம், அதற்குத் தாரகமாய் விரவி நின்று அதிட்டித்தலான் முதல்வன் நிமி த்தகாரணமே ஆவன் என்பதூஉம் துணிபொருளாயினமை காண்க. "மாயை யான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய் நின்று முதல்வனும் முதற்காரணமாம்" என்ற நீலகண்ட ஆசிரியரும் பரந்து சென்று முடிவின்கண் இவ்வாறு கோட லே சித்தாந்தமாக வலியுறுத்தினார். அது, சென்மாதிகரணத்து இறுதியிற் சிவாதித்தியமணிதீபிகையினுங் காண்க.

அற்றேல், "பிரமத்தை உணர்ந்தோன் எல்லாம் உணர்ந்தோன்" என்றற் றொடக்கத்து வேதவசனங்கள் பயப்பாடிலவாம் எனின்,—உடையான் இயல்பு உணர்ந்தவழி, உடைப்பொருளான உயிர் மாயை கன்மங்களும் அவ்விலக்கண த்துள் அகப்பட்டு வியாப்பியமாய் நிற்றலின், அவையும் இனிது விளங்கும் என்பது அவற்றிற்குப் பொருளாதலின், பயப்பாடுடையனவேயாம் என்க.

நான்மணிமாலையில், *"துரையுந் திரையு நொய்புறு கொட்பும்—வரைவில் சீகர வாரியுங் குரைகடற்—பெருத்துஞ் சிறுத்தும் பிறங்குவ தோன்றி—

* பதினொராந்திருமுறை, கோயினான்மணிமாலை. உச. ஆனெனப். உரு முதல் ௬க-ம் அடி வரை.

யெண்ணில வாகி யிருங்கட லடங்குந்—தன்மை போலச் சராசர மனைத்து—நின்னிடைத் தோன்றி நின்னிடை யொடுங்கும்" என்றது, முதல்வன் மாயைக்கு ஆதாரமாய் நிற்றல்பற்றி ஆகலின், ஆண்டு ஐயப்பாடின்மை அறிக. இது கிழங்கினின்றுந் தோன்றுந் தாமரையைப் பங்கசம் என்பது போல்வதோர் உபசாரவழக்கு எனக் கொள்க. மாயைக்குத் தாரகமாய் நிற்றல் பற்றியே அவ்வாறு உரைத்தது என்பது உணர்ந்துகோடற்கே, நீரிற்றோன்றி ஒடுங்கும் நுரைமுதலியவற்றை நீர்க்கு இடனாகிய கடலில் தோன்றி ஒடுங்குதல்போல் என்று உவமை கூறினர் என்க. கடல் என்றது - நீர்க்கு இடங்கொடுத்து நிற்கும் ஆகாயம். நின்றதிருத்தாண்டகத்தும் பிறண்டும் *"இருநிலனாய்த் தீயாகி ** எம்மடிக ணின்ற வாறே" என்பது முதலாகஎழுந்த தமிழ்வேதத் திருவாக்குக்களும், †"அறிவானுந் தானே யறிவிப்பான் றானே—யறிவா யறிகின்றான் றானே—யறிகின்ற மெய்ப்பொருளுந் தானே விரிபொழில்பா ராகாய—மப்பொருளுந் தானே யவன்" என்னும் அம்மை திருவாக்கும், ‡"உலகெலா மாகி வேறா யுடனுமாய்" முதல்வன் நிற்றல்பற்றி ஆகலின், ஆண்டு ஆசங்கை இன்மையுங் கண்டுகொள்க. இதனானே, அபேதங்கூறும் வசனங்களும் உபசாரமே அன்றி உண்மையன்று என்பது கண்டுகொள்க.

இவ்வாறன்றி, முதல்வன் மாயைபோல முதற்காரணமாவன் எனின்,—அது மேற்கூறிய குற்றங்கட்கு இடனாதல் அன்றியும் "நிருவிகாரி" என்னுஞ் சுருதிகளோடு முரணுதலும் உடைத்து என்க. இங்ஙனங் கூறியவாற்றால், ¶"காரிய கார ணங்கண் முதறுணை நிமித்தங் கண்டாம்—பாரின்மண் டிரிகை பண்ணு மவன்முத றுணைநி மித்தந்—தேரின்மண் மாயை யாகத் திரிகைதன் சத்தி யாக—வாரியன் குலால னாய்நின் றாக்குவ னகில மெல்லாம்" என்னும் அத்துவித சைவசித்தாந்த வழக்கே சுருதி யுத்தி அனுபவம் மூன்றற்கும் ஏற்றதாய் அகரமுதல என்னுந் திருக்குறட் பொருளை வலியுறுத்தற்கு உரிய மெய்ப்பிரசங்கமாம் என்று அறிந்து கொள்க.

அற்றேல், அஃது அங்ஙனமாக; நிமித்தகாரணனாகிய முதல்வன் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாவனாயின், உவமப்பொருளாகிய குயவனும் மண்ணுக்கு ஆதாரமாதல் வேண்டுமால் எனின்,—அறியாது கடாயினாய். உவமமெல்லாம் ஒருபுடை ஒத்தலே அன்றி முழுவதும் ஒத்தல் இன்று. முழுவதும் ஒக்கும் என்பாரை முதல்வனுக்கு உரிய வியாபகம் முதலிய குணங்களுங் குயவனுக்கும் உளவாதல் வேண்டும் எனக் கடாயினார்க்கு விடை என்னை எனக் கூறி மறுக்க. ஒருபுடை ஒத்தலானன்றே ஒருபொருளுக்கு ஓரோரியல்பு பற்றி, வேறு வேறு உவமை கூறியதூஉம் என்க.

அற்றேல், இவ்வியல்பிற்கு உவமை யாதோ எனின்,— நன்றே கடாயினாய். குழவி உடம்பின் முதற்காரணமாகிய உதிர சுக்கிலங்களுக்கு ஆதாரம் அதற்கு நிமித்தகாரணமாகிய தாய் தந்தை ஆதலுஞ் சிலம்பிநூலின் முதற்கா

* திருநாவுக்கரசுநாயனார், திருத்தாண்டகம், பொது. கூ-ம் திருமுறை. க. † பதினோராந்திருமுறை, அற்புதத்திருவந்தாதி. உ0. ‡ சிவஞானசித்தி. உ-ம் சூ. க. ¶ மேற்படி. க-ம் சூ. கஅ.

ரணத்துக்கு ஆதாரம் அதற்கு நிமித்தகாரணமாகிய சிலம்பி ஆதலும் அறிந்தாயன்றே! இவ்வாறு பலவுள எனக் கொள்க. பிரம*விவர்த்தன அபேதவாத நிராகரணம் ஆசிரியர் சிவஞானயோகிகள், சிவஞான மாபாடியத்து விரித்துரைத்தருளினர்.

ஆதிபகவானாகிய முதல்வன் எள்ளின் நெய்போலப் பசு பாசங்களிற் கலந்து நீக்கமற ஔபச்சிலேடிக வியாபகமாய் நிற்கும் இயல்பினனாதலின், அவன் பிரபஞ்ச காரியம் இயற்றாது இயற்றுதற்குக் குலாலனை அங்ஙனம் உவமையாகக் கூறுதல் கருத்தாவாதன் மாத்திரைக்கே அன்றி வேறில்லை என்பது தெரிந்துகொள்க. இயற்றாது இயற்றுதலாவது - கரணத்தான் அன்றிச் சங்கற்ப மாத்திரையாற் செய்தலாம். மற்றுக் குலாலன் சங்கற்பத்தான் அன்றிக் கரணத்தாற் காரியஞ் செய்யும் வினைமுதல் ஆகலின் சங்கற்பத்தாற் காரியஞ் செய்யும் ஆதிபகவனுக்குக் கருத்தாமுறையினுஞ் சிறிது ஒப்புப்பற்றியே உவமம் ஆகின்றானென்று உணர்க. ஈண்டுச் சங்கற்பம் என்றது—வியாபக சிற்சத்தி சன்னிதிப் பிரேரகத்தினை. கர்த்திருத்துவம் அங்ஙனம் இருவகையாமாறு 𑌕𑌰𑍍𑌤𑍃𑌤𑍍𑌵𑌂 𑌦𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑌂 𑌵𑌿𑌪𑍍𑌰 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌾𑌤𑍍 𑌕𑌾𑌰𑌣𑌾𑌤𑍍 𑌤𑌥𑌾। 𑌨𑌹𑌿 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌕𑌾𑌰𑍍𑌯𑌮𑍇𑌵 𑌕𑍍𑌰𑌿𑌯𑌤𑍇 𑌵𑌟𑍁𑌃॥ 𑌶𑌿𑌵 𑌸𑌙𑍍𑌕𑌲𑍍𑌪𑌮𑌾𑌤𑍍𑌰𑍇𑌣 𑌸𑍍𑌵𑌿𑌨𑍍𑌦𑍁𑌕𑍍𑌷𑍋𑌭𑌕𑌰𑌃 𑌸𑌦𑌾। என்னும் பௌட்கராகம வசனத்தான் அறிக.

இறைவன் எள்ளின் நெய்போலப் பசு பாசங்களிற் கலந்து நீக்கமற ஔபச்சிலேடிக வியாபகமாய் நிறைந்து நிற்கும் என்னும் அத்துவித சைவ சித்தாந்த திருவசன உரையை, இக்காலத்து ஏகான்மவாதிகளுள் ஒருசாராருட்பட்டார் எள்ளில் நெய் கோது இடையுற்றுப் பிரிந்திருக்கக் காண்டலின், உவமேயமாம் முதல்வனும் ஒன்றன் இடையீடுற்றுப் பிரிந்து வியாபகமாகுங்கொல் என்று ஆசங்கை நிகழ்த்துவர். ஒரு பொருட்கு ஒரு பொருள் உவமமாதல் ஒருபுடையொத்தல் பற்றியே என்பது மேற்கூறினும் ஆகலின், அங்ஙனம் ஆசங்கித்தல் உவமை இலக்கணம் அறியார் கூற்றேயாம் என்று ஒழிக.

பசு பாசங்களில் முதல்வன் கலந்து நீக்கமற வியாபகமாய் நிற்றற்கு எள்ளில் நெய்யை உவமானமாகக் கூறுவது, நெய் எள்ளில் உள்ளும் புறம்புமாய்க் கலந்திருத்தல் பற்றியே அன்றிப் பிறிதில்லை என்க. இங்ஙனம் ஆசங்கிப்பார் ஆவிரம்பூப் பொன்னோடு ஒக்கும் என்றவழி அஃது உருக்கி அடித்து நீட்டவும்படுங்கொல் எனவும், இவள் நுதல் பிறைமதிபோலும் என்றவழிக் குறைதலும் வளர்தலும்வானூறியங்குதலும் என்னும் இவையும் இவள் நுதற்கு உளகொல் எனவும் ஆசங்கிப்பார் ஆகலின், அவை அவர் வெள்ளறிவு வியாபாரமாம் என்று ஒழிக்கப்படுவன அல்லது மறுத்தற்கு ஏற்பன அல்ல என்று அறிக. ஈண்டுக் குறைதல் மறைதலும் வளர்தல் வெளியாதலும் ஆம்.

இன்னும் அவர், பசு பாசங்கள் மெய்ப்பொருள் என்பார் முதல்வன் வியாபகத்துக்கு நூனதை கூறுபவர் ஆவர். யாதினால் எனின்,—பசு பாசங்கள் உள்ள இடங்களில் முதல்வன் இருப்பு இடையறவுற்று அவன் வியாபகங்

* விவர்த்தனம் - மாறுபடக்காண்டல்.

குறைவுறுதலால் என்று இங்ஙனம் ஆசங்கை நிகழ்த்தாநிற்பர். இன்னோரன்ன ஆசங்கைகளை அவர் பிராகிருத அவயவ கண்டப் பொருட் பயிற்சியினான் நிகழ்த்துகின்றார். என்னை? அவயவமுடைய கண்டப்பொருள் அன்றி நிரவயவ அகண்ட சச்சிதானந்தப் பொருள் மற்றொன்றான் இடையறவுற்றுக் குறைவுறாது ஆதலான் என்க. ஆதிபகவனாகிய இறைவன் நிரவயவ அகண்ட சச்சிதானந்த முதற்பொருள் ஆகலின், அவன் அநாதியே தன்போல் நித்தியமாய்த் தனக்கு வியாப்பியமான சிதசித்துக்களில் யாண்டுங் கலந்து நீக்கமறத் தன் பூரணத்திற்கு நூனதை யாதும் இன்றி அவையேதானாய் நிற்கும் பெற்றியுடையனாம் என்க.

இனி, அப்பெற்றி உயிர்களால் இற்றெனை அறியவும் ஓதவும் வாராத சொரூபமாம். அற்றாகலினன்றே, சுருதிகளும் அவன் சொரூப இயல்பு "வாங்மனாதீதம்" என்றும் *"அநிர்த்தேசியம்" என்றும் அங்ஙனம் எடுத்து முறையிட்டு ஓய்ந்தன என்பது. †"மாற்றமனங் கழிய நின்ற மறையோனே" என்னுந் தமிழ்வேதமும் அக்கருத்தே பற்றி எழுந்தது. வளி தீ நீர் நிலம் என ஒன்றற்கொன்று தூலமாகி நிலைபெறும் பூதங்கள் நான்கிற்குஞ் சூக்கும பூதமான ஆகாயம் இடங்கொடுத்து வியாபகமாய் நிற்கும் பெற்றியே மக்கட்கு உற்றறிதற்கரிதாய நுண்பொருளாம். ஆனபின், நிரவயவ அகண்ட சத்தாயுஞ் சித்தாயும் ஆனந்தமாயும் நிற்கும் பரப்பிரம முதற்பொருள் பசு பாசங்களுக்கு அந்தரியாமியாயும் வியாபியாயும் பூரணமுற்று நிற்குஞ் சொரூப இயல்பை, மாயாதனுகரணங்களாற் கட்டுற்று அவற்றின் உபகாரத்தானுஞ் சுத்தமாயா நாத விருத்தி காரிய சத்த சமூகமான வேதமுதலிய கலையறிவு மின்மினி விளக்கத்தானுஞ் சிறிது அறிவு விளங்கி, அங்ஙனம் விளங்கிய சிற்றறிவு மாத்திரையானே, நாம் பிரமம் என்று தருக்கி, இறைவன் திருவருட்கு அயலாய்க் கேவலமுற்று உழலும் பசுபோதப் புல்லறிவுயிர்கள், நாம் அறிந்தாமென்று ஒருப்படுத்தலும், பசு பாசங்கள் மெய்ப்பொருளாயின் அவற்றின் இருப்பால் முதல்வன் வியாபகத்திற்கு இடையறவு முட்டுற்று நூனதை புகுதரும் என்று பாண்டித்தியம் போல அபிநயித்துக் குதர்க்கம் நிகழ்த்தலும், புல்லறிவு முதிர்ச்சியாவதல்லது மற்று யாதாம் என்க.



## ஓசைவேறுபாடு.

மலர்தலை உலகத்துச் செவிப்புலனாம் ஓசை எழுத்தோசை எனவும், இசையோசை எனவும் இருவகைப்படும். இவற்றுள், எழுத்தோசை விந்து முதற்காரணமாக அதனில் நின்றும் விருத்தியாய்த் தோன்றிச் செவிப்புலனாவது. இசையோசை ஆகாயம் முதற்காரணமாக அதன்கண் தோன்றிச் செவிப்புலனாவது. வடநூலார் எழுத்தோசையை வர்ணாத்மக சத்தம் என்றும், இசையோசையைத் தொனியாத்மக சத்தம் என்றுங் கூறுப. சத்ததன்மாத்திரையின் காரியமாகிய ஆகாயமே சத்தத்திற்கெல்லாங் காரணமாகலின், எழுத்தோசைக்கு வேறு காரணமாமாறு என்னை? எனின், அற்றன்று; ஆகா

* அநிர்த்தேசியம் - [illegible] † திருவாசகம் [illegible]

யம் எழுத்தோசையைப் புலப்படுத்துவதாகிய இசையோசைக்குக் காரண மாவது அன்றி அதனாற் புலப்படுவதாகிய எழுத்தோசைக்குக் காரணமாகாது என்க.

ஒளியும் உருவமும் போலப் புலப்படுப்பதும் புலப்படுவதும் ஆகிய இசை யோசைக்கும் எழுத்தோசைக்குந் தம்முள் வேற்றுமை அனுபவத்தின் வெளிப்படத் தோன்றுதலானும், கடலோசை முதலாயின எழுத்தோசையின் வேறுதல் எல்லார்க்கும் ஒப்ப முடிந்தது ஆகலானும், அவ்விரண்டன் காரணமும் வேறு என்பது துணியப்படும் என்க. இன்னும், அங்காப்பு முதலிய அக முயற்சியாற் புலப்படுவது எழுத்தோசை எனவும், அதனைப் புலப்படுப்பதாய் எடுத்தல் படுத்தல் முதலிய புறமுயற்சியாற் பிறப்பது இசையோசை எனவும், தம்முள் வேறுபாடு தெரிந்துணர்ந்துகொள்க.



## ஞாபகசத்தியுண்மை.

சத்தப்பிரபஞ்சம் அர்த்தப்பிரபஞ்சம் எனக் காரியம் இருவகைப்படும். இவை இரண்டுந் தம்முள் வேறுபாடுடைய வாயினும், சத்தம் என்னுஞ் சாதி யான் வேறுபாடு இன்மையானும், சத்தப்பிரபஞ்சம் அர்த்தப் பிரபஞ்சத்தைப் பற்றி அன்றி நில்லாமையானும், சுத்தமாயை ஒன்றுதானே சத்தரூபமும் அர்த்தரூபமுமாகிய இரண்டுதன்மையும் உடைத்தாய் அவ்விரண்டற்கும் முதற்காரணமாம் எனக் கொள்ளப்படும்.

இனிச், சொற்பொருள் உணர்த்துதற்கு அனுகூலமாகும் ஞாபகசத்திகளும் பொருள் காரியப்படுதற்கு உபகாரமாகுங் காரகசத்திகளும் அவ்விரண்டன்கண்ணுந் தாதான்மியத்தால் உளவாதல் அருத்தாபத்தி அளவையாற் கொள்ளப்படும்.

அற்றேல், எழுத்தான் இயன்ற பதங்களாதல், பதங்களான் இயன்றுஅவாய்நிலை தகுதி அண்மைகளான் எழுவாய் பயனிலை முதலியவாய்த் தொடர்ந்து நிற்கும் வாக்கியங்களாதல் அவ்வப்பொருள்களை அறிவுறுக்கும் எனவே கோடும்; அவ்வாறன்றி எழுத்தின் வேறாய்ப் பொருள்களை அறிவுறுக்குஞ் சத்திகள் உண்டு என்பதற்குப் பிரமாணம் இல்லையாலோவெனின், அற்றன்று; "கால்" என்புழிக் ககர ஆகார லகர எழுத்துக்களையன்றி அவற்றின் வேறாய்ப் பதமென்பது ஒன்றின்மையானும், அவ்வாறே "கால் கிடந்தது" என்புழி அப்பதங்களின் வேறாய் வாக்கியம் ஒன்றின்மையானும், எழுத்தின் வேறாய்ப் பதவாக்கியங்கள் பொருள் உணர்த்துவன அல்ல என்பது பெறப்படும். படவே, நையாயிகர் மதம்பற்றிக் ககர ஆகார லகர எழுத்துக்களே அப்பொருள் உணர்த்துமெனக் கோடல் வேண்டும். அங்ஙனங் கொள்வுழி, அவை ஒருங்குகூடிப் பொருளுணர்த்துமோ? ஒரோவொன்றே பொருளுணர்த்துமோ? எனக் கடாயினார்க்கு, ஓசை உணர்வு தொழில் மூன்றும் முக்கணப்பொழுதே நிலைபெறும் என்பது நையாயிகர் முதலியோர்க்கு உடம்பாடாகலின், முறையிற் பிறந்து நின்று கெடும் எழுத்துக்கள் ஒருங்குகூடி நின்று பொருளுணர்த்தும் என்பது கூடாமையின், ஒரோவொன்றே பொருளுணர்க்குமெனல்வேண்டும்.

"க" என்ற மாத்திரையானே "கம்பலம்" என்னும் பொருளுணர்த்தாமையானும், உணர்த்துமெனினுங் ககரம் ஒழிந்த வெழுத்துக்களை உச்சரித்தல் பயனிலவாய் முடியுமாகலானும், ஒன்றொன்றே பொருளுணர்த்தும் என்பது 'பொருந்தாமையின், எழுத்துப் பதவாக்கியங்களின் வேறாய்ப் பொருள் அறிவுறுப்பனவாகிய ஞாபகசத்திகள் உண்டென்பது கண்டுகொள்க. சத்தி எனினும் போடம் எனினும் ஆற்றல் எனினும் பொருந்தும்.

இவ்வாற்றாற் சொல்லாற் புலப்பட்டுப் பொருளறிவுறுக்கும் ஞாபகசத்திகள் சொற்றொறும் வெவ்வேறு உண்டெனவே கோடுமாயினும், "ஆ" ஆண்டு, என்றாற்போல்வன ஒன்றாய் நின்று வெவ்வேறு பொருளுணர்த்தக் காண்டலின், ஒரு சொற்சத்தியானே ஒருபொருளன்றிப் பலபொருள் உணரப்படுதலும் உண்டாங்கொலெனின், அற்றன்று; ஆ ஆண்டு என்றாற் போல்வன வெவ்வேறு பொருள் உணர்த்துதலின், ஒருசொல் எனப்படா; வெவ்வேறு சொற்களேயாமென்க. இனி வெவ்வேறு சொற்களாயினும், எழுத்து ஒப்புமையானே பலபொருளொருசொல் என்று அங்ஙனம் வழங்கப்பட்டன என்பது. இன்னும், ஆ என்பது பெற்றத்தினையும் மாவிசேடத்தினையும் உணர்த்தும்வழிப் பெயர்ச்சொல் எனவும், இரக்கக்குறிப்பினை உணர்த்தும்வழி இடைச்சொல் எனவும், ஆதற் புடைபெயர்ச்சியை உணர்த்தும்வழி உரிச்சொல் எனவுங் கொள்ளப்படுதலின், எழுத்தொப்புமைபற்றியே உபசாரத்தான் அவ்வாறு வழங்கப்பட்டன என்பது தெற்றென உணர்க.



## மாயைமுதற்காரணம்.

**மா** என்பது ஒடுங்குதல். யா என்பது வருதல் ஆகலின், எல்லாக்காரியங்களுந் தன்பால் வந்து ஒடுங்குதற்குந் தன்கண் நின்று தோன்றுதற்குங்காரணமாய்நின்றது மாயை எனப்படும் ஆகலான், ஒன்றற்கொன்று நுண்ணிதிற் செல்லுஞ் சூக்குமங்கட்கு முடிவிடமாய் நின்ற சூக்குமப் பொருள் யாது அதனை மாயை என்றலே பொருத்த முடைமை அறிக.

இனி, முதல்வன் மாயைக்கு ஆதாரமாய் விரவி நிமித்தகாரணனாயினும், மாயையான் விசேடிக்கப்பட்டு விசிட்டனாய் முதற்காரணமும் ஆவன் எனச் சிவாத்துவிதசைவர் கூறுவர். அது பொருந்தாது. என்னை? தோன்றிநின்று அழியும் உடம்பொடு கூடியவழி விகாரப்படுதல்பற்றி உடம்பொடு விசிட்டனாய் நின்ற சீவான்மாவுந் தோன்றி நின்று அழிவன் என்பது பொருந்தும்; அதுபோல, மாயையொடு விசிட்டனாய் முதல்வனும் முதற்காரணமாம் என்பார்க்கு, விசிட்டமாவது விசேடணமும் விசேடியமும் அவ்விரண்டினியைபும் என்னும் அவற்றின் வேறன்மையான் முதல்வனும் அவ்வாறு விகாரியாதல் வேண்டப்படும். படவே, "நிருவிகாரி" என்னுஞ் சுருதியொடு முரணுமாகலான் என்க. விசிட்டமாவது அம்மூன்றற்கும் வேறெனக் கொள்வார்க்கு, முதல்வன் முதற்காரணம் என்பதே பொருந்தாதாய் முடியுமென்று அறிக.

அல்லதூஉம், நிமித்தகாரணமே முதற்காரணமென்று எடுத்துக் காட்டுதற்கு ஒரு பொருள் இன்மையின் அது வழியளவைக்கு ஏலாமையானும்

வழியளவையினும் ஆகமளவை வலியுடைத்தெனின், அற்றாயினும், வழியளவை ஆகமவளவையொடு முரணுதாகலானும், ஒரோவழி முரணுமாயின், அது பற்றி யாண்டுந் துணிவு பெறுமையின், வழியளவை பிரமாணன்று எனப்பட்டு அதுபற்றி ஓதிய நிகமாகமவசனங்கள் பயனிலவாய் முடியுமாகலானும், நிகமாகமப் பொருள்கள் தம்முள் முரணுவன போலத் தோன்றியவழி அவற்றுள் வன்மை மென்மை உணர்ந்து பொருள் கோடற்கு வைத்ததே வழியளவையாகலான் அஃது அதனோடு முரணுதல் பொருத்தமின்மையானும் அது விடையன்மை அறிக.

இனி, இவ்விரண்டும் பொருந்தாமையானும், வேறுவிடுக்குமாறு இன்மையானும், மாயையே முதற்காரணம்; அதற்குத் தாரகமாய் விரவிநின்று அதிட்டித்தலான் முதல்வனும் முதற்காரணமெனக் கோடல் வேண்டும். அங்ஙனங்கொள்ளின் விகாரியாதலின்மையான், முதல்வனும் முதற்காரணமாம் என்பது வாய்பாடுமாத்திரையே அன்றிப் பொருட்படாமையின், அஃது எமது அத்துவிதசித்தாந்தம் என்று ஒழிக.



## சிவப்பிரகாசச்செய்யுளுரை.

"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப்
புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப்
பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ்சொற் பொருள்போற்
பேதாபே தமுமின்றிப் பெருநூல் சொன்ன
வறத்திறனல் விளைவதா யுடலுயிர்கண் ணருக்க
னறிவொளிபோற் பிறிவருமத் துவித மாகுஞ்
சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ
சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்."

ஈண்டுப் புறச்சமயத்தவர் என்றது, முக்கூற்றுப் புறச்சமயத்தவர் எனக் கொள்க. அவரெல்லாஞ் சித்தாந்தசைவத்தோடு ஒப்ப *"ஏக னநேக னிருள் கரும மாயையிரண்டு" என்னும் ஆறுபதார்த்தங்களுங் கொள்ளாமையின், அவ்வாறுவகைப் பதார்த்தங்களின் இயல்பைக் கொளுத்தினுங் கொள்ளமாட்டார் என்பார், "புறச்சமயத் தவர்க்கிருளாய்" என்றார். சங்கற்பநிராகரணத்திற் கூறப்படும் அகச்சமயத்தவராகிய பாடாணவாதசைவர் முதலியோர் சித்தாந்தசைவத்தோடு ஒப்ப ஏகன் முதலிய ஆறுபதார்த்தங் கொண்டமையின், அவ்வாறு பதார்த்தங்கட்கும் பொதுவியல்பு சிறப்பியல்பு கூறும் ஆகமங்களின் தாற்பரியம் இதுவே என்று எடுத்துக்காட்டிச் சித்தாந்தசைவப்பொருளுண்மையைக் கொளுத்தின் கொள்ள வல்லுநரென்பார், "அகச்சமயத் தொளியாய்" என்றார். கொளுத்திற்கொள்ள வல்லுநர் எனவே அகச்சமயத்தவருந் தாமே கொள்ளமாட்டார் என்பது கருத்தாகலிற் †"சிவாத் துவிதாந் தத்துக்—

* திருவருட்பயன், அறியுநெறி. உ. † சிவப்பிரகாசம், உண்மை, நூற்கருத்து. க. நிலவுல.

குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி" என்பதனோடு முரணுமை அறிக.
சிவாத்துவிதமாவது: நிமித்தகாரண பரிணுமவாதம்.

*"சிவாத் துவிதாந் தத்துக்-குலவின ரளவ ளாவாக் கொள்கைய தாகி" என இறுவாய் எண்ணும் முறைமைக்கண் நின்ற சுத்தசைவரை ஒழித்து ஒழிந்த சமயத்தாரை யெல்லாம் விலக்கவே, சுத்தசைவர் இந்நூல் கேட்டதுணையானே தாற்பரியம் இனிது உணர்ந்து சித்தாந்தப்பொருள் கைக்கொள்வர் என்பது பெறப்பட்டது. அத்துணை அணிமையர் ஆகலானன்றே சித்தாந்த சைவத்தைச் சாரவைத்தார் என்பது. இக்கருத்தறியாதார் "சிவாத்துவிதாந் தத்து" என்றமையிற் சிவாத்துவிதமாவது, இறுதிக்கண் எடுத்து ஓதப்படுஞ் சுத்தசைவம்போலும் என மயங்குப. நிமித்தகாரணமாகிய முதல்வன் மாயையோடுங் கூடி முதற்காரணமுமாய்ப் பரிணமிப்பன் என்பதே சிவாத்துவித சைவர் கொள்கை என்க. இது சுத்தசைவர்க்கு எலாமையும் அறிக.

இனித், தார்க்கிகர் முதலியோர் காட்சிமுதலிய பிரமிதிக்குப் பொறி முதலியனவே பிரமாணம் என்பர். பிரமாணம் பிரமேயப்பொருளாதல் செல்லாமையிற் பொறி முதலாயினவும் ஏனைய போலப் பிரமேயமாய் அளந்தறியப்படும் பொருளே ஆகலின் அவற்றைப் பிரமாணம் என்றல் பொருந்தாது; மற்றுச் சிவஞானம் உணர்த்த உணர்வதாகிய ஆன்மசிற்சத்தியே அவர் பிரமாணம் எனப் புகலும் இந்திரியம் முதலியவற்றையும் அளந்தறியும் பிரமாணமாம். பொறி முதலியன அதற்கு வாயிலாதல்பற்றிப் பிரமாணம் என்று உபசரித்துக் கூறப்படுவனவேயாம் என்பது சைவ சித்தாந்த மென்பார், "புகலளவைக் களவாகி" என்றார். சைவசித்தாந்தத்தின் எய்துதற்கருமை கூறுவார், "பெருநூல் சொன்ன-வறத்திறனால் விளைவதாய்" என்றார். எனவே, அஃது இல்வழி விளையாது என்பதாம். "உடலுயிர்கண் ணருக்க னறிவொளி போற் பிறிவருமத் துவிதமா"மாறு மேல் உரைத்தாம். அத்துவிதம் 'என்னுஞ் சொற்குப் பொருள் கூறுவார், "பிறிவருமத் துவிதம்" என்று உடம்பொடு புணர்த்து ஓதினார். இஃது ஏனையோர் கூறும் பொருள்போலன்றிச் சிறந்தது என்பார் "சிறப்பினதாய்" என்றார். வேதாந்தமுஞ் சித்தாந்தமும் வேறு என்பாரை மறுத்துப் பலபொருள்படுஞ் சூத்திரத்தை அங்ஙனம் படாமைத் தெளித்து உரைக்கும் பாடியம்போல வேதாந்தத்தைத் தெளித்து உரைப்பதே சைவசித்தாந்தம் என்பார், மகுடாகமம் முதலியவற்றுள் ஓதியவாறே 'வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத்திறன்' என்றார்.

ஈண்டு வேதாந்தம் என்றது வேதத்தின் முடிபுகளாகிய உபநிடதங்களை. வேதாந்தம் எனப் பெயர் பெற்ற ஏகான்மவாதநூலே அன்று என உணர்த்துதற்கு *"வேதத் தலைதரு பொருளாய்" என இறுதியினுங் கூறினாராகலின், அது கூறியது கூறலன்மை உணர்க. திறன்-பொது உண்மை என்னும் வகை. இங்கு-இந்நூலின். முதனூல் வழிநூல்களிற் "பொதுவுண்மை" என வகுத்துக்கொண்டு ஓதினும் எடுத்து ஓதாமையால், அவ்வகை தெரிவரிது ஆகலான் அது தெரியுமாறு "பொது உண்மை" என்று எடுத்து ஓதி அந்நூல்களின்

* சிவப்பிரகாசம், உண்மை, நூற்கருத்து. க. நிலவுல.

கருத்து ஈண்டுத் தெரியச்செய்தும் என்பார், "சைவ சித்தாந்தத் திறனிங் குத் தெரிக்க லுற்றாம்" என்றார். சைவசித்தாந்தம் என்றது, சுத்த சைவம்முத லியவற்றிற் செல்லாமைப்பொருட்டு.



## சூனியான்மவாதிமதமறுதலை.

சிலர் ஆன்மா இந்த உடம்பினைப் பற்றி நின்று சீவிப்பதாம் என்பர். உட ம்போ பல்வகைக் கருவிகளால் யாப்புற்று இயல்வதொரு பாவையாம்.

இனி, அப்பல்வகைக் கருவிகளுள் ஆன்மா என்று அச்சிலர் சொல்லப் படுவது யாது? உடற்கருவிகள் பலவற்றையும் தனித்தனியே பேதித்து ஆன் மா இதுவன்று இதுவன்று என்று நீக்கிச் சோதனைசெய்து போதருங்கால், அவ்வுடற்கருவிகள் எல்லாம் அங்ஙனம் ஆன்மாவன்று என்று நீங்கியபின், அங்ஙனஞ் சோதித்து நீக்கப்படுங் கருவி யாதும் இன்றாய் முடிவிற் சூனியம் தலைப்படக் காண்கின்றோம். ஆதலால், சிலர் உண்டெனக்கொண்டு கூறும் அவ் வான்மாச் சூனியமேயாம்; உள்பொருளாகமாட்டாது என்பதாம். அவர் இவ் வாறு அளவைகாட்டித் தங்கோள்கை நாட்டுகின்றார்.

அவர் உடற் கருவிகள்அனைத்தினையும் இஃது ஆன்மாவன்று இஃது ஆன் மாவன்று என்று தனித்தனி சோதித்து நீக்கிச் செல்லுழிச் சூனியம் முடி வாய்த் தலைப்படுவதனால் ஆன்மாச் சூனியமேயாம் என்றல் பெரியதோர் அறி யாமையேயாம். என்னை? உடற்கருவிகள் அனைத்தினையும் இஃது ஆன்மா அன்று இஃது ஆன்மா அன்று என்று சோதித்தலாகிய வியாபாரத்தினைச் செய் கின்றுழி, சோதனைசெய்து நிற்பதாகிய அறிவே அவ்வான்மாவாகும் என்று துணிந்து அறியமாட்டாராய் அங்ஙனம் போலிமுடிவு கோடலால் என்க.

இனி, அவ்வறிவு சோதனைசெய்து போதருங்காலையினும், சோதனை முடியுங்காலையினும் ஒருதன்மையாகவே நிற்பதொன்று ஆகலானும், உடற்கரு விகள் எல்லாம் அசேதனமாய் ஒழியத் தான் சேதனமாய் விளங்கி நிற்பது ஆகலானும், அதுவே அவ்வான்மாவாகும் என்று அவர் அறிந்து அமைவாராக.

அவர் சோதனை செய்துகொண்டு நிற்கும் அவ்வறிவைக் கைவிட்டுச் சூனியமே ஆன்மாவாகும் என்று கொண்டது யாதுபோலுமெனின், வழிநடப் போர் பதின்மர் ஊர் அணிமைக்கட் சென்றுழித் தம்முள் யாவனேனும் நீங் கினனோ என்று சங்கையுற்று அச்சங்கை தீர்த்தல்வேண்டி வேறுவேறாய்த் தனி பிரிந்து நின்று தம்மை மறந்து மற்றையரைக் கணித்து ஒன்பதின்மரே நின்றோம், ஒருத்தனைக் கண்டிலேம் என்று, கருத்து அழிந்து கவலையுற்ற கை யறியாமைச் செய்திபோலும் என்க.

இனி, அங்ஙனம் சோதித்து அறியும் அறிவுஞ் சூனியமே எனின், அங் ஙனம் அறியும் அறிவுஞ் சூனியம் என்றதூஉம் அவ்வறிவேயன்றிப் பிறிதொ ன்றன்மையான், அது மகப்பயந்து ஓம்புவாளை மலடி என்னுமதனோடு ஒக்கும்

*****

என்று ஒழிக. என்னை? மலடிக்கு மகப்பயந்து ஓம்புமாறில்லை ஆகலின், மகப்பயந்து ஓம்புவாள் மலடியாதல் செல்லாதவாறுபோல, இஃது ஆன்மா இஃது ஆன்மாவன்று என்று விவகரிக்குமாறு சூனியத்துக்கு ஏலாமையின் என்க.

சூனியமாவது உள்ளதுமன்று, இல்லதுமன்று, இரண்டும் ஆவதுமன்று, வேறும் அன்று எனப்படும் பாழாம். ஆகவே, உள்பொருளாய் உணர்வுடையதாய் நிற்பது ஒன்றே அங்ஙனம் விவகரிப்பதென வேண்டப்பட்டுச் சூனியம் ஆன்மா என்பது போலியாய் ஒழிதல் காண்க.

இனி, அங்ஙனம் அறியும் அறிவும் நான் அன்றென நீக்கின், அவ்வாறு நீக்கிய அறிவு வேறு உண்டெனப்பட்டு மேலும் அநவஸ்தையாம் ஆகலின், அதுவே அவ்வான்மா என்று துணிபாகக் கொள்க.

இது, சூனியான்மவாதிகளை மறுத்து ஆன்மாக் கருவிகள் அனைத்திற்கும் வேறாய் இவ்வுடம்பகத்து நிற்பதொரு சேதனப் பொருள் என்று சாதித்தவாறும்.



## தேகான்மவாதிமதமறுதலை.

இனித், தேகான்மவாதிகள் உடம்பே ஆன்மாவாகும் என்பர். அறிவு உடம்பின்கண் அன்றி நிகழக் காணாமையாலும், நான் நுணுகினேன் நான் பருத்தேன் என உடம்பினையே நான் என வழங்கக் காண்டலாலும், உடம்பே ஆன்மாவாகும் என்று அவர் *அளவைகாட்டித் தங்கொள்கை நிறுத்துவர்.

நான் பருத்தேன் சிறுத்தேன் கரியேன் மனிதன் பார்ப்பான் என உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் ஆன்மாவிற்கு ஏற்றி வழங்குவர். அங்ஙனம் வழங்குவரேனும், யான் உடம்பு, யான் கை, யான் கால் என உடம்பை அப்படி வழங்குவார் அல்லர்; என் உடம்பு, என் கை, என் கால் என வேற்றுமைப்படவே யாவரும் வழங்குவர் ஆகலானும், இவ்வுடம்பு சடமாகலானும், ஆன்மாச் சித்தாகலானும், தேகத்தின் வேறாய் அதன்கண் நிலைபெறுவது ஆன்மாவாகும் என்று அறிக.

அபேதக் கருத்தினால் என் உயிரென்று வழங்குமாறுபோல அபேதக் கருத்தினால் எனது உடலென்று வழங்குதலும் அமைவதாம்; ஆதலின், அதுகொண்டே ஆன்மாத் தேகத்தின் வேறாய் உண்டெனல் அமையாதென்றல் இசையாது எனின், என் உயிரென்று அவ்வாறு பிறிதின்கிழமைப்பொருள்பட வழங்கப்படுவது பிராணவாயுவேயாம்.

இனி, ஆன்மாத் தன்னை ஒற்றுமைப்பொருளில் வேற்றுமையாக அங்ஙனம் ஒரோவழி வழங்கினும் அது விளக்கின் சோதியென்றாற் போல்வதோர் பேத கற்பனை என்றே ஒழிக்கப்படுவதாம்.

* அளவை - ஈண்டுப் பிரத்தியக்ஷம்.

இவ்வாறன்றி, என் பதி என் மனைவி என் பொருள் என வழங்குமாறு போல, என் கை என் கால் என் கண் என் செவி எனப் பலவாற்றானும் பெரும்பாலும் உலகத்துப் பிறிதின்கிழமைப்பட வழங்குதலின், அதுபற்றி ஆன்மாத் தேகத்திற்கு வேறாய் உண்டென்று சாதித்தல் பொருந்துவதேயாம் என்க.

அவருள் ஒருசாரார், நிலம் நீர் அனல் வளி என்னும் பூதம் நான்கும், சடமாயினும், பாக்கு வெற்றிலை சுண்ணம் என்பனவற்றின்கண் முன்னர் இல்லாத செவ்வண்ணம் அவை ஒருங்கு சேருங்காலை அச்சேர்க்கைக்கண் புதுவதாக உண்டாதல் போலத், தம்முள் ஒன்றாய்க் கூடுங்காலை அக்கூட்டரவில் அவற்றின்கண் முன்னர் இல்லாததோர் சேதனம் புதுவதாய்த் தோன்றி வியாபரிக்கும் என்பது அமைவதாம்; தேகத்தின் வேறாக ஆன்மா ஒன்று உண்டென்றல் பொருந்தாது என்பர்.

நிலம் நீர் அனல் வளி என்னும் பூதம் நான்கும் உண்மையிற் சடமாகலின் அவை கூடிய கூட்டரவில் சேதனம் புதுவதாகத் தோன்றும் என்றல் ஒருவாற்றானும் இசையாது. அன்றியும், தத்தம் இயற்கையிற் சடமாய் நிற்கும் அப்பூதம் நான்கும் தாம் ஒன்றாய்க் கூடியவழிச் சித்தியல்பாய் மாறும் என்றல் இயற்கைவிரோதமுமாம். பாக்கு வெற்றிலை சுண்ணாம்புகளில் முன் இல்லாத செவ்வண்ணம் கூட்டத்தில் விளங்கும் என்றல் இயற்கைவிரோதம் ஆகமாட்டாது. செவ்வண்ணம் சிற்குணம் அன்று; சடப்பொருட் குணமேயாம். இன்னும், பாக்கின்கண் இனிது தோன்றாது அடங்கி நிற்கும் செவ்வண்ணம் அதனோடு வெற்றிலை சுண்ணாம்பு கூடும்பொழுது இனிது விளங்கித் தோன்றுவதாயிற்று. இங்கு முன் இல்லது கூட்டத்திற் புதுவதாய்த் தோன்றிற்றில்லை; உள்ளதே புதிதாக விளங்கித் தோன்றிற்று. இல்லதற்குத் தோற்றம் முக்காலத்தும் இல்லை; உள்ளதற்கே எக்காலத்தும் தோற்றம் உண்டு.

உள்ளது உள்ளதேயாம்; அதற்குத் தோற்றம் கூறல் இயையாது எனின், அற்றன்று. சத்திமாத்திரையாய் உள்ள சூக்குமம் கரண உபகாரத்தால் வியத்தியாய்த் தூலமுற்று விளங்கும் என்பதே உள்ளது தோன்றும் என்பதற்குத் தாற்பரியம் ஆதலால், அதற்குத் தோற்றங் கூறுதல் இயைபேயாம் என்றுவிடுக்க.

எடுத்துக்காட்டு இங்ஙனம் விரோதமுறுதலால் பூதம் நான்கின் கூட்டரவில் முன் இல்லாத ஓரறிவு தோற்றி வியாபரிக்கும் என்ற அவர் கொள்கை கழுத்திற் கையிட்டுத் தள்ளி ஒதுக்கப்படும் என்க. இவ்வாறாகலின், பூதக்கூறாய்த் திரண்ட தேகத்திற்கு வேறாக ஆன்மா ஒன்று உண்டு என்பது சாலுஞ் சித்தாந்தமே ஆகும் என்க.

இது, தேகான்மவாதிகளை மறுத்து உடம்பகத்து ஆன்மாத் தேகத்திற்கு வேறாக உண்டென்று சாதித்தவாறும்.



## இந்திரியான்மவாதிமதமறுதலை.

இனிச், செவி மெய் வாய் கண் மூக்கு என்னும் ஐம்பொறிகளும் சத்தம் பரிசம் இரதம் உருவம் கந்தம் என்னும் விஷயங்கள் ஐந்தனையும் தனித்தனி அறிய வல்லனவாம்; அவை சடம் எனப்படா; ஆதலால் அவையே ஆன்மா வாகும் என்று இந்திரியான்மவாதிகள் சொல்வர்.

ஐம்பொறிகள் ஒன்று அறிந்ததனை மற்றொன்று அறியாமையாலும், அவை அவற்றை வேறு வேறாக விடயிப்பதல்லது இத்தொழிற்பாடு உடையேம் யாம் என்று தம்மை அறியமாட்டாமையாலும், அவ்வைம்பொறிகளையுங் கொண்டு அங்ஙனம் அறியும் ஆன்மா வேறு உண்டென்பதே தேற்றமாம்.

இன்னும், ஐம்பொறிகள் தத்தமக்கு உரிய விடயங்களை நேரே இயைந்து நின்று அறிவனவேயாம். ஒரு சாத்தன் ஒருதேயத்திற் சென்றகாலத்தில் ஐம்பொறிகள் கொண்டு கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றறிந்த விடய அனுபவங்களை மற்றோரிடத்தில் இருக்கும்பொழுது நினைந்து அவ்வண்ணம் நுகர்ச்சி உறுகின்றான். அச்சாத்தன் இடம் பெயர்ந்து மற்றோரிடத்துத் தான் இருக்கும்பொழுது அத்தேயத்தில் சென்றகாலத்துத் தனக்கு நேர்ந்த விடயங்களை ஐம்பொறிகள் கொண்டு அவ்வாறு அறியுமாறு இல்லை. என்னை? அவ்விடயங்கள் இடத்தாலும் காலத்தாலும் அவன்றனக்கு மிகவேறுபட்டுப் பிரத்தியக்கம் பெறாமையால் என்க.

இனிச், சென்றகாலத்துக் காட்சியுற்ற அவ்வைம்புலன்கள் சாத்தற்கு மற்றோரிடத்தில் இருக்கும்பொழுது விடயமுறுதல் அவ்விந்திரியங்களுக்கு வேறாய் அவ்விந்திரியங்களைக்கொண்டு அறியவல்ல மனக்கருவியுடைய சேதன ஆன்மா அவன் அகத்து நிலைபெறுதல்பற்றி அல்லது கூடாமையால், இவ்வருத்தாபத்தியாலும் மனக்கருவிபற்றி இந்திரியங்களின்வழி நின்று அறியும் ஓர் ஆன்மாச் சாத்தன் உடம்பகத்து இந்திரியங்களுக்கு வேறாய் உண்டு என்பது இனிது தெளியப்படும்.

இது, இந்திரியான்மவாதிகளை மறுத்து உடம்பகத்து ஆன்மா இந்திரியங்களுக்கு வேறாக உண்டென்று சாதித்தவாறாம்.



## ஆணவமலத்துண்மை.

மூலமலத்தினியல்பு சிறிது காட்டுதும்:— மூலமலமாவது பிராந்திஞானமே பிறிதில்லை என்பர் ஒருசாரார். ஒருசாரார் ஞானபாவம் என்பர். ஒருசாரார் தமோகுணம் என்பர். ஒருசாரார் மூலப்பகுதியில் தோன்றும் அவிச்சை என்பர். ஒருசாரார் மாயை கன்மங்கள் என்பர். ஒருசாரார் சிவசத்தி என்பர். ஒருசாரார் ஆன்மாவின் குணம் என்பர்.

மலமாவது, இவை அனைத்தினும் வேறாய் ஒன்றாய் நித்தமாய் வியாபகமாய் ஞானதிரோதகமாகிய திரவியம் என்பது தொகுத்துக் காட்டுதும்:—

மேற்கூறிய அளவைகளால் ஆன்மாத் தோற்றக்கேடுகளின்றி நித்தமாய் வியாபகமாய் நிற்பதென்பது துணிபாம். இனி, ஆன்மாவுக்குத் தோற்றக்கேடுகள் உளவாம் எனின், அது செய்த வினை நசிப்பச் செய்யாத வினை உண்டாம் எனப்பட்டு வினை இலக்கணத்தோடு முரணும். ஈன்றணிய குழவி தாய் முலைப்பால் பசிப்பிணி தீர்க்கும் மருந்தென்று அறிந்து அதன்கண் முயலுதல் காண்டும்; அஃது உம்மைப் பயிற்சி வயத்தான் உளதாகிய வாசனை இல்வழிக் கூடாது.

இனி, நித்தப்பொருளை, அவயவம் உடைத்தெனப்பட்டு அழிவெய்துவதாகிய ஏகதேசம் என்றல் கூடாமையின், ஆன்மா வியாபி என்பதும் பெற்றாம். பெறவே, அவ்வக் குணங்கள் அவ்வக் குணிகளின் வேறன்மையின், ஆன்மாவின் குணமாகிய ஞானமும் அவ்வாறே நித்த வியாபகமாதல் பெறப்பட்டது. அறிவாவது ஒன்றனை விடயித்தலே பிறிதன்றாகலின், அங்ஙனம் விடயிப்பதாகிய அறிவு ஒருகால் நிகழ்ந்தும் ஒருகால் நிகழாதுங் காலத்தானும் இடத்தானும் ஏகதேசமாய் நிகழ்தலுங் காண்டும். அவ்வறிவு செயற்கையான் இங்ஙனம் நிகழ்தற்குக் காரணம் உண்டென்பது பெறப்படுதலின், அது பிராந்தி ஞானம் முதலியவற்றுள் ஒன்றென்றல் கூடாமையின், பாரிசேடவளவையான் அவற்றின் வேறாகிய சகசமலம் அத்தன்மைத்தாய் உண்டென்பது பெற்றாம்.

அற்றேல், காரணம் பிராந்திஞானம் முதலியவற்றின் ஒன்றேயாக, அவற்றின் வேறு உண்டு என்பதற்குப் பிரமாணம் என்னை? எனின், கூறுதும். கயிற்றை அரவு எனக் காணும் பிராந்தி கண்ணின்கண் யாதானும் ஓர் குற்றம் இல்வழி நிகழாமையின், அதுபோலத், தேகமே ஆன்மா என்று அறிதற்றொடக்கத்துப் பிராந்திஞானமும் ஆன்மாவின்கண் ஒருகுற்றம் இல்வழி நிகழாமையின், அக்குற்றமாகிய சகசமலம் பிராந்திஞானத்தின் வேறாய் உண்டென்பது பெறப்படும்.

இனி, ஞானுபாவமே அது எனின், ஞானத்தின் என்றுமபாவத்திற்கும் அழிவுபாட்டபாவத்திற்கும் ஒன்றினொன்றபாவத்திற்கும் ஒருகாலும் அழிவின்மையான் முத்தி என்பது ஒன்று இல்லையாய் முடியும். வீடுபேறுண்மை வேதாகமங்களிற் பெறப்படுதலின், அவற்றோடு முரணுமைப் பொருட்டு ஞானுபாவமாவது ஞானத்தின் முன்னபாவமெனக் கோடல்வேண்டும். வேண்டவே, நித்தமாகிய ஞானம் முன் இல்லாது ஒழிதற்கு வேறு காரணம் உண்டெனப் பெறப்படுதலின், அதுவே சகசமலம் எனப்படும் என்க.

இனித், தமோகுணம் முதலியன ஒன்றன் காரியமாய் இடையே தோன்றி அழிவன ஆகலின், அவை அநாதியே ஞானதிரோதகமாய் ஆன்மாவைப் பந்திக்கமாட்டாமையின், சுத்தமாய் நின்ற ஆன்மாவை இடையே பந்தித்து நின்றன எனின், அவை இடையே பந்தித்தற்குக் காரணம் வேண்டும். காரணமின்றிப் பந்திக்கும் எனின், முத்தி பெற்றவழியும் பந்திக்கும் என்பது முடியுமாகலின், அவற்றின் வேறாய் அநாதியே பந்திப்பதாகிய சகசமலம் உண்டென்பது பெறப்படும்.

இனி,மூலப்பகுதியில் தோன்றும் அவிச்சையே அது எனின், மூலப்பகுதியில் தோன்றும் அவிச்சை அநாதியில் ஆன்மஞானத்தினைப் பந்தித்தது என்றல் ஏலாமையானும், அது மாயாகாரியம் ஆகலின், ஞானவியஞ்சகமாவது அல்லது ஞானதிரோதகம் ஆகாமையானும், அநாதியே ஆன்மஞானத்தினைத் தடைசெய்து நிற்குஞ் சகசமலம் வேறு உண்டென்பது பெறப்படும்.

இனி, மாயை கன்மங்கள் ஆன்மாவின் வேறுமாய்ச் சடமுமாய்ப் பந்தமுஞ் செய்து நிற்றலின், அவையே அமையும்; வேறுமோர் சகசமலம் உண்டெனக்கோடல் மிகையாமால் எனின், அவை அங்ஙனமாயினும், ஞானதிரோதகமல்ல ஆகலான், ஞானதிரோதகமாகிய மூலமலம் வேறுண்டு என்க.

இனிச், சிவசத்தி ஞானதிரோதகமாய் நிற்குமெனின், சித்தாகிய சிவனது சத்தியுஞ் சித்தாவதன்றிச் சடமாதல் இன்மையால் தனக்குப் பகையாகிய சடப்பொருள் சித்தைப் பந்தம் உறுத்துவதன்றிச் சித்துப்பொருள் சித்தைப் பந்தம் உறுத்துமாறு இன்மையானும், உறுத்தும் எனின், முதல்வனது பெருங்கருணைக்கு இழுக்கு ஆகலானும், சடப்பொருளாய்ப் பந்தம் உறுவிக்குஞ் சகசமலம் வேறு உண்டென்பது பெறப்படும்.

இனி, மலஞ் சடமாய் நிற்றலின், ஆன்மாவின் குணமெனக் கோடலே பொருத்தமுடைத்து எனின், அறியாது கூறினாய்; குணமாயின் இடையே நீங்குதல் கூடாமையானும், ஆன்மா அறிதற்குணம் உடைத்தாகலின், அறியாமையும் அறிவும் ஆகிய இரண்டு மறுதலைக்குணம் ஒருபொருட்குக் கூடாமையானும் அஃது ஆன்மாவின் வேறாயதோர் அகவிருளாகிய திரவியம் என்பது தெற்றென உணர்ந்துகொள்க.

சிவாதித்தமணிதீபிகை உடையாரும் முதலதிகரணத்து இறுதியில் பயன் கூறும்வழி, ஞானாபாவமே அஞ்ஞானம் என்பாரை மறுத்து, மலந் திரவியம் என்றும், அநாதிப்பொருள் என்றும், மலசத்திகள் பல என்றும், முத்தியில் மலசத்திக்குக் கேடன்றி மலத்துக்குக் கேடின்மையின் அநாதிப்பொருளாதற்கு இழுக்கில்லை என்றும், கடா விடைகளான் விரித்துக் கூறியவாறு ஆண்டுக் காண்க.

அஞ்ஞானம் என்னும் அகவிருள் ஞானாபாவம் ஆகாது என்று இவ்வாறு மறுக்கப்படவே, அந்தகாரம் என்னும் புறவிருள் ஆலோகத்தின் அபாவம் என்பதூஉம் மறுக்கப்பட்டவாறு ஆயிற்று. அதுவுஞ் சிறிது காட்டுதும்:—

## இ ரு ளு ண் மை.

ஆலோகத்தின் அபாவமே அந்தகாரம் என்பார்க்கு, அம்முறை பற்றிச் சுகத்தின் அபாவமே துக்கம்; தன்மத்தின் அபாவமே அதன்மம்; சையோகத்தின் அபாவமே விபாகம் என்று இவ்வாறு கோடல் வேண்டும். அங்ஙனங் கொள்ளாமையால் அவர்க்கும் அது கருத்தன்றுபோலும் என மறுக்க.

அன்றியும், ஆண்டு ஒளியில்லை இருள் உள்ளது என, ஒளியின்மையின் வேறாய் இருளென்னும் உணர்வு நிகழ்தலானும், யாட்டின் கழுத்திற் றூங்கும் முலையோடு ஒக்கும் அபாவத்தால் செய்பக்கடவதொன்று யாண்டும் இன்மை யானும், கண்ணொளியைத் தடைசெய்து நிற்பதாகிய இருளை அபாவமென்றல் கூடாமை அறிக.

இவ்விருளினது உண்மை வெள்ளிடையின் அலரவிழித்து நோக்கியவழி யும் மறைத்தற்றொழில் நிகழ்தல்பற்றிப் பாரிசேடஅளவையான் அறியப்படும்.

அற்றேல், நீலவடிவிற்றாய்த் தோன்றுதலின் இருள் காட்சிப்பொருள் என்றாற் படும் இழுக்கென்னை? எனின், அற்றன்று; துன்னிய இருளின்கண் விழித்துழிப்போலக் கண்ணிமை இறுக மூடியவழியும் ஒருதன்மைத்தாய்த் தோன்றுதலின், வேற்றுமை இன்மை யான், அது மயக்க உணர்வேயாம் என்பது போதருதலின், விழித்துழி அவ்வாறு தோன்றுவதும் அதுபோல மயக்க உணர்வாவதன்றி, இருளின் தோற்றம் அன்றென்பது அனுபவத்தாற் கண்டுகொள்க.



## கண்ணுக்கொளியுண்மை.

உலோகாயதர், செவி முதலிய இடங்களை இந்திரியம் என்பராகலின், கண்ணென்னும் இடத்தின் வேறாக ஒளிப்பொருளாகும் இந்திரியம் உண்டு என்பதற்குப் பிரமாணம் என்னை? எனின், செவிடனுக்குச் செவி உளதாகவும் ஓசை கேளாமையின், அது கேளாமைக்குக் காரணஞ் செவியென்னும் உறு ப்பின் வேறாய் அதனை அதிட்டித்து நிற்கும் இந்திரியம் இல்லாமையே அன் றிப் பிறிதின்மையால் செவி என்னும் உறுப்பு இந்திரியமாகாமை எல்லார்க் கும் விளங்கக்கிடந்தது. இதுபற்றி ஏனை இந்திரியங்களும் அவ்வவ் விடங்க ளின் வேறுதல் கண்டுகொள்க.

ஞானேந்திரியங்கள் ஐந்தும் அறிதற் கருவிகளாகலின், சாத்துவிக அக ங்காரத்தில் தோன்றியனவாம். கண்ணிந்திரியம் ஒளிக்கருவியாகலின், உருவத் தை அறிவதாம். இது ஆன்மாவின் ஞானசத்தியால் அதிட்டிக்கப்பட்டுப் பொ ருள்களை விசேடண விசேடிய இயல்புபற்றி அறியுமாறின்றி நிருவிகற்பமாய் அறியுங் கருவியென்று உணர்க. இது ஏனை ஞானேந்திரியங்களுக்கும் ஒக்கும்.

காட்டும் ஒளியின் வேறாய்க் கண்ணுக்கு ஒளிக்குணம் உண்டென்றற்கு ஏது என்னை? கண்ணுக்கு ஒளிக்குணம் உண்டெனின், மின்மினித் துணையாயி னுந் தானே விளங்குதல் வேண்டுமாலெனின், ஆகாயத்தின் கண்ணதாகிய சத்தகுணம் முரசு குணிற் சையோகம் முதலிய வியஞ்சகங்களான் விளக்கப் பட்டுழி விளங்கி அல்லுழி விளங்காதொழிதலே அன்றித் தினைத்துணையா யினுந் தானென விளங்குமாறு இன்றென்பது பற்றி வியஞ்சகத்தின் எதிரொ லிவடிவால் தோன்றும் அவ்வோசையை ஆகாயத்தின் குணம் அன்றென்பார் யாருமில்லை. அதுபோலக், கண்ணின் கண்ணதாகிய ஒளியும் வியஞ்சகமாகும் ஞாயிற்றின் ஒளிமுதலிய உள்வழி விளங்கி அல்லுழி விளங்காமை மாத்திரை

யே பிறிதில்லையாகலான், அதனைக் கண்ணின் குணம் அன்றென்றல் அறிவில்லார் கூற்றேயாம் எனவும், அக்கண்ணொளி தன்னை விளக்குதற்கு உரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமாயின் ஏகதேசத்து விளங்கியும் வியாபகப்பொருளாயின் வியாபகமாய் விளங்கியும் நிற்கும் இயல்பிற்றெனவும் உணர்க.

இனிக், கண்ணுக்கு ஒளியில்லை, ஞாயிற்றின் ஒளி முதலியனவே கண்ணின்கண் நின்று காண்டல் வியாபாரம் நிகழ்த்துமெனின், அங்ஙனமாயின், ஞாயிற்றின் ஒளி முதலியன கண்ணின்கண் நின்றே காண்டல் வியாபாரம் நிகழ்த்தும் என்னும் நியமம் வேண்டா; உடம்பினுள் யாண்டாயினும் ஓரிடத்தைப் பற்றி நின்றுங் காண்டல் வியாபாரம் நிகழ்த்துமென்று ஒழிக.

அற்றேல், அவ்வாறு ஒளியுடைத்தாகிய கண்ணிந்திரியம் தன் தொழிற்பாடு நிகழ்த்தற்குப் பிறிதோர் ஒளியின் உபகாரத்தை இன்றி அமையாதவாறு என்னை? எனின், அங்ஙனமாயினுங் கண்ணிந்திரியந் தூல ஒளியாகலின், தமோகுணசாரமான இருளென்னும் பகைப்பொருளின் சத்தியான் மடங்கலின், காண்டல் வியாபாரம் நிகழ்த்துதற்கு அங்கி என்னும் பூதத்தின் கூறுன ஞாயிற்றினொளி விளக்கொளி முதலிய சூக்கும ஒளிகளின் உபகாரத்தை வேண்டற்பாலதாகின்றது என்று உணர்க.

சிவஞானபோதமாபாடியத்திரட்டு

முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

---

☞ இச்சிவஞானபோத மாபாடியத்திரட்டினுள், பெரும்பான்மைய திராவிடப்பிரகாசிகைநூலுடையார் வாக்கியங்களோடு விரவப்பெற்றன. சிறுபான்மைய விரவப்பெறுதன. இவை பாடியமும் சிற்றுரையும் ஆராயப்புகுவார்க்கு ஆங்காங்கு இயைத்துப் பொருளுணர்ந்து உண்மை கடைப்பிடித்தற் பயப்பாடுடையவாகலின் ஒருங்குதிரட்டி வேறாகப் பதிப்பிக்கப்பட்டன.

---

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# சிவஞானபோதமாபாடியம்.

## மங்கலவாழ்த்து.

காமிகம் முதலிய சைவாகமங்களுண் ஞானபாதப்பொருளின் இகலறுத்து அவற்றின் பொருளுண்மை போதித்தற்கு * இரௌரவாகமத்தில் எழுந்த சிவஞானபோதநூலினைத் தமிழுலகம் உய்தற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து † பொழிப்புரைப்பான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், ‡ சாக்கிரத்தே அதீதத்தைப்புரியுந் தமக்கு இடையூறு சிறிதுமணுகாமை அறிந்தாராயினும், ஆன்றோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணாக்கர்க்கு அறிவுறுத்தற்பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார். ¶ வாழ்த்தும் வணக்கமும் பொருளியல்புரைத்தலும் என மங்கலவாழ்த்து மூவகைப்படும். அவற்றுள் இது பொருளியல்புரைத்தல் எனக் கொள்க.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

எனவரும்.

நந்திபெருமானுக்கு இந்நூலறிவுறுத்தருளிய முதலாசிரியர் என்பது உணர்த்துதற்குக் 'கல்லானிழல்' என இடங் கூறினார். ஆண்டெழுந்தருளியிருந்து, சிவாகமப்பொருள்கள் ஒன்றோடொன்று முரணுவனவாக மலைந்து வினவிய நந்திபெருமானுக்கு, இந்நூலான் மலைவு தீர்த்தருளினார் என்பார் 'மலை

* இரௌரவம் என்பது "ருரு" என்பவருக்கு உபதேசிக்கப்பட்டது என்னும் பொருள் பயக்கும் ஒரு தத்திதாந்தபதம். ருரு - பிரணவர் முதலியோர்க்குக் காமிகாதிகளைச் சதாசிவமூர்த்தி உபதேசிக்கும் போது கேட்டு நின்றாரொருவர். † பொழிப்பெனினும் காண்டிகை யெனினும் ஒக்கும். இது மாபாடியத்துட்கண்டது. ‡ சாக்கிராதீதம் இத்தன்மைத்தென்பதை, "பொற்புறு கருவி யாவும் புணராமே யறிவி லாமை—சொற்பெறு மதீதம் வந்து தோன்றாமே தோன்றி நின்ற—சிற்பர மதனா லுள்ளச் செயலறுத் திடவு திக்குந்—தற்பர மாகி நிற்றல் சாக்கிரா தீத மாமே." என்னும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தானுணர்க. ¶ இவற்றை வடநூலார் முறையே ஆசி, நமஸ்காரம், வஸ்துநிர்த்தேசம் என்பார்.

வில்லார்' என்றார். இல்லார் இல்லாகச் செய்தார் எனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர்.

இனி, மலைவில்லார் என்பது மேருவை வில்லாகவுடையர் எனக் கொண்டு, கல்லாணிழலில் எழுந்தருளியிருந்து வீடுபேறும், மலையை வில்லாக வளைத்துப் பகைவரை வென்று போகமும் அளித்தருளியோர் எனினும் அமையும். எனவே ஐந்தொழிற்கும் வினைமுதல் என்றவாறாயிற்று.

அருளிய என்பது செய்திய என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; *"உண்ணியபுகில்" என்றாற்போல. அது புனைவர் என்னும் † பிற வினைமுதல் வினைகொண்டு முடிந்தது. அருளுதல்—புனைந்தமைபற்றிக் கல்லாணிழலில் வீற்றிருந்து மலைவு தீர்த்தருளிய ஆசிரியர் கருணைமீக்கூர்தல். அருளிய பொல்லார் எனப் பெயரெச்சமுடிபாகவைத்து உரைத்தலும் ஒன்று.

பொள்ளார் பொல்லார் என மரீஇயிற்று: சுயம்புமூர்த்தி என்றதாம்.

இணைமலர் பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகையாய்த் திருவடியை உணர்த்திற்று. இணை என்பதனைத் திருவடிக்கு அடையாக்கி இருபெயரொட்டாகுபெயர் என்றலும் ஒன்று. இவற்றியல்பெல்லாம் ‡ சூத்திரவிருத்தியுள் உரைத்தாம்; ஆண்டுக்காண்க. புனைவர் என்றதற் கேற்பத் திருவடியை மலராக உருவகஞ் செய்தாரென்றலும் ஒன்று.

நல்லார்—கேட்டுச் சிந்தித்துத் ¶ தெளிந்த முதியோர். புனைதல்—§"தாடலைபோல்" அடங்கிநிற்றல். ஏகாரம் ஈற்றசை; தேற்ற மெனினும் அமையும்.

இப்பாட்டு வஞ்சித்துறை. இது கல் என்பது முதல் ஏ என்பதிறுவாய்ப் பன்னிருசொற்களாற் கூறவே, இந்நூல் பன்னிருசூத்திரத்தாற் செய்யப்பட்டதெனவும், அவற்றுண் மும்மூன்று சொற்கள் ஒவ்வோரடியாக வைத்து நான்கடியாகக் கூறவே, இந்நூலும் அவற்றுண் மும்மூன்று சூத்திரம் ஒவ்வோரியலாக வைத்து நான்கியலாற் செய்யப்பட்டதெனவும், அவற்றுண் முன்னீரடியும் ஒரு வினைமுடிபும் பின்னீரடியும் பிறிதோர் வினைமுடிபுமாக இருவகைப்படுத்துச் செய்யவே, முன்னாறு சூத்திரம் ஓரதிகாரமும் பின்னாறு சூத்திரம் வேறோ ரதிகாரமுமாக இந்நூல் இரண்டதிகாரத்தாற் செய்யப்பட்டதெனவும் குறிப்பா னுணர்த்தியவாறு காண்க. இரண்டா மோத்தின் முதற்சூத்திரம் "இதுவுமது" என முதலோத்தின் இறுதிச் சூத்திரத்தோடு மாட்டெறியப்படுவது என்பது உணர்த்துதற்கு மலைவு என்பதனை ஈரடியுஞ் சாரவைத்தார். கல்லாணிழல் என முதலடியில் இடங் கூறவே முதலோத்துப் பிரமாணங் கூறுவதென்பதூஉம், இரண்டாமடியில் மலைவில்லாரருளிய எனச் செய்கைகூறவே இரண்டாமோத்து இலக்கணங் கூறுவதென்பதூஉம், மூன்றாமடியிற் பொல்லாரிணைமலர் எனத் திருவடி கூறவே மூன்றாமோத்துச் சாதனங் கூறுவதென்

* திருநாவுக்கரசுநாயனார்தேவாரம், நமச்சிவாயத்திருப்பதிகம். ௩. விண்ணுற. † பிற வினைமுதல் - பிறகருத்தா. ‡ தொல்காப்பியச்சூத்திரவிருத்தி. ௪௪-ம் பக்கம். ¶ தெளிந்து முதிர்ந்தோர் எனவும் பாடம். § தாடலைபோல் அடங்கிநிற்றலை, "தாடலைபோற் கூடியவை தானிகழா வேற்றின்பக்—கூடலைநீ யேகமெனக் கொள்." என்னுந் திருவருட்பயனுக்கு நிரம்பவழகியார் முதலியோருரைத்த உரையாற்றெளிக.

பதூஉம், நான்காமடியில் நல்லார் புனைவர் எனப் பேறுகூறவே நான்காமோத்துப் பயன் கூறுவதென்பதூஉம் குறிப்பாற் பெறப்படும். பிறவும் இவ்வாறோர்ந்துணர்க. இங்ஙனம் நூனுதல் பொருளெல்லாங் குறிப்பாற்றன்னகத்தடக்கி நிற்றல் மங்கலவாழ்த்துக்கு இலக்கணமென்றுணர்க. இவ்வாறு நால்வகைப்படுத்தோதியது இந்நூலென்பது *"ஈண்டளவும் பொருளியல்பும் வேண்டுஞ் செய்தி-முறைமைகளும் பெத்தமொடு முத்தி யெல்லாம்" என்று வழிநூலாசிரியர் வகுத்தோதியவாற்றானுங் கண்டுகொள்க.

மங்கலவாழ்த்து முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



# அவையடக்கம்.



மங்கலவாழ்த்துக் கூறும்முகத்தான் ஈண்டைக்கு இறைவனாவான் இவன் என்பது உணர்த்தி, இனி அவையடக்கங் கூறும்முகத்தான் அவ்விறைவனால் இயம்பப்படும் நூல் உணர்ந்தாரது உயர்வும் ஏனைச் சமயநூல் உணர்ந்தாரது இழிவும் உணர்த்துகின்றார்.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

எனவரும்.

'உணர்ந்து' எனவே குருமுகத்தாற் கேட்கப்படும் சிவாகமநூல் பற்றி என்பது வருவித்து உரைத்துக்கொள்ளப்படும். 'தமையுடையதன்' எனவே தாம் தலைவனுக்கு உடைப்பொருளென்பதூஉம், 'எம்மையுடைமை' எனவே யாம் தமக்கு உடைப்பொருளென்பதூஉம் பெறப்பட்டன. உடைப்பொருள் அடிமையும் உடைமையும் என இருவகைப்படும். அவற்றுள் உயிர்வருக்கமெல்லாம் இறைவனுக்கு அடிமை எனவும், மாயை கன்மங்களும் அவற்றின் காரியங்களும் உடைமை எனவும் உணர்ந்துகொள்க.

தன்னுணர்வார் என்புழி இரண்டனுருபு விகாரத்தாற்றொக்கது. உடைமையின் என ஏதுப்பொருட்கண் வரும் இன்னுருபும் புணராமையான் என்னும் ஆனுருபும் தொக்கு நின்றன.

'எமையிகழார்' என்பது எம்மைக் †"குற்றங்களீக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவா"ரன்றி இகழ்தல் செய்யாரென்க. எனவே, எம்மாற் செய்யப்படும் நூலையும் அவ்வாறு கைக்கொள்வர் என்பது குறிப்பெச்சம். 'தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வார்' எனவே, தம்மையுணர்ந்தன்றித் தலைவனை உணர்தல் கூடாதென்பது பெற்றாம்.

---

* சிவஞானசித்தி, பரபக்கம், பாயிரம். ௧0. இறைவனை. † இது திருவாசகம், திருவம்மானை. ௨0-ம் திருப்பாசுரத்துள்ளது. கோதாட்டல் - சீராட்டல்.

அற்றேல், * "தன்னாலே தனைய றிந்தாற்—றன்னையுந் தானே காணும்" எ-ம், † "அதிலறி வடங்கி—மன்னிட வியாபி யாய வான்பயன் றோன்றும்" எ-ம் தலைவனையுணர்ந்தன்றித் தம்மையுணர்தல் கூடாதென்னுஞ் சார்புநூல் இதனோடு முரணும்பிறவெனின்,—முரணாது; அஃது ஆண்டுச் சிவரூபத் தான் ஆன்மதரிசனமும் சிவதரிசனத்தால் ஆன்மசுத்தியு மாமாறு கூறிற்றெனவும், இஃது ஆன்மசுத்திப்பின் சிவப்பேறுமாறு உணர்த்துகின்றதெனவும் தெரிந்துகொள்ளப்படு மாகலின். ‡ 'அரன்—றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணார்' என்பதனோடு முரணாமையும் இவ்வாறே உணர்ந்துகொள்க.

இதனானே, தம்மையுணர்ந்து தமையுடைய தன்னுணர்வாராவார் ஆன்மலாபப் பேறுடையார் என்பது பெற்றாம். அவர் சிவமயமேயாகலின் 'எம்மையுடைமை' என்றார். உடைமை—உடையாந்தன்மை. எம்மையுடைமை என இரண்டாவது குறிப்புப்பெயர்கோடல் அமையுமென்பது, ¶ "இரண்டாகுவதே" என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையர் "புகழையுடைமை" என உதாரணங் காட்டி யாப்புறுத்தமையானும் அறிக.

'தம்மையுணரார்' எனப் பொதுப்படக் கூறுதலானே, தாமொருபொருளுண்டென்பதை உணராத உலோகாயதரும், தம்மைக் குணிப்பொருளென்று உணராத புத்தர் சாங்கியர் மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு அடிமையென்று உணராத ஏனைச்சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவிதசைவரும் தம்மை உடைப்பொருளெனக் கொள்ளினும், அவருட் பாஞ்சராத்திரிகள், உடையானல்லாதானை உடையான் என மயங்கிக் கோடலானும், உடையானுக்குப் பரிணாமங் கூறுதலானும், சிவாத்துவிதசைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணாமங் கூறுதலானும், பிறவாற்றானும் அவரும் தம்மையுணரார் எனக் கொள்க.

'தம்மையுணர்ந்து தன்னுணர்வார்' எனவே, தம்மையுணரார் தன்னுணரார் என்பது தானே போதரும் என்பது பற்றி உணராரென்றொழிந்தார். முன்னின்ற உணரார் எதிர்மறை வினைப்பெயர்.

அவர் உடங்கியைந்து தம்மிற் புணராமையாவது, பிறவிக்குருடர் பலர் குழீஇக்கொண்டு வேழங்காண்டல்விருப்பான் அதுநின்றுழிச் சென்று கையினால் ஒவ்வோருறுப்பினைத் தைவந்து, வேழமாவது முறம்போல்வதெனவும், உரல்போல்வதெனவும், உலக்கைபோல்வதெனவும், மலைபோல்வதெனவும் தம்முண் மாறுகொண்டு ஒருவரையொருவர் மறுத்துக் § கலாம் விளைத்தல் போலச், சித்தாந்தநெறிநின்று ஆசான்றிருவருள் பெறுதார் தத்தம் உணர்விற்கேற்பச் சமயநூல்களில் ஒவ்வொன்றனை ஆராய்ந்து அவற்றிற்கூறும் ஏகதேசப்பொருள்களைபற்றிக்கூறி ஒருவரையொருவர் மறுத்துத் தம்முண் மாறுகொண்டு கலாம்விளைத்தல். அங்ஙனங் கலாய்க்கின்றுழிக் கண்ணுடையானொருவன் நோக்கி, இவர் செவிமுதலிய ஓரோருறுப்புக்களைபற்றிக்கூறிக் கலாம்

* சிவப்பிரகாசம், அ-ம் சூ. ஆன்மதரிசனம். க. தன்னறிவு. † மேற்படி, கூ-ம் சூ. ஆன்மசுத்தி. ௩. இந்நிலை. ‡ இந்நூல், கூ-ம் சூ. ௩-ம் அதி. நாடியோ. ¶ தொல்காப்பியம், சொல்லதிகாரம், வேற்றுமையியல். ௧0-ம் சூ. § கலாம் - கலகம்.

விளக்கின்முர் எனவும், வேழத்தினியல்பு வேறெனவுந் தெரிந்துணர்ந்து அவர்க்கு அதனை உணர்த்தலுறில், * "கொடிறும் பேதையும்" போலத் தாங்கொண்டதேபற்றி அவனையுந் தம்முளொருவனுகவைத்து இழித்துக்கூறி மாறுகோடலேயன்றிப் பொருளெனக் கொள்ளமாட்டார். அதுபற்றி அவன் வெகுளாது இவரியல்பு இதுவென நகையாடி யொழிந்துவிடும். அதுபோல, ஒவ்வொருசமயநூல்பற்றி அங்ஙனம் பிணங்குவாரை அவையெல்லாம் ஒவ்வோரேகதேச இயைபுபற்றிக் கூறினவாகலான், அவைபற்றிப் பிணங்கற்க எனவும் பொருட்டன்மை வேறெனவும் யாம் இந்நூலானுணர்த்தப்புகின், அவர் அதனைக் கொள்ளமாட்டாது பயிற்சிவயத்தால் தாங்கொண்டதேபற்றி எம்மையுந் தம்முளொருவராகவைத்து இகழ்ந்துரைப்பாராகலின், அவ்வழி அவர்வெள்ளறிவு இதுவென்றொழிவதேயன்றி அதனைக் கொள்ளாமென்பார் 'கேளாம்புறன்' என்முர். கேட்டல்—பொருளாகக்கோடல். அது "ஊறுகேளாது" என்பதனுனும், †"கேளாரும்—வேட்ப மொழிவதாம்" என்பதனுனும் அறிக.

புறன்—புறச்சமயம்பற்றி இகழ்ந்துரைக்கும் மொழியும் புறங்கூற்றுமொழியும் என்பது இரட்டுறமொழிதலாற் கொள்க. புறங்கூற்றுமொழியாவது புறச்சமயிகளல்லாத பாடாணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்துகூறும் மொழி.

இச்சமயங்களெல்லாம் புறப்புறச்சமயமும், புறச்சமயமும், அகப்புறச்சமயமும், அகச்சமயமும் என நான்குவகைப்படும். அவற்றுள், புறப்புறச்சமயம் உலோகாயதம், ‡ நால்வகைப்பௌத்தம், ஆருகதம் என அறுவகைப்படும். புறச்சமயம் தருக்கம், மீமாஞ்சை, ஏகான்மவாதம், சாங்கியம், யோகம், பாஞ்சராத்திரம் என அறுவகைப்படும். அகப்புறச்சமயம் பாசுபதம், மாவிரதம், காபாலம், வாமம், வைரவம், ஐக்கவாதசைவம் என அறுவகைப்படும். ¶ அகச்சமயம் பாடாணவாதசைவம்முதற் சிவாத்துவிதசைவமீறுக அறுவகைப்படும். இவையெல்லாம் அகம் புறம் என்று இரண்டாய் அடக்குமாறும் ஓர்ந்துணர்க.

இவ்வாறிரண்டாய் அடக்கியும் அவற்றைத் தம்முள் வேறுபாடுநோக்கி நான்காக வகுத்துக்கூறுதலும் அமையும் என்பது, தொல்காப்பியத்தில் அகம் புறம் என்றிரண்டாய் அடக்கிக் கூறிய பொருளைத் தம்முள் வேறுபாடுநோக்கிப் பன்னிருபடலத்தில் அகம் அகப்புறம் புறம் புறப்புறம் என நான்காகப் பகுத்தோதியவாற்றானுமுணர்க. இஃதறியாதார், தொல்காப்பியமும் பன்னிருபடலமும் தம்முண் முரணுவனவாகக் கருதி, அவற்றுள் ஒருநூலையேபற்றி மற்றொன்றனை இகழ்வர்.

---

* இது திருவாசகம், போற்றித்திருவகவல். ௬௬-ம் அடியிலுள்ளது. கொடிறு என்பதை இக்காலத்தார் குறடு எனவழங்குப. † திருக்குறள். ௬௪-ம் அதி, சொல்வன்மை. ௩. கேட்டார்ப். ‡ இவை பின்னர்க் கூறப்படும். ¶ அகச்சமயம் ஆறுவன:—பாடாணவாதசைவம், பேதவாதசைவம், சிவசமவாதசைவம், சிவசங்கிராந்தவாதசைவம், ஈசுவரவவிகாரவாதசைவம், சிவாத்துவிதசைவம் என்பன. சிவாத்துவிதசைவம் நிமித்தகாரணபரிணாமவாதசைவம் எனவுங் கூறப்படும்.

ஈண்டுக்கூறிய சமயத்தாருள், உலோகாயதர்முதல் ஆருகதரீருகிய அறு வரும், வேதஞ் சிவாகமமிரண்டனையும் நிந்திக்கும் நாத்திகராயினும், ஒருநூ லென்றும் பிரமாணமென்றுங்கொண்டு ஒருநெறிக்கண்ணே நிற்றலான் அவர் சமயம் புறப்புறச்சமயம் என வேறுவைத் தெண்ணப்பட்டன.

தார்க்கிகர்முதற் பாஞ்சராத்திரிகளீருகிய அறுவரும், வேதம் பிரமாணம் எனப் பொதுவகையாற் கொள்ளினும், அவருள் தார்க்கிகர், *தன்னுற் பிரா மாணியங் கொள்ளாமையானும், † வேதப்பொருளோடு முரணிப் பொருட்ட ன்மை கோடலானும், மீமாஞ்சகர் கருமகாண்டமாகிய வேதமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு ஞானகாண்டமாகிய உபநிடதங்களை இகழ்தலானும், ஏகா ன்மவாதிகள் ஞானகாண்டமாத்திரைக்கே பிரமாணங்கொண்டு கருமகாண்ட த்தை இகழ்தலானும், ஏனைமூவரும் வேதவாக்கியங்களில் தத்தம்மதத்திற்குப் பொருந்துவனமாத்திரையே எடுத்துக்கொண்டு ஏனையவற்றிற்குப் பிரமாணங் கொள்ளாமையானும், வேதப்புறமாகிய நூல்களைப் பிரமாணமெனக் கோட லானும், இவ்வறுவருஞ் சிவாகமநிந்தகராகலானும் இவர்சமயம் புறச்சமயம் என வேறுவைத் தெண்ணப்பட்டன.

பாசுபதர் முதலிய ஐவரும், வேதஞ்சிவாகமமிரண்டிற்கும் பொதுவகை யாற் பிரமாணங்கொள்ளினும், அவ்விரண்டிற்கும் புறமாகிய பாசுபதமுதலிய நூல்கட்குச் சிறப்புவகையாற் பிரமாணங் கோடலானும், வேதஞ் சிவாகமமி ரண்டினும் ஆகா என விலக்கப்பட்டனவற்றை ஆசரித்தலானும், ஐக்கவாத சைவர் வேதஞ் சிவாகம மிரண்டிற்கும் சிறப்புவகையாற் பிரமாணங்கொண்டு அவற்றில் விலக்கியன ஒழித்து விதித்தவழி ஒழுகுவாராயினும் எல்லாப்பெரு ங்கேட்டிற்கும் மூலகாரணமாகிய ஆணவமலத்துண்மை கொள்ளாமையானும், அதனுண்மை சாதிக்குஞ் சிவாகமவாக்கியங்களை இகழ்தலானும் அவ்வறுவகை ச்சமயமும் அகப்புறச்சமயம் என வேறுவைத் தெண்ணப்பட்டன.

ஏனைப்பாடாணவாதசைவர் முதலிய அறுவரும் பொருளுண்மை யெல் லாஞ் சித்தாந்தசைவரோடொப்பக் கொள்ளும் அந்தரங்க உரிமையுடைய ராயினும், அவ்வப்பொருள்கட்குக் கூறும் தன்னியல்பு பொதுவியல்பு மாத்தி ரையின் முரணுதலான் அவர்சமயம் அகச்சமயம் என வேறுவைத்தெண்ண ப்பட்டன.

இவ்வாறு நால்வகைச்சமயங்கட்கும் சித்தாந்தசைவத்தோடுளதாகிய வேற்றுமைத் தாரதம்மியங் கண்டுகொள்க.

அகச்சமயமாறனுட் சிவாத்துவிதசைவமாவது நிமித்தகாரணத்துக்குப் பரிணமங் கூறுவதாகலின், அது நிமித்தகாரணபரிணமவாதம் எனவுங் கூறப் படும். அங்ஙனங்கொண்ட ‡சிவாத்துவித வியல்பறியாதார், சிவாத்துவிதசைவ

---

* தார்க்கிகர் வேதத்தைச் சுவதப்பிரமாணமென்று கொள்ளாது பரதப்பிரமாண மென்று கொள்வர். சுவதப்பிரமாணம் தானே பிரமாணமாவது. பரதப்பிரமாணம் ஈசுவர னுற்சொல்லப்பட்டமையிற் பிரமாணமாவது. † வேதப்பொருளோடு முரணிப் பொரு ட்டன்மைகோடலாவது:—பரமான்மாவைச் சகுணப் பொருள் என்று கோடல். வேதம் நிர்க்குணப்பொருள் என்று கூறும். ‡ சிவாத்துவிதசைவத்துண்மையுணராதார் எனவும் பாடம்.

மாவது யாதோ எனவும், *"நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்—குலவினர்" என்ற மையின் இறுதிக்கண் எடுத்தோதப்படும் சுத்தசைவம்போலும் எனவும் மயங்குப. சுத்தசைவம் நுட்பப்பொருளுணராமைமாத்திரையேபற்றி வேறுவைக்கப்பட்டதன்றிக் கருத்துவகையாற் சித்தாந்தசைவத்தின் வேறன்மையிற் சுத்தசைவம் சித்தாந்தசைவத்துள் அடங்குமென்றுணர்க. அற்றாகலினன்றே, *"நிலவுலோ காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்—குலவின ரளவளாவாக் கொள்கைய தாகி" என ஏனைச்சமயங்களை எடுத்தோதி விலக்கிச் சுத்தசைவத்தை அங்ஙனம் விலக்காதொழிந்ததூஉ மென்க.

இனி, இவ்வாறன்றிப் பாடாணவாதத்திற்கும் பேதவாதத்திற்குந் தம்முள் வேறுபாடு சிறிதாகலின், அவ்விரண்டனையும் ஒன்றாகவைத்தெண்ணிச் சுத்தசைவத்தையு முடன்கூட்டி அகச்சமயமாறெனக் கோடலுமொன்று. இங்ஙனமாகலான் †"மெய்தரு சைவ மாதி யிருமூன்றும்" என்றதூஉம் பாடாணவாதம் முதலிய அறுவகைச்சைவங்களையுமெனக் காண்க. பாசுபதர் முதலியோர் கலைக்கு மேலுள்ள தத்துவங்களை உணராமையின் அவர் †"வித்தையாதி—யெய்துதத் துவங்க ளெய்வர்" எனக் கோடல் பொருந்தாமை அறிக. ஐக்கவாதசைவர் கலைக்குமேலுள்ள தத்துவங்க ளுண்டெனக் கொள்வாராயினும் மூலமலம் உண்டென்பதறியாமையின் மூலமலம் நீங்கிய முத்தர்க்கன்றிச் சுத்த தத்துவ புவனங்களிலெய்துதல் கூடாமையின், அவர்க்கு முத்தித்தானம் மோகினிக்குமேல் சுத்தவித்தைக்குக் கீழ் விஞ்ஞானகலர்க்குரிய தானமேயாமாகலின், ஏனைப்பாடாணவாதசைவர் முதலியோரே †"வித்தையாதி * * * தத்துவங்களெய்வர்" என்றறிக. ‡"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்" என்புழியும் அகச்சமயமென்றது, ¶"ஏக னனேக னிருள்கரும மாயையிரண்டு" என்னும் ஆறுபொருளுங்கொண்ட பாடாணவாதம் முதலிய அறுவகைச்சைவங்களையேயா மெனவும், புறச்சமயமென்றது அங்ஙனம் பொருளுண்மை கொள்ளாத ஏனை §மூவகைப் புறச்சமயங்களையு மெனவும் உணர்ந்துகொள்க.



# புறப்புறச்சமயம்.

## ** உலோகாயதம்.

புறப்புறச்சமயமாறனுள் உலோகாயாதமாவது:—காண்டலளவை ஒன்றே பிரமாணம்; காணப்படும் நிலம் நீர் தீ வளி என நான்கே தத்துவங்கள்; இவை நித்தப்பொருள்கள்; இவற்றின் கூட்டமே உடம்பு; பாக்கடையுஞ் சுண்ணும் புங் கூடியவழிச் செவ்வண்ணம் பிறக்குமாறுபோல இவற்றின் கூட்டரவின்

* சிவப்பிரகாசம், உண்மையதிகாரம், நூற்கருத்து. க. நிலவுல. † சிவஞான சித்தி, உ-ம் சூ. எஉ. மெய்தரு. ‡ சிவப்பிரகாசம், மங்கலவாழ்த்து. எ. ¶ திருவருட்பயன், அறியுநெறி. உ. § இவை பின்னர்க் கூறப்படும். ** இவ்வுலோகாயதமதம் சாருவாகமதம் எனவும் பெயர்பெறும். ஈண்டுக்கூறும் மதங்களின் இயல்புகள் நீலகண்டபாடியத்திலும் சர்வதரிசனசங்கிரகம் என்னும் நூலிலும் பரக்கக்காணலாம். இவற்றுள் உலோகாயதமத வியல்பு வான்மீகிராமாயணத்தில் அயோத்தியாகாண்டத்து கos-ம் அத்தியாயத்தும் கூறப்பட்டிருக்கின்றது.

ஒருணர்வுண்டாம்; அவ்வுணர்வு உடம்பு வளரவளரும் தேயத் தேயும் ஆக வின் உடம்பிற்கு வேறே உயிரென்பதும் பொய்; உடம்பிற்கு இன்பத்துன் பங்கள் இயல்பா யுள்ளன; இவற்றிற்குக்காரணம் வினை என்பதும் பொய்; மயிலைச் சித்திரித்தாரையும் குயிலைக் கூவுவித்தாரையுங் காணுமையிற் கடவுளுண் டென்பதும் பொய்; இம்மையின் மங்கைப் பருவத்து மகளிரோடு மணந்து உண்டுடுத்து வாழ்வதே துறக்கவின்பம்; அதுபெறுது பகைவரால் நோயால் வறுமையால் நூல்களாற் பிறவாற்ருல் வருந்துவதே நிரயத்துன்பம்; வேறே துறக்கநிரயமுள என்பதும் பொய்; நான்கு பூதக்கூட்டரவிற் பிராணவாயு ஒன்று நீங்கில் உணர்விழுந்து உடம்பு நாசமாம்; அதுவே வீடுபேறு; வேறே வீடுபேறுண்டென்பதும் பொய்; இவ்வுண்மை உணராத மடவோர் மறுமை யுண்டெனக்கொண்டு தவங்கள் பட்டினி முதலியவற்ருன் வருந்துவர்; கற்பு முதலிய * சங்கேதநூல்கள் மதுகையின்றி மதியுடையோராற் செய்யப்பட்டன; பொன் நிலம் உணவு முதலிய தானங்களை உயர்த்துக்கூறும் நூல்கள் பசியான் வருந்தி நல்கூர்ந்தோராற் செய்யப்பட்டன; தேவதலம் தண்ணீர்ப் பந்தர் கூவல் பொய்கை சோலை முதலியன செய்தலை உயர்த்துக்கூறும் நூல்கள் வழிச்செல்வோராற் கூறப்பட்டன; ஆகலான் இவற்றைக்கைவிட்டு உழவு பசுக்காவல் வாணிகம் செங்கோன்முறைமை முதலியனவாக ஆன்ருேர் காட்டிய நெறியினின்று இம்மையின்பங்களை நுகர்ந்து வாழ்தல் உறுதிப்பயன் என்பதாம்.

உலோகாயதநூல் செய்தோன் † பிருகற்பதி என்றுணர்க. இவ்வுலோகாயதர் தேகான்மவாதிகளும், இந்திரியான்மவாதிகளும், பிராணுன்மவாதிகளும், அந்தக்கரணுன்மவாதிகளும் எனப் பலதிறப்படுவர்.

## பௌத்தம்.

இனிப் பௌத்தமாவது:—உலகத்துப் பிறந்திறந்துழன்று ‡ சீலம் முதலியவற்ருன் நல்லுணர்வு தோன்றி முழுதுணர்ந்து முத்திபெற்றுத் தன்னைப் போற் பிறருமுணர்ந்து உய்தற்பொருட்டுக் கருணையிணுற் பிடகநூல் செய்தவன் புத்தக்கடவுள்; அந்நூலிற் கூறும் பொருள்களாவன ஞானமே ஆன்மா எனப்படும்; அது நீரோட்டம்போலச் ¶ சந்தானமாய்க் கணந்தோறுந்

* சங்கேதம் - நியமனம். † பிருகற்பதி - தேவகுரு. ‡ சீலம் முதலியன:—சீலம், சமாதி, பிரஜ்ஞை. இவ்வாறு திரிபிடகத்துட் கூறப்பட்டது. சீலம் விலக்கியவற்றை ஒழித்து விதித்தவற்றையேசெய்தல். சமாதி மனத்தை ஒருமுகப்படுத்தல். பிரஜ்ஞை மெய்ஞ்ஞானம். இவற்றுள் சீலம் பஞ்சசீலமும், அஷ்டசீலமும், தசசீலமுமென மூன்று வகைப்படும். கொல்லாமை கள்ளுண்ணுமை, பொய்யாமை, காமமின்மை, கள்ளாமை என்னும் ஐந்தும் பஞ்சசீலங்களாம். இவற்ருேடு இரவிற்றூய்மையில்லாத உணவைப் புசியாமை, சந்தனம் முதலிய மணமுள்ளபொருளை உபயோகியாமை, தரையிற் பாயின் மேலேபடுத்தல் என்னும் இம்மூன்றுஞ் சேர அஷ்டசீலங்களாம். இவற்ருேடு நாட்டியம் கானம் முதலியவற்றை விரும்பாமை, பொன்வெள்ளிகளைத் தொடாமை என்னும் இவ்விரண்டுஞ்சேரத் தசசீலங்களாம். ¶ சந்தானமென்பது தொடர்ச்சி. அது தாராசந்தானம், வாயுசந்தானம், தீபசந்தானம், பிபீலிகாசந்தானம் என நால்வகைத்து. தாராசந்தானமாவது ஓராற்றில் நீர் ஓடிக்கொண்டிருக்கும்போது ஓரிடத்தில் ஒரு விநாடியிற்கண்டநீர்

தோன்றி அழியும்; அங்ஙனம் தோன்றியழியுங்கால் *மான்மதநாற்றம்போல முற்கணத்தின் அழிவெய்தும் ஞானத்திற்றோன்றிய வாசனை, பிற்கணத்திற்றோன்றும் ஞானத்திற் பற்றுதலான் அறிவு முதலாயின நிகழும்; மற்றுமுள பொருளெல்லாங் கணந்தோறுந் தோன்றியழியும்; இந்த ஞானத்திற்றோன்றிய வாசனை அழிவதே முத்தி என்பதாம். ஞானங்கூடக் கெடுதல் முத்தி என்பாருமுளர்.

இப்பௌத்தமதத்தர் மாத்தியமிகர், யோகாசாரர், சௌத்திராந்திகர், வைபாடிகர் என நால்வகைப்படுவர். இந்நால்வரும், முறையே எல்லாப்பொருளும் சூனியம் எனவும், புறப்பொருள் சூனியம் எனவும், புறப்பொருளுண்மை வழியளவையான் அறியப்படும் எனவும், புறப்பொருள் காட்சிப்பொருளாம் எனவுங் கூறுப. இந்நால்வரும் ஆதிபுத்தனுடைய மாணாக்கர்.

## மாத்தியமிகர்.

இவருள், மாத்தியமிகராவார்:—உலகத்துப்பொருள்கள் உள்பொருளாயின், அழியா; இல்பொருளாயின், தோன்றா; உள்ளவுமில்லவுமாமெனின், முரணும்; இரண்டுமல்லவெனின், உணர்ச்சி கூடா; ஆகலின் இந்நான்கு பகுதியுமின்மையான் எல்லாப்பொருளுஞ் சூனியமே; மயக்கத்தாற் காட்சிப்பொருள்போலப் புலப்படுகின்றன என ஆசிரியன் பிடகநூற்பொருள் உணர்த்திய வழி அதனை உண்மையாகக்கொண்டு மேல் வினாவாதார்.

ஆசிரியன் மொழிந்தது பொருளெனக் கோடலிற் றலைமாணாக்கர், அதற்குமேல் வினா நிகழ்த்தாமையிற் கடைமாணாக்கர், என இரண்டும் ஒருங்குற்று நின்றமையின் மத்தியமமாணாக்கராய் மாத்தியமிகர் எனப் பெயர்பெற்றார் என்பது.

## யோகாசாரர்.

இனி, யோகாசாரராவார்:—அங்ஙனம் ஆசிரியன் உணர்த்தியவழிப் புறப்பொருள் பாழென்பதனை உடம்பட்டு ஞானமும் அவ்வாறு சூனியமாயின் வழங்கற்பாடு கூடாதன்றே! என வினாயினார்க்கு, நன்றே வினாயினீர்; ஞானமாத்திரம் உள்ளது; அந்தஞானம் சாகாரம் நிராகாரம் என்று இருவகைப்படும்; அவற்றுள், வட்டம் சதுரம் கறுப்பு சிவப்பு முதலிய வடிவிற்றாய் அகத்தே தோன்றும் ஞானம் சாகாரமெனவும், பந்தம் நீங்கியவழி அங்ஙனம் வேறுபாடின்றித் தொடர்ச்சியாய் எழுவதாகிய ஞானம் நிராகாரமெனவுங் கூறப்படும். இத்தன்மைத்தாகிய ஞானமேயன்றிப் பொருளென வேறில்லை; கனவின்கட் புறப்பொருளை அவாவாது கேவலஞானத்தானே வழங்கக் காண்டலான் நனவின்கண் வழங்குவதும் அவ்வாறேயாம்; அவ்வுணர்வு அகத்தின் நிகழ்வதேயாயினும் அநாதிவாசனைவயத்தாற் புறத்தே காணப்படுவதுபோலத் தோன்றாநின்றதெனக்கொள்க என்று ஆசிரியனுணர்த்தினான். அங்ஙனம்

---

அவ்விடத்தில் அடுத்தவினாடியில் இல்லையாயினும் அவ்வாற்றொழுக்கம் ஒன்றாகக் கருதப்படுதல். தாரை-நீரோட்டம். * முன் மான்மதம் வைத்தெடுக்கப்பட்டொழிந்த பெட்டியில் பின்வைக்கப்படும் பொருளிலும் அதன்வாசனை பற்றுதல் போல என்க.

உணர்த்தப்பட்டோர், ஆசிரியன் மொழிந்ததனை உடன்பட்டு அதற்குமேல் வினுயினாராகலின் யோகாசாரரென்றாயினர் என்பது.

பௌத்தமதவாசிரியன்மொழி உடம்படுதலை ஆசாரம் எனவும் அதற்கு மேல் வினவுதலை யோகம் எனவுங் குறியிட்டு வழங்குபவாகலான் அவ்விரண்டானும் பெற்ற பெயர் என்றுணர்க.

சௌத்திராந்திகர்.

இனிச், சௌத்திராந்திகராவார்:—அங்ஙனம் ஆசிரியனுணர்த்தியவழிப் புறப்பொருள் முழுதுஞ் சூனியம் என்பதென்னை? யான் இதுகண்டேனென்று உணர்வுழி யான் என்னும் ஞானம் அகத்துப்பொருளும் இது என்று சுட்டியறியப்படுவது புறத்துப்பொருளுமாகலான் அவற்றிற்கு வேறுபாடு தெற்றென விளங்குதலானும், இரண்டும் ஒருங்குணர்தலைபற்றி ஒன்றென்றல் பொருந்தாமையானும், இரண்டுமொருங்குணர்தல் எனவே வேறுபாடுண்மை தானே பெறப்படுதலானும், ஞானமே குடம் படம் முதலியனவாகத் தோன்றுநின்றதெனக் கோடல் பொருத்தமன்று என வினுயினார்க்கு, நன்றே வினுயினீர்! புறத்துத் தோன்றுவனவும் உள்பொருளேயாம்; அவை காட்சிப்பொருளல்ல; குடவடிவிற்றாகிய ஞானம் உணர்ந்தபின் னன்றிக் குடமுணர்தல் கூடாமையின் கணத்திற் றோன்றியழியுங் குடம்முதலாயின அங்ஙனம் உணருங்காறும் நிலைபெறுதலின்மையாற் குடம்முதலாயின தத்தம் வடிவினை ஞானத்தின் வைத்திட்டழிந்தபின்னை, ஞானத்துட் பற்றிய வடிவானே அங்ஙனம் இறந்துபோய குடம்முதலாயின வழியளவையின்வைத்து உணரப்படும். இவற்றிற்குக் காரணம்என்னை? எனில், புறம் அகம் என்னும் இருவகைச்சமுதாயமாம். அவற்றுட் புறச்சமுதாயம் நிலம் முதலாலன. அவற்றிற்குக் காரணம் பரமாணுக்கள். அவை, நிலவணு நீரணு தீயணு வளியணு என நால்வகைப்படும். அவை ஒருங்குபலதொக்கவழிப் புறச்சமுதாயந்தோன்றும். இனி, அகச்சமுதாயம் சித்தமும் சித்தப்பகுதியுமாம். அவற்றிற்குக் காரணம் ஐவகைப்படுங் கந்தங்கள்; அவை, உருவம் வேதனை ஞானம் குறி வாசனை என்பனவாம். கந்தம் என்பது சமூகம் என்னும்பொருட்டு. அவற்றுட் சித்தத்தாற் சிந்திக்கப்படுஞ் சத்தம் முதலாயின உருவக்கந்தம். இவை புறத்துள்ளனவாயினும் அகத்திற் சித்தத்தாற் சிந்திக்கப்படுதலின் அகச்சமுதாயத்துள்வைத்து எண்ணப்பட்டன. இனி, அகச்சமுதாயத்துட்பட்ட உடல் பொறி முதலியவற்றை உருவக்கந்தம் என்றலுமொன்று. அவ்வுருவக்கந்தத்தை உணருமுணர்வு ஞானக்கந்தம்; அது சாகாரம் நிராகாரம் என்னும் வேறுபாட்டாற் * பிரவிருத்திவிஞ்ஞானம் என்றும் † ஆலயவிஞ்ஞானம் என்றும் இருவகைப்படும். சாகாரஞ் சவிகற்பமாம். நிராகாரம் நிருவிகற்பமாம். இனி, இவ்வுணர்வாற் றோன்றும் இன்பதுன்பநொதுமல்கள் வேதனைக்கந்தம். சாத்தன் கொற்றன் முதலிய பெயர் குறிக்கந்தம். அப்பெயர்களாற் பகுத்துணருஞ் சவிகற்பவுணர்வு குறிக்கந்தம் எனவும், நிருவிகற்பமொன்றே ஞானக்கந்தம் எனவுங் கோடலுமொன்று. அவற்றின் வாசனை வாசனைக்கந்தமாம். வாசனையெனினுஞ் செய்கையெனினும் ஒக்கும். குறியெ

---

* பிரவிருத்திவிஞ்ஞானம் சவிகற்பமாய் விரியும் ஞானம். † ஆலயவிஞ்ஞானம் - அங்ஙனமின்றி ஒடுங்கும் ஞானம். ஆ - முழுதும். லயம் - ஒடுங்கல்.

ணினுஞ் சஞ்ஞையெனினும் ஒக்கும். இவ்வைந்தும் ஒருங்கு தொகுதலான் அகச்சமுதாயந்தோன்றும். இவற்றுள், உருவக்கந்தம் புறச்சமுதாயத்துள்வைக்கப்படும் ஏனை நான்குமே சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய அகச்சமுதாயம் என்பாருமுளர். சகம் முழுதும் இவ்விருவகைச் சமுதாயத்துள் அடங்குமென்று ஆசிரியன் உணர்த்தினன். அதுகேட்ட மாணக்கர், இங்ஙனம் மாணக்கர் வினவிய கடாவிற்கேற்ப அறிவுறுக்குஞ் சூத்திரங்கள் எவ்வளவின் முடிவுபெறும் எனக் கடாயினர். அவ்வழி ஆசிரியன் சூத்திராந்தங் கடாவிய நீர் சௌத்திராந்திகர் எனப்பெயர்பெறுக என்றமையின் அவர்க்கு அது பெயராயிற்று.

## வைபாடிகர்.

இனி, வைபாடிகராவார்:—ஆசிரியன் இங்ஙனம் உணர்த்தியவழி அது கேட்ட மாணக்கர், புறப்பொருள் ஞானத்தால் அநுமித்தறியற்பாற்றென்றதென்னை? ஞானமே தனக்குக் காட்சிப்பொருளாகலானும், காட்சிப்பொருள் ஒன்றுமின்றாயின் *வியாத்தியுணர்தற்கு இடம் இன்மையான் வழியளவை நிகழாதாகலானும் இது மாறுகோளுரைபோலும் எனக் கடாயினாராகலின், அவர் வைபாடிகர் எனப்பட்டார். மாறுகோளுரை எனினும் விபாடை எனினும் ஒக்கும். அவர்க்குப் புறப்பொருள் காட்சிப்பொருளாம் எனவும் ஆசிரியன் உணர்த்தினன்.

இங்ஙனம் வினவினர் கருத்துக்கேற்ப நால்வகைப்படுத்துச் செவியறிவுறுப்பினும், கணபங்கம் முதலியவற்றை உடம்பட்டுக்கோடலான் எல்லாரும் முறையானே முழுதுஞ் சூனியம் என்று கோடற்குரியர் என்பது ஆசிரியன் கருத்து. அங்ஙனமாயினும் வினவினர்கருத்துக் கேற்ப ஆசிரியன் கூறிய விடைப்பொருளே உறுதியாகக் கோடலின் மதம் வேறுபட்டு நால்வராயினர். இங்ஙனம் பௌத்தமதம் நான்குங் கண்டுகொள்க.

## ஆருகதம்.

இனி, ஆருகதமாவது:—சீவனும், அசீவனும், ஆச்சிரவமும், சமுவரமும், நிர்ச்சரமும், பந்தமும், வீடும் எனப் பதார்த்தங்கள் ஏழுள. இவற்றுட் சீவன் அநாதிசித்தனும் முத்தனும் பெத்தனும் என மூவகைப்படும். இவற்றுள், அநாதிசித்தன் அருகக்கடவுள். முத்தன் † மோகம் முதலிய பந்தத்தின்நீங்கினவன். பெத்தன் அவற்றுட் கட்டுண்டவன். இச்சீவன் எடுத்த உடம்பளவின் வியாபகமாய் உடம்புதோறும் வெவ்வேறும்.

இனி அசீவன், புற்கலமும் ஆகாயமும் தன்மமும் அதன்மமும் என நான்குவகைப்படும். அவற்றுள், உருவப்பொருளான நிலம் முதலிய நாற்பெரும்பூதமும், மரம்புல் முதலிய நிலையியற்பொருளும், பை முட்டை முதலியவற்றிற் பிறக்கும் இயங்கியற்பொருளும் எனப் புற்கலம் அறுவகைப்படும். இவற்றிற்குக் காரணம் பரமாணுக்கள். உலகாகாயமும் உலகங்கடந்த ஆகாயமும் என ஆகாயம் இருவகைப்படும். உலகங்களுக்கு உட்படுமாகாயம் உலகாகாயமென

* வியாத்தி - நியதமான உடனிகழ்ச்சி. † மோகம்முதலியன:—மோகம், அந்தராயம், கோத்திரம், நாமம், ஆயுஷ்யம், வேதனீயம், தரிசனவாரணீயம், ஞானவாரணீயம் என்பன.

வும், உலகங்கட்குப் புறத்தே எல்லையின்றி உள்ளது உலகங்கடந்தவாகாய மெனவும் உணர்க. தன்மம் புற்கலத்தின் வேறாய் நன்மையைப் பயப்பது. அதன்மம் தீமையைப் பயப்பது. அசீவபதார்த்தவகை நான்கும் இங்ஙனங் கண்டுகொள்க. இவையெல்லாம் அத்திகாயம் என்னும் வாய்பாடுகூட்டி வழங்கப்படும்.

இனி ஆச்சிரவமாவது, பொறிவழிச்சேறல்; கன்மத்தொடர்ச்சி என்பாரு முளர்.

சமுவரமாவது, அங்ஙனஞ் செல்லாமற்றடுத்து முத்திக்குக் காரணமாவது. அது நிலத்தில் எறும்புமுதலியன சாவாது வழிநோக்கி மெல்ல இயங்குதலும், இனியவை கூறுதலும், நியமவுணவும் முதலாயினவாம்.

நிர்ச்சரமாவது, சுடுபாறையிற்கிடத்தல் தலைமயிர்பறித்தல் முதலிய தவம்.

பந்தமாவது, இருப்புக்குடம்பை தன்னகப்பட்ட சுரைப்பழத்தை நீர்நிலையிற் கீழ்ச்செலுத்துமாறுபோலச் சீவனுடைய சுதந்திரத்தை அடக்கிப் பிறவியிற் சுழல்விக்கும் மோகம் முதலிய எண்குணங்களுமாம்.

வீடாவது, இருப்புக்குடம்பை தகர்ந்தவழிச் சுரைப்பழம் மேலெழுமாறுபோலச் சீவன் மோகம் முதலியவற்றின் நீங்கிச் சுதந்திரம்பெற்று உலகங்கடந்து எல்லையின்றியுளதாகிய ஆகாயத்தின் மேனோக்கியேசேறல். மேலெல்லைக்கண் இருத்தல் முத்தி என்பாருமுளர்.

இவ்வெழுவகைப் பதார்த்தங்களும் அநேகாந்தவாதத்தாற் கூறப்படும். அஃதாவது, உடம்பெடுத்தற்குமுன் சீவனுண்டோ? இல்லையோ? என்று வினுயவழி, உண்டாம்! இல்லையாம்! உண்டுமில்லையுமாம்! சொல்லொணுததாம்! உண்டுமாஞ்சொல்லொணுததுமாம்! இல்லையுமாஞ்சொல்லொணுததுமாம்! உண்டுமில்லையுமாஞ் சொல்லொணுததுமாம்! என எழுவகையான் இறுத்தல். வினுயவையெல்லாம் இவ்வாறே இறுக்கப்படும். ஆம் என்பது ஈண்டுச் சற்றென்னும் பொருட்டாயதோ ரிடைச்சொல். சொல்லொணுதது என்பது உளதுமிலதுமல்லாதது என்னும் பொருட்டு என்பது. எனவே, உள்ளதும் இல்லதும் உளதிலதும் இரண்டுமல்லதும் என நான்குபக்கமாய், இரண்டுமல்லதென்னும் பொருட்டாகிய சொல்லொணுததென்பதனேடு உள்ளதும் இல்லதும் உளதிலதும் என்னும் மூன்றுங்கூட்ட *எழுபக்கமாயின எனக் காண்க.

பொருளியல்பு இவ்வெழுவகையுள் ஒன்றுகச் சொல்லவும்படும் சொல்லவும்படாது என்பது கருத்தாகலின் முரணுமையுமறிக. இவ்வெழுவகையுள், ஒவ்வொன்றேபற்றிக் கூறும் ஏனைச்சமயத்தார் கோட்பாடெல்லாம் உள்ளடக்கிநிற்றலின், இங்ஙனம் அநேகாந்தவாதம் கூறுஞ் சமயமே மேற்பட்ட சமயம் என்பது அவர் கருத்து. ஆருகதம் முடிந்தது.

இவருள், உலோகாயதன் காட்சிவாதி எனவும், பௌத்தன் கணபங்கவாதி எனவும், ஆருகதன் அநேகாந்தவாதி எனவும், பௌத்தருள்ளும் மாத்தியமிகன் சூனியவாதி எனவும், யோகாசாரன் விஞ்ஞானவாதி எனவும், ஏனை

* வடநூலார் இதனை சப்தபங்கம் என்றும் சப்தபங்கமாகக்கூறுவதைச் சப்தபங்கி நியாயம் என்றும் கூறுவர்.

இருவருஞ் சமுதாயவாதிகள் எனவும் உணர்க. இவ்வாறு புறப்புறச்சமய மாறுங் கண்டுகொள்க.



# புறச்சமயம்.

## தருக்கம்.

இனிப், புறச்சமயமாறனுள் தருக்கமாவது:—வைசேடிகமும் நையாயிகமும் என இருவகைப்படும். அவற்றுள், வைசேடிகநூலிற் கூறும் பொருளாவன, திரவியம் குணம் தொழில் சாதி விசேடம் சமவாயம் இன்மை எனப் பதார்த்தம் எழுவகைப்படும்.

இவற்றுள் திரவியம், நிலம் நீர் தீ வளி ஆகாயம் காலம் திசை ஆன்மா மனம் என ஒன்பது வகைப்படும். அவற்றுள், நிலம் முதலிய நான்கும் அநித்தப்பொருள். அவற்றின் காரணங்களாகிய நால்வகைப் பரமாணுக்களும் ஆகாயம் முதலிய ஐந்தும் நித்தப்பொருள்கள். அவற்றுள் ஆகாயம் காலம் திசை மூன்றும் ஒரோவொன்றேயாய் வியாபகமாயுள்ளன. ஆன்மாக்கள் வியாபகமாய் எண்ணிறந்தனவாம். மனம் அணுவளவிற்றாய் ஆன்மாக்கடோறும் வெவ்வேறாயிருக்கும். ஆன்மா பரமான்மா சீவான்மா என இருவகைப்படும். பரமான்மா முற்றுணர்வுடையவன்; எல்லாம் வல்லவன்; அவனிச்சைவசத்தானே உலகந் தோன்றி ஒடுங்கும்; அவனாற் செய்யப்பட்டது வேதம். இனிச் சீவான்மாக்கள், சிற்றறிவினவாய் வினைக்கீடாகப் பிறந்திறந்து இன்பத்துன்பங்களை நுகர்வனவாம். ஆன்மாக்களுக்கு மனத்தோடு கூடாதவழி அறிவில்லை. இங்ஙனம் திரவியம் ஒன்பதுங் கண்டுகொள்க.

இனிக் குணங்களாவன, திரவியம் பற்றுக்கோடாக நிகழ்வன. அவை, உருவம் சுவை நாற்றம் ஊறு முதலியனவாக இருபத்துநான்குவகைப்படும். அவற்றுள், புத்தி இன்பம் துன்பம் விருப்பு வெறுப்பு முயற்சி அறம் பாவம் என்னும் எட்டுக் குணமும், *பாவனை என்னும் வாதனையும் சீவான்மாக்களுக்குச் சிறப்புக்குணங்கள். இவற்றுள், புத்தி விருப்பு முயற்சி மூன்றும் பரமான்மாவுக்குச் சிறப்புக்குணங்கள். பரமான்மாவின் குணங்களாகிய புத்தி முதலிய மூன்றும் நித்தியம். சீவான்மாக்களின் புத்தி முதலிய மூன்றும் அநித்தியம். ஏனையவும் ஓர்ந்துணர்க.

தொழிலாவன, எழும்பல் வீழ்தல் வளைதல் நிமிர்தல் நடத்தல் என ஐவகைப்படும்.

சாதியாவது, பலபொருட்குப் பொதுவாகிய தன்மை. அது பரம் அபரம் என இருவகைப்படும்.

விசேடமாவது, ஒவ்வொருபொருட்கே உரிய தன்மை. அவை, நிலவணு முதலிய பரமாணுக்களும் ஆகாயம் முதலிய ஐந்துமாகிய நித்தப்பொருள்களின் வேறுபாடுணர நிற்பனவாய்ப் பலவாம்.

---

* பாவனை - அநுபவத்தாற்றோன்றி நினைவிற்குக் காரணமாயுள்ளது.

சமவாயமாவது, அவயவம் முதலியவற்றிற்கு அவயவி முதலியவற்றோடு நீக்கமின்றி உளதாகிய இயைபு. அஃது ஒன்றேயாம்.

இன்மையாவது, முன்னின்மையும் அழிவுபாட்டின்மையும் என்று மின்மையும் ஒன்றிலொன்றின்மையும் என நான்குவகைப்படும்.

ஆக இங்ஙனம் கூறும் எழுவகைப் பொருள்களின் சிறப்பியல்பு பொதுவியல்பு வேற்றியல்புகளை உணரவே உடம்பு முதலியவற்றின் வேறாகிய ஆன்மாவினியல்பு விளங்கும். விளங்கவே, உடம்பு முதலியவற்றை நானென்று எண்ணிய மித்தையுணர்வு கழியும். அது கழியவே, முயற்சியின்மையின் அறம்பாவங்கள்இல்லையாய்ப் பிறவி ஒழியும். ஒழியவே, வரக்கடவனவாகிய துன்பங்களின்மையின் உடம்பு முகந்துகொண்ட வினைப்பயன் நுகர்ச்சியாற் கழிவுழி இறுதித் துன்பங்கெட்டு மனத்தோடு கூடுதற் கேதுவின்மையின் அறிவின்றிப் பாடாணம்போற் கிடப்பதே முத்தி என்பதாம். வைசேடிகநூல் செய்தவன் கணாதமுனிவன்.

இனி, நையாயிகமாவது:—வைசேடிகநூலிற் கூறியவற்றைச் சிறுபான்மை வேறுபடுத்திப் பிரமாணம் பிரமேயம் முதலாகப் பதினாறுவகையான் விரித்துக் கூறுவதாம். நையாயிகநூல் செய்தவன் அக்கபாதமுனிவன்.

இங்ஙனம் இருவகைப்படுந் தருக்கநூலார் சிலவற்றிற்குக் கணபங்கங் கூறுமாறுவது, உண்டவுணவின்சாரமே அவயவங்களாய்ப் பரிணமித்துக் கணந்தோறும் வளர்ந்துந் தேய்ந்தும் வேறுபடுதலின் அவயவியாகிய உடம்பும் வளர்ந்துந் தேய்ந்துங் கணந்தோறும் பிறிது பிறிதாம்; அங்ஙனம் கணந்தோறும் வளர்ந்துந் தேய்ந்தும் வருதல் காணப்படாதாயினும், மழைத்தாரையால் நிறையும் பொய்கைநீரும் இறைப்பக் குறையுங் கூவல் நீரும் போல முடிவின்கட் காணப்படுதலிற் கணந்தோறும் வளர்தலுந் தேய்தலுமுடைமை பெற்றாம். இவ்வாறே மண்டொடுதல் பூரித்தல் முதலியவற்றால் நிலமும், யாற்று நீர்ப்பெருக்கு முதலியவற்றாற் கடலும், கணந்தோறும் நிறைவு குறைவுடைமையான் இன்னோரன்னவையெல்லாம் கணபங்கமாய்ப் பிறிது பிறிது தோன்றும் எனக் கொள்வர்.

சௌத்திராந்திகரும் வைபாடிகரும் சமணரும் தார்க்கிகரும் பரமாணு காரணவாதிகளாயினும், அவருட் சௌத்திராந்திகரும் வைபாடிகரும் சமணரும் பரமாணுக்கள் ஒருங்கு பலதொக்குக் காரியமாமென்பர். தார்க்கிகர் அவ்வாறன்றி இறைவனிச்சைவயத்தாற் பரமாணுக்களிற் கிரியைதோன்றி இவ்விரண்டு பரமாணுக்கள் தம்மிற்சேர்ந்து இரட்டையணுவாய், அவை மும்மூன்று தம்முட்சேர்ந்து மும்மையணுவாய், அவை நந்நான்கு தம்முட்சேர்ந்து நான்மையணுவாய், இவ்வாறே ஒன்றற்கொன்று சினையும் முதலுமாய் முறையே தோன்றிக் காரியப்படும் என்றும், ஒடுங்குங்காலும் இறைவனிச்சைவயத்தான் அம்முறையே ஒடுங்கும் என்றுங் கொள்வர்.

தார்க்கிகரும் சௌத்திராந்திகர் வைபாடிகரும் நிலவணு நீரணு தீயணு வளியணு எனப் பரமாணுக்கள் நால்வகைப்படும் எனக் கொள்வர். சமணர்

அவ்வாறு கொள்ளாது பரமாணுக்களெல்லாம் ஒருதன்மையனவே என்பர். இவை தம்முள் வேற்றுமை.

இங்ஙனமாயினுந் தார்க்கிகர், வேதநெறியினொழுகி வேதத்திற்குப் பிரமாணங் கோடலிற் புறப்புறச்சமயிகளாகிய நாத்திகரோடு சேராது வைதிகருள்வைத் தெண்ணப்பட்டாரென்க. தார்க்கிகமதம் முடிந்தது.

## மீமாஞ்சை.

இனி, மீமாஞ்சையாவது:—வேதத்திற் கருமகாண்டவாராய்ச்சி செய்தற்கெழுந்த நூலாகலின் அதுவும் வேதம் எனப்படும். அது, பன்னிரண்டத்தியாயமாகச் சைமினி முனிவனாற் செய்யப்பட்டது.

அந்நூல்கூறும்பொருளாவது:—வேதம் ஒருவராற் செய்யப்பட்டதன்றி அநாதியே சுயம்புவாயுள்ளது; அங்ஙனமாகலின் வேதம்பிரமாணம்எனப்படும்.

வேதத்துள்ளும் "நீராடுக," "வேள்விசெய்க," "வழிபடுக" என்றாற்போலத் தொழிற்படுத்துவனவாகிய சோதகவாக்கியங்களே பிரமாணமாம். உலகத்துச் சொற்பொருளுணரும் அவாவினராகிய இளையோர், "ஆவினை யாக்க" "மேதியைவிடுக்க" என ஏவும் முதியோன் கூறும் மொழி கேட்டும், அதுபற்றி இயற்றும் முதியோன் செய்யுந் தொழிலினைக் கண்டும், "பின்பு மேதியை யாக்க" "ஆவினை விடுக்க" என மாறிக்கூறியவழி அங்ஙனஞ் செய்யுந் தொழிலினைக்கண்டும், இச்சொற்கு இதுபொருள் இச்சொற்கு இதுபொருள் எனவும், இங்ஙனஞ் சொற்பொருளெல்லாந் தொழிற்படுத்துஞ் சொல்லானே உணர்தற்பாலன எனவும் உணர்ந்து கொள்வாராகலின், வேதத்தினும் அவ்வாறு தொழிற்படுத்துஞ் சொற்களே பொருள்விளக்கிப் பிரமாணமாம் என்பது தெளியப்படும்.

அங்ஙனமன்றி, "உலகந் தோன்றி ஒடுங்கும்" என்றும், "தோற்றி ஒடுக்குதற்கோரிறைவனுண்டு" என்றும், "இந்திரன்முதலியகடவுளர்உளர்" என்றும், "அவர் இவ்வியல்பினர்" என்றும் பொருளியல்புகூறும் வாக்கியங்கள் பிரமாணமாகாவாயினும், அவை தொழிற்படுத்துவனவாகிய சோதகவாக்கியங்கட்குப் புனைந்துரைவகையால் உபகாரமாதல்பற்றிப் பிரமாணமெனக் கொள்ளப்படும்.

"இந்திராயசுவாகா," "வருணாயசுவாகா" என்றாற்போலும் வேதமந்திரங்களும் பொருளுடையவல்லவாயினும் விதிவாக்கியங்கட்கு உபகாரமாதல் பற்றிப் பிரமாணம் எனப்படும்.

"சோதிட்டோமம்" "பரிமேதம்" என்றாற்போலும் வேள்விப்பெயர்களும், வேள்விகளின் வேறுபாடு முதலிய உணர நிற்றலிற் பிரமாணமாம்.

இங்ஙனம் வேதத்தின் விதிவாக்கியமல்லாதனவும் ஒருவாற்றான் விதிக்கு உபகாரப்படுதல்பற்றிப் பிரமாணம் என உபசரித்துக் கொள்ளப்படும்.

வேதமெல்லாம் இங்ஙனம் விதியும் புனைந்துரையும் மந்திரமும் குறியீடும் என நான்குவகைப்படும். இவற்றுள், விதி அங்கியும் ஏனைமூன்றும் விதிக்கு அங்கமுமாம். விதிவாக்கியம் விதித்தலும் விலக்குதலும் என இருவகைப்படும். அவைபற்றிச் செய்யும் வினையும் அறமும் பாவமும் என இருவகைத்து.

"ஆன்மாவை அறிக" என விதித்தலின் ஆன்மாக்கள் பலவாய் நித்தமாய் வியாபகமாய்ப் பிறந்திறந்து வினைகளைச்செய்து வினைப்பயன்களை நுகர்ந்துவரும்.

வினைசெய்தவர்க்கு வினையே துறக்கம் முதலிய பயன்களை உதவும். காமியப்பயன்களைக்குறித்து வினைசெய்யின் அவ்வப்பயன்களை உதவும். காமியம் வேண்டாது விலக்கியனவும் ஒழித்து வேள்வி செய்யின் அவ்வினை முத்தியை உதவும்.

இவ்வான்மாக்களுக்கு வேருய்ப் பரமான்மா ஒருவன் உண்டு என்பதூஉம், உலகந் தோன்றி அழியும் என்பதூஉம் பொய்; உலகம் என்றும் இவ்வாறே நிலைபெறும் என்பதாம்.

இங்ஙனம் செய்யப்பட்ட சைமினிசூத்திரங்கட்குப் பாடியஞ் செய்தான் சபரமுனிவன். சூத்திரத்திற்கும் பாடியத்திற்குஞ் சிறுபான்மை வேறுபாடு கொண்டு பட்டாசாரியன் சூத்திரமதம்பற்றி வழிநூல் செய்தான். பட்டன் மாணுக்கனுகிய பிரபாகரன் பாடியமதம்பற்றி வழிநூல்செய்தான். இங்ஙனமாகலின் மீமாஞ்சைமதம் இருவகைப்பட்டது.

பட்டாசாரியன், கன்மமே பயன்கொடுக்கும் என்றும் முத்தியில் நையாயிகர்போல ஆனந்தமுண்டு என்றுங் கொள்வன். பிரபாகரன், கன்மநாசத்தில் அபூருவம் என ஒன்று தோன்றிநின்று பயன்கொடுக்குமென்றும் வைசேடிகர் போலப் பாடாணம்போற் கிடப்பதே முத்தியென்றுங் கூறுவன்; பொருட்டன்மைகளினுஞ் சிறுபான்மை பட்டாசாரியனில் வேறுபடக்கூறுவன். பிரபாகரமதம் எனினுங் குருமதம் எனினும் ஒக்கும்.

மீமாஞ்சைநூல் பன்னிரண்டத்தியாயத்துள் முதலத்தியாயம் முதற்பாதத்திற் கருமங்களுக்கு நேரே பிரமாணமான விதிவாக்கியங்கட்குப் பிரமாணம் இல்லை என வாதிகள் கூறுஞ் சங்கைகளை மறுத்து வேதம் சுயம்புவாகலிற் பிரமாணமாமென்றும், இரண்டாம் பாதத்திற் புனர்துரைவாக்கியங்களும் மந்திரங்களுமாகிய இரண்டும் விதிக்கு வேண்டப்படுந் திரவியங்களுந் துதிகளும் முதலியவற்றைத் தெரிவித்தலிற் பிரமாணமாமென்றும், மூன்றும் பாதத்தில் வேதத்தோடு முரணுது மனு முதலிய ஆன்ருேராற் செய்யப்பட்ட மிருதி முதலியவற்றிற்கு மூலவேதம் உண்டென்று வழியளவையான் உணரப்படுதலின் அவை பிரமாணமாமென்றும், நாலாம்பாதத்தில் விதிவாக்கியத்தில் அகப்பட்ட வேள்விப்பெயர்கள் கருமவேறுபாடும் மாட்டேற்றும் அநுவாதமும் முதலியன உணரநிற்றலானும் கருமத்திற்குப் பெயராதலானும் பிரமாணமாமென்றும் இவ்வாறு பிரமாணமாமாறு உணர்த்துதலிற் "பிரமாணவியல்" என்னும் பெயர்த்து.

இரண்டாமத்தியாயம் அங்ஙனம் பிரமாணமாகிய வேதத்திற் பெறப்பட்ட கருமங்கள் வேதவாக்கியங்களிற் கூறும் பகுதிவினை வேறுபடுதலும், ஒருவினை பலகாற்கூறுதலும், தொகைகூறுதலும், வேறுவேறு குறியிடுதலும், குணவேறுபாடு கூதறுலும், வேறுபிரகாணத்திற் கூறுதலுமாகிய இவற்றுன் ஒன்றற்கொன்று வேறுபாடுடைமை தெரிவித்தலிற் "கருமபேதவியல்" என்னும் பெயர்த்து.

மூன்றாமத்தியாயம், அங்ஙனம் பலவேறுவகைப்பட்ட கருமங்கட்குச் சுருதி இலிங்கம் வாக்கியம் பிரகரணம் தானம் குறியீடு என்னும் இவற்றானே இதற்குஇஃது அங்கம்எனவும், இஃது அங்கி எனவும், அங்கமுமங்கியுமாம் முறைமை கூறுதலின் "அங்காங்கியியல்" என்னும் பெயர்த்து. தலைமைப்பொருள் அங்கியுந் தலைமையில் பொருள் அங்கமும் எனக்கொள்க.

சுருதி முதலியவற்றுள் சுருதியாவது, வேறொன்றனை அவாவாது தான் கருதிய பொருளைத் தானே தெரிவிப்பது. அது விதிக்குஞ்சொல்லும் குறியீட்டுச்சொல்லும் விவகரிக்குஞ்சொல்லும் என மூவகைப்படும்.

இலிங்கமாவது, ஆற்றலாற் பொருளை உணர்த்துவது. அது சொல்லாற்றலும் பொருளாற்றலும் என இருவகைப்படும். ஒருமந்திரத்தின் வருந் தொழில்பற்றி அத்தொழில்நிகழுங் கருமத்திற்கு அம்மந்திரம் அங்கமென்பது சொல்லாற்றலாற் பெறப்படும். அவியினைக் கருவியாற் சுருவத்தாற் கையால் வாங்குக எனப் பொதுப்படக் கூறியவழி, கருவி இறைச்சிக்குஞ் சுருவம் நெகிழ்ந்த பொருட்கும் கை * புரோடாசம் முதலியவற்றிற்கும் அங்கம் என்பது பொருளாற்றலாற் பெறப்படும்.

வாக்கியமாவது, இங்ஙனஞ் சுருதியும் இலிங்கமுமின்றிச் சொற்றொடர்பு பற்றி உணரவருவது.

பிரகரணமாவது, "சோதிட்டோமம் வேட்க" என்றாற்போலும் விதிவாக்கியங்களாற் பொதுப்பட உணர்ந்து சிறப்பானறியப்படாத கன்மங்களான் அவாவப்பட்டு இவ்வாறு செய்யற்பாற்றென வகுத்துக்கூறுவது. அது பெரும் பிரகரணம் என்றும் இடைக்கட்பட்ட பிரகரணம் என்றும் இருவகைப்படும்.

தானமாவது, நிரனிறையிடமும் அண்மையிடமும் என இருவகைப்படும். அவற்றுள் அண்மை, சொல்லினண்மையும் அநுட்டானத்தினண்மையும் என இருவகைத்து.

குறியீடாவது, காரணத்தான்வரும் பெயர். அது வேதமரபுபற்றிய பெயரும் உலகமரபுபற்றிய பெயரும் என இருவகைப்படும். இவ்வாறு சுருதிமுதலியவற்றின் இயல்பு உணர்ந்துகொள்க.

நாலாமத்தியாயம், இங்ஙனம் அங்கமும் அங்கியுமாகிய கன்மங்களை அனுட்டிப்பிக்கும் பிரயோகமாமாறு கூறுதலிற் "பிரயோகவியல்" என்னும் பெயர்த்து. அங்கம் பிழைத்தவழி அங்கியின்பொருட்டு வேறங்கம் வேண்டப்படும்; அங்கி பிழைத்தவழி அங்கத்தின்பொருட்டு வேறங்கிவேண்டப்படுவதின்று; அங்கம் பிழைத்தவழி அதற்கு அங்கி பலவுளவாயின் யாதொன்றற்கு அங்கமாயே மற்றொன்றற் கங்கமாம் அதன்பொருட்டே வேறங்கம் வேண்டப்படும்; மற்றொன்றன்பொருட்டு வேண்டப்படுவதின்று என்றாற்போலத் தெரிவிப்பது பிரயோகமுறை என்க.

அஞ்சாமத்தியாயம், ஒருபிரயோகத்துட்பட்ட அங்காங்கிகளை அநுட்டிக்கும் முற்பிற்பாட்டு முறைமையைச், சுருதிமுறைமை பொருண்முறைமை

---

* புரோடாசம் - யாகத்திற்கொடுக்கும் ஒருவகையவி.

பாடமுறைமை முதலியனபற்றித் தெரிவித்தலின் "முறைமைப்பாட்டியல்" என்னும் பெயர்த்து.

இங்ஙனம் இரண்டாவதில், உற்பத்திவிதியான் அறியப்படுங் கன்மபேதமும், மூன்றாவதில், உபகரிக்கும்விதியான் அறியப்படும் அங்காங்கியியல்பும், நான்கினும் ஐந்தினும், பிரயோகிக்கப்படுவனவற்றின் விதியான் அறியப்படும் பிரயோகமும் முறைமைப்பாடுந் தெரித்துணர்த்தியபின், ஆறுமத்தியாயம், பயன்கூறும் முகத்தான் அதிகாரிகளாவாரைத் தெரிவித்தலிற் "பயனியல்" என்னும் பெயர்த்து; அதிகாரவியலெனினுமாம்.

இங்ஙனம் நால்வகைப்படும் எடுத்தோத்துவிதிகளை ஆராயுமாறு ஆறத்தியாயத்துள் உணர்த்தி, மேல் ஏழாவது முதற் பத்தாவதிறுவாய் நான்கத்தியாயங்களான் மாட்டேற்றுவிதி ஆராயுமாறு உணர்த்தப்பட்டது. இவ்வாறு செய்யற்பாற்று என எடுத்தோதுவது எடுத்தோத்துவிதி எனவும், அதுபோலச் செய்க என மாட்டெறிவது மாட்டேற்றுவிதி எனவும் உணர்க.

அவ்வற்றுள் ஏழாமத்தியாயம், "அதுபோலச் செய்க" என்னும் வசனத்தானும், அங்ஙனம் வசனமில்லவற்றிற்குப் பெயரொருமையானும், அதுவுமில்லவற்றிற்கு இதுசெய்க என விதித்தலான் அது செய்யுமாறு யாதானும் ஒன்றனோடு மாட்டெறியும் வசனமுண்டென வழியளவையா னுணரப்படும் விதியானும் மாட்டெறியுமாறுணர்த்தி, எட்டாமத்தியாயம், அங்ஙனம்பொதுப்பட வழியளவையான் உணரப்படுவனவற்றுள் எதுபோல் எது செய்யப்படும் என்று அவாயவழிச் சொல்லொப்புமை பொருளொப்புமைபற்றி இன்னதுபோலின்னது செய்யப்படும் எனத் தெரிந்தெடுத்துணர்த்துதலின் ஏழாவதும் எட்டாவதும் "மாட்டேற்றியல்" என்னும் பெயரினவாம்.

ஒன்பதாமத்தியாயம், அங்ஙனம் மாட்டெறிந்தமைபற்றிப் பகுதிப்பொருளிற் செய்யுங்காரியம் விகுதிப்பொருளிற் செய்வுழிப் பகுதியிற்கூறும் மந்திரமும் சாமமுந் தொழிலும் விகுதிப்பொருளுக்கேற்ப வேறுபடக்கொள்ளுந்திறம் நியாயம்பற்றி ஊகிக்குமாறு உணர்த்துதலின் "ஊகவியல்" என்னும் பெயர்த்து.

பத்தாமத்தியாயம், அங்ஙனம் ஊகித்தபின்னர் மாட்டெறிந்தவற்றுள் ஆண்டைக்கு உரியனவாகாதவற்றை நியாயம்பற்றி விலக்குமாறு உணர்த்துதலின் "விலக்கியல்" என்னும் பெயர்த்து.

இங்ஙனம் பத்தத்தியாயத்திலும் எடுத்தோத்துவிதியினும் மாட்டேற்றுவிதியினுந் தெரித்துணர்த்த வேண்டியவற்றைத் தெரித்துணர்த்தியபின்னர் ஏனை இரண்டத்தியாயத்திலும் இவ்விருவகைக்கும் பொதுவாகிய தந்திரமும் பிரசங்கமுமாமாறு உணர்த்துதலின், பதினோராமத்தியாயம் "தந்திரவியல்" என்னும் பெயர்த்து. பன்னிரண்டாமத்தியாயம் "பிரசங்கவியல்" என்னும் பெயர்த்து.

தந்திரமாவது, கருமஞ்செய்யுங்காற் றலைமைவினை பலவுளவாய் ஒருதேசமும் ஒருகாலமும் ஒருகருத்தாவுமாயவழி அவற்றிற்கெல்லாம் பொதுப்பட

அங்கவனுட்டானம் ஒருகாற்செய்ய அமையும் என்றாற்போல்வது. அங்ஙன மன்றி மறித்துஞ் செய்யற்பாலதாதலே அவாபம் என்பர். பிரசங்கமாவது,முத ற்கண்வந்த ஆசிரியன் அமுதுசெய்தற்கட்ட அறுசுவையடிசில் ஆசிரியனையன் றியும் ஒருதலையான் அங்ஙனம் அட்டிடுதற்குரியனுய்ப் பின்புவந்த மருகனுக் கும் உபகாரமாதல்போல, ஒன்றன்பொருட்டுச் செய்தவினை மற்றொன்றற்கும் உபகாரமாதல். ஆசிரியனுக்கட்ட அடிசில் ஆசிரியனுடன் வந்தவர்க்கும் உபகா ரமாதல் பிரசங்கமன்றென்பது.

மீமாஞ்சைநூலிற் பன்னிரண்டத்தியாயமும் நுதலிய பொருள் இங்ஙனம் தொகுத்துணர்த்தப்பட்டது. இவற்றிற்கு உதாரணம் விரிப்பிற் பெருகும். நையாயிகநூலிற் கூறுந் தருக்கமும் மீமாஞ்சைநூலிற் கூறும் நியாயங்களும் எல்லாநூல்கட்கும் உபகாரமாமெனக் கொள்க. மீமாஞ்சைமதம் முடிந்தது.

## ஏகான்மவாதம்.

ஏகான்மவாதமாவது:—மாயாவாதமும், பாற்கரியவாதமும், கிரீடாப்பிர மவாதமும், சத்தப்பிரமவாதமும் என நான்குவகைப்படும்.

### மாயாவாதம்.

அவற்றுள், மாயாவாதமாவது:—சச்சிதானந்தமாய் நித்தமாய் வியாபக மாய் நிற்பது பிரமம். பரமார்த்தத்திலே சத்தொன்றே மெய்ப்பொருள்; ஏனைய எல்லாம் பிரமத்தின்விவர்த்தனமாய் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினுற் காணப்படுவனவாகலிற் பொய். இங்ஙனம் தோன்றும் உலகத்திற்கு முதற்கார ணமாகிய மாயை, பிரமம்போலச் சத்துமன்றி முயற்கோடுபோல அசத்து மன்றி அநிருவசனமாயிருக்கும். அநிருவசனம் என்பது சொல்லொணுதது என்னும் பொருட்டு. இந்தமாயைக்கு வேருகிய பிரமரூபமே யான் என வே தாந்த ஞானத்தால் அறிவதே முத்தி என்பதாம்.

### பாற்கரியவாதம்.

பாற்கரியவாதமாவது:—முன்கூறப்பட்ட பிரமமே சடமுஞ் சித்துமாகிய உலகங்களாய்ப் பரிணமித்தது. அங்ஙனம் பரிணமித்து விகாரப்பட்டமையை அறியாமையினுற் பந்தமாயிற்று. பரமார்த்தத்தில் ஒருபொருளே. வேதாந்த ஞானத்தான் உடம்பிற்கு வேருகிய ஆன்மரூபம் விளங்கும். அதுவே பரப்பி ரமம் என்றறிந்து அதன்கண் இலயித்தலே முத்தி என்பதாம்.

### கிரீடாப்பிரமவாதம்.

கிரீடாப்பிரமவாதமாவது:—முன்கூறப்பட்ட பிரமமே நான். நான் ஒரு படித்தன்றிப் பலவேறுவகைப்பட்ட விகாரப்பொருள்களோடுகூடிப் பலவாற் ருன் விளையாடுகின்றேன் என்று இவ்வாறறிவதே முத்தி என்பதாம்.

### சத்தப்பிரமவாதம்.

சத்தப்பிரமவாதமாவது:—காரணமாகிய பரப்பிரமம் இறுதிக்காலத்திற் சத்தவடிவிற்றாயிருக்கும். அஃது அவிச்சையினுற் சடமுஞ் சித்துமாய உலகங் களாய் விரியும். முடிவின்கட் சத்தமாத்திரையே உள்ளது என்று இங்ஙனமறி வதே முத்தி என்பதாம். இங்ஙனம் நால்வேறுவகைப்பட்ட ஏகான்மவாதநூல் செய்தவன் வியாதமுனிவன்.

## சாங்கியமதம்.

இனிச், சாங்கியமதமாவது:—மூலப்பகுதி, நித்தமாய் வியாபகமாய்ச் சடமாய் எல்லாப்பொருட்குங் காரணமாய் முக்குணங்களும் ஒப்பநின்ற அவதரமாய் அருவாய் உள்ளது. இஃது இருபத்துநாலாந் தத்துவம். இதன்கட்டோன்றுங் காரியம் புத்திமுதல் நிலமீறான இருபத்துமூன்றுதத்துவமுள. இத்தத்துவம் இருபத்துநான்கிற்கும் வேறாய் நித்தமாய் விபாகமாய் அருவாய்ப் பல சாங்கியமாய் அறிவதுஞ்செய்வதுமின்றி அறிவுமாத்திரமாய் ஒன்றற்குக் காரணமாதலுங் காரியமாதலுமின்றி நிற்கும் ஆன்மாக்கள் இருபத்தைந்தாந் தத்துவமெனப்படும். இவ்விருபத்தைந்தாந் தத்துவமாகிய புருடன் முத்தியினும் பெத்தத்தும் ஒருதன்மையனேயாம். புருடனுக்கு மலினமென்பதில்லை. தாமரையிலை நீர்போல் ஒட்டற்று நிற்பன். அநாதியே புத்தியைச் சார்ந்த அவ்விச்சைவயத்தாற் பெத்தனெனப்பட்டு இன்பத்துன்பவுணர்வு தோன்றுநின்றது. புத்தியாவது மூலப்பகுதியின் பரிணமம்; அதுவே மான் என்றும் அந்தக்கரணம் என்றுங் கூறப்படும். அது பொறிவழியான் ஞானமாய்ப் பரிணமித்து விடயத்திற் செல்லும். புருடன் செய்வானென்பதும் புத்தி அறியுமென்பதும் வேற்றுமையுணராமையான் என்பது. மூலப்பகுதியையும் புருடனையும் பகுத்துணரவே அவிச்சை நீங்கும்; அதுவே முத்தி எனப்படும். ஆன்மாக்களுக்கு வேறாய் இறைவனொருவன் உண்டென்பது பொய் என்பதாம். இந்நூல் செய்தவன் கபிலமுனிவன். இதனுட் கூறுஞ் சற்காரியவாதம் சைவம்முதலிய சற்காரியவாத நூல்கட்கெல்லாம் உபகாரமாம். இதனுட் கூறும் அத்தியாசவாதம் மாயாவாதத்துக்கு உபகாரமாம். சாங்கியமதம் முடிந்தது.

## யோகமதம்.

யோகமதமாவது:—நிலம்முதற் புருடனீறாகிய இருபத்தைந்து தத்துவமும் பெத்தமுத்திகளும் நீதிக்கேதுவாம். இருபத்தாறாந் தத்துவம் இறைவனொருவனுளன்; அவன், முற்றுணர்வுடையனுய்ச் சாத்திரங்களை அருளிச் செய்து புருடருக்கு ஞானத்தை அறிவுறுப்பனுகலின், இவ்வான்மாக்களுக்கு வேறென்றுணரப்படும் என்பதாம். இந்நூல் செய்தவன் பதஞ்சலிமுனிவன். யோகமதம் முடிந்தது.

## பாஞ்சராத்திரமதம்.

இனிப், பாஞ்சராத்திரமாவது:—இருபத்துநாலாந் தத்துவமாகிய குணதத்துவத்தின்மேல் இருபத்தைந்தாந் தத்துவம் வாசுதேவனென்று ஒருவனுளன். அவனே பரம்பொருள். அவனிடத்தினின்றுங் கண்ணனும் அநிருத்தனும், மகரத்துவசனும், இரௌகிணேயனும் என நால்வர் உலகங்களைப் படைத்தற்பொருட்டுத் தோன்றினர். இந்த நால்வகை வியூகங்களாற் சடமுஞ் சித்துமாகிய எல்லாவுலகமும் படைக்கப்பட்டனவாகலான், எல்லாம் வாசுதேவன் பரிணமமேயாம். இங்ஙனங்கூறும் பாஞ்சாராத்திரத்தினன்றி வேதங்களினுறுதிப்பயனுண்டாகாது. ஆதலாற் பாஞ்சாராத்திரமுறையே தீக்கைபெற்று வாசுதேவனைவழிபட்டு வாசுதேவனுருவில் இலயமாதலே முத்தி என்பதாம். இந்நூல்செய்தவன் வாசுதேவன் என்க. பாஞ்சராத்திரமதம்முடிந்தது. இவ்வாறு புறச்சமயமாறுங் கண்டுகொள்க.



# அகப்புறச்சமயம்.

## பாசுபதம்.

இனி, அகப்புறச்சமயமாறனுள் பாசுபதமாவது:—ஆன்மாக்கள், பலவாய் நித்தமாய் வியாபகமாய்க் காரியகாரணக் கூட்டரவாற் றேன்றும் ஞானத்தாற் றனித்தனி வேறுயுள்ளன. இவ்வான்மாக்களுக்கு ஆணவமலம் என்பதொன்றில்லை. மாயை கன்மம் என்றிரண்டாற் பந்தமுற்று இன்பத்துன்பங்களை அனுபவிக்கும். இவற்றின் உவர்ப்புத்தோன்றிச் சாத்திரமுறையானே தீக்கை பெற்றவன்பால் ஈசனுடைய ஞானம் போய்ப் பற்றும். அப்போது, குடும்பத்தின் பாரம் புத்திரர்பால் வைத்தொழித்துத் துறவறத்திற் செல்வார்போல, ஈசனுந் தன்னுடைய குணங்களை அவன்பாற் பற்றுவித்துத் தான் அதிகாரத்தி னெழிவுபெற்று இருப்பன் என்பதாம்.

## மாவிரதம்.

மாவிரதமாவது:—மேற்கூறிப்போந்த இயல்பையுடைய ஆன்மாக்கள் அவ்வாறே பந்தமுற்றுச் சுகதுக்கங்களை அனுபவிக்கும். சாத்திரத்திற் கூறும் முறையே தீக்கைபெற்று எலும்புமாலையணிதல் முதலிய சரியைகளின் வழுவாதொழுகினவர் முத்தராவார். முத்தருக்குச் சிவனோடு சமமான எல்லாக்குணங்களும் உற்பத்தியாம் என்பதாம்.

## காபாலம்.

காபாலமாவது:—ஆன்மாக்களியல்பும் பந்தவியல்பும் மாவிரதர் கொண்டவாறேயாம். சாத்திரமுறையே தீக்கைபெற்றுப் பச்சைக்கொடி ஒன்று கைக்கொண்டு நாடோறும் மனிதர் தலையோட்டில் ஐயமேற்றுண்பர். உன்மத்தராய்ச் சிவனுவேசித்தலால் எல்லாக் குணங்களும் பெற்றுச் சிவசமமாவர் என்பதாம். இம்மூவரும், முறையே சங்கிராந்தசமவாதி எனவும், உற்பத்திவாதி எனவும், ஆவேசவாதி எனவு முணர்க. இம்மூன்றுமதமுஞ் செய்தார் முறையே மாயை வித்தை காலம் என்னுந் தத்துவங்களில் வைகும் உருத்திரர் மூவர் எனக் கொள்க.

## வாமம்.

இனி, வாமமாவது:—பாற்கரியன் கூறியவாறே சடமுஞ் சித்துமாகிய அனைத்துலகும் சத்தியின் பரிணாமமே. வாமநூலில் விதித்த முறையே ஒழுகிச் சத்தியில் இலயித்தலே முத்தி என்பதாம். இந்நூல் செய்தார் சித்தபுருடர். சத்திதத்துவத்தில் வைகும் ஓரான்மாவாற் செய்யப்பட்டது சுத்தசாத்தம் என்றறிக.

## வைரவம்.

இனி, வைரவமாவது:—பெரும்பாலும் வாமமதத்தோ டொத்துச் சிறுபான்மை ஆசாரங்களான் வேறுபட்டு வயிரவனை பரம்பொருள் எனக் கொண்டு வைரவபதத்திற் சேர்வதே முத்தி என்பதாம்.

## அயிக்கவாதசைவம்.

இனி, அயிக்கவாதசைவமாவது:—*"இன்மைமல மாயைகன்ம மென்றிரண்டே யிறைதா னிலங்குபல வுயிர்களுமுன் புரிந்தவிரு வினையின்—றன்மைகளா லெவர்களுக்குந் தனுகரண புவனந் தந்திடுமிங் கிதனாலே யிருபயனுஞ் சார்ந்து—கன்மமெலா நேராக நேராதன் மருவக் கடவுளரு ளாலெவையுங் கழித்திடுவ னதனாற்—பின்மலமா னவையணுகா பெருகொளிமுன் புளதே பெற்றிடும்" என்பதாம். இவ்வாறு அகப்புறச்சமயமாறுங் கண்டுகொள்க. காளாமுகம் சாம்பவம் முதலியனவும் இவற்றின் பகுதியாய் அடங்கும்.

இனிப், பாடாணவாதம் முதலிய †அகச்சமயங்களாறின் கருத்துஞ் சங்கற்பநிராகரணத்தில் விரித்தோதியவாற்றானறிக. ஈண்டும் வந்துழி வந்துழிக் காட்டுதும். ‡ஈண்டுக் கூறாத சமயங்களும், கூறியவற்றின் பகுதியாய் இவற்றுள்ளே அடங்கும். அஃதறிந்து அடக்கிக்கொள்க.

## அவையடக்கம் முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



---

* சிவப்பிரகாசம், ௨-ம் சூத்திரம். கூ † அகச்சமயமாறையும் கூ-ம் பக்கத்திற் காண்க. அவற்றுள் பாடாணவாதமாவது:—ஆன்மாவிற்கு ஆணவமலம் குணம்போலச் சகசமாய் அநாதியேயுள்ளது. அதனால் மாயை கன்மங்கள் ஆன்மாவைத் தலைக்கூடும். இறைவன் இருவினைக்கீடாகச் சரீரங்களைக் கொடுப்பன்; ஆன்மா அவற்றைப் பொருந்தி இன்பத்துன்பங்களை நுகரும்; அப்பொழுது கண்ணொளியைக் காசபடலம் மறைத்தாற்போல ஆன்மசைதன்னியத்தை ஆணவமலம் மறைக்கும்; அதனாற் பிறவித்துன்பம் அதிகரிக்கும்; பாசஞானமெல்லாந் தன்கீழ் வியாப்பியமென்றறிந்து நீங்குதன்மாத்திரையே முத்தி; முத்திபெற்றவழியும் ஆன்மாச் சகசமலம் நீங்குதலின்றிச் சுட்டறிவுஞ் சுகதுக்கானுபவமு மற்றுப் பாடாணம்போற் கிடக்கும் என்பதாம்.

பேதவாதமாவது:—மும்மலங்களுஞ் செம்பிற் களிம்புபோல ஆன்மாக்களுக்கு அநாதியே உள்ளன. அவற்றால் ஆன்மாச் சுகதுக்கங்களை அநுபவிக்கும். சேய்மைக்கட்சென்ற ஒருவனிழல் உச்சிப்போதில் அங்ஙனஞ்சேறலொழிந்து அவனடியில் வந்தொடுங்கினாற்போல, கரணங்களிற்சென்ற தன்னறிவு பக்குவம் வந்துழி அங்ஙனஞ்சேறலொழிந்து தன்மாட்டு வந்தொன்றி நிராதாரமாய் நிற்கும். இரசகுளிகையினாற் செம்பு களிம்பு நீங்கிப் பொன்னாயவாறுபோல ஆன்மாவும் இறைவன்றிருவருளான் மும்மலங்களும் நீங்கிப் பெறுவானும் பேறுமாயிருக்கும். அதன்மேலும் அடிமையாதலில்லை என்பதாம்.

சிவசமவாதமாவது:—பதிஞானம் பசுஞானம் பாசஞானம் என்னும் மூன்றும் அநாதியே உள்ளன; பாசஞானமாகிய இந்திரியங்கள் விடயங்களை விளக்கப் பசுஞானம் அவற்றைப்புசிக்கும்; இவ்விருஞானங்களும் நீங்கியவழி ஆன்மாச் சுவாலையின்றிக் கிடக்குந் தழல்போல ஒன்றையுஞ் சுட்டியறியாது அறிவுமாத்திரையாயிருக்கும்; அப்பொழுது, வேட்டுவன் புழுவை எடுத்துக்கொள்வதுபோலப் பதிஞானம் ஆன்மாவை எடுத்துக்கொள்ளும். புழு வேட்டுவனை நினைத்து அதன்வடிவாதன்மேலும் அதன்றொழிலையும் இயற்றிநிற்றல்போல, ஆன்மாவும் அப்பதியை நினைந்து அதன்வடிவாதன்மேலும் அதன்றொழிலையும் இயற்றிநிற்கும் என்பதாம்.

சிவசங்கிராந்தவாதமாவது:—ஆன்மாவின் சந்நிதியிற் காந்தபசாசம்போல உடல் இயங்குழி அதன்கணின்று கருவிகளே விடயங்களை அநுபவிக்கும். மலம்நீங்கும்வழிக்

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பொதுவியல்பு.

## பிரமாணவியல்.

### முதற்சூத்திரம்.

ஈண்டு வடமொழிச் சிவஞானபோதத்துட் கூறியவாறே பொது உண்மை என்று இரண்டதிகாரமாகப் பகுத்துக்கொண்டு, பிரமாணம் இலக்கணம் சாதனம் பயன் என நான்குதிறத்தாற் பொருளியல்புரைப்பான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், அவற்றுள் முப்பொருளின்வைத்து முதற்கட் பதியுண்மைக்குப் பிரமாணங் கூறும் முதற்சூத்திரத்துக்கு வார்த்திகமாகிய பொழிப்புரைப்பான் புகுந்து சூத்திரத்தை மொழிபெயர்த்துச்செய்கின்றார்.

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

எனவரும்.

இங்ஙனம் பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டு இனி அதன் கருத்துரைக்கின்றார்.

என்-து. சூ-ம். என்னின். சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்பதுணர்த்துதனுதலிற்று.

எனவரும்.

---

கண்ணாடியின் முகவொளி தோற்றுமாறுபோல முதல்வன் றிருவருள் ஆன்மாவின்மாட்டேச் சங்கிரமித்துத் தோன்றும். அவ்வழி உப்பளத்திலிட்டவையெல்லாம் உப்பாமாறுபோல ஆன்மாச் சிவமேயாய் அவ்வான்மாவின் சந்நிதியில் அறிவனவாகிய பசுகரணங்களுஞ் சிவகரணங்களாய் மாறிச் சிவத்தை அறியும் என்பதாம்.

ஈசுரவவிகாரவாதமாவது:—பலதுளையுடைய குடத்திலேற்றிய தீபம்போல நவத்துவாரமுடைய உடம்பில் ஆன்மா அறிவாய்நிற்கும். நிற்பினும் அவ்வப்பொறிகளளவாய் அவ்வவற்றைக்கூடி அறியும். அது மலபரிபாகமுஞ் சத்திநிபாதமுஞ் சேர்ந்தவழி முதல்வன்றிருவருளால் ஞானத்தைப்பெற்று, வெய்யிலிற் றிரிந்தானொருவன் மரநிழல்கண்டு ஆறுவதுபோல அம்முதல்வன் றிருவடிநிழலைத்தலைக்கூடும். இங்ஙனங் கூடியவழி, உயிர் முதல்வனது உபகாரத்தை அவாவாது என்பதாம்.

சங்காரம் ஐவகைப்படும். அவற்றுள் முதலாவது, *நிவிர்த்திகலையில் அடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; இரண்டாவது, †பிரதிட்டாகலையில் அடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; மூன்றாவது, ‡வித்தியாகலையில் அடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; நான்காவது, ¶சாந்திகலையில் அடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்; இறுதியது, §சாந்தியதீதகலையில் அடங்கிய தத்துவபுவனங்களின் சங்காரம்.

---

சிவாத்துவிதசைவமாவது:—பதிபசுபாசங்களதியல்பும், தத்துவங்களுக்குத் தோற்றவொடுக்கங்களும், அஞ்சவத்தைப்படும் வேறுபாடுகளும், அனைத்துஞ் சித்தாந்தசைவரோடொப்பக்கொண்டு, பசுபாசங்கள் பதிவியாபகத்தின் வியாப்பியமாய் நிற்பனவன்றித் தனித்தமுதலன்மையின் முப்பொருட்குந்தம்முள் வேற்றுமை குணகுணிகட்குத்தம்முளுளதாகியவேற்றுமைபோல உட்பேதமேயன்றிப் புறப்பேதமின்மையான் மரத்தில் வியாப்பியமான கவடுகோடுமுதலியன எல்லாம் மரமேயாமாறுபோலச் சதசத்தும் அசத்துமாகிய அனைத்தும் சத்தெனவேபடும். படவே, பதித்தன்மையின் வேறாய்ப்பசுவுக்கறியுந்தன்மை உண்டென்னிற் றனித்தமுதலெனப்பட்டு வழுவாமாகலிற் சத்தாகியபதிப்பொருளே ஆன்மாவினிடமாக நின்றறியும். அனைத்துஞ்சத்தாயவழிச் சத்தின்வேறாய்ப் பெறப்படும் பொருளொன்றின்மையின் அஃது அறியுமாறு யாங்ஙனம்? எனக் கடாயினார்க்குப் புறப்பேதமாய் இன்றாயினும் அகப்பேதமாகி அசத்தாகிய பாசமுண்மையின் அதனை அஃதறிதல்கூடும் என்பதாம்.

உஉ-ம் பக்கம். ‡ ஈண்டுக்கூறுதசமயங்களாவன:—துவிதவாதம், சௌரமதம், சௌமியமதம், பாணினிமதம், இரணியகருப்பமதம், ஸ்மார்த்தமதம், பௌராணிகமதம், கௌளமதம், யாமளமதம் முதலியனவாம்.

---

* நிவிர்த்திகலையில், பிருதிவிதத்துவம் ஒன்றும், காலாக்கினிருத்திரம் முதற் பத்திரகாளி இறுதியாகிய நூற்றெட்டுப் புவனங்களும் அடங்கும். † பிரதிட்டாகலையில், அப்பு முதற் பிரகிருதி இறுதியாகிய இருபத்துமூன்று தத்துவங்களும், அமரேசம் முதற் சீகண்டம் இறுதியாகிய ஐம்பத்தாறு புவனங்களும் அடங்கும். ‡ வித்தியாகலையில், புருடன் முதல் மாயை இறுதியாகிய ஏழு தத்துவங்களும்,வாமம் முதல் அங்குஷ்டமாத்திரம் இறுதியாகிய இருபத்தேழு புவனங்களும் அடங்கும். ¶ சாந்திகலையில், சுத்தவித்தைமுதற் சதாசிவம் இறுதியாகிய மூன்று தத்துவங்களும், வாமம் முதற் சதாசிவம் இறுதியாகிய பதினெட்டுப் புவனங்களும் அடங்கும். § சாந்தியதீதகலையில் சத்தி சிவம் என்னும் இரண்டு தத்துவங்களும், நிவிர்த்திமுதல் அநாசிரிதை இறுதியாகிய பதினைந்து புவனங்களும் அடங்கும்.

இவைகளேயன்றிச் சத்திவடிவாகிய ஐவகைக் கலைகளும் உள. அவை, முறையே மண் பெண் பொன் முதலிய பிரபஞ்சப் பற்றுக்களினின்றும் ஆன்மாக்களை நிவிர்த்திசெய்தலால் நிவிர்த்திகலை எனவும், அங்ஙனம் நிவிர்த்திசெய்யப்பெற்ற அவ்வான்மாக்களை வாசனைபற்றி மீளப் பிரபஞ்சத்தை நோக்காதவண்ணம் பிரதிட்டைசெய்தலாற் பிரதிட்டாகலை எனவும், (பிரதிட்டை - நிலைபெறுத்தல்.) அங்ஙனம் பிரதிட்டைசெய்யப்பெற்ற ஆன்மாக்களுக்கு அநுமானஞானம் ஆகமஞானமின்றிச் சுவாநுபூதிஞானத்தைப் பயப்பித்தலால் வித்தியாகலை எனவும், அங்ஙனஞ் சுவாநுபூதிஞானம்பெற்ற ஆன்மாக்களுக்கும் விருப்பு வெறுப்புச் சங்கற்பம் விகற்பம் முதலிய எல்லாத்துன்பங்களையும் சாந்தமாகச் செய்தலாற் சாந்திகலை எனவும், அங்ஙனஞ் சாந்தமாய் நின்றதும் ஒழியச் செய்தலாற் சாந்தியதீதகலை எனவுங் காரணப்பெயர் பெற்றன. சிவசத்தியாகிய திருவருட்சத்தி ஒன்றே காரியவேறுபாட்டால் இங்ஙனம் ஐந்து பேதமாயிற்று.

அவற்றுள், ஈண்டைக்கேற்புடையது இறுதிக்கண்ணதாகலின், ஈண்டுச் ‘சங்காரகாரணன்’ என்றது சுத்தமாயாபுவனந்தஞ் சங்கரிக்குஞ் சங்காரகாரணனாகிய பரமசிவனை; அயன்மாலொடுங்கூடக் குணதத்துவத்தில் வைகிப் பிரகிருதிபுவனந்தஞ் சங்கரிக்குங் குணிருத்திரனையன்று என உணர்க. என்னை? அவன் பிரகிருதியின் மேற்பட்ட புவனங்கட்குச் சங்காரகாரணனன்மையானும், பரமசிவன் இலயபோகவதிகாரம் என்னும் மூன்றவத்தையினும் முறையே அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்று திருமேனிகொண்டு, சத்தன் உத்தியுத்தன் பிரவிருத்தன் எனவும், சிவன் சதாசிவன் மகேசன் எனவும் பெயர்பெற்று நிற்பனென்றும், இங்ஙனம் தொழிலான் வேறுபட்டதன்றிப் பொருளான் வேறுபாடில்லை என்றும், பசுவர்க்கத்திற் பிரளயாகலரிற் பக்குவமுடையவன் சீகண்டருத்திரன் என்றுஞ் சைவாகமங்களெல்லாம் ஓதுதலின் மகேசுரமூர்த்தி இறுவாயான திருமேனியே பரமசிவனுக்குச் சுதந்திரவடிவம், ஏனையவை அன்னவல்ல என்பது பெறப்படுதலானும் என்பது. இவ்வேறுபாடுணர்த்தற்கன்றே பொதுப்படச் சங்காரகாரணனை என்றொழியாது ‘சங்காரகாரணனாயுள்ள முதலை’ என விதந்தோதியதூஉமென்க.

இவ்வேறுபாடுணராது மகாருத்திரனாகிய பரமசிவனைக் குணிருத்திரனாக வைத்தெண்ணுவோரை நோக்கி *“நம்மவரவரே—மூவரென் றேயெம் பிரானொடு மெண்ணிவிண் ணாண்டுமண்மேற்—றேவரென் றேயிறு மாந்தென்ன பாவந் திரிதவரே.” என வாதவூரடிகள் இரங்கிக் கூறிய திருவாக்கும் அறிக. இன்னும் †தேவரி லொருவ னென்பர் திருவுருச் சிவனைத் தேவர்—மூவராய் நின்ற தோரார்” எ-ம், ‡தேவராயு மசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர்—நாவராயு நண்ணுபாரும் விண்ணெரி காலீரு—மேவராய விரைமலரோன் செங்கண்மா லீசனென்னு—மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே.” எ-ம், ¶“மாவை யுரித்ததள்கொண் டங்க மணிந்தவனை வஞ்சர் மனத்திறையு நெஞ்சணு காதவனை—மூவரு ருத்தனதா மூல முதற்கருவை.” எ-ம், §வரியாய மலரானும் வையந் தன்னை—யுரிதாய ளந்தானு முள்ளூந் தற்கு—கரியானு மறியாத கள்ளின் மேயான்—பெரியானென் றறிவார்கள் பேசுவாரே.” எ-ம், 0“படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை.” எ-ம், **தேவர்கோ வறியாத தேவ தேவன் செழும்பொழில்கள் பயந்துகாத் தழிக்கு மற்றை—மூவர்கோ னாய்நின்ற முதல்வன்.” எ-ம், ††“முந்து நடுவு முடிவு மாகிய மூவ ரறியாச்—சிந்துரச் சேவடி யானே.” எ-ம், ‡‡“முந்திய முதனடு விறுதியு மானாய் மூவரு மறிகிலர்.” எ-ம், ¶¶“அரியாகிக் காப்பா னயனாய்ப் படைப்பா—னரனா யழிப்பவனுந் தானே.” எ-ம், §§“வீரனயனரி—யாரு மறியா வகையெங்க ளீசர் பரிசுகளே.” எ-ம் வரும் திருவாக்குக்களானும் ஓர்ந்துணர்க. இதுவே

* திருவாசகம், திருச்சதகம். ௪. சாவமுன்னாள். † சிவஞானசித்தி. ௧-ம் சூ. ௪௧. ‡ திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், திருமுதுகுன்றம், பழந்தக்கராகம். ௧. ¶ சுந்தரமூர்த்திநாயனார் தேவாரம், திருக்கானப்பேர். ௭. § திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், திருக்கள்ளில். ௧. 0 மேற்படி தேவாரம், திருப்பிரமபுரம், திருவெழுகூற்றிருக்கை. ௪-ம் அடி. ** திருவாசகம், திருச்சதகம். ௩௦. †† மேற்படி குயிற்பத்து. ௫. சுந்தர. ‡‡ மேற்படி திருப்பள்ளியெழுச்சி. ௮. ¶¶ பதினொராந்திருமுறை, திருக்கைலாயஞானவுலா. ௯-ம் அடி. §§ மேற்படி பொன்வண்ணத்தந்தாதி. ௧௫.

சுருதி மிருதி புராணம் இதிகாசம் எல்லாவற்றிற்குங் கருத்தென்பது, சிவதத்துவவிவேகமுடையார் *"குணநீதன்" என்னுஞ் சுலோகத்திற் கடாவிடைகளான் விரித்துக்காட்டியவாற்றான் அறிக.

இங்ஙனமாயினும், சீகண்டருத்திரன் அயன்மால்போலச் சகலரினன்றிப் பிரளயாகலரிற் பக்குவமுடையோனுய்க் கட்டுநீங்கி முத்திபெற்ற கடவுளாகலானும், † பரமசிவனுக்குரிய எல்லாப் பெயர்களும் வடிவமுந் தொழிலும் பெற்றுடையவனுகலானும், சைவாகமங்களை அறிவுறுக்குங் குரவனுகலானும், அயன்மாலிருவர்க்கு மேலாய்ச் சைவத்தினெய்திச் சமயதீக்கை பெற்றோரால் வழிபடுகடவுளாயினுன் என்க.

இங்ஙனம் கருத்துரைத்துக் கண்ணழித்துரைப்பான் புகுந்து ஈண்டு முதற்கண் உரைவகையாமாறு உணர்த்துகின்றார்.

## இதன்பொழிப்பு உரைத்துக்கொள்க.

எனவரும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு முன்னர்க் கண்ணழித்துரைக்கும் உரைபற்றி உரைத்துக்கொள்க என்றவாறு.

எனவே, பொழிப்புரை இங்ஙனம் இருவகைப்படும். அவற்றுள், கண்ணழித்துரைக்கும் பொழிப்புரைமாத்திரையே யாம் ஈண்டுரைக்கின்றாம். பிண்டமாகக்கொண்டுரைக்கும் பொழிப்புரை இதுபற்றி உணர்ந்துகோடலாமாகலின், அஃது யாமுரைக்கின்றிலம் என மாணுக்கர்க்கு அறிவுறுத்தவாறாயிற்று.

இங்ஙனம் பொழிப்புரை இருவகைப்படும் என்பது, ‡"பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப்—பிண்ட மாகக் கொண்டுரைப் பதுவே." எ-ம், ¶"பாடங் கண்ணழி வுதாரண மென்றிவை—நாடிற் றிரிபில வாகுதல் பொழிப்பே." எ-ம் ஓதியவாற்றானறிக.

இஃது, ஏனைச் சூத்திரங்களினும் உய்த்துணர்தற்பொருட்டு முதற்கண் வைக்கப்பட்டது. பிண்டப்பொருளெளினும் ஒக்கும்.

உரைத்துக்கொள்க என்புழிக் 'கொள்' என்பது, தற்பொருட்டுப் பொருட்கண் வந்த விகுதியாய், பகுதியோடியைதற்குரிய துச்சாரியை பெற்று உரைத்துக்கொள் என நின்றவழி, அதுவும் பகுதித்தன்மைப்பட்டு மேல்வரும் வியங்கோள் விகுதிபெற்றுத் தற்பொருட்டுப் பொருள் இனிது விளங்குதற்பொருட்டு உரைக்க என்னும் பொருளாய் நின்றது. இது §சூத்திரவிருத்தியுள் விரித்துரைத்தாம். ஆண்டுக் காண்க.

---

* கங-ம் சுலோகம். † சைவபுராணம் வாயுசங்கிதை பூருவபாகம், கஉ-ம் அத்தியாயம். [illegible] ‡ திவாகரம், ஒலிபற்றியபெயர்த்தொகுதி. சூ. க௦. ¶ இதனை நச்சினார்க்கினியர் தொல்காப்பியத் தெழுத்ததிகாரச் சிறப்புப்பாயிரவுரையில் உதாரணமாக எடுத்துக்காட்டினர். § தொல்காப்பியச்சூத்திரவிருத்தி. சக. சஉ-ம் பக்கம்.

இங்ஙனம் ஆசிரியர் ஆணைதந்தமையின் கண்ணழித்துரைபற்றிச் சூத்திரத்திற்குப் பதப்பொருள் கூறுதும்.

அவனவளது—என்மனார் புலவர். என்பது ஆண் பெண் அலி என்றாற் போலும் உலகத்தொகுதி, தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலுடைமையான், ஒருவனாற்றோற்றப்பட்டு நின்றுள்ளதேயாம். அற்றேல், அஃது யாவனினுளதாமெனின், தானொடுங்குதற்கு நிலைக்களமான கடவுளினின்றும் உளதாம். ஒடுங்கியவாறே ஒழியாது மீள உளதாவது எதனாலெனின், சகசமான ஆணவமலந் தீர்ந்தொடுங்காமையான் உளதாம். இங்ஙனமாகலின் சங்காரத் தொழிலைச் செய்யுங் கடவுளே முதற்கடவுளென்று கூறுவர் அறிவுடையோர் என்றவாறு.

'எனும்' என்பது, இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சமாய் இவ்வாறு என்னும் பொருள்குறித்து நின்றது. வடமொழி முதற்சூத்திரத்தில் * "ஆதி" என்றதும் அப்பொருட்டு. அவை என்பது தொகுதி; அஃறிணைப் பன்மைச்சுட்டுப்பெயரெனக் கொள்ளின், உள எனப் பிரித்துப் பயனிலையாக்கித் தாம் என்பது அசையாகக் கொள்க. வினைமை—வினையுடைமை. உடைமை—உடைத்தாந்தன்மை.

அவ்வக்காலத்தன்றி மூவினையும் ஒருகாலத்துப்படுதல் கண்டிலம் என்பாரை நோக்கித் தன்மையின் வைத்து ஓதினார்.

'தோற்றிய' எனப் பிறவினை வாய்பாட்டானோதுதலின், அதற்குரிய வினைமுதல் வருவித்துரைக்கப்பட்டது. தோற்றிய என்புழிப் படுசொற் றொக்குநின்றது; † "இல்வாழ்வான்" என்புழிப்போல.

திதிப்படும் உலகத்தைத் திதி எனவும் அந்தத்தைச் செய்யுங் கடவுளை அந்தம் எனவும் உபசரித்தார்.

காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின், 'தோற்றிய திதியே யொடுங்கி யுளதாம்' என உலகின்மேல் வைத்துக் கூறினார். சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்து இவ்வுலகம் என்றதும் இக்கருத்தேபற்றி என்க.

"தோற்றுவானொருவனுளன்; அவன் ஒடுக்கி உளதாக்குவன்" எனக் கடவுளின்மேல் வைத்தோதிய வடமொழிச் சூத்திரத்திற்குந் தாற்பரியம் இதுவே எனக்கொள்க.

ஏகாரம் தேற்றம். ஒடுங்கி என்பது பெயர். ஒடுங்கி என்புழி இன்னுருபும் மலத்து என்புழி ஆனுருபுந் தொக்குநின்றன. ஆம் என்பதனை முன்னுங் கூட்டுக. என்மனார் என்பது செய்யுண் முடிபாயதோர் ஆரீற்று முற்றுச்சொல். மன் எதிர்காலவிடைநிலை. அது ‡ "உயர்திணையென்மனார் மக்கட்சுட்டே" என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரையருரையானும் அறிக.

* ஸ்த்ரீபும்நபும்ஸகாதித்வாத:| † திருக்குறள், ௫-ம் அதி, இல்வாழ்க்கை. க.
‡ தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம். க.

ஈண்டுப் புலவர் என்றது அளவையினியல்புணர்ந்தாரை.

இதனுள், அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின் என்பது ஓரதிகாணம்; தோற்றிய திதியே யொடுங்கி யுளதாம் என்பது ஓரதிகாணம்; அந்தமாதி யென்பது ஓரதிகாணம்; ஆக மூன்றதிகாணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

இம்மூன்றும், ஒன்றற்கொன்று முறையே ஏதுவும் பயனுமாய் ஒருபொருண்மேல் வருதலின், ஒருசூத்திரத்தாற் கூறினார். வருஞ் சூத்திரங்களினும் இவ்வாறே கண்டுகொள்க.

தன்னாற் கூறப்படும் * பொருளும், அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர்கூறும் பக்கமும், அதனை மறுத்துக்கூறுஞ் சித்தாந்தத்துணிபும், இயைபும் என்னும் இவற்றிற்கு நிலைக்களம் ஈண்டு அதிகாணம் எனப்படும். அவற்றுள் இயைபு, நூலியைபும் அதிகாரவியைபும் ஓத்தியைபும் பாதவியைபும் அதிகாணவியைபும் என ஐவகைப்படும். அவையெல்லாம் ஆண்டாண்டுக் காட்டுதும்.



## முதலதிகாணம்.

இம்முதலதிகாணத்தாற் கூறப்படும் பொருளாவது, மேற் கருத்தாவின் உண்மை சாதித்தற்பொருட்டு உலகிற்கு முத்தொழிலுண்மை சாதித்தல்.

[உலகம் முத்தொழி லுடைத்து என்பதாம்.]

[அதற்கு அவை உளவோ இலவோ என்று இரட்டுறத்தோன்றும் ஐயப்பாடு.]

[ஈண்டு மீமாஞ்சைநூலாரும் உலோகாயதநூலாரும் உலகந் தோன்றுதலும் அழிதலு மின்றி என்று மிவ்வாறே நிலைபெறுவதாகலின், உலகம் காரியப்பொருளன்றாமெனவும், எனவே இதுகொண்டு கருத்தா உண்மை சாதித்தல் "முயல் கோடுடைத்து; ஆன்வயிற்றுப்பிறத்தலான்." என்பதனோடு ஒக்கும் எனவும் கூறுவர்.

அவருள் மீமாஞ்சைநூலார் கூறுமாறுவது, உலகந் தோன்றிநின்றழியும் என்பது காட்சியளவையாற் பெறப்படுவதுமன்று. அவிநாபாவமாகிய ஏதுக்காணுமையின் வழியளவையாற் பெறப்படுவதுமன்று. வேதத்துட் கூறப்படுதலாற் பெறுதுமெனின், வேதத்தில் "நடாத்துக," "நிறுவுக," "செய்க" என்றாற்போலத் † தொழிற்படுத்தும் வாக்கியங்களே சொற்பொருளுணரும் வேட்கையாளர்க்கு அங்ஙனம் ஏவுவோர் சொற்கேட்டு இயற்றுவோர் செய்யுந் தொழிலானே அவ்வச்சொற்பொருளுணரநிற்றலின் பிரமாணமாம்; அவ்வாறன்றிப் பொருளியல்பு கூறும் வாக்கியங்களாற் சொற்பொருளுணரப்படாமையின் அவை பிரமாணமாகாவாயினும், தொழிற்படுத்தும் வாக்கியங்கட்கு யாதானும் ஒருவாற்றான் உபகாரமாதலுடைமையான் உபசரித்துப் பிரமாணமெனக்

* இவற்றை வடநூலார் முறையே விடயம், சம்சயம், பூர்வபக்கம், சித்தாந்தம், சங்கதி என்பர். † தொழிற்படுத்தல் - ஏவுதல்.

கொள்ளப்படுமாகலான், அதுபற்றி உரையளவையாற் பெறப்படும் என்பதும் இன்றாகலான் உலகிற்கு முத்தொழிலுண்மை பெறப்படாது என்பதாம்.]

இவ்வாறு ஆசங்கை நிகழ்ந்தவழி அவ்வாசங்கையை நீக்கி முத்தொழி லுண்மை சாதித்தற்பொருட்டு எடுத்துக்கொண்ட மேற்கோள்;

**ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்றென்று சுட்டப் பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்தென்றது.**

எனவரும்.

எனவே, உலகந் தோன்றிநின்றழியும், அவனவளது என்று இவ்வாறு பகுக்கப்படும் அவயவப்பகுப்புடைமையின்; ஆடைபோலும். என்னும் அநு மானத்தானே மூவினையுடைமை துணியப்படும் என்பதாயிற்று.

'ஈண்டு' என்பது மூன்றதிகரணத்துள்வைத்து முதலதிகரணத்தில் என் பதாம்.

சொற்பொருளுணர்ச்சி தொழிற்படுத்துஞ் சொன்மாத்திரையானே துணியப்படும் என்னும் வரையறையின்றித் தாய் தந்தை முதலியோர் இச் சொற்கு இது பொருள் இச்சொற்கு இது பொருள் எனத் தெரிவித்தலானும், நிகண்டுநூலானுந் துணியப்படுமாகலின், அதுபற்றிப், பொருளியல்பு கூறும் வாக்கியங்கள் பிரமாணமல்ல என்றல் பொருந்தாமையின், உரையளவை யே பிரமாணமென்றோதல் அமையுமாயினும்,அவர் மதமேபற்றி அவரை மறு த்தற்பொருட்டு மூவினையுடைமையும் வழியளவையாற் சாதிப்பார், அவய வப் பகுப்புடைமையான் முத்தொழிலுடைமை துணியப்படுமென்றுணர்த்துவார், ஒருவனொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சமெனச் சூத்திரத்தி னோதியவாறே உடம்பொடுபுணர்த் தோதினாரென்க.

ஈண்டு அவயவமென்றது, ஆடையின் ஏகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப் படும் நூல்கள்போல ஒரு பொருளின் ஏகதேசமாய்த் தனித்தனி பிரிக்கப்படுந் தகுதியுடையவற்றை. நிலம் மலை கடல் முதலியவற்றின் ஏகதேசமாகிய மண் சிலை நீர் முதலியன தொடுதல் போழ்தல் முகத்தல் முதலிய தொழில்க ளானே தனித்தனி பிரித்தற்குரியவாமாறு காண்க. கலை ஆணவமலத்தின் ஏக தேசத்தை நீக்கிக் கிரியையை எழுப்பும் எனவும், பரமசிவன் சுத்தமாயையின் ஏகதேசத்தைக் கலக்கிச் சுத்ததத்துவங்களைத் தோற்றுவிப்பன் எனவும், அந ந்ததேவன் அசுத்தமாயையின் ஏகதேசத்தைக் கலக்கிக் கலைமுதலியவற்றைத் தோற்றுவிப்பன் எனவும் வழங்குவதுபற்றி அவயவம் எனப்படா; வேறு வேறு பிரித்தற்குரியன அன்மையின். இவற்றை நீக்குதற்கன்றே ஒருபொரு ளின் ஏகதேசமென்றொழியாது வேறு வேறு பிரித்தற்குரியன அவயவம் என் றதூஉம் என்க.

இங்ஙனமாயினும், தார்க்கிகமதத்திற் பரமாணுக்கள் அவயவமுடையன வல்லவாகலான் அவை தோன்றி நின்றழியும் என்பது பெறப்படாமையின், அவயவமுடைமை காரியப்பாட்டிற்கு ஏதுவென்றல் யாண்டுஞ் செல்லாதாலெ னின், அற்றன்று: அவன் என்றும் அவள் என்றும் அது என்றும் இவ்வாறு

சடமுமாய்ப் பலவுமாய் உரைக்கப்படுவன எல்லாந் தோன்றியழியும் என்பது கருத்தாகக்கொள்க.

ஃ "இன்னுழை கதிரின் றுன்னணு"க்களே பரமாணுக்களாம். அவற்றை மும்மையணு எனக்கொண்டு அவற்றினும் நுண்ணியவாய்க் கட்புலனாகாதன உள என்றற்குப் பிரமாணமின்மையின் பரமாணுக்களும் அவயவமுடையன வேயாம். அல்லவெனக் கொள்ளினும், அவை சடமுமாய்ப் பலவுமாகலான் தோன்றி நின்று அழிவனவேயாம் என்க. ஆணவமலம் சடமாயினும் பலவன்று; ஆன்மாக்கள் பலவாயினுஞ் சடமல்ல; ஆகலான் அவீற்றின்கட் செல்லாமை அறிக.

இங்ஙனமாயினும், மாயை சுத்தமாயை அசுத்தமாயை என இரண்டாய்ச் சடமுமாகலான் அவை காரியப்பொருளாவான் செல்லும். அவை தனித்தனி ஒன்றேயாமெனின் குடமுதலியனவுந் தனித்தனி ஒன்றேயாகலாற் பலவாதல் யாண்டையது என்பதாய் முடியுமாலோவெனின், அற்றன்று: அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு சுட்டி அறியப்படுவன எல்லாந் தோன்றி நின்று அழியும் என்பதே சித்தாந்த முடிபெனக்கொள்க. இது விளங்குதற்பொருட்டன்றே ஆண் பெண் அலி என்றுதல் ஒருவன் ஒருத்தி ஒன்று என்றுதல் ஓதாது, அவனவளது எனச் சுட்டுப்பெயர்களானோதியதூஉமென்க. இதற்கிதுவே பொருளாதல் உணர்த்துதற்கன்றே ஒருவனொருத்தியொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் என உரைசெய்து எடுத்துக்கொண்டதூஉமென்க. *"அசத்தாஞ் சுட்டி யுணர்பொருளான வெல்லாம்" † "அறிவினு லறிந்த யாவு மசத்தாத லறிதி" என்னுந் திருவாக்குக்களானும் இதுவே இதற்குச் சிறந்த ஏதுவாதல் கண்டுகொள்க.

அற்றேல், ‡ "அவனேதானே" எ-ம், ¶ "அவனிவனாய் நின்றமுறை" எ-ம், § "அவனிவனனது" எ-ம், 0 "அதுநீயானாய்" எ-ம், ** "பாவிக்கச் சொல்லுவது" எ-ம் கூறுமாற்றால் நித்தப்பொருள்களுஞ் சுட்டியறியப்படுமாலோவெனின்,—அற்றன்று: அவை அங்ஙனம் பொதுமையிற் சுட்டியறியப்படுமாயினும் அநுபவநிலையிற் சுட்டி அறியப்படா என்பது, †† "உரையுணர் விறந்துநின் றுணர்வதோ ருணர்வே" எ-ம், ‡‡ "அறிவிறந்தங் கறிந்திடீர்" எ-ம், ¶¶ "பாவனை யிறந்து நின்று—பாவிக்கப் படுவ தாகும்" எ-ம், §§ "ஆட்பாலவர்க் கருளும் வண்ணமு மாதி மாண்புங்—கேட்பான் புகிலள வில்லை கிளக்க வேண்டா" எ-ம், 00 "ஏதுக்க ளாலு மெடுத்தமொழி யாலு மிக்குச்—சோதிக்க வேண்டா" எ-ம் ஓதுவனவற்றால் அறிக.

---

ஃ திருவாசகம், திருவண்டப்பகுதி. ரு-ம் அடி.

* சிவஞானசித்தி. ௬-ம் சூ. உ. ஆவதாய். † சிவப்பிரகாசம். ௩-ம் சூ. ௪. ‡ இந்நூல். ௧0-ம் சூ. ¶ சிவஞானசித்தி. ௧0-ம் சூ. க. இவனுலகில். § அவனிவனனது என்பது அயமாத்மா ப்ரஹ்ம என்னும் வேதாந்தமகாவாக்கியம். இது பிருகதாரணியம், ௪-ம் அத். ரு-ம் பிராமணம் ௧௯-ம் மந்திரத்திலுள்ளது. 0 அதுநீயானாய் என்பது தத்த்வமஸி என்னும் வேதாந்தமகாவாக்கியம். இது சாந்தோக்கியம், ௬-ம் பிரபாடகம் அ-ம் கண்டம் எ-ம் மந்திரத்திலுள்ளது. ** சிவஞானசித்தி. ௯-ம் சூ. எ. கண்டவிவை. †† திருவாசகம், கோயிற்றிருப்பதிகம். ௩. அரைசனே. ‡‡ சிவஞானசித்தி. ௯-ம்சூ. ௩. கரணங்கள். ¶¶ மேற்படி. ௬-ம் சூ. எ. பாவிப்ப. §§ திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம். பொது. திருப்பாசுரம். ௪. 00 மேற்படி. ரு.

பிரபஞ்சம் அவ்வாறன்றிச் சிறப்பியல்புபற்றி அநுபவமாய் உண்மையாற் சுட்டப்படும் என்னுங் கருத்தானன்றே, ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சமென்றொழியாது, 'உளதாய்' என விசேடித்தது உமென்க. நித்தப்பொருள் சுட்டியறியப்படாதென்பது ஆறுஞ்சூத்திரத்திற் காண்க.

இங்ஙனம் வழியளவையானே உலகந் தோன்றிநின்றழியும் எனச்சாதித்து மீமாஞ்சைநூலாரை மறுத்தவழி, உலோகாயதநூலார் காட்சியளவை ஒன்றே பிரமாணமன்றி வழியளவை முதலியன பிரமாணமல்லவாகலான் அவற்றாற் சாதிப்பன பொருள்படாவாம் என்பர். வழியளவையின்றாயின், மேல்வரும் பயனைக் குறித்து முயற்சி செய்வாரில்லையாதல் வேண்டும். *"இம்மையின் முயற்சி யாலே யிருநிதி யீட்" டப்படும் என்பதே அவர் கொள்கையாகலான் வழியளவையும், அதுபற்றி உரையளவையும் பிரமாணம் எனக் காட்டியவழி, அவரும் அதனானே மறுக்கப்படுவாராயினும் அவர் மதமேபற்றி அவரைமறுத்தற்பொருட்டுத் தோன்றியழிதல் கண்கூடாகக் காட்டுவார் வேறுமோர் ஏதுக் கூறுகின்றார்.

தோற்றமுமீறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.

எனவரும்.

வார்த்திகப் பொழிப்பாவது உரைச்செய்யுளானும் பாச்செய்யுளானும் செய்யப்படும் என்னும் வடமொழிமதம்பற்றி, கருத்துரையும் மேற்கோளும் ஏதுவும் உரைச்செய்யுளான் உரைத்து, உதாரணம் பாச்செய்யுளான் உரைக்கின்றார்.

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரோ
வொன்றொன்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டு
மன்றென்று முண்டென்ன வாய்ந்து.

எனவரும்.

ஈறும் முதலுந் துணைக்காரணமாகக் கொண்டே திதி நிகழும். அற்றாயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்றழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் கண்டிலமாலெனின், ஒவ்வொரு காலவிசேடத்திற் சாதிபற்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழிவதனைக் காண்டலால், என்றாயினும் அதற்குரிய காலம்வருமென்று உலகத்திற்கும் அங்ஙனமாதலுண்டென்று அக்காட்சிபற்றி அறியப்படும் என்பதாம்.

பூதாதி அன்மொழித்தொகை. பூதாதிக்கு என நான்கனுருபு விரித்துரைக்க. ஆகும் என்பது முற்றுவினை. பெற்றிமை என்றது ஈண்டுச் சாதியை. ஓகாரம் எதிர்மறை. ஒன்றொன்றினென்பது, †"ஒன்றொன்றாய்ப் பார்த்துணர்வதுள்ளமே" என்புழிப்போல அடுக்குமொழி. கண்டும் உம்மை சிறப்பு. பெற்றிமையின் ஒன்றொன்றிற் றோன்றி யுளதா யிறுதலாவது,‡"பயில்வித் தெல்லாந்-

* சிவஞானசித்தி. உ-ம் சூ. எ. † இந்நூல். கக-ம் சூ. க-ம் அதி. ஐந்தையு. ‡ சிவஞானசித்தி. க-ம் சூ. கூ. ஓரிடம்.

காரிட மதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனில்" என்றதுபற்றி உணர்ந்து கொள்க. இங்ஙனஞ் *சொற்பிரபஞ்சம் பொருட்பிரபஞ்சம் என்னு மிரண்டனுட் பொருட்பிரபஞ்சந் தோன்றிநின்றழியும் என்பது ஏதுக்களாற் சாதிக்கப்பட்டது.

இனி இரட்டுறமொழிதலான், அவனவள் என்பதனாற் பெறப்படும் உயர்திணையும் அது என்பதனாற் பெறப்படும் அஃறிணையும் என்னும் இருதிணைப் பகுதித்தாய சொற்பிரபஞ்சக் கூட்டம், இங்ஙனம் அவயவப்பகுப்புடைமையானும், சடமுமாய்ப் பலவுமாகலானும், சுட்டியறியப்படுதலானும், திதியின்பால் ஏனையிரண்டுங் காணப்படுதலானும் தோன்றிநின்றழிதலுடைத்து எனவும் பொருளுரைத்துக்கொள்க.

அற்றேல், வேதம் நித்தியம் என்னுஞ் சுருதிகளோடு முரணும் பிறவெனின்,—முரணாது; நித்தனாகிய பரமசிவனாற் செய்யப்பட்டமையானும், இறுதிக்காலத்துப் பரமசிவனிடத் தொடுங்கிய வேதம் படைப்புக்காலத்து முன்போலவே தோன்றுதலானும் நித்தமென்று உபசரித்துக் கூறப்படுமாகலின். சிவாகமங்களை நித்தம் என்பதும் இக்கருத்தேபற்றி என்க. அங்ஙனமல்லாக்கால், †வேதம் "பரமசிவனாற் செய்யப்பட்டது" என்னுஞ் சுருதிகளோடும், ‡ "அட்டாதச வித்தைக்கும் முதற்கருத்தாவாகிய இச்சூலபாணி" என்றற்றொடக்கத்துப் புராணவசனங்களோடும், ஈண்டுக் கூறும் வழியளவையோடும் முரணுமாறறிக.

வித்தை பதினெட்டாவன:—இருக்குமுதலிய வேதம் நான்கும், சிக்ஷை கற்பசூத்திரம் வியாகரணம் நிருத்தம் சந்தோவிசிதி சோதிடம் என்னும் அங்கமாறும், புராணம் நியாயநூல் மீமாஞ்சை மிருதி என்னும் உபாங்கம் நான்கும், ஆயுர்வேதம் வில்வேதம் காந்தருவவேதம் அருத்தநூல் என்னும் இருக்குமுதலியவற்றிற்கு உபவேதம் நான்கும் என இவை.

இவற்றுள், வேதம் நான்கும் பிரமகாண்டமும், பிரமஞானத்திற்கு நிமித்தமான கருமகாண்டமும் உணர்த்துவனவாம். சிவாகமங்களும் பிரமகாண்டமாயடங்குமென்க.

வேதங்களை எடுத்தல் படுத்தல் முதலிய இசைவேறுபாட்டான் உச்சரிக்குமாறு உணர்த்துவது சிக்ஷை.

வேதங்களிற் கூறுங் கருமங்களை அனுட்டிக்கும் முறைமை உணர்த்துவது ¶ கற்பசூத்திரம்.

---

* சொற்பிரபஞ்சமாவது - மந்திரம் பதம் வன்னம். பொருட்பிரபஞ்சமாவது - புவனம் தத்துவம் கலை. † பிருகதாரணியம். ௯-ம் அத்தியாயம். ௫-ம் பிராமணத்து மந்திரம். 𑌅𑌸𑍍𑌯 𑌮𑌹𑌤𑍋 𑌭𑍂𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌶𑍍𑌵𑌸𑌿𑌤𑌂 𑌏𑌤𑌦𑍍𑌯𑌦𑍃𑌗𑍍𑌵𑍇𑌦𑍋 𑌯𑌜𑍁𑌰𑍍𑌵𑍇𑌦𑌃 𑌸𑌾𑌮𑌵𑍇𑌦𑍋𑌽𑌥𑌰𑍍𑌵𑌾𑌙𑍍𑌗𑌿𑌰𑌸 𑌇𑌤𑌿𑌹𑌾𑌸𑌃 𑌪𑍁𑌰𑌾𑌣𑌂 ‡ சைவபுராணம், பூருவ்பாகம், ௧-ம் அத்தியாயம், ௨௪-ம் சுலோகம். 𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌾𑌨𑌾𑌂 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌨𑌾𑌮𑍇𑌤𑌾𑌸𑌾𑌂 𑌭𑌿𑌨𑍍𑌨𑌵𑌰𑍍𑌤𑍍𑌮𑌨𑌾𑌂। 𑌆𑌦𑌿𑌕𑌰𑍍𑌤𑌾 𑌕𑌵𑌿𑌃 𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍 𑌶𑍂𑌲𑌪𑌾𑌣𑌿𑌰𑌿𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌃। ¶ ஆசுவலாயநீயம், போதாயநீயம் முதலியன.

வேதங்களின் எழுத்துச்சொற்பொருளியல்பு உணர்த்துவது வியாகரணம்.

வேதங்களின் சொற்பொருள் உணர்விப்பது நிருத்தம்.

வேதமந்திரங்களிற் காயத்திரி முதலிய சந்தங்களின் பெயரும் அவ்வவற்றிற்கு எழுத்து இனைத்தென்றலும் உணர்த்துவது சந்தோவிசிதி.

வேதத்திற் சொல்லப்படுங் கருமங்கள் செய்தற்குரிய காலவிசேடங்களை உணர்த்துவது சோதிடம். இங்ஙனமாகலின் இவையாறும் வேதத்திற்கங்கம் எனப்பட்டன.

பரமசிவன் உலகத்தைப் படைக்குமாறு முதலாயின கூறும் வேதவாக்கியப் பொருள்களை வலியுறுத்து விரித்துணர்த்துவது புராணம். இதிகாசமும் ஈண்டு அடங்கும்.

வேதப்பொருளை நிச்சயித்தற்கு அநுகூலமான பிரமாணம் முதலியவற்றை உணர்த்துவது நியாயநூல்.

வேதப்பொருளின் தாற்பரியம் உணர்தற்கு அநுகூலமான நியாயங்களை ஆராய்ச்சி செய்து உணர்த்துவது மீமாஞ்சை. அது, பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சை எனவும், அவற்றுள், முன்னையது வேதம் எனவும், பின்னையது வேதாந்தம் எனவும் வழங்கப்படும்.

அவ்வவ்வருணங்கட்கும் நிலைக்கும் உரிய தருமங்களை உணர்த்துவது மிருதிநூல். புராணம் முதலிய நான்கும் வேதத்திற்கு உபாங்கம் எனப்படும்.

எல்லாம் அநுட்டித்தற்குச் சாதனமான யாக்கையை நோயின்றி நிலைபெறச் செய்வது ஆயுள்வேதம்.

பகைவரான் நலிவின்றி உலகங் காத்தற்கு வேண்டப்படும் படைக்கலம் பயிறலை உணர்த்துவது வில்வேதம்.

எல்லாக்கடவுளர்க்கும் உவகையைச் செய்யும் இசை முதலியவற்றை உணர்விப்பது காந்தருவவேதம்.

இம்மைக்கும் மறுமைக்கும் ஏதுவாகிய பொருள்களை ஈட்டும் உபாயமுணர்விப்பது அருத்தநூல். இவை நான்கும் உபவேதம் எனப்படுமென் றுணர்க.

முதலதிகரண முடிந்தது.



## இரண்டாமதிகரணம்.

முதலதிகரணத்திற் பிரபஞ்சம் நித்தியம்எனக்கொண்ட மீமாஞ்சைநூலாரையும் உலோகாயதநூலாரையும் மறுத்துச், சொல்லும் பொருளும் என்று இருவகைப்பட்ட பிரபஞ்சம் உற்பத்திநாசமுடைத்தெனக் கருத்தாவினுண்மை சாதித்தற்கோதிய ஏதுவை ஏதுக்களாற் சாதித்தவழி, ஏது உண்டு; சாத்தியம் இல்லை; எனப் பிணங்கும் புத்தர் முதலியோரை மறுத்துப் பொதுவ

கையானுஞ் சிறப்புவகையானுங் கருத்தாவுண்மை சாதித்தற்கு எழுந்தது இரண்டாம் அதிகரணம்.

அதிகரணவியைபும் இதனானே விளங்கும்.

**இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தியில்லை என்றது.**

எனவரும்.

'இனி' என்பது அதிகரணவியைபுணர்த்துதற்பொருட்டு. முன்வரும் அதிகரணங்களினும் இவ்வாறே கண்டுகொள்க.

சூத்திரத்தின் ஒடுங்கி என உலகவினைமேல் வைத்தமையின், அதற்கேற்ப ஈண்டும் ஒடுக்கின என்னாது 'ஒடுங்கின' என உலகவினைமேல் வைத்துரைத்தார். சங்காரகருத்தாவைச் சங்காரம் என்று உபசரித்தார். அல்லதில்லை என எதிர்மறைமுகத்தாற் கூறினார், ஏனைக்கடவுளரிற் செல்லாமை அறிவித்தற்பொருட்டு.

அற்றேல், உலகம் ஓரிடத் தொடுங்கி நின்று மீள உண்டாம் என்றதென்னை! உள்ளதாயி னுண்டாகவேண்டுவதில்லை யாகலான். இல்லது உண்டாம், உள்ளது அழியும், இல்லவை தோன்றுங்காற் சந்தானமாய்க் கணந்தோறுந் தோன்றி அழிவனவற்றுள் முற்கணத்தினின்றழியும் பொருள் பிற்கணத்திற் றோன்றும் பொருட்குச் சார்பாகலின் அவை அவ்வச்சார்பிலே வித்தின் கேட்டின் அங்குரம்போற் றோன்றும், இதற்கொரு கருத்தா வேண்டுவதில்லை எனப் புத்தர் கூறுவர். அதனை மறுத்து மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது;

**இல்லதற்குத் தோற்றமின்மையின்.**

எனவரும்.

அற்றேல், உள்ளதற்கு உண்டாகவேண்டுவ தில்லையாலோ என்னும் ஆசங்கையை நீக்கி ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்;

**இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா**
**லிலயித்த வாறுளதா வேண்டும்.**

எனவரும்.

உள்ளதற்கு உண்டாகவேண்டுவதென்னை? என்னும் ஆசங்கையை நீக்குதற்கு 'இலயித்தது இலயித்த தன்னில் ஆம்' என்றும், அற்றேல், இலயித்தது இலயித்தவாறே ஒழியாது மீள உண்டாக வேண்டாம், வேண்டுமாயின் முன் இலயித்தலின்றி நிலைபெறவே அமையும் என்னும் ஆசங்கையை நீக்குதற்கு 'மலத்தால் ஆம்' எனவும், நசித்தலேயன்றி ஒடுங்கிநின்று மீள உண்டாம் என்றற்குப் பிரமாணம் என்னை? என்பாரை நோக்கி 'இலயித்தவா றுளதாவேண்டும்' என்றுங் கூறினார். இலயித்தவாறன்றி உண்டாகா தென்னும் நியமமில்லையாயின், நெற்கமுகாய் நீளாது நெல்லாயே நீளுதற் கேது என்னை? என்னுந் தருக்கமே அதனை வலியுறுத்தும் என்றவா றாயிற்று.

# சிறப்புப்பாயிரம்.



## சிற்றுரை.

சைவாகமங்களினுளவாகிய நாற்பாதங்களுள்வைத்து ஞானபாதத்தோதிய பொருள்களை ஆராயும் ஆராய்ச்சி இந்நூலின்கண் எடுத்துக்கொள்ளப்பட்டது. இது கேட்டலுறுவார்க்கு இதனாற்போந்த பயன் யாதோ? எனவும், இது கேட்டற்குரியார் யாவர்? எனவும், இதனான் நுதலப்படும் பொருள் யாது? எனவும், இதனைப் பயப்பிக்கும் கருவியாய் இதற்குமுன் ஒருதலையான் உணர்தற்பாலது யாது? எனவும், இதனை வழங்குதற்கிட்ட பெயர் யாது? எனவும், இஃது யாண்டு வழங்குவது எனவும், இதன் முதனூல் யாது? எனவும், இந்நூல் செய்தார் யாவர்? எனவும் பலவாற்றான் ஆசங்கை நிகழுமன்றே! அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சேறற்பொருட்டு இந்நூன்முகத்து உரைக்கப்படுவதாகிய சிறப்புப்பாயிரம்:—

மலர்தலை யுலகின் மாயிரு டுமியப்
பலர்புகழ் ஞாயிறு படரி னல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போ லீண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் ணிருடீர்ந்
தருந்துயர்க் குரம்பையி னான்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத் தளித்த
வுயர்சிவ ஞான போத முரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமை யோனே.

எனவரும்.

இ-ள். மலர் தலை உலகில் மா இருள் துமியப் பலர் புகழ் ஞாயிறு படரின் அல்லதைக் காண்டல் செல்லாக் கண் போல். எ-து. விரிந்த இடத்தையுடைய ஞாலத்தின்கண்ணே துன்னிய பெரிய புறவிருள் கெடும்படி பலசமயத்தாரானும் புகழப்படுகின்ற பரிதியங்கடவுள் உதயகிரியினின்றும் போந்தாலன்றிக் காட்சியெய்தமாட்டாத கண்ணொளிபோல,—அருந் துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி. எ-து. பொறுத்தற்கரிய துயரங்களுக்கெல்லாம் ஒரு நிலைக்களமாய்ச் சத்ததாதுக்களாற் பொத்திய குரம்பையாகிய காணப்பட்ட உடம்பானே காணப்படாத ஆன்மாவையும், பரமான்மாவையும் *அனுமானவளவையான்வைத் தாராய்ந்து அவற்றது தடத்தலக்கணம் எனப்படும் பொதுவியல்புணர்ந்து,—† கண் இருள் தீர்ந்து. எ-து. அவ்வுணர்ச்சியானே கருதியுண

---

* அனுமானமெனினும், வழியளவையெனினும், கருதலளவையெனினும் ஒக்கும். இது மாபாடியத்துட்கண்டது. † புறப்பொருள்களைமறைத்துத் தான் கட்புலப்படும் பூதவிருள் போலாது, ஆன்மாவினது சிற்சத்தியை மறைத்து, அது, தன்னையும் சிவத்தையுந் தெரியவொட்டாது செய்து, தானுங் கட்புலப்படாதிருத்தலிற் கருதியுணரப்படும் இருளென்பார் ஆணவத்தைக் கண்ணிருளென்றார்.

ரப்படும் அகவிருளாகிய ஆணவமலத்தினின்று நீங்கி,—ஈண்டிய பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு. எ-து. அதுநீங்கியவழி எல்லாநூல்களும் தன்பொருளேயாகத் திரண்டு கூடிய *பெரும்பெயர் எனப்படும் ஒருவார்த்தையாகிய மகாவாக்கியத்தான் எடுத்தோதப்படும் முதற்கடவுளது திருவருளானே அப்பொருளது சொரூபலக்கணம் எனப்படுஞ் சிறப்பியல்பை † அநுபூதியிற்கண்டுணர்ந்து,—மயர்வு அற. எ-து. இம்முறையானே மயக்கவாசனையற்றுச் சிவாநுபவம் பெறுதற்பொருட்டு,—நந்தி முனி கணத்து அளித்த. எ-து. சீகண்டதேவர்பாற் கேட்டருளிய நந்திபெருமான் சனற்குமாரமுனிவன் முதலிய முனிவர்கணங்கட்கு முறையானே அளித்தருளப்பட்ட,—உயர் சிவஞானபோதம். எ-து. சரியை முதலிய மூன்று பாதப்பொருள்களை ஆராயும் நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதம் என்னும் வடநூலை,—உரைத்தோன். எ-து. மொழிபெயர்த்துக் கூறி வார்த்திகம் எனப்படும் பொழிப்புரை செய்தோன்,—பெண்ணைப் புனல் சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன். எ-து. பெண்ணையாற்று நீராலே சூழப்பட்ட திருவெண்ணெய்நல்லூரில் அவதரித்தருளிய சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத்திருநாம முடையான்,—பொய் கண்டு அகன்ற மெய்கண்டதேவன். எ-து. பொய்ச்சமயங்களின் பொருள் இது இது என்று கண்டு கழிப்பித்த காரணத்தாற் பெற்ற மெய்கண்டதேவன் என்னுஞ் சிறப்புத்திருநாமமுடையான்,—பவம் நனி வன் பகை கடந்த தவர் அடி புனைந்த தலைமையோன். எ-து. பிறவியாகிய மிக்கவலிய பகையினை வென்ற தவத்தோர், தனது திருவடியைப் புனைந்துகோடற்கேதுவாகிய தலைமைப்பாட்டினையுடையோன் என்றவாறு.

படரிற் காண்டல்செல்லுங் கண் எனற்பாலதனை எதிர்மறைமுகத்தாற் கூறினர், இன்றியமையாமை விளக்குதற்கு. இப்பொருள்பற்றிக் கண்மேல் வைத்துக் கூறினாரேனும், உவமேயப்பொருட்கேற்பக் காண்டல்சேறற்குப் படர்ந்த ஞாயிறுபோல் என்பது கருத்தாகக் கொள்க.

இருட்கேட்டிற்கும் நிருவிகற்பம் சவிகற்பம் என்னும் இருவகைக்காட்சிக்கும் ஞாயிறு இன்றியமையாச் சிறப்பிற்றாயவாறுபோல, மலத்தீர்விற்கும் ஆராய்ச்சி அநுபூதி என்னும் இருவகை உணர்விற்கும் இன்றியமையாச் சிறப்பிற்றாயது இந்நூல் என்பார், துமியப், படரினல்லதைக் காண்டல் செல்லாக் கண்போல், நாடித், தீர்ந்து, கண்டு, மயர்வற, அளித்த சிவஞானபோதம் என்றார்.

தலைமைபற்றி அருந்துயர்க்குரம்பையின் என்றாரேனும், இனம்பற்றிக் கரணம் புவனம் முதலியனவும் உடன் கொள்ளப்படும்.

அருந்துயர்க்குரம்பையின் நாடப்படுவதாகிய பொதுவியல்பு முன்னாறு சூத்திரத்தானும், பெரும்பெயர்க் கடவுளிற் காணப்படுவதாகிய சிறப்பியல்பு பின்னாறு சூத்திரத்தானும் ஓதுப.

* பெரும்பெயரெனினும், மகாவாக்கியமெனினும் ஒக்கும். இது மாபாடியத்துட் கண்டது. † அநுபூதி பிறபொருளின் உபகாரம் வேண்டாது தன்னியற்கையாற் பொருள்களை எதிருற்றுணரும் அறிவு.

'நாடி' எனவே அநுமானவளவையான் என்பதூஉம், 'கண்டு' எனவே அநுபூதியில் என்பதூஉம் தாமே போதரும்.

பொதுவியல்பு அளவைமுகத்தானும் இலக்கணமுகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் என்னும் இருதிறத்தான் உணரப்படும்; சிறப்பியல்பு சாதனமுகத்தானும் பயன்முகத்தானுங் கூறப்பட்டுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் நான்குதிறத்தான் உணரப்படும்.

இஃது என்சொல்லியவாறோ எனின்:—இவ்விருவகை இயல்பும் வேறு வேறு கூறும் ஆகமங்களின் பொருளொருமை உணரமாட்டாது ஒரோவொன்றேபற்றி ஐக்கவாதம் முதற் பலதிறத்தான் வேறுபட்டுத் தம்முண்மாறுகொண்டு மயங்குவார்க்கு அங்ஙனம் மயங்காது அவற்றின் பொருளொருமையுணர்த்தற்கு எழுந்தது இந்நூல் என்றவாறாயிற்று. சிவஞானபோதம் என்பதூஉம் இக்காரணத்தாற்பெற்ற பெயர் என்பது வடமொழிச்சிவஞானபோதத் திறுதிச் *சூத்திரத்தோதியவாறுபற்றி உணர்க.

சரியை முதலிய மூன்றுபாதப்பொருளை ஆராயும் நூல்களாவன, சோமசம்பு பத்ததி முதலாயின. அந்நூல்களின் மேற்பட்ட சிவஞானபோதம் எனவே, அந்நூல்களுணர்ந்தபின்னர் இந்நூல் கேட்கற்பாற்று என்பது பெறப்பட்டது; படவே, முன்னர்த் தீக்கையுற்றுச் சிவாகமங்களை ஓதி அதன் பின்னர்ச் சரியாபாதம் முதலியவற்றை ஆராயும் நூல்களை முறையே கேட்டு அவ்வாறொழுகி மனந்தூயராய் † நித்தியாநித்தியவுணர்வு தோன்றிப் பிறவிக்கஞ்சி வீடுபேற்றின் அவாமிக்குடையராய் வந்த அதிகாரிகளுக்கு இந்நூல் உணர்த்துக என்பது போந்ததெனக் கொள்க.

'உயர் சிவஞானபோதம்' எனவே யாப்பும், கேட்போரும், நுதலியபொருளும், நூற்பெயரும், 'நாடித் தீர்ந்து கண்டு மயர்வற' எனவே நுதலியபொருளின் வகையும், பயனும், 'நந்திமுனிகணத்தளித்த' எனவே வழியும், 'வெண்ணெய்ச்சுவேதவனன்' 'மெய்கண்டதேவன்' எனவே ஆக்கியோன் பெயரும், தமிழ் வழங்கும் நிலமே இந்நூல் வழங்கும் நிலம் என எல்லையும் போந்தவாறுணர்க. வடநூலார் யாப்பை ஆனந்தரியம் என்றும், நுதலியபொருளை விடயம் என்றும், கேட்போரை அதிகாரிகள் என்றும், பயனைப் பிரயோசனம் என்றுங் கூறுப. யாப்பு - சம்பந்தம் என்பாருமுளர்.

சிறப்புப்பாயிரமுடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



---

* ஸர்வம் வித்யாச் சிவஜ்ஞாநபோதே ஶைவார்த்தநிர்ணயம்||

இ - ள். இங்ஙனமே சிவஞானபோதத்திற் சைவாகமங்களின் பொருணிச்சயத்தை அறிக. † நித்தியா நித்திய வுணர்வு - இப்பொருள் நித்தியம்; இப்பொருள் அநித்தியம் என்று உணர்தல்.

# மங்கலவாழ்த்து.

காமிகம் முதலிய சைவாகமங்களுள் ஞானபாதத்திலுளதாகிய ஆசங்கை நீக்கி அவற்றின் பொருளுண்மை பொதுவியல்பு சிறப்பியல்பு என்று இருவேறுவகைப்படுத்துக் காட்டிப் போதித்தற்கு இரௌரவாகமத்தி லெழுந்த சிவஞானபோதநூலினைத் தமிழுலகம் உயதற்பொருட்டு மொழிபெயர்த்துச் செய்து பொழிப்புரைப்பான் எடுத்துக்கொண்ட ஆசிரியர், சாக்கிரத்தே அதீதத்தைப் புரியுந் தமக்கு இடையூறு சிறிதுமணுகாமை அறிந்தாராயினும், ஆன்றோராசாரம் பாதுகாத்தற்பொருட்டும், மாணுக்கர்க் கறிவுறுத்தற்பொருட்டும், முதற்கண் இடையூறு நீக்குதற்குரிய விநாயகக்கடவுளை வாழ்த்துவதாகிய மங்கலவாழ்த்துக் கூறுகின்றார்.

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

இ-ள். கல்லால் நிழல். எ-து. அருள்வடிவாகிய கல்லானிழலின்கண்ணே எழுந்தருளி இருந்து,—மலைவு இல்லார். எ-து. நந்திபெருமானுக்கு இந்நூலான் மலைவு தீர்த்தருளிய முதலாசிரியர்,—அருளிய. எ-து. மேன்மேற் கருணைகூர்ந்தருளுதற்பொருட்டு,—பொல்லார் இணை மலர். எ-து. பொல்லாத பிள்ளையாருடைய ஞானசத்தி கிரியாசத்தி என்னும் இரண்டு திருவடித்தாமரைகளை,—நல்லார். எ-து. கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்,—புனைவர். எ-து. தம்முடைய ஞானசத்தி கிரியாசத்திகட்கு வியாபகமாகக் கொண்டு தாடலைபோல் அடங்கி நிற்பர். எ-று.

'நல்லார் புனைவர்' எனவே, ஏனையோர்க்கு அது கூடாது என்றவாறாயிற்று.

மூவகை வாழ்த்துள் இது பொருளியல்புரைத்தல் எனக் கொள்க.

இல்லார் இல்லாகச் செய்தார் எனப் பண்படியிற் பிறந்த வினைப்பெயர்.

அருளிய என்பது செய்திய என்னும் வாய்பாட்டுவினையெச்சம்: அது புனைவர் என்னும் பிறவினைமுதல்வினை கொண்டது.

அருளிய பொல்லார் எனப் பெயரெச்சமுடிபாகவைத்து உரைப்பினும் அமையும்.

மலைவில்லார் அருளப் பொல்லார்தாள் புனைவர் எனவே, அவ்விருவருந் தம்முள் வேற்றுமையின்மை பெற்றாம். உலகத்துப் புதல்வர்கண்மாட்டுச் செய்யும் வழிபாடு தந்தையர்க்குக் கழிபேருவகை பயப்பிக்குமாகலின், அந்நயம் பற்றி அங்ஙனங் கூறியதூஉமாம்.

மங்கலவாழ்த்து முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.

# அவையடக்கம்.

தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வா
ரெம்மை யுடைமை யெமையிகழார்—தம்மை
யுணரா ருணரா ருடங்கியைந்து தம்மிற்
புணராமை கேளாம் புறன்.

இஃது அவையடக்கங் கூறும்முகத்தானே ஈண்டெடுத்துக்கொண்ட சித்தாந்தசைவரின் உயர்வும் ஏனைச்சமயத்தார்களது இழிவுங் கூறுகின்றது.

இ-ள். தம்மை உணர்ந்து தமை உடைய தன் உணர்வார். எ-து. உடைப்பொருளாகிய தம்மியல்பினை உணர்ந்து தம்மை உடையானாகிய தலைவனை உணருஞ் சித்தாந்தசைவர், —எம்மை உடைமை எமை இகழார். எ-து. தமக்கு உடைப்பொருளாகிய எம்மை உடையராகலின், எம்மைக் குற்றங்கணிக்கிக் குணங்கொண்டு கோதாட்டுவதன்றி இகழ்தல்செய்யார்; ஆகலான் எம்மாற் செய்யப்படும் நூலையும் அவ்வாறு கைக்கொள்வர்,—தம்மை உணரார் உணரார். எ-து. அங்ஙனந் தம்மையுணராதார் தம்மையுடையானாகிய தலைவனையுமுணரார் ஆகலான்,—உடங்கு இயைந்து தம்மிற் புணராமை. எ-து. அவர் ஒருங்கே குழீஇக்கொண்டு தம்மிற்றாமே சேராது முரணுதலான்,—புறன் கேளாம். எ-து. அவர் எம்மையும் எம்மாற்செய்யப்படும் நூலையும் இகழ்ந்துரைக்கும் மொழியை யாம் பொருளாகக் கொள்ளாம். எ-று.

ஆகலான் எம்மாற் செய்யப்படும் நூலையும் அவ்வாறு கைக்கொள்வர் என்பது குறிப்பெச்சம்.

தன்னை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

உடைமை புணராமை என்புழி இன்னுருபும் ஆனுருபும் விரித்துரைக்க.

'தம்மையுணரார்' எனப் பொதுப்படக் கூறுதலானே, தாமொரு பொருளுண்டென்பதை உணராத உலோகாயதரும், தம்மைக் குணிப்பொருளென்றுணராத புத்தர் சாங்கியர் மாயாவாதிகளும், தம்மை முதல்வனுக்கு உடைப்பொருளென்று உணராத ஏனைச்சமயத்தாரும் அடங்குவர். பாஞ்சராத்திரிகளும் சிவாத்துவிதசைவரும், தம்மை உடைப்பொருளெனக் கொள்ளினும், அவருள், பாஞ்சராத்திரிகள் உடைப்பொருளாகிய தமக்கு அணுபரிமாணங் கோடலானும், உடையானுக்குப் பரிணாமங் கூறுதலானும், உடையானல்லாதானை உடையானென மயங்கிக்கோடலானும், சிவாத்துவிதசைவர் உடையானது சிற்சத்திக்குப் பரிணாமங் கூறுதலானும் பிறவாற்றானும் அவருந் தம்மை உணரார் என்பது.

புறன் புறச்சமயம்பற்றி இகழ்ந்துரைக்கும் மொழியும் புறங்கூற்றுமொழியும் என்பது இரட்டுறமொழிதலென்னும் உத்தியாற்கொள்க. புறங்கூற்றுமொழியாவது முக்கூற்றுப் புறச்சமயிகளின் வேறான பாடாணவாதசைவர் முதலியோர் முன்னன்றிப் புறத்தே இகழ்ந்து கூறும் மொழி என்க.

அவையடக்கமுடிந்தது.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பொதுவியல்பு.

## பிரமாணவியல்.

### முதற்சூத்திரம்.

ஈண்டு ஆசிரியர், முதனூலிற் கூறியவாறே சிவாகமங்களின் ஓதப்படும் ஞானபாதப்பொருள் எல்லாவற்றையும் பொது உண்மை என்று இரண்டாகத் தொகுத்து, பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என நால் வகைப்படுத்து, பிரமாணவியல் மூன்று*பாதத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் உலகிற்கு முதற்கடவுள் சிறப்புவகையான் உண்டென்னும் ஆகமப்பிரமாணத்தை வலியுறுத்துவதாய அநுமானப்பிரமாணங் கூறுகின்றார்.

†அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கிமலத் துளதா
மந்த மாதி யென்மனார் புலவர்.

எ-து. சூ-ம். எ-னின். சங்காரகாரணனாயுள்ள முதலையே முதலாகவுடைத்துஇவ்வுலகம்என்பதுஉணர்த்துதனுதலிற்று

இது சூத்திரக்கருத்து உரைக்கின்றது.

இ-ள். நிவிர்த்திகலை முதலிய பஞ்சகலைகளுட்பட்ட ஐவகைச் சங்காரத்துள் இறுதிக்கண்ணதாகிய மாசங்காரத்தைச் செய்யும் வினைமுதலாயுள்ள முதல்வனையே தனக்கு முதற்கடவுளாக வுடைத்து அவன் அவள் அது என்று இவ்வாறு சுட்டி உணரப்படுவதாய உலகம் என வேதாகமங்களுட் கூறப்படுவதனை அநுமானவளவையான் உணர்த்துதலைக் கருதிற்று இச்சூத்திரம். எ-று.

ஏகாரம், இயைபின்மை நீக்குதற்கும், பிறிதினியைபு நீக்குதற்கும் பொதுவாய் நின்ற பிரிநிலை.

---

* பாதம் - சூத்திரம். † இச்சூத்திரப் பொருள்பற்றிய சுருதிகள்:—பிருகுவல்லி, க-ம் அநுவாகம். யதோ வா இமானி பூதானி ஜாயந்தே யேந ஜாதானி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்மேதி. அதர்வசிகை.

## இதன்பொழிப்பு உரைத்துக்கொள்க.

இஃது, இவ்வுரைமுகத்துக் கேட்போரால் உரைவகைபற்றிச் செய்து கோடற்பாலதொன்றனை அறிவுறுத்துகின்றது.

இ-ள். இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு முன்னர்க் கண்ணழித்து ரைக்கும் பொழிப்புரைபற்றி உரைத்துக்கொள்க. எ-று.

எனவே, இங்ஙனம் இருவகைப்படும் பொழிப்புரையுட் கண்ணழித்துக் கடாவிடைகளானுரைக்கும் வார்த்திகமாய பொழிப்புரைமாத்திரையே யாம் ஈண்டுரைக்கின்றாம்; பிண்டமாகக் கொண்டுரைப்பதாய பொழிப்புரை இது பற்றி உணர்ந்துகோடல் எளிதாகலின், அஃது யாம் உரைக்கின்றிலம் என உரைமுகத்து மாணுக்கர்க்கு அறிவுறுத்தவாறாயிற்று.

இஃது, ஏனைச்சூத்திரங்களினும் உய்த்துக்கொண்டுணர்தற்பொருட்டு, முதற்கண் வைக்கப்பட்டது.

இவ்வாறு ஆசிரியர் ஆணைதந்தமையின் கண்ணழித்துரைபற்றிச் சூத்திரத்திற்குப் பதப்பொருள் கூறுதும்.

அவன் அவள் அது எனும் அவை-புலவர். எ-து. அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டிபுணரப்படுஞ் சொல்லும் பொருளுமாய இருகூற்றுப் பிரபஞ்சத்தொகுதி, தோற்றம் நிலை இறுதி என்னும் முத்தொழிலுடைமையால், ஒருவனாற் றோற்றப்பட்டதாய உள்பொருளேயாம். அது, தோன்றுங்கால், தான் ஒடுங்குதற்கு ஏதுவாய் நின்ற கடவுளினின்றும், * சகசமலம் நீங்காமையால், அது நீங்குதற்பொருட்டு மீளத் தோன்றுவதாம். இவ்வாறாகலின் சங்காரத்தொழிலைச் செய்யுங் கடவுளே உலகிற்கு முதற்கடவுள்; ஏனையோர் அன்னரல்லர் எனக் கூறுவர் அளவை நூலுணர்ந்தோர். எ-று.

அவை தொகுதி; சுட்டுப்பெயரெனக்கொள்ளின், உள எனப் பிரித்துப் பயனிலையாக்கித், தாம் என்பதனை அசைநிலையாகவைத்துரைத்து, ஆக்கச் சொல் வருவித்துக்கொள்க. வினைமை-வினையுடைமை.

தோன்றிய என்னது 'தோற்றிய' எனப்பிறவினை வாய்பாட்டானோதுதலின், அதற்குரிய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது. தோற்றிய என்னும் பெயரெச்சம் திதி என்னுஞ் செயப்படுபொருட்பெயர் கொண்டது. திதியாய் ஒருவனாற் றோற்றப்பட்டதென்பார் தோற்றிய திதி என்றார். திதி என்றது ஈண்டு உள்பொருளென்னுந்துணையாய் நின்றது.

---

[illegible] சர்வசித்தாந்தவிவேகம். [illegible] * சகசமலம்-ஆணவமலம்.

மூவினையுடைமையால் உள்பொருளாதலும், அவ்விரண்டுமுடைமையால் நிமித்தகாரணனையுடைத்தாதலுந் துணியப்படுமென்பார், 'மூவினைமையிற் றோற்றிய திதி' என்றார்.

ஏகாரந் தேற்றம். ஒடுங்கி என்பது பெயர். உருபுகள் தொக்கு நின்றன.

அந்தத்தைச் செய்யுங் கடவுளை அந்தம் என்றது உபசாரம்.

காணப்பட்ட உலகத்தாற் காணப்படாத கடவுட்கு உண்மை கூறவேண்டுதலின், 'தோற்றிய திதியே' எனவும், 'ஒடுங்கியுளதாம்' எனவும் உலகின்மேல்வைத்துக் கூறினார். கருத்துரையுட் கூறியதும் அது நோக்கி.

இச்சூத்திரத்துள், அவனவ ளதுவெனு மவைமூ வினைமையின் என்பது ஓரதிகாரணம்; தோற்றிய திதியே யொடுங்கி யுளதாம் என்பது மூன்றதிகாரணத்தை உள்ளடக்கி நிற்பதோரதிகாரணம்; அந்தமாதி என்பது ஓரதிகாரணம்; ஆக மூன்றதிகாரணத்தது இச்சூத்திரமென் றுணர்க. இம்மூன்றும் முறையே ஒன்றற்கொன்று ஏதுவும் பயனுமாய் ஒருபொருண்மேல் வருதலின், ஒருசூத்திரத்தாற் கூறினார். தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கண் ஐயப்பாடும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும், அதனை மறுத்துரைக்குஞ் சித்தாந்தத்துணிபும், இயைபும் என்னும் இவற்றது நிலைக்களம் ஈண்டு அதிகாரணம் எனப்படும்.



## முதலதிகரணம்.

**ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என்றது.**

எ—து. மே-ள். எ-னின். மூவினையுடைத்தோ அன்றோ என்னும் ஐயப்பாட்டின்கண் நித்தமாய்க் காணப்படும் பிரபஞ்சத்தை மூவினையுடைத்தென்றல் பொருந்தாது என மீமாஞ்சகரும் உலோகாயதருங் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ-ள். வெ—டை.

ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் இவ்வாறு அவயவப் பகுப்புடைத்தாயும்பலவேறுவகைத்தாய்ச் சடமாயுஞ் சுட்டியறியப்படுவதாயும் இருத்தலின் இம்மூன்றேதுவானும் பிரபஞ்சந் தோன்றி நின்று அழியும் என்பது துணியப்படு மென்பார், 'உளதாயொருவனொருத்தி யொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம்' என உடம்பொடுபுணர்த்தோதினார்.

உளதாய்ச்சுட்டப்பட்ட என இயையும். உளதாய்ச் சுட்டப்படுதல், முயற்கோடு முதலியனபோலத் *திரிவையங்களானன்றி மெய்யாகச் சுட்டப்படுதல்.

**தோற்றமும் ஈறும் உளதன்பாலே கிடத்தலின்.**

* திரிவு - விபரீதவுணர்வு.

எ—து. ஏது. எ—னின். காட்சியளவைக்கெய்தாது உரைப்பனவெல்லாம் பிரமாணமாகா என உலோகாயதர் கூறுங் கடாவை ஆசங்கித்துக் காட்சியளவைபற்றியும் மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். உற்பத்தியும் நாசமுங் காணப்பட்ட திதியின் பக்கத்தே காணக் கிடத்தலின் 'உளதாயொருவனொருத்தியொன்றென்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து' என மேற்கொண்டது. எ-று.

பூதாதி யீறு முதலுந் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையி—னோதாரோ
வொன்றொன்றிற் றோன்றி யுளதா யிறக்கண்டு
மன்றென்று முண்டென்ன வாய்ந்து.

எ—து. உ—ம். எ—னின். உள்ளதன்பால் அவ்விரண்டுங் கிடத்தல் யாங்ஙனம்? என்னுங் கடாவை ஆசங்கித்து ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். பேதாய். எ—து. காட்சியளவைகளானும் அறியப்படாத மடவோனே,—பூதாதி. எ—து. பூதம் முதற்காரணமாகவுடைய பிரபஞ்சத்திற்கு,—திதி ஈறும் முதலும் துணை ஆக ஆகும். எ—து. திதி, நிகழ்வுழி, நாசமும் உற்பத்தியுந் தனக்குத் துணைக்காரணமாகக்கொண்டே நிகழாநிற்கும். அற்றாயினும் ஒன்று தோன்ற ஒன்று நிற்ப ஒன்றழிவதன்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழியக் கண்டிலமாலெனின்,—ஒன்று ஒன்றின் பெற்றிமையின் தோன்றி உளதாய் இறக் கண்டும். எ-து. ஒவ்வொரு காலவிசேடத்திற் சாதிபற்றி ஒருங்கே தோன்றி ஒருங்கே நின்று ஒருங்கே அழிவதனைக் கண்டுவைத்தும்,—என்றும் அன்று உண்டு என்ன ஆய்ந்து ஓதாரோ. எ—து. என்றாயினும் அதற்குரிய காலம் வருமென்று உலகத்திற்கும் அங்ஙனமாதல் உண்டென்று அக்காட்சிபற்றி ஆராய்ந்து சொல்லார்களோ! உன்னைப்போலும் மடமையில்லாதோர். எ-று.

பூதாதி அன்மொழித்தொகை. பூதத்துக்கு மேலுளவாய தத்துவங்கள் உலோகாயதருக்கு உடம்பாடன்மையின், பூதம் முதலாய தத்துவங்களென உரைத்தல் ஈண்டைக் கேலாமை அறிக.

பூதாதிக்கு என நான்கனுருபு விரித்துரைக்க. அது பின்னருஞ் சென்றியையும். ஆகும் என்பது முற்றுவினை. ஈண்டுப் பெற்றிமை என்றது சாதியை. ஓகாரம் எதிர்மறை.

ஒன்றொன்றின் என்பது *"ஒன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே" என்றாற்போல அடுக்குமொழி; அது காலவிசேடமாதல் என்றும் அன்று எனப் பின்வருதலாற் பெற்றாம்.

ஒருங்கே என்பது சொல்லெச்சம்.

* இந்நூல். ககம் சூ. க-ம் அதி. க. ஐந்தையு.

ஒன்றொன்றிற்றோன்றியுளதாயிறுதலாவது "பயில்வித்தெல்லாங்—காரிட மதனிற் காட்டு மங்குரங் கழியும் வேனில்" என்பதனு னறிக.

கண்டும் உம்மை சிறப்பு.

முதலதிகரண முடிந்தது.



## இ ர ண் ட ா ம தி க ர ண ம்.

### இனி இல்லதற்குத் தோற்றமின்மையின் உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின் ஒடுங்கின சங்கார த்தி னல்லது உற்பத்தியில்லை என்றது.

என, இங்ஙனஞ் சொற்பல்காமைப்பொருட்டுத் துணிந்ததாக வைத்து உரைத்தாராயினும், பொருளியைபிற்கேற்ப இதனை மூன்றதிகரணமாகவை த்து உரைப்பது ஆசிரியர் கருத்தெனக் கொள்க; அஃதாமாறு காட்டுதும்:—

[இ னி உ ல க மு ள் ள து எ ன் ற து.]

எ—து. மே—ள். எ—னின். உலகம் இல்பொருளாய்த் தத்தஞ் சார்பிலே தோன்றியழிதல் இயல்பென்றலே அமைவுடைமையின், அது மூவினையுடை த்தாயினும் தோற்றுவானொருவனை உடைத்தாதல் செல்லாது எனப் புத்தநூ லார் கூறுங் கடாவை ஆசங்கித்துத் 'திதி' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ—ள். வெ—டை.

### இல்லதற்குத் தோற்றமின்மையின்.

எ—து. ஏது. எ—னின். உள்ளதாதல் யாங்ஙனம் என்னுங் கடாவை ஆசங் கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். இல்பொருளாகிய முயற்கோட்டிற்கு முக்காலத்தும் உற்பத்தி இன்மையின் ஈண்டு உற்பத்தி காணப்படுதலான் 'உலகமுள்ளது' என மேற் கொண்டது. எ-று.

[இ னி உ ல க ஞ் செ ய் வோ னை யு டை த் து எ ன் ற து.]

எ—து. மே—ள். எ—னின். உள்பொருளெனப்பட்ட பிரபஞ்சம் தத்தம் முதற்காரணத்தினின்றுந் தானே தோன்றி அழியும் இதற்கொரு நிமித்தகார ணமாய் ஒருகருத்தா வேண்டாம் எனச் சாங்கியர் கூறுங் கடாவை ஆசங்கித் துத் 'தோற்றிய' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற் கோட னுதலிற்று. இ—ள். வெ—டை.

### உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினையின்மையின்.

எ—து. ஏது. எ—னின். அதற்குப் பிரமாணமென்னை? என்னுங் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். மண் முதலியவற்றி னுள்ளதாகிய கடம் முதலிய பொருட்குக்குய வன்முதலிய செய்வோரையின்றி வனைதன் முதலிய செய்தொழில் நிகழாமை

யின், உலகம் இவ்வியல்பிற்றாகலான் 'இனி இவ்வுலகஞ்செய்வோனையுடைத்து' என மேற்கொண்டது. எ - று.

**இனி ஒடுங்கின சங்காரத்தினல்லது உற்பத்தி இல்லை என்றது.**

எ—து. மே—ள். எ—னின். இத்துணையுங் கூறியவாற்றான் உலகத்தைத் தோற்றுவிப்பான் உண்டெனப்பட்ட கருத்தா திதிகருத்தா சிருட்டிகருத்தா முதலியோரில் ஒருவனேயாதல் அமையும் எனப் பாஞ்சராத்திரிமுதலியோர் கூறுங் கடாவை ஆசங்கித்து 'ஒடுங்கியுளதாம்' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ - ள். உலகம் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவி னின்றன்றி உளதாகாது. எ - று.

ஒடுங்கின என்னும் பெயரெச்சஞ் சங்காரம் என்னும் இடப்பெயரோடு முடிந்தது. சங்காரம் ஆகுபெயர்.

அல்லதில்லை என்று எதிர்மறைமுகத்தாற் கூறியது, ஏனைக்கடவுளரின் உளதாகாமை யாப்புறுத்தற்பொருட்டு.

இதனுள் ஒடுங்கின என்பதனாற் போந்த குறிப்பேதுவைப் புலப்படக் காணுமாறு:—

[ஆ ண் டு ஒ டு ங் கு த லி ன்.]

எ—து. ஏது. எ—னின். அதற்குப் பிரமாணமென்னை? என்னுங் கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ - ள். யாது யாண்டொடுங்கும் அஃது அதனில் உற்பத்தியாம் மண்ணிற் குடம் போலும் என்னும் அவிநாபாவத்தாற் பிரபஞ்சஞ் சங்காரகாரணன்மாட்டு ஒடுங்குதலின் மீளத் தோன்றுங்கால் ஆண்டு நின்றுந் தோன்றுதலே பொருத்த முடைமையின் அவ்வாறு மேற்கொண்டது. எ - று.

இவ்வாறு மூன்றதிகரணப்பொருளும் இதன்கட் போந்தவாறும், இவ்வாறுரையாக்காற் பொருள் இயைபுபடாமையும், நுண்ணுணர்வாற் கண்டு கொள்க.

**இலயித்த தன்னிலில யித்ததாம லத்தா**
**விலயித்த வாறுளதா வேண்டும்—**

எ—து. உ—ம். எ—னின். உலகம் உள்ளதாயின் உள்ளதற்கு உண்டாக வேண்டுவதில்லையாகலாற் சற்காரியவாதம் அடாது எனப் புத்தர் கூறுங் கடாவை ஆசங்கித்து 'இல்லதற்குத் தோற்றமின்மையின்' என்ற ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ - ள். இலயித்தது இலயித்த தன்னில் ஆம். எ-து. உள்ளதாயினுஞ் சங்காரகாலத்தி னொடுங்கியதாகலான் அவ்வொடுங்கிய உலகம் தான் ஒடுங்குதற்கு நிலைக்களமான சங்காரகருத்தாவினின்றும் படைப்புக்காலத்தின் மீள

உளதாம். அற்றேல், ஒடுங்கியது ஒடுங்கியவாறே ஒழியாது மீள உண்டாக வேண்டாம்: வேண்டுமாயின், முன் ஒடுங்காது நிலைபெறவே அமையும்: அவ்வாறன்றி ஒடுங்கி மீள உளதாவது எற்றுக்கு? எனின்,—மலத்தால். எ-து. உள்ளதாகிய உலகம் கருமமலம் பரிபாகமாதற்பொருட்டு ஒடுங்கி, ஆணவமலம் பரிபாகமாதற்பொருட்டு மீளவும் உண்டாம். அற்றேல், முன்னின்ற பிரபஞ்சம் நாசமாக வேறு தோன்றுமென்னுமல் அதுவே ஒடுங்கி நின்று மீள உளதாமென்றற்குப் பிரமாணம் என்னை? எனின்,—இலயித்தவாறு உளது ஆ வேண்டும். எ-து. எஃது எவ்வாறு நின்று ஒடுங்கிற்று அஃது அவ்வொடுங்கியவாறே உளதாதல் எல்லாராலும் விரும்பப்படும். எ - று.

எனவே, அந்நியமமில்லையாயின் நெல் கமுகாய் நீளாது நெல்லாய் நீளுதற்கு ஏது என்னை? என்னுந் தருக்கமே அதனை அறிவுறுத்தும் என்றவாறாயிற்று. சற்காரியவாதத்தினியல்பு * "தந்துமுதல காரகம்" என்னும் ஞானமிர்தத்தினுங் காண்க.

இதனானே, இல்லதுமுள்ளதுமல்லாத பொருடோன்றும் என்னுஞ் † சூனியவாதிகளும், இல்லதுமுள்ளதுமாய பொருடோன்றும் என்னும் ‡ அநேகாந்தவாதிகளும் மறுக்கப்பட்ட வாறறிக.

இலயித்த
தத்திதியி லென்னி னழியா தவையழிவ
தத்திதியு மாதியுமா மங்கு.

எ-து. உ-ம். எ—னின். இனிச் சற்காரியவாதத்தின் அவ்வக்காரியங்கள் தத்தம் முதற்காரணத் தொடுங்குமெனவே கோடலின் உலகிற்கு முதற்காரணமாகிய மூலப்பகுதி வாசுதேவனுருவாகலான் உலகம் அவன்மாட்டொடுங்குமென்றலே அமைவுடைத்தன்றி முதற்காரணத்தின் வேறாய் நிமித்தகாரணமெனக் கொண்ட சங்காரகருத்தாவின்மாட்டு ஒடுங்குமென்றல் பொருந்தாதெனப் பாஞ்சராத்திரிகள் கூறுங் கடாவை ஆசங்கித்து 'ஒடுங்கின சங்காரத்தின்' எனவும் 'இலயித்ததன்னில்' எனவுங் கூறிப் போந்த குறிப்பேதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். இலயித்தது அத் திதியில் என்னின். எ-து. உலகம் ஒடுங்கியது அந்த மூலப்பகுதிவடிவாய திதிகருத்தாவின்கண் என்பையாயின்,—அவை அழியாது. எ-து. நீ அங்ஙனங் கொள்ளினும் மூலப்பகுதிக்கு மேலுள்ள புவனங்கள் அதனால் வியாபிக்கப்படாமையிற் கீழுள்ள ஏகதேசமாத்திரையே ஆண்டு ஒடுங்குவதன்றி மாயாகாரியத்தொகுதி முழுவதும் ஆண்டொடுங்காது. அற்றேல், மாயாகாரியத்தொகுதி முழுவதும் யாண்டொடுங்குவதெனின்,—அத்திதியும் ஆதியும் ஆம் அங்கு அழிவது. எ-து. அந்தத் திதிக்கடவுளும் படைப்புக்கடவுளுந் தோன்றுதற்குக் காரணமாகிய அச்சங்காரக்கடவுளிடத்தே அவ்விருவரோடுங்கூட அழிவதாம் அத்தொகுதி. எ - று.

---

* ஞானமிர்தம், நூல். கடு. † சூனியவாதி பௌத்தருள் மாத்தியமிகன். ‡ அநேகாந்தவாதி ஆருகதன். அநேகாந்தம் - அநேகமுடிபு. அதனை கசு-ம் பக்கத்திற்காண்க.

இவ்வெண்பாவினைச் *"செய்யுட்க ளோசை சிதையுங்காலீரளபு—மைய ப்பா டின்றி யமையுமா—மைதீரொற் - றின்றியுஞ் செய்யுட் கெடினொற்றை யுண்டாக்கு—குன்றுமே லொற்றளபுங் கொள்." என்பதுபோல இரண்டதிகர ணப் பொருள்படுமாறு இருதொடராக வைத்துரையாக்காற் பொருளியைபுப டாமையறிக.

இலயித்த வென்னும் பெயரெச்சம் தன்னென்னும் இடப்பெயரோடு முடிந்தது.

இலயித்ததென்றது எதுப்பொருண்மை யுணர்கின்ற பெயர். இலயித்த தெனச் சற்காரியவாதங் கூறவே இலயித்தவவத்தையின் அவ்வக்காரியசத்தி சமூகமாய்ச் சூக்குமமாய் நிற்பதொன்றுண்டு. அதுவே முதற்காரணமெனப் பிரபஞ்சத்திற்கு முதற்காரணமாகிய மாயையுண்மையும் பெறப்பட்டது.

ஆவென்பது முதனிலைத்தொழிற்பெயர். வேண்டுமெனச் செயப்படுபொ ளைச் செய்ததுபோலக் கூறினர்.

அவை தொகுதி; அஃறிணைப் பன்மைப் பெயரென்பார்க்கு அழியாது அழிவதென்னும் ஒருமைகளோடியையாமையும் உத்தரமாகாமையுமுணர்க.

திதியும் ஆதியும் ஆகுபெயர். ஆமங்கு பெயரெச்சமுடிபு.

இரணியகருப்பமதத்தையும் மறுத்தற்பொருட்டுப் படைப்புக்கடவுளை யும் உடன்கூறினர்.

நிமித்தகாரணனாகிய முதல்வன் உலகிற்கு முதற்காரண னல்லனாயினும் முதற்காரணமாகிய மாயைக்கு ஆதாரமாய் நிற்றலின், உலகம் ஆண்டொடுங்கி ஆண்டுநின்று தோன்றுதல் அமையுமென்பது வருகின்ற வெண்பாவிற் பெற ப்படும்.

வித்துண்டா மூல முளைத்தவா தாரகமா
மத்தன்று ணிற்ற லவர்வினையால்—வித்தகமாம்
வேட்டுவனு மப்புழுப்போல் வேண்டுருவைத் தான்கொ
கூட்டானே மண்போற் குளிர்ந்து. [டுத்துக்

எ—து. உ—ம். எ—னின். உலகந் தனக்கு முதற்காரணமாகிய மாயையினொ டுங்குவதன்றி நிமித்தகாரணன் ஒருவனுண்டெனக் கொள்ளினும் அவன்மாட் டொடுங்குமென்றல் பொருந்தாமையின், யாது யாண்டொடுங்கும் அஃததனி னுற்பத்தியாம் என்னும் அவிநாபாவத்தான் மாயையினொடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும் இதற்கோரிறைவன் வேண்டா எனச் சாங்கியநூ லார் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து உள்ளதற்குச் செய்வோரின் றிச் செய்வினையின்மையின் என்னுமேதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ — ள். மண் குளிர்ந்து வித்து உண்டா மூலம் முளைத்தவா தார கம் ஆம் அத்தன் தாள் நிற்றல் அவர் வினையால் வித்தகம் ஆம். எ—து. மாயை யும் உலகமும் வித்தும் அங்குரமும் போலுமாகலின் வித்துக்கு ஆதாரமாகி

* இதனை மாபுராணச்செய்யுளென்பர் நச்சினார்க்கினியர்.

யநிலங் குளிர்ந்தவழி அதன்கண் வித்துள்ளதாக அதனினின்றும் அங்குரந் தோன்றியவாறுபோல மேலேவெண்பாவின் இலயித்தது என்றதனாற் பெறப் பட்ட மாயை தனக்காதாரமாய் நின்று தோற்றுவிக்கும் இறைவனது சத்தியி ன்கணுள்ளதாய் நிற்றலால் அச்சத்தி சங்கற்பித்தவழி அவரவர் வினைக்கீ டாக அவ்வக்காரியங்களை அவ்வவ்வியல்பிற் பிறழாமற் பயக்குஞ் சதுர்ப்பாடு டைத்தாம்: அல்லுழி உடைத்தன்று. நிலங் குளிர்ந்தவழி அதன்கட்கிடந்த ன்றி வித்து முளையைத் தோற்றுதவாறுபோலும். ஆகலான் மாயையினொடுங் கித் தோன்றிய உலகம் அதற்காதாரமாய் நின்ற இறைவன் சத்தியினொடுங் கித் தோன்றியதேயாம். எ — று.

ஆகலானென்பது முதல் குறிப்பெச்சம். இது கிழங்கினின்றுந்தோன்றிய தாமரையைப் பங்கயமென்பதனானுமறிக. வழிநூலாசிரியர்*“உயிரவையொடு ங்கிப் பின்னு முதிப்பதெ னரன்பால்” எ-ம். † “உலகவ னுருவிற்றோன்றி யொடுங்கிடும்” எ-ம். ஓதியதூஉம், உலகவனுருவிற்றோன்றி யொடுங்குமாறு ‡வாதுளாகமத்தில் வகுத்தோதியதூஉம் இவ்வியல்பு நோக்கியென்க. இஃதறி யாதார்இன்னோரன்னவற்றைத் தத்தமக்கு வேண்டியவாறேயுரைப்ப.

உவமவினை பொருளினும் பொருளடை உவமையினுஞ் சென்றியையும்.

உண்டாகவெனச் சற்காரியத்தை வலியுறுத்துதல், வித்தில்வழி நிலத்தி னின்றும் அங்குரந் தோன்றுதவாறுபோல மாயையில்வழிப் பிரமத்தினின்றும் உலகந்தோன்றுதெனப் பரிணமவாதிகளையும், மாயை அநிர்வசனமென்னும் மாயாவாதிகளையும், வித்துநிலனும்போலென்றதனான் மாயை முதல்வனின் வேறுபொருளன்றென்னுஞ் சிவாத்துவிதசைவர் பாஞ்சராத்திரிகளையும், மறு த்தவாறாயிற்று.

---

* சிவஞானசித்தி, க-ம் சூ. ௩௨. † ,, சஅ. உலகினையிறந்து. ‡ வாதுளாகமம்.

[illegible]

முதல்வன் பலவேறுவகைப்படச் சங்கற்பித்தவாறென்னை என்னுங்கடா வை யாசங்கித்து, அவர்வினையாலென்றார்.

வித்தகம் விசித்திரமென்றுரைப்பினுமமையும்.

அற்றேல், தன்வயத்தானன்றி வினைவயத்தாற் றோற்றுவிப்பான் இறை வனுகானெனின்,

வேட்டுவன் ஆம் அப்புழுப்போல் வேண்டு உருவைத் தான் கொடுத்துக் கூட்டானே. எ-து. வேட்டுவனுதலை விரும்பும் புழுவிற்கு வேட்டுவன் விரும் பிய வடிவினைக் கொடுக்குமாறுபோல, இறைவனும் அவரவர் வேண்டுமுருவி னைக்கொடுத்து அவ்வினைக்குத் தக்க பயன்களையுங்கூட்டுவன். ஆகலான் அது கொண்டு சுதந்திரத்திற்கிழுக்கென்னை. எ-று.

ஆகலான் அதுகொண்டு சுதந்திரத்திற் கிழுக்கென்னையென்பது குறிப் பெச்சம்.

போல் அசை. குளிர்ந்தவழியென்பது குளிர்ந்தெனத் திரிந்துநின்றது.

நிற்றலினென்னும் ஐந்தாவது விகாரத்தாற் றொக்கது. ஏகாரமெதிர்மறை.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்திற்
றாக்காது நின்றுளத்திற் கண்டிறைவ—னாக்காதே
கண்ட நனவுணர்விற் கண்ட கனவுணரக்
கண்டவனி லிற்றின்றாங் கட்டு.

எ-து. உ-ம். எ-னின். மேலையுதாரணத்திற் கூறியவாற்றான் உலகிற்கு முதற்கடவுள் உண்டெனக்கொள்ளினும் அவன் படைப்பு முதலியன தொ ழில் செய்வானுயின் விகாரமெய்தி அதனிற் பந்தமுறுவானென்னுமவர்மதம் பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். இறைவன். எ-து. முதல்வன்,—காலத்தில் தாக்காதுநின்று.எ-து. இறப்பு நிகழ்வு எதிர்வு முதலியனவாய் வேறுபட்டு எல்லாத்தொழிலுஞ்செ ய்துந் தனக்கு விகாரமின்றி நிற்குங் காலம்போல விகாரப்படாது நின்று,— ஆக்காதே கண்டு. எ-து. பிரபஞ்சத்தைக் கரணத்தாற்படையாது சங்கற்பமா த்திரத்தானே படைத்து,—நோக்காது நோக்கி நொடித்து. எ-து. அவ்வாறே காவாது காத்து அழியாதழித்தலால்,— இன்று ஆம் கட்டு. எ-து. இவ்வமல னுக்குப் பந்தமின்றாதல்,—உளத்தில் கனவு கண்ட கண்ட நனவு உணர்வில் உணரக் கண்டவனில் இற்று. எ-து. கற்றநூற் சொல்லும் பொருளும் உள்ள த்திற் றோன்றுங்கால் உள்ளம் அவற்றிற் றொடக்குண்ணுதவாறுபோலும் கனவின்கட் கண்டவற்றைப் புறத்துவிடயங்களை யறிந்துவந்த நனவுணர்வின் கண்ணே விளங்கவறிந்தவன் அப்பொழுது அவற்றிற் றொடக்குண்ணுதவாறு போலு மித்தன்மைத்து. எ-று.

எனவே * இஃதிவ்வாறாக வென்றெண்ணுதலாகிய சங்கற்பமாத்திரையாற்செய்வதூஉம் கரணத்தாற் செய்வதூஉமென வினைமுதல் இருவகைப்படுமென்பதூஉம், கரணத்தானன்றிச் செய்யமாட்டாத குயவன் முதலியோர் சங்கற்பமாத்திரையாற் செய்யுமுதல்வனுக்கு வினைமுதலாதற்பொதுமை பற்றி ஒருபுடையுவமையாதலன்றி முற்றுவமையாதல் செல்லாமையானும் சங்கற்பமாத்திரையாற் செய்யுஞ் செய்திக்குக் கட்டுண்டன்முதலிய குற்றங்கள் பகைப்பொருளாகலானும் அவை ஆண்டுளவாதற் கோரியையின்றென்பதூஉம் கூறி, ஏதுவை வலியுறுத்தவாறு காண்க.

ஆக்குதல் படைத்தல்; காண்டலும் அது. நோக்குதல் காத்தல். நொடித்தல் அழித்தல்; அது † "நொடித்தான்மலை" என்பதனானுமறிக.

ஆக்காது நோக்காது என்றமையால் நொடியாதென்பது வருவித்துரைக்கப்பட்டது. நொடித்தலானென்பது நொடித்தெனத்திரிந்தது.

அன்றே அசை; அநாதியேயெனினுமமையும்.

இல் மூன்றும் உவமவுருபுகள்.

உளத்தினென்பதற்குச் சங்கற்பத்தாலென்றுரைப்பினுமமையும்.

இன்றுங்கட்டு என்பது ‡ "அருங்கேடன்" என்பதுபோல நின்றது.

இரண்டாமதிகரணமுடிந்தது.



## மூன்றாமதிகரணம்.

## இனிச் சங்காரமே முதலென்றது.

எ—து. மே—ள். எ—னின். 'ஒடுங்கினசங்காரத்தினல்ல துற்பத்தியில்லை' எனவே சங்காரகருத்தா உலகிற்கு முதற்கடவுளென்பது போந்ததாயினும் தேர்முதலாயின பலர் கூடிச் செய்யக் காண்டலின் அவற்றினும் அதிவிசித்திரமான உலகத்திற்கு மற்றுமத்தன்மையராய முதற்கடவுளர் உண்டெனக்கோடும் என்னும் அநேகேசுரவாதிகண் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவையாசங்கித்து 'அந்தமாதி' என்னுஞ் சூத்திரக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ—ள். சங்காரகருத்தா ஒருவனே உலகிற்கு முதற்கடவுளென்றது. எ-று.

---

* இதனை கர்த்ருத்வம் த்விவிதம் விப்ராஃ ஸங்கல்பாத் கரணாத் ததா| நஹி ஸங்கல்பமாத்ரேண குலாலேந க்ரியதே கட:|| சிவ: ஸங்கல்பமாத்ரேண விஶ்வக்ஷோபாதிகார: ஸதா| என்னும் பௌஷ்கராகம சுலோகத்தானுமறிக.

† சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம், ஸ்ரீ கயிலாயம், பஞ்சமம். க. தானெனை.

‡ திருக்குறள், உக-ம் அதி. தீவினையச்சம். ௧௦.

சங்காரம் ஆகுபெயர். ஏனையோர் முதல்வராகாரெனப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

**சுட்டுணர்வாகிய பிரபஞ்சஞ் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரத்தின்வழியல்லது சுதந்திரமின்றி நிற்றலான்.**

எ—து. ஏது. எ—னின். அதற்குப் பிரமாணமென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ—ள். ஒன்றொன்றாய்ச் சுட்டியறிவதாகிய உருவும் அருவுமென்றிருவே றுவகைப்பட்ட பிரபஞ்சம் அவ்வாறு சுட்டியறிதலின்றி எவ்வுலகும் ஒன்றாய றிந்து நின்ற சங்காரகருத்தாவின்வழிப் பரதந்திரமாய் நிற்பதல்லது தனக்கெ னச் சுதந்திரமுடைத்தாய் நிற்பதன்றாகலாற் சங்காரகாரண னொருவனே உலகிற்கு முதற்கடவுளன்றி ஏனையோர் முதற்கடவுள ரல்லரென மேற் கொண்டது. எ — று.

பிரபஞ்சத்திற்குச் சுதந்திரமின்மையுஞ் சங்காரகாரணனுக்குச் சுதந்திர முண்மையும் ஏதுமுகத்தாற் காட்டுவார் சுட்டுணர்வாகிய பிரபஞ்சமெனவுஞ் சுட்டுணர்வின்றிநின்ற சங்காரமெனவும் ஈரிடத்தும் உடம்பொடு புணர்த்தோ தினார். சுட்டுணர்வுடையதனைச் சுட்டுணர்வென்றது உபசாரம்.

ஈண்டுப் பிரபஞ்சமென்றது சேதனப்பிரபஞ்சத்தை; பிரிநிலையேகாரந் தான் விலக்குதற்குரியது அதுவேயாகலின்.

தேர்முதலாயின பலராற்செய்யப்படினும் அப்பலரும் ஒருவனேவல்வழி நின்றேசெய்ப வாகலானும், வேதத்துட் *காரணவாக்கியங்களிற் சுட்டுணர்வி னராகிய நாராயணன் இரணியகருப்பன் இந்திரன் அங்கி சூரியன் முதலியோ ரைக் காரணமென்றது குயவன்போல் அவாந்தர காரணமாதல்பற்றியே யாக லின் அவையெல்லாம் †ஆகுபெயராற் சங்காரகாரணனாகிய முதற்கடவுளையே யுணர்த்திநிற்கு மாகலானும், செய்துஞ் செய்வித்தும் எல்லாத்தொழிற்கும் வினைமுதலாய் நிற்கு முதற்கடவுள் சங்காரகருத்தா வொருவனே யென்பது கருத்து.

ஒன்றலா வொன்று ளுளதாகி நின்றவா
றொன்றலா வொன்றிலவை யீறுத—லொன்றலா
வீறே முதலதனி னீறலா வொன்றுபல
வாறே தொழும்பாகு மங்கு.

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனமாயினுஞ் சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் பலவாயினாற்போலச் சுட்டுணர்வின்றி நின்ற சங்காரமும் பலவுளவெனக்கோ

---

* நாராயணன்முதலியோரைக் காரணரென்றுணர்த்தியசுருதிகள் முறையே ஏகோஹவை நாராயண ஆஸீத்| ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே| இந்த்ர: ஸர்வ ஸ்ருஷ்டா| அக்நிர்வை ஸர்வா தேவதா:| ஸூர்ய ஆத்மா ஜகதஸ் தஸ்துஷஸ்ச| என்பன. † இடவாகுபெயர்.

டும், ஒன்றேயென்றற்குப் பிரமாணமென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ—ள். அவை. எ—து. சேதனப்பிரபஞ்சத் தொகுதி,—ஒன்று அலா ஒன்றால். எ—து. உருவும் அருவுமென்னும் அவ்விருகூற்றுப் பிரபஞ்சத்துள் ஒன்றல்லாத ஒப்பற்ற பரம்பொருளாலே,—உளது ஆகி நின்றவாறு. எ—து. சிருட்டிப்பட்டுத் திதிப்பட்டவாறே,—ஒன்று அலா ஒன்றில் ஈறுதல்.எ—து. அந்தப் பரம்பொருளின்கண்ணே சங்காரப்படுதலால்,—ஒன்று அலா ஈறே முதல். எ—து. அச்சங்காரக்கடவுளொருவனே உலகிற்கு முதற்கடவுள். அற்றேல், இவ்வாறு முத்தொழிற்படுஞ் சேதனப்பிரபஞ்சம் வீடுபெற்றவழிச் சுட்டுணர்வின்றிச் சிவசமமாமென *வேதத்தும் ஆகமத்தும் ஓதுதலின் அவ்வழி அவையும் முதற்கடவுளாமென்றற்கு இழுக்கென்னையெனின்,—அதனின் ஈறு அலா ஒன்று. எ—து. அப்பரம்பொருள்போல் அழிவின்றி நித்தமாய சேதனப்பிரபஞ்சம்,—†அங்கு. எ-து. வீடுபேற்றின்கண்ணும்,—பலவாறே தொழும்பு ஆகும். எ—து. பலவாற்றானும் பரம்பொருளுக்கு அடிமையாம். எ—று.

இது சொற்பொருட்பின்வருநிலை.

காரியப்பிரபஞ்சஞ் சடமாகலானும், சேதனப்பிரபஞ்சம் அவிச்சையாற் கட்டுற்றுச் சுட்டுணர்விற்றாய் நிற்றலானும், இவற்றைத் தொழிற்படுத்தற்கு இவற்றின் வேறாய் ஒருமுதற்கடவுளுண்டென்பது பெற்றாம். பெறவே, பிரபஞ்சம் விசித்திரகாரியமாய்க் காணப்படுதலின் இவ்வாறு நடாத்தும் முதற்கடவுள் முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளுஞ் சுதந்திரமும் முதலிய நிரதிசயகுணங்களுடையனென்பதூஉம் பெறப்பட்டது: படவே, இத்தன்மையனாகிய முதற்கடவுளொருவனே அமையுமாகலின் வேறுமத்தன்மையருண்டெனக் கொள்ளின் மிகையென்னுங் குற்றமாம்: அல்லதூஉம், இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்வழி இலக்கியம்பலவாதல் செல்லாதென்னுங் கருத்தால், ஒன்றலாவொன்று என வரையறுத்தோதினார்.

ஈறே முதலென்றது முடிந்தது முடித்தல். ஈறு ஆகுபெயர்.

இறந்ததுதழீஇயவெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது.

பலவாறுவன, இருணீங்கியவழியுங் கண்ணுக்குக் காட்சி ஞாயிற்றையின்றியமையாதவாறுபோல, மலநீங்கிய முத்திநிலையினும் ஆன்மாவுக்கு அறிவு வியஞ்சகமாய் உடனின்றறிவிக்கு முதல்வனையின்றி யமையாதவாறுங், கண் படிகம் ஆகாயம் போலச் சார்ந்ததன்வண்ணமாயன்றி முதல்வன்போலத் தனித்துநிற்கு மியல்பில்லாதவாறும், முதல்வன்போல் ஐந்தொழிற்கும் வினைமுதலாமுரிமையின்றிச் சிவாநுபவ மொன்றினுக்கே யுரித்தாயவாறும், சமவியாபகமாயினும் முதல்வனை நோக்கத் தூலவறிவாகலான் விளக்கொளியுட் கண்

---

* முண்டகோபநிடதம், ௩—ம் முண்டகம், க—ம் கண்டம், ௩—ம் மந்திரம் 𑌤𑌦𑌾 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑍇 𑌵𑌿𑌧𑍂𑌯 𑌨𑌿𑌰𑌞𑍍𑌜𑌨𑌃 𑌪𑌰𑌮𑌂 𑌸𑌾𑌮𑍍𑌯𑌮𑍁𑌪𑍈𑌤𑌿॥

† அங்குமென்பதன் உம்மை தொக்கது.

ஞெளிபோல முதல்வனின் வியாப்பியமாயன்றி நில்லாதவாறும் முதலாயின. அற்றேல், முத்திநிலையின் ஆன்மாச் சிவமாமென்னுஞ் சுருதிக்குப் பொருளென்னையெனின்; அஃது உண்மை யதிகாரத்துட்பெறப்படும்.

இதனானே சிவசமவாதி சங்கிராந்தவாதி உற்பத்திவாதி ஆவேசவாதி மதங்களும் மறுக்கப்பட்டன.

பதியுண்மைக்குப் பிரமாணங்கூறுவார் 'மலத்துளதாம்' எனப் புனருற்பத்திக்கேதுக் கூறுமுகத்தான் மலத்துண்மைக்குப் பிரமாணமும் உடன்கூறினார். அதனை ஈண்டு வேறோரதிகரணமாக வைத்துரையாராயினர்; அதிகரணத்திற்குரிய ஐயப்பாடு முதலியனவெல்லாஞ் சகசமலத்துணராதென அதனிலக்கணங்கூறும்வழிப் பெறப்படுதலால், ஈண்டு மிகைபட வேறோதல்வேண்டாமையின்.

இச்சூத்திரத்ததிகரணங்களாற்போந்த தொகைப்பொருளாவது:—தோற்றக்கேடுகளதுண்மை காட்சி முதலிய அளவைகளான் அறிய வாராமையிற் பிரபஞ்சம் நித்தப்பொருளேயாம். அன்றித் தோன்றியழியுமெனக் கொள்ளினும், இல்பொருள் தத்தஞ்சார்பிற்றோன்றி நின்றழிதல் இயற்கையெனவமையும்; செயற்கையென்றற்கு ஓரேதுவின்மையின். மற்றுள்பொருளாயின், அது வேயமையும் இறைவன் வேண்டா; இரண்டுள்பொருள்கோடல் மிகையாகலின். வேண்டுமாயினும், மாயோன் முதலிய கடவுளரில் ஒருவனேயமையும் அவரையொழித்துச் சங்காரகருத்தா முதற்கடவுளென்றதற்குப் பிரமாணமென்னை? பிரமாணமுண்டாயினும், அதிவிசித்திரமாய பிரபஞ்சம் ஒருவனாற் செய்தல்கூடாமையின், மற்றும் அவ்வியல்பினராய முதற்கடவுளர் உளராதல் வேண்டும் என உலோகாயதர் மீமாஞ்சகர் புத்தர் சமணர் சாங்கியர் பாஞ்சராத்திரிகள் அநேகேசுரவாதிகண் மதம்பற்றிப் பூருவபக்கநிகழ்ந்தவழி அவரை மறுத்துச் சித்தாந்தஞ்செய்து முதற்கடவுளதுண்மை *பொதுவகையானுஞ் †சிறப்புவகையானுங் கருதலளவையின்வைத் துணர்த்தியவாறென உணர்க. இவ்வாறு சூத்திரந்தோறும் உணர்ந்துரைத்துக்கொள்க.

மூன்றாமதிகரண முடிந்தது.



முதற்சூத்திர முடிந்தது.

திருச்சிற்றம்பலம்.

---

* பொதுவகையானுணர்த்தியது உலகஞ் செய்வோனை யுடைத்து என்றது.
† சிறப்புவகையானுணர்த்தியது ஒடுங்கினசங்காரத்தினல்லது உற்பத்தியில்லையென்றது.

# இரண்டாஞ்சூத்திரம்.

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே.

எ-து. சூ-ம். எ-னின். புனருற்பவம் வருமாறுணர்த்துத னுதலிற்று.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக்கருத்துணர்த்துதனுதலிற்று.

இ—ள். உலகம் ஒடுங்கியினின்றும் மீளவுளதாமாற்றை வகுத்துணர்த்து முகத்தானே துணைக்காரணமுதலியன இல்வழி இறைவன் உலகிற்கு நிமித்த காரணனாதல் சாலுமாறு யாங்ஙனம் என்னுங்கடாவை யாசங்கித்து அவற்ற துண்மைக்குப் பிரமாணமுணர்த்துதனுதலிற்று இச்சூத்திரம். எ - று.

சூத்திரவியைபும் இதனானே விளங்கும்.

'ஒடுங்கியுளதாம்' என்றவழி ஒடுங்கியினின்றும் மீளவுளதாவது எவ்வா றென்று அவாய் நிற்றலின், அவ்வவாய்நிலைபற்றிப் புனருற்பவமே ஈண்டுக் கூறப்பட்டது.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. மேலைச்சூத்திரத்து எடுத்துக் கொண்ட சங்காரகாரணனாகிய முதல்வன் கலப்பினால் உடலின் உயிர்போல் அவ்வுயிர்களேயாய், பொருட்டன்மையாற் கண்ணின் அருக்கன்போல் அவற் றின் வேறுமாய், உயிர்க்கு உயிராதற்றன்மையாற் கண்ணொளியின் ஆன்ம போதம்போல் உடனுமாய் நின்று, * ஆணையென்னும் பரியாயப்பெயருடைய தனது சிற்சத்தியான்வரும் இருவினைகளான் அவை இறத்தல் பிறத்தல்களைப் புரியும் வண்ணம் அவ்வாணையிற் பிரிப்பின்றிச் சமவேதமாய் நிற்பன். எ—று.

அவையேதானேயா யென்பதனை இரட்டுற மொழிந்துகொண்டுரைக்க. இக்கருத்தேபற்றி † "உலகெலா மாகி வேறாயுடனுமாய்" என்றார் வழிநூலா சிரியரும்.

மேலைச்சூத்திரத்தின் 'அந்தமாதி' என்புழி விகாரத்தாற்றொக்க பிரிநிலை யேகாரத்தான் விலக்கப்பட்டு நின்ற சேதனப்பிரபஞ்சத்தை ஈண்டு அவை யெனச் சுட்டிக்கூறினார்.

"ஒடுங்கியுளதாம்" என்றதற்கேற்ப ஈண்டும் போக்கினை முற்கூறினார்.

---

* ஆணை சிற்சத்தி என்பதனை "ஆஜ்ஞயா ஸஹவேதயா" என வடமொழிச் சிவஞானபோதத் திரண்டாஞ்சூத்திரத் தோதியவாறுபற்றியுணர்க. சிற்சத்தி பரிக்கிரக சத்திபோலன்று சிவனுக்கு அபின்னமாயுள்ள தென்பது, நஹாதி வித்யோதநாவி தயா ஶக்த்யா விநா ஶிவ:। ப்ரஸஹ்யாஹி விநாயத்வ ஸாநரேஷ நவித்யதே॥ என்னும் வாயுசங்கிதைச் சுலோகத்தானு முணர்க. †சிவஞானசித்தி, உ—ம் சூ. க.

புரிதல் எப்பொழுதும் மேற்கோடல்.

ஆணையினென்பது சிங்கநோக்காய் இருவினையென்பதனோடும் நீக்கமின்றியென்பதனோடும் இயைந்து பொருடந்துநின்றது. ஆண்டு இன்னுருபு முன்னர் ஏதுப்பொருட்கண்ணும், பின்னர் நீக்கப்பொருட்கண்ணுமாய், நின்றது. இன்னென்பது சாரியையெனக் கொண்டு ஈரிடத்தும் ஏற்குமுருபுகள் விரித்துரைத்தலுமொன்று.

அன்றே அசை; அநாதியே இவ்வாறு நிற்குமெனினுமமையும். ஆய்ப்புரிய நிற்குமெனவே, அச்செயல்களெல்லாம் முதல்வன் கரணத்தானன்றிச் சங்கற்பமாத்திரத்தாற் செய்வனென்பது பெறப்பட்டது.

இதனானே மேல் 'அந்தம்' என்று உத்தேசமாயெடுத்துக்கொண்ட முதல்வனுக்கு இலக்கணங் கூறியவாறுமாயிற்று. இது தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்பு.

ஆணையினிருவினையினெனவே, தனது சிற்சத்தி துணைக்காரணம், இருவினையும் அதன்வழித்தாய துணைக்காரணம். இருவினையினெனவே அதற்குப் பற்றுக்கோடுண்டென்பதூஉம் பெற்றுமாகலின், அது முதற்காரணமென்பதூஉம், இருவினையிற் போக்குவரவுபுரியவெனவே ஒடுங்கியின் மீளவுளதாங்கால் இருவினைகட்கேற்பப் பலவேறுவகைப்பட்டு விரியுமென்பதூஉம் போந்தவாறு காண்க.

இதனுள் அவையேதானேயாய் என்பதோரதிகரணம்; ஆணையினிருவினையின் என்பதோரதிகரணம்; போக்குவரவுபுரிய என்பதோரதிகரணம்; ஆணையினீக்கமின்றி நிற்குமன்றே என்பதோரதிகரணம்; ஆக நாற்கூற்றது இச்சூத்திரமெனக் கொள்க.



## முதலதிகரணம்.

### ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் றானேயாய் நிற்கும் என்றது.

எ—து. மே—ள். எ—னின், மேன் முதற்கடவுளல்லவென விலக்கப்பட்டு நின்ற சேதனப்பிரபஞ்சமும் முதல்வனும் *பொன்னும் பணியும்போல் அபேதமோ †இருளும் வெளியும்போற் பேதமோ ‡சொல்லும் பொருளும்போற் பேதாபேதமோ என்னுமையப்பாட்டின்கண் அம்மூன்றனுள் ஒரோவொன்றேபற்றி அவ்வம்மதத்தார் கூறும் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ—ள். வெ-டை.

ஈண்டும் இரட்டுறமொழிந்துகொள்க.

* பொன்னும் பணியும்போல் அபேதங் கொள்வார் மாயாவாதிகள்.
† இருளும் வெளியும்போற் பேதங்கொள்வார் மாத்துவர். வெளி-ஒளி.
‡ சொல்லும் பொருளும் போற் பேதாபேதங் கொள்வார் பாஞ்சராத்திரிகள்.

இதனானே, ஒருவிடயத்தைக் காணுங்கால், ஆன்மபோதம், கண்ணொளி யெனத் தானென வேறின்றி உடனாய் நின்று காணுமாறுபோல, முதல்வன் புனருற்பவஞ்செய்யுங்கால் உயிர்களோடு உடனாய் நின்று செய்வனென்ப தூஉம் பெறப்பட்டது.

**அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமெ ன்று சுட்டுவதுண்மையின் அத்துவிதமென்ற சொல்லே அந் நியநாத்தியை யுணர்த்துமாயிட்டு.**

எ—து. ஏது. எ—னின். முதல்வன் அவ்வாறு மூவகையுமாய் நிற்பனென் றற்குப் பிரமாணமென்னை என்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சா தித்தனுதலிற்று.

இ—ள். அத்துவிதமென்ற சொல்லின் நகரம் இன்மை அன்மை மறுதலை என்னு முப்பொருளுணர்த்துமன்றே, அவற்றுள் இன்மைப்பொருள்பற்றி அத்துவிதமென்ற மொழிமாத்திரையானே ஒருபொருளென்றல் பொருத்த முடைத்தெனின்,—தானே தன்னையொன்றெனக் கருதல்வேண்டாமையின் அவ்வாறுகருதும் பொருள் வேறுண்டென்பது பெறப்படுதலானும், எண்ணு ப்பெயர்மேல் வந்த நகரம் அன்மைப்பொருண்மாத்திரையே யுணர்த்திப் பொ துமையினிற்பதன்றி ஏனைச்சொற்களின்மேல் வந்த நகரம்போல இன்மை மறு தலைப்பொருள்களையுணர்த்துதல் வழக்கின்கணின்மையின் அத்துவிதமென் கின்ற மொழிதானே பிறிதுகாரணம் வேண்டாது வேறன்மையை யுணர்த்தி நிற்குமாகலானும், ஈண்டிவ்வான்மாக்கள் பலவும் முதல்வன் ருனேயாய் நிற்கு மென மேற்கொண்டது. எ—று.

ஆகலானென்பதற்கு ஆயிட்டென்பது அக்காலவழக்குப்போலும்; அற் ருகலினன்றே * "நீயோ செய்யாய் நின்மலனாயிட்டு." என்ருர் வழிநூலாசிரி யரும்; இனி "மழைபெய்து குளநிறைந்தது." என்புழிப்போல ஆயிடலாலெ ன்பது ஆயிட்டெனத் திரிந்ததென்றலுமொன்று.

எண்ணும்மை விரித்துரைக்க.

வேறின்றி உடனாதல் பெறப்படவே, பொருண்மையாற் பேதமென்ப தூஉம் கலப்பினால் அபேதமென்பதூஉந் தாமே போதருமென்பது கருத்து.

**கட்டு முறுப்புங் கரணமுங் கொண்டுள்ள**
**மிட்டதொரு பேரழைக்க வென்னென்ருங்--கொட்டி**
**யவனுளமா கில்லா னுளமவனு மாட்டா**
**தவனுளமா யல்லனுமா மங்கு.**

எ—து. உ—ம். எ—னின். ஒருபொருள் மூவகையியல்பை யுடைத்தால் யாங்ஙனம் என்னுங்கடாவை யாசங்கித்து அவற்றுள் அவையேயாதலை உவ மைமுகத்தான் வலியுறுத்துதனுதலிற்று.

---

* இருபாவிருபது. ௬. கூறியமூன்று.

இ-ள். உள்ளம் கட்டும் உறுப்பும் கரணமுங்கொண்டு. எ-து. உயிர் நரம்பு முதலியவற்றாற் பிணிக்கப்படும் உடம்பினையும் ஐம்பொறி முதலிய கருவிகளையுங் கைக்கொண்டு நின்று,—இட்டது ஒருபேர் அழைக்க என் என்றாங்கு. எ-து. சாத்தா கொற்றா என உடம்பிற் கிட்டபெயராற் பிறரழைத்தவழித் தான் என்னையென வந்து நிற்றல் காண்டுமன்றே, இருவர் கைகோத்து நின்றுழியும் அவருள் அழைக்கப்பட்டோனையன்றி ஏனோன் என்னையென்றல் உலகத்தின்மையின் அவ்வாறன்றி உடம்பின் பெயரான் அழைத்தவழி உயிர் என்னென்றற்குக்காரணம் பிறிதோராற்றாற் பெறப்படாமையின் அருத்தாபத்தியளவையானே அவ்வுயிர் உடம்பெனத் தானென வேற்றுமையின்றி அபேதமாய் நிற்றல் பெற்றாம் அதுபோல,—ஒட்டி. எ-து. முதல்வன் 'உயிர்களின் அபேதமாய் ஒட்டிநிற்போனாம்,—அங்கு அவன் உளம் ஆகில்லான் உளம் அவனாமாட்டாது அவன் உளம் ஆய் அல்லனும் ஆம். எ-து. அவ்வாறொட்டியவழி உயிர் உயிரே, உடம்பு உடம்பே, உயிர் உடம்பாயொழியாது உடம்பு உயிராகமாட்டாது. அவ்வாறாயினும் உயிர் உடம்பாயும் அதனின் வேறாயுநிற்கும். உடம்பு அங்ஙனநில்லாது. அதுபோல முதல்வன் முதல்வனே, உயிர் உயிரே, முதல்வன் உயிராயொழியான், உயிர் முதல்வனாகமாட்டாது. அவ்வாறாயினும் முதல்வன் உயிராயும் அதனின்வேறாயுநிற்பன். உயிர் அங்ஙனநில்லாது. எ-று.

'அவனுளமா கில்லா னுளமவனா மாட்டா—தவனுளமா யல்லனுமா மங்கு.' என்றது ஒன்றாயும் ஒன்றன்மைக்கு அநுபவங் காட்டியவாறு.

உறுப்பு ஆகுபெயர். எவனென்பது என்னென மரீஇயிற்று. ஒட்டியென்பது பெயர்; வினையெச்சமாகக் கொள்ளிற் சிறப்பும்மை விரித்துரைக்க.

ஒட்டுதல் பொருந்துதல். அங்கு அதுபோல.

ஒன்றென்ற தொன்றேகா ணொன்றே பதிபசுவா
மொன்றென்ற நீபாசத் தோடுளைகா—ணொன்றின்றா
லக்கரங்க ளின்றா மகர வுயிரின்றே
லிக்கிரமத் தென்னு மிருக்கு.

எ-து.உ-ம். எ-னின். *வேதத்துள் அத்துவிதமென்றதூஉமன்றி ஏகமெனவுமோதுதலின் அதற்கு மறுதலையாய் உயிர்களோடொட்டி நிற்பனெனப் பேதப்படக் கூறுவதென்னை என்னுங்கடாவை யாசங்கித்து அச்சொற்குத் தாற்பரியங் கூறுமுகத்தால் தானேயாதலை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். இருக்கு ஒன்று என்றது ஒன்றேகாண். எ-து. வேதம் ஒன்றென்றதற்குப் பொருள் ஒன்றென்பதேயாம்; வேறுபொருள்படாது.—பதி ஒன்றே. எ-து. அதற்குத் தாற்பரியம் பதிப்பொருளொன்றே; இரண்டில்லையென்பதாம்,—ஒன்று என்ற நீ பசு ஆம் காண். எ-து. இஃதறியாது ஒன்றென்று

* வேதத்துள் அத்துவிதமென்றதூஉமன்றி ஏகமெனவு மோதுதலை, சாந்தோக்கியம், சு-ம் பிரபாடகம், உ-ம் கண்டத்து ஏகமேவாத்விதீயம் என்னும் முதன்மந்திரத்தாலறிக.

சொல்லுகின்ற நீ அப்பதிப்பொருளின் வேருய பசுவென்றறிவாயாக. பதியுஞ் சேதனமாக யானுஞ்சேதனமாக என்னைப் பசுவென்றதென்னையெனின்,—பாசத்தோடு உளே. எ—து. நீ மலத்தோடு கட்டுற்று நின்ருயாகலிற் பசுவெனப்பட்டனை. அற்றேல் இவ்வாறு வேற்றுமைகூறிற் பிரமமில்லையாயின் ஒருபொருளுமில்லையென்னும் வேதத்திற்குத் தாற்பரியமென்னையெனின்,— அகரவுயிர்இன்றேல் அக்கரங்கள் இன்று ஆம் இக்கிரமத்து ஒன்று இன்று என்னும். எ—து. *அகரவுயிரில்லையாயின் அக்கரங்களில்லையாமென்னும் இம்முறைபற்றி வேதம் பிரமப்பொருள் இல்லையாயின் ஒருபொருளு மில்லையென்ருேதும் அத்தனை. எ—று.

'ஒன்றின்ரு—லக்கரங்க ளின்ரு மகரவுயி ரின்றே—லிக்கிரமத் தென்னும்.' என்றது வேருகியும் வேறன்மைக்கு அநுபவங்காட்டியவாறு.

இக்கிரமத்தாலெனவுருபு விரித்துரைக்க. இன்றென்னுமொருமை அப்பண்பின்மேனின்றது. காணென்பதனை மேலேகூட்டுக. ஆல் அசை.

பண்ணையு மோசையும் போலப் பழமதுவு
மெண்ணுஞ் சுவையும்போ லெங்குமா—மண்ணரு
ளத்துவித மாத லருமறைக ளொன்றென்ன
தத்துவித மென்றறையு மாங்கு.

எ—து. உ—ம். எ—னின். வேதம் ஏகமாய பிரமத்தை ஏகமென்ருெழியாது பிரமம் அத்துவிதமெனவும் ஓரோரிடங்களின் ஓதுதலின் அத்துவிதம் இருபொருட் கண்ணதென்பார்க்கு ஏகமாய பிரமத்தை அத்துவிதமென்றல் பொருந்தாதாய்முடியும் என்னுங்கடாவை யாசங்கித்து அதனை நீக்குமுகத்தானே அவையேதானேயாதலை வலியுறுத்துதனுதலிற்று.

இ—ள். பண்ணையும் ஓசையும் போலப் பழமதுவும் எண்ணும் சுவையும் போல் எங்கும் ஆம் அண்ணல் தாள் அத்துவிதம் ஆதல். எது. பண்ணும் அத

* இதனை ஸர்வவர்ணாநாம் ஜநகம் ஶிவைவ ப்ராணரூபதே| வ்யாபகத்வேநாநாஸ்யாக்ஷராணாமகாரவத்|என்னும் கிரணகம சுலோகத்தானும், ஶிவ: ஸர்வத்ர ஜந்தூநா மக்ஷராணா மகாரவத்|| என்னும் வாதுளோத்தர சுலோகத்தானும், இறைவன் இயங்குதிணைக்கண்ணும் நிலைத்திணைக்கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் தன்மையாய் நிற்குமாறு எல்லார்க்கும் ஒப்பமுடிந்தாற்போல அகரமும் உயிர்க்கண்ணுந் தனிமெய்க்கண்ணுங்கலந்து அவற்றின் தன்மையாயே நிற்குமென்பதுசான்ருேர்க்கெல்லாம் ஒப்பமுடிந்தது, "அகரமுதல" என்னுங் குறளான் அகரமாகிய முதலையுடைய எழுத்துக்களெல்லாம் அதுபோல இறைவனுகிய முதலையுடைத்து உலகமென வள்ளுவனுர் உவமைகூறியவாற்ருனுங், கண்ணன் எழுத்துக்களில் அகரமாகின்றேன் யானேயெனக் கூறியவாற்ருனும் பிறநூல்களானும் உணர்கவென நச்சினூர்க்கினியர் தொல்காப்பியம் எழுத்ததிகாரம் மொழிமரபு பதின்மூன்ருஞ்சூத்திரத்திற்குரைத்தவுரையானும் நன்குணர்க.

னின் வேறன்றுயெண்ணப்படும்இசையும் போலவும் *பழமும் அதனின்வேற ன்றுயெண்ணப்படுஞ் சுவையும்போலவும் யாங்கணும் வியாபகமாய முதல்வன் றிருவருள் உயிர்களின் வேற்றுமையின்றி நிற்பதாகலான்,—அரு மறைகள் ஒன்று என்னாது அத்துவிதம் என்று ஆங்கு அறையும். எ—து. வேதங்கள் ஏகமென்னாது பிரமம் அத்துவிதம் என்று அவ்விடங்களிற் கூறும். எ—று.

ஆண்டுப் பிரமம் அத்துவிதமென்றது பிரமம் உயிர்களின் வேற்றுமை யின்றி நிற்குமென்னும் பொருட்டாகலான், அஃது ஏகமென்பதோடு முரணு மாறில்லை யென்பதாம்.

பண்ணையென்னும் ஐகாரம் பகுதிப்பொருள்விகுதி. பண் பாலைப்பண் முதலாயின.

எங்குமாமண்ணுறுளென விசேடித்தது, குணகுணிகள்போல் உடனு யும் அவ்வாறுடனுகாமைக்கு அநுபவங்காட்டியவாறு. வியாப்பிய வியாபகமா தலொப்புமைமாத்திரையேபற்றிக் குணகுணிகளை உவமை கூறினரென்பது.

அரக்கொடு சேர்த்தி யணைத்தவக் கற்போ
லுருக்கி யுடங்கியைந்து நின்று—பிரிப்பின்றித்
தானே யுலகாந் தமியே னுளம்புகுதல்
யானே யுலகென்ப னின்று.

எ—து. உ—ம். எ—னின். இங்ஙனம் வெவ்வேறுவமை யெடுத்துக்காட்டின் அநேகாந்தவாதமா மென்னுங்கடாவை யாசங்கித்து அஃதாகாமை உவமைமு கத்தான் விளக்கி மூன்றனையும் ஒருங்கே வலியுறுத்துதனுதலிற்று.

இ—ள். உருக்கி அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கற்போல் உடங்கு இயைந்து நின்று பிரிப்பு இன்றித் தானே உலகு ஆம். எ—து. அரக்கையுருக்கி அதனோடு சேர்த்து அணைத்த கற்பொடி அவ்வரக்கினோடொன்றுய் ஒருங்கி யைந்து நீக்கமின்றி நின்றாற்போல, முதல்வன் உயிர்களின் ஒருங்குகூடிநின்று நீக்கமின்றி உடனுகலால், தானேயாம், உலகேயாம், தானே உலகேயாம். அற் றேல், †வாமதேவமுனிவன் முதலியோர் யானேயுலகெல்லா மாயினேன் எனக் கூறுதலானும், ‡ சர்வஞ்ஞானோத்தரத்தில் யானேயெல்லாமாய் அல்லனுமாய்

* இதனை ஸமுத்ரலோஹிவத் காலே ஸர்வோ ஸாதிதத்வயம்| என் னுஞ் சிவஞானசங்கிரகவசனத்தானுமறிக.

† வாமதேவன் யானேஉலகெலாமாயினேன் என்றது ருஷிர்வாமதேவ: ப்ரதி பேதே அஹம் மநுரபவம் ஸூர்யச்சேதி, ததிதமப்யேதர்ஹி ய ஏவம் வேதாஹம் ப்ரஹ்மாஸ்மீதி ஸ இதம் ஸர்வம் பவதி என்னும் பிருகதாரணியம், ௧-ம் அத்தியாயம், ச-ம் பிராமணம், ௧௦-ம் மந்திரத்தானுணர்க.

‡சர்வஞ் ஞானோத்தரத்தில் யானேயெல்லாமாய் அல்லனுமாய் உடனுமாய் நின்றே னென்று உயிர்கண்மேல்வைத்தோதுதலை ஸர்வம் ஹ்யேக்ஷரஸம்பூர்ணம் விச்வாதீதமஹோ ஸ்வரம்|ஸர்வஸ்வ ஹேதுநா ஹ்ருதா ஸர்வஸம்ஸய:||ஸஹமேவமஹோ

உடனுமாய் நின்றேன் என்று உயிர்கண்மேல் வைத்தோதுதலானும், உயிர்களும் இவ்விலக்கணத்தனவாவான் செல்லும்போலுமெனின்;—தமியேன் உளம்புகுதல் யானே உலகு என்பன் இன்று. எ-து. அம்முதல்வன் பாசக்கூட்டத்தினீங்கித் தனியாய் நின்ற என்னகத்துச் சோகம்பாவனையாற் *புகுந்து வேற்றுமையின்றித் தோன்றலான் யானேயுலகெல்லாமென்பேனுயினேன் இம்முத்திகாலத்து. ஆகலின், அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான் சேறலின்று. எ-று.

அதுபற்றி உயிர்களும் அவ்வாறுவான் சேறலின்றென்பது குறிப்பெச்சம்.

இவ்வொற்றுமைபற்றியன்றே அருச்சுனற்குக் கீதைநூல் செவியறிவுறுத்த †கண்ணன் யானே யுலகெல்லாமாயினேனென்றதூஉம், முதல்வனது விச்சுவரூபத்தைத் தான்காட்டியதூஉம், ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுகவென்றதூஉம், அதனை உறுதியாகக்கொண்ட அருச்சுனன் அவன் கூறிய கருத்துநோக்கிச் சாங்காறுஞ் சிவபூசை செய்ததூஉம், கண்ணன்மேவிட்ட போதுகள் முதல்வன்றிரு முடிமேற் கண்டதூஉமென்க. கண்ணன்உப

---

தேவ: ஸர்வஜ்ஞ ஈஶ: ஶிவ: | ஸர்வஜ்ஞத்வாதீதஸ்ய ஸ்ருஷ்டிஸம்ஹாரவர்ஜித: || யோ ப்ரஹ்மாதீந் ஸர்வம் ஸ்ருஷ்ட்வா ஸ்ருஷ்ட்வா ஸுராஸுரம் | ஸ ஏவ ஜகதோ யோநிஸ்த: ஸர்வம் வ்யாப்ய திஷ்டதி || ஏகாகார ஸம்பூர்ணம் விஶ்வம் ஸர்வத ஸர்வத்ரயம் | ஶிவாத்மகம் ஶிவயஜ்ஞம் தத்ஸர்வம் ஈஶாஸ்யம் || ப்ரதிஜ்ஞ ஜகத்த்ருஷ்டிர் த்ருஷ்ட்வா தேஹ ஸ்வயம் தேவா | பஹிரங்கவிர்ஹா மே நத்ஸர்வம் ஸ்வாவித்யா || என்னும் மேற்படியாகம சுலோகங்களா னுணர்க.

* புகுதல் புதிதாகப்புக்கதன்று; அநாதியே ஒன்முய்நின்ற முறைமை முன்புதோன்முமல், இந்திரியங்களை நீக்கியவிடத்தே காண்டலால் பின்பிரகாசித்தலெனவறிக.

† கண்ணன் யானே உலகெலாமாயினென் என்றது விஷ்டப்யாஹ மிதம் க்ருத்ஸ்நம் ஏகாம்ஶேந ஸ்திதோ ஜகத் | என்னும் பகவற்கீதை, ௧0-ம் அத்தியாயத்து ௪௨-ம் சுலோகத்தானும், முதல்வனது விச்சுவரூபத்தைக்காட்டியது பஶ்ய மே பார்த ரூபாணி ஶதஶோऽத ஸஹஸ்ரஶ: | நாநாவிதாநி திவ்யாநி நாநாவர்ணாக்ருதீநி ச || என்னும் ௧௧-ம் அத்தியாயத்து ௫-ம் சுலோகத்தானும், ஏனையவற்றைக் கைவிட்டு என்னையே வழிபடுக என்றது ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஶரணம் வ்ரஜ | அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: || என்னும் பகவற்கீதை, ௧௮-ம் அத்தியாயத்து, ௬௬-ம் சுலோகத்தானும், கண்ணன்மேலிட்ட போதுகள் முதல்வன்திருமுடிமேற் கண்டது தத்ராபஶ்யத் ஹாரம் ஸ்வக்ருதம் நைஶம் நைத்யகம் வ்ருஷபத்வஜ: | ததஸ்து த்ர்யம்பகாபார்ஶ்வே வாஸுதேவேந நிவேதிதம் || என்னும் பாரதம், துரோணபருவம், அக-ம் அத்தியாயத்துச் சுலோகத்தானும், கண்ணன் உபமன்னியமுனிவர்பால் தீக்ஷைபெற்றது ஶிவநக்ஷேத்ர விப்ரேண தீக்ஷிதோஹம் யதாவிதி | என்னும் பாரதம் அநுசாசன பர்வத்து ௧௪-ம் அத்தியாயத்து ௩௭௯-ம் சுலோகத்தானும் உணர்க.

மன்னியமுனிபாற் சிவதீக்கையுற்றுத் தன்னையுந் தலைவனையு முணர்ந்தோனாகலிற் சிவோகம்பாவனையைத் தலைப்பட்டோனாதலறிக.

கலப்பாய்நிற்றலான் உலகேயாமென்பார் உடங்கியைந்து எனவும், பொருட்டன்மையால் வேறுநிற்றலால் தானேயாமென்பார் நின்று எனவும், உயிர்க்குயிராய் நிற்றலால் தானேயுலகாமென்பார் பிரிப்பின்றி எனவுங்கூறினார்.

ஈண்டும் இரட்டுறமொழிந்துகொண்டுரைக்க.

இன்றியென்னுஞ் செய்தெனெச்சக்குறிப்பு "மழைபெய்து குளநிறைந்தது" என்புழிப்போலக் காரணகாரியப் பொருட்டாய் நின்றது.

இவ்வதிகரணத்தானே பேதமென்றும் அபேதமென்றும் பேதாபேதமென்றும் பிணங்குஞ்சமயிகளையெல்லாம் மறுத்து அம்மூவகையியல்புந் தன்கட்டோன்ற நிற்கும் அத்துவிதத்தன்மை ஏதுக்களானும் உவமைகளானும் உணர்த்தியவாறு. புடைநூலாசிரியரும் இவ்வதிகரணப் பொருளைபற்றி * "புறச்சமயத்தவர்க்கிருளாய்—தெரிக்கலுற்றாம்" என வகுத்தோதினார்.

முதலதிகரண முடிந்தது.



## இ ர ண் டா ம தி க ர ண ம்.

**இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனாணையின் வரும் என்றது.**

எ—து. மே—ள். எ—னின். முதல்வன் அவ்வாறு உயிர்களோடியைந்து நின்று புனருற்பவஞ்செய்யுங்கால் உலகத்துக்குப்போல் அவனுக்குத் துணைக்காரண முதலியன வேண்டப்படுமோ படாவோ என்னும் ஐயப்பாட்டின்கண் முதல்வனது சுதந்திரத்திற்கும் அளவிலாற்றற்கும் இழுக்காய் முடியுமாகலின் அவனுக்கு அவைவேண்டப்படா எனப் பரிணாமவாதிகள் கூறுங் கடாவையாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட்னுதலிற்று. இ—ள். வெ-டை.

ஈண்டு இருவினையென்றது முற்பிறவிகளினீட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக் கிடந்த புண்ணியபாவங்களையென்க; எனவே, மாயையினுண்மையும் பெறப்பட்டது. இவை வேண்டப்படுதல்பற்றி முதல்வன் சுதந்திரத்திற்கு இழுக்கில்லையென்பார், முதல்வனாணையின்வரும் என்றார்.

**ஒருநகரியைக் காப்பான் பாடிகாவலிட்டாங்கு அவை அவனதாக்கினை யாகலான்.**

எ—து. ஏ—து. எ—னின். ஆணையேயமையும் இருவினையெற்றுக்கு என்னுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ—ள். ஒருபட்டணத்தைப் புரக்கும்வேந்தன் பாடிகாவற்றொழிலைக் களைகணுவாரொருவன்மாட்டு வைத்தாற்போல எல்லாவறிவு முதன்மை யது

* சிவப்பிரகாசம், பாயிரம். எ.

க்கிரகங்களுடைய அம்முதல்வன் புனருற்பவத்தைச் செய்வதாகிய தனதாணை யை அவ்விருவினைகண்மாட்டுவைத்து நடாத்துதலே முறையாகலான் இனி யிவ்வான்மாக்களுக்கு இருவினைமுதல்வனுணையின் வரும் என மேற்கொண் டது. எ—று.

முதல்வன் செய்யுஞ் செய்தியெல்லாம் உலகத்தோடொப்ப நிகழ்வன வாகலின் ஈண்டைக்கு அரசன்செய்தி உவமையாயிற்று.

பாடிகாவலாவது களைகணுவாரொருவனைக்கொண்டு வேந்தன் செய்விப்ப தொரு தண்டத்தொழில் விசேடம். அது * "கோடி காவனைக் கூறுத நாளெ ல்லாம்—பாடிகாவலிற்பட்டுக் கழியுமே" என்னுந் திருப்பாட்டானுமறிக. இஃ தறியாதார் தத்தமக்கு வேண்டியவாறெல்லா முரைப்ப.

உள்ளதே தோற்ற வுயிரணையு மவ்வுடலி
னுள்ளதா முற்செய்வினை யுள்ளடைவே—வள்ளலவன்
செய்பவர் செய்திப் பயன்விளக்குஞ் செய்யேபோற்
செய்வன் செயலணையா சென்று.

எ—து. உ—ம். எ—னின். வினை உண்டென்பதற்கும் அதுவே உயிர்க்குப்ப யனுய் வருமென்றதற்கும் மேல் வினையேறுமாற்றிற்கும் அது முதல்வனையி ன்றியமையாமைக்கும் பிரமாணமென்னை யென்னுங்கடாவை யாசங்கித்து ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ—ள். உள்ளதே தோற்ற. எ—து. இல்லது தோன்றுதென்பது மேற்கூ றிப் போந்தமையான் முன் உள்ளதாய புண்ணியபாவமென்னும் இருகூற்றுச் சஞ்சிதவினையே தன் பயனுகிய இன்பத்துன்பங்களையும் அவை நுகர்தற்குரிய நிலைக்களமாகிய உடம்பினையுந்தோற்றுவிப்ப,—உயிர் அவ்வுடலின் அணையும். எ—து. அவ்வின்பத் துன்பநுகர்ச்சி சடத்துக்குக் கூடாமையிற் சித்தாகிய உயிரே அவ்வுடம்பிற் பொருந்தி அவற்றையநுபவிக்கும். முன்வினையை ஈண் டநுபவித்தொழிந்தால் மேலைக்கு வினையுண்டாமாறி யாங்ஙனமெனின்;— முன் செய் வினை உள் அடைவே உள்ளதாம். எ—து. முன் செய்த வினை அநு பவித்தற்கேதுவான முறைமையிலே மேலைக்கு வினையுளதாம். அற்றேல், அவ் வினையேபயனுகவருமென வமையும் முதல்வன் எற்றுக்கெனின்;—செய்பவர் செய்திப் பயன் விளைக்குஞ் செய்யேபோல். எ—து. உழவர் செய்யுந் தொழிற் குத் தக்கபயனை விளைநிலம் விளைவிப்பதன்றி அத்தொழிருனே விளைவிக்கமா ட்டாததுபோல,—வள்ளலவன் செய்வன். எ—து. உணவும் வித்துமாய்த் தொன் றுதொட்டு வரும் அவ்வினைகளை வள்ளலாகிய முதல்வனே அவ்வுயிர்கட்குக் கூட்டுவன்,—செயல் சென்று அணையா. எ—து. அவ்வாறன்றி வினை தானே உயிர்கட்குப் பயனுய்வந்து பொருந்தமாட்டாது. எ—று.

வள்ளலென்றுர், தற்பயன் குறியாது †"வேண்டுவார் வேண்டிய" வா றே நல்கும் அருளுடைமை நோக்கி.

---

* திருநாவுக்கரசுநாயனுர் தேவாரம், திருக்கோடிகாத் திருக்குறுந்தொகை. சு. நாடிநாரணன். † " திருமறைக்காட்டுத் திருத்தாண்டகம். க.தூண்டுசுடரனைய.

உள்ளடைவு உள்ளுதற்கேதுவாகிய அடைவென விரியும். ஏகாரம் எழா வதன்பொருட்கண் வந்தது. உள்ளுதல் ஈண்டநுபவித்தல். அதற்கேதுவாய முறைமையாவன அநுபவித்தற்குத் துணைக்காரணமாகிய விருப்பு வெறுப்புக்கள். அவற்றின்கணுண்டாமாறு முன்னர்க்காட்டுதும்.

மேல் முதல்வனுக்கு வினை வேண்டப்படுமென்பதற்கு அரசனை யுவமை கூறினார்; ஈண்டு வினை முதல்வனையின்றி யமையாதென்பது உணர்த்துதற்கு உழவுதொழிலையுவமை கூறினாரெனக் கொள்க.

அவ்வினையைச் செய்வதனி லவ்வினைஞர் தாஞ்சென் *றங்
கவ்வினையைக் காந்த பசாசம்போ—லவ்வினையைப்
பேராம லூட்டும் பிரானி னுகராரே
லார்தா மறிந்தணைப்பா ராங்கு.

எ—து. உ—ம். எ—னின். இருவினை சடமாகலிற் சென்றணையமாட்டாவா யினும் உயிர்கள் சேதனமாகலின் அவையே அவற்றது பயனை யறிந்து எடுத்துக்கொண்டு நுகரும் வள்ளல் எற்றுக்கு என்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ—ள். காந்த பசாசம்போல். எ—து. ஒருவனெடுத்து நேரொக்கப் பிடித்தவழி இரும்பினை வலித்துக் கொள்ளுங் காந்தம்போல,—அவ்வினையைப்பேராமல் ஊட்டும் பிரானின். எ—து. அவ்வினைப்பயன்களைப் பிறழாமல் நுகர்விக்கும் முதல்வனால்,—அவ்வினைஞர் தாம். எ—து. அவ்வினைகளைச் செய்யும் ஆன்மாக்கடாம்,—அவ்வினையைச் செய்வதனில் சென்று அவ்வினையை நுகராரேல் ஆர் தாம் அறிந்து அணைப்பார். எ—து. அவற்றைச் செய்தற்கு நிலைக்களமாகிய உடம்பின்கட்பொருந்தி அவற்றதுபயனை அநுபவிப்பர்; அவ்வாறநுபவியாராயின், வேறே எவர் தாம் அவற்றையறிந்து கூட்டுவார்,—ஆங்கு. எ—து. அறிவுஞ் சுதந்திரமுமின்றி மலத்தின் மறைப்புண்டு கிடக்கும் அப்பெத்தகாலத்து.

ஒருவருமில்லையென்பதாம்.

ஆன்மாக்களுக்குத் தமக்கென அறிவின்மையானும், வினை சடமாகலானும், மாயை தாரகமாமத்தன்றுணிற்றல் எனப்போந்தமையானும், முதல்வனே அறிந்தணைப்பனெனப் பாரிசேடவளவை கூறுவார், பிரானினுகராரேலார்தா மறிந்தணைப்பாரென்றார். இது சொற்பொருட் பின்வருநிலை.

நெல்லிற் குமியு நிகழ்செம்பி னிற்களிம்புஞ்
சொல்லிற் புதிதன்று தொன்மையே—வல்லி
மலகன்ம மன்றுளவாம் வள்ளலாற் பொன்வா
ளலர்சோகஞ் செய்கமலத் தாம்.

* அங்கு-அசை.

எ—து. உ—ம். எ—னின். அவ்வினை ஆதியோ அநாதியோ ஆதியெனின் முன்பில்லது இடையே தோன்றுமென்பது * சற்காரியவாதத்துக்கேலாது அநாதியெனின் ஒருவர் கூட்டவேண்டுவ தில்லையென்னுங் கடாவை யாசங்கித்துஅதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ—ள். நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும் சொல்லின் தொன்மையே புதிது அன்று. எ—து. நெல்லின்கணுமியும் செம்பின்கட்களிம்பும் எக்காலத் துளவாயினவென்று ஆராய்ந்து சொல்லுங்கால் அந்நெல்லுஞ் செம்பும் உளவாயினவன்றே உள்ளனவன்றி இடையே வந்தனவல்ல; அது போல,—வல்லி மலகன்மம் அன்று உளவாம். எ—து. மாயை மலம் கன்மமென்னுமும்மலங்களும் அநாதியேயுள்ளனவாம்,—கமலத்து அலர் சோகம் பொன்வாள் செய் வள்ளலால் ஆம். எ—து. முன்னேயுள்ளதாய தாமரைப்பூ அலர்தலும் கூம்புதலும் ஞாயிற்றினுற் செய்யப்படுமாறுபோல அவை தத்தங்காரியங்களைச் செய்தல் முதல்வனாலேயாம். எ—று.

† இஃதெடுத்துக்காட்டுவமை.

புதிதன்றென்பதனைத் தனித்தனி கூட்டுக.

தொன்மையிலுள்ளவற்றைத் தொன்மை என்றுபசரித்தார்.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

மாயை இறைவனுக்குப் பரிக்கிரகசத்தியாகலின், வல்லியென்றார்.

வினைக்குத் தொன்மைகூறுவார் இனம்பற்றி மாயைமலங்களுக்குந் தொன்மைகூறினார்.

‡மூலமலத்தின்காரியம் மோகம் மதம் முதலாயின. இருவினையின் காரியம் இன்பத்துன்ப முதலாயின. மாயையின்காரியம் தநுகரண முதலாயின. வள்ளலாலாமெனவே திரோதானசத்தியது உண்மையும்பெற்றாம். அது பாகம் வருவித்தற்பொருட்டு மலத்தின்வழி நின்று மோகமுதலியவற்றைத் தொழிற்படுத்துவதாகிய சிவசங்கற்பத்திற் கேதுவாதல்பற்றி மலமென்றுபசரித்துக் கூறப்படும். இவ்வாறு மல கன்ம மாயை திரோதானம் மாயாகாரியமென்னும் ஐவகைப்பாசமுங் கண்டுகொள்க.

---

* சற்காரியவாதம் உள்ளதுகாரியப்படும் என்று சொல்லுவது. வாதம்-சொல்லுதல்.

† எடுத்துக்காட் டென்னு முவமையினை வடநூலார் நிதரிசனலங்கார மென்றுரைப்பர். நிதரிசன லங்காரத்திற்கும் உவமாலங்காரத்திற்கும் வேறுபாடு யாதெனின்,—உவமான வுவமேயங்களிரண்டன் சாதிருசிய தருமம் பேதநெறியானே உவமவுருபு பற்றிவெளிப்படையால் விளக்குவ துவமாலங்காரம். அவ்விரண்டன் சாதிருசிய தருமம் அபேதநெறியாற் குறிப்பி னுணர்த்துவது நிதரிசனம். இதுவே தம்முள் வேறுபாடென்க.

‡ மூலமலத்தின்காரியம், மோகம் மதம் இராகம் கவலை தாபம் வாட்டம் விசித்திரம் என ஏழுவகைப்படும். இவை முறையே மயக்கத்திற்கேதுவாதலும், மதித்தற்கேதுவாதலும், ஆசைமிகுதிக் கேதுவாதலும், கவலுதற் கேதுவாதலும், தபித்தற் கேதுவாதலும், வாடுதற்கேதுவாதலும், நானாவித வேதுவாதலுமாம். இது திராவிட மாபாடியத்திற் கண்டது.

இவற்றுண் மாயை சுத்தமாயை அசுத்தமாயையென் றிருவகைப்படும். இவ்விரண்டனுள் * சுத்தமாயையின் காரியமே அசுத்தமாயையென்பாரும், சுத்தமாயைபோல அசுத்தமாயையும் அநாதியேயாமென்பாரும், † ஒன்றுதானே ஊர்த்துவமாயை அதோமாயையென் றிருவகைப்படுமென்பாரும் எனப் பலதிறத்தர் ஆசிரியர். இனி முதல்வனது கிரியாசத்தியே சுத்தமாயை யெனப்படுமென்பாருமுளர். அது முதல்வனுக்குத் தாதான்மியசத்தியாகலிற் பரிக்கிரகசத்தியாகிய சுத்தமாயையாதல் யாண்டையதென்றொழிக. சுத்தமாயையினின்றும் பஞ்சகலைகளும் நால்வகைவாக்குஞ் சிவதத்துவமைந்துஞ் ‡ சுத்தகாலமுதற் சுத்தநிலமீறாகிய முப்பத்தொன்றுந் தோன்றும். அசுத்தமாயையினின்றும் அசுத்தகாலமுதல் அசுத்தநிலமீறாகிய முப்பத்தொரு தத்துவங்களுந் தோன்றும். இந்தத் தத்துவங்களெல்லாம் ¶ பொதுவும் சிறப்பும் பொதுச்சிறப்புமெனத் தனித்தனி மூவகைப்பட்டு உயிர்கடோறும் வெவ்வேறுளவாம்.

§கன்மமும் 0 "நாசோற்பத்தி பண்ணிவரு மாதலா லநாதி" என்பதுபற்றிப் பிரபஞ்சம்போலப் ** பிரவாகாநாதியென்பாரும், †† "ஏக னநேகனிருள் கரும மாயையிரண்—டாகவிவை யாறு தியில்" எ—ம், ‡‡ "ஆணவ முதலன் றதுபோற் கருமமும்" எ—ம், ஒப்ப வோதுதல்பற்றி மூவகைவினைக்கும் முதற்காரணமாய மூலகன்மமொன்று அநாதிநித்தமாயுண்டென்பாருமென்று இருதிறத்தாசிரியரென்க.

இவ்வினை ஈட்டப்படுங்கால், ¶¶ மந்திரமுதலிய அத்துவாக்களிடமாக மனம்வாக்குக் காயம் என்னும் மூன்றான் ஈட்டப்பட்டு, தூலகன்மமாய் ஆகாமியமெ

---

* சுத்தமாயையின்காரியமே அசுத்தமாயை; சுத்தமாயைபோல அசுத்தமாயையும் அநாதியே யென்பார் இரத்தினத்திரய நூலார்.

† ஒன்றுதானே ஊர்த்துவமாயை அதோமாயை என்று இருவகைப்படும் என்பார் அகோரசிவாசாரியர்.

‡ சுத்தமாயையினின்றும் சுத்தகாலமுதல் முப்பத்தொன்றும் தோன்றுமென்பது [illegible] என்னும் பௌஷ்கராகம சுலோகத்தானறிக.

¶ புவனவடிவாகிய தத்துவங்கள் எல்லாருக்கும் பயன்றருதலின் பொது. சூக்குமதேகவடிவாகிய தத்துவங்கள் தனக்குப் போகநுகர்தற் கருவியாதலின் சிறப்பு. தூலதேகவடிவாகிய தத்துவங்கள் தனக்குப் போகநுகர்ச்சிக்கும் சந்தனம் பூமாலை போல மனைவி முதலியோர் அநுபவித்தற்கும் கருவியாதலின் பொதுச்சிறப்பு. இது திராவிடமாபாடியத்திற்கண்டது.

§ கன்மம் நாசோற்பத்தி பண்ணுதலாவது:—வித்தின்கேட்டினங்குரம்போல ஒரு கன்மம் கெடும்பொழுது மற்றொரு கன்மத்தை யுண்டாக்கிவிடுதல்.

0 சிவப்பிரகாசம், பொது. கசு. நண்ணியிடு.

** பிரவாகாநாதி இடையறாதோடும் நீர்ப்பெருக்குப்போலத் தொடர்ச்சியாய்த் தொன்று தொட்டுவருதல். †† திருவருட்பயன், அறியுநெறி. உ. ‡‡ ஞானாமிர்தம், உ௨. கருமம்.

¶¶ மந்திரமுதலிய அத்துவாக்களாவன:—மந்திராத்துவா, பதாத்துவா, வர்ணாத்துவா, புவனாத்துவா, தத்துவாத்துவா, கலாத்துவா என்பன. அத்துவா—வழி. இவற்றின்கட்டுமியல்பெல்லாம் அரும்பதவுரையிற்காண்க.

னப் பெயர்பெற்று, பின்னர்ப் பக்குவமாங்காறுஞ் சூக்குமகன்மமாய்ப் புத்தி தத்துவம் பற்றுக்கோடாக மாயையிற்கிடந்து, சாதி ஆயுப் போகம் என்னும் மூன்றற்கும் ஏதுவாய் முறையே * சனகம் தாரகம் போக்கியம் என்னும் மூவகைத்தாய், அபூருவம் சஞ்சிதம் புண்ணியபாவம் என்னும் பரியாயப்பெயர் பெற்று, பின்னர்ப் பயன்படுங்கால் ஆதிதைவிகம் ஆத்தியான்மிகம் ஆதிபௌதிகம் என்னும் முத்திறத்தாற் பலதிறப்பட்டுப் பிராரத்தமெனப் பெயர் பெறும். ஆதிபௌதிகமாவது சடம் வாயிலாக வருவது. ஆத்தியான்மிகமாவது சடத்தோடு கூடிய சேதனம் வாயிலாக வருவது. ஆதிதைவிகமாவது ஒருவாயிலானன்றித் தெய்வந்தானே காரணமாக வருவது.

இன்னும் இவ்வினைகள் † உலகம் வைதிகம் அத்தியான்மிகம் அதிமார்க்கம் மாந்திரம் என்று ஐவகைப்பட்டு, ஒன்றற்கொன்று ஏற்றமுடைத்தாய், முறையே நிவிர்த்திமுதலிய பஞ்சகலைகளினடங்கி, அசுத்தம் மிச்சிரம் சுத்தமெனப்படும் போகங்களைப் பயப்பிக்குமென்றறிக.

இரண்டாமதிகரண முடிந்தது.

## மூன்றமதிகரணம்.

## இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது.

எ—து. மே—ள். எ—னின். புனருற்பவம் சடத்துக்கன்றிச் சித்துக்கு முளதாயினன்றே முற்செய்வினையே ஈண்டைக்குவருமென மேற்கூறியதமையும். அஃதுண்டோ இல்லையோ என்னுமையப்பாட்டின்கட் ‡ குடமுடைந்தவழிக் குடாகாயம் ஆகாயத்தோடு கூடுமாறுபோல உடம்பு நீங்கியவழி உயிர் பிரமத்தோடு கூடுமென்னுஞ் சுருதிபற்றி இறந்தவுயிர் மீளப்பிறப்பதில்லையெனக் கிரீடாப்பிரமவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ—டை.

வருதல் தொன்றுதொட்டவ்வாறுதல்.

மாறுதல் ஈண்டு இறத்தலென்பது 'போக்கு வரவு புரிய' என்னு மூலத்தானும், ஏதுவுதாரணங்களோடு உளதாகிய இயைபானும் உணர்க. இஃதுணராது

* சனகம்—காரணமாய்நின்று சரீரம் முதலியவைகளைப் பிறப்பிப்பது. தாரகம்-சரீரரூபமாய்நின்று ஆன்மாவைத்தரித்திருப்பது. போக்கியம்—விடயவடிவமாய்நின்று அநுபவிக்கப்படுவது.

† உலகவினை கூவல் தண்ணீர்ப்பந்தலாதி அமைத்தல். வைதிகவினை வேள்வியாதி செய்தல். அத்தியான்மிகவினை சிவபூஜையாதிசெய்தல். அதிமார்க்கவினை யோகஞ்செய்தல். மாந்திரவினை மந்திரோச்சாரம் ஞானநூல் ஓதலாதிசெய்தல். இது திராவிடமாபாடியத்திற் கண்டது.

‡ பைங்கலோபநிடதம் ௪-ம் அத்தியாயம், யதா யதா ஹ்யேதாஜ்ஞாநீயெநவா கேநஹ்யேத்ருதேநாய்யாகாஶவத்ஹதம்தேஹாஶதரதராஶம்ஸதஃ॥ வடாகாஶமிவாத்மாநம்விஶம்வேத்திஹஸதஃ।

அச்சு வேறுபடுதலென்று உரைப்பாருமுளர். அஃதின்னடைக்கு யாதும் இயை யாமையுணர்க.

தோற்றமுமீறும் உள்ளதற்கல்லது உளதாதலின்மையான்.

எ—து. ஏது. எ—னின். அதற்குப் பிரமாணமென்னையென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ - ள். உற்பத்தியும் நாசமுந் தொடர்ச்சியாயுள்ள பொருட்கன்றி ஏனை ப்பொருட்கு உற்பத்தி கூடாமையான் 'இனி இவ்வான்மாக்களே மாறிப் பிறந் துவரும்' என மேற்கொண்டது. எ - று.

தோற்றமும் ஈறுமென்னுமும்மைகளை * எதிரது தழீஇயினவாகக் கோ டலிற் றொடர்ச்சியாயென்பது போந்தவாறறிக. உளதாதல் ஈண்டுத் தோன் றுதல்.

இனி இவ்வாறன்றிக் குடாகாயவுவமையேபற்றி இருவினையான் வரும் புனருற்பவம் உயிரின்பொருட்டுச் சிவத்துக்கேயாமெனச் சிவாத்துவிதிகள் கூறுங்கடாவை யாசங்கித்தும், †மூலப்பகுதியிற்றோன்றும் புத்திதத்துவத்திற் கே அதுவெனச் சாங்கியர் கூறுங்கடாவை யாசங்கித்தும் மேற்கோடனுத லிற்று இவ்வதிகரணமெனக்கொண்டு, தோற்றமும் ஈறும் அவ்வுரிமையுள்ள தற்கேயன்றி ஏனையவற்றிற்கு உளதாதலின்மையான் இவ்வான்மாக்களே மாறிப் பிறந்துவருமென மேற்கொண்டதென் றுரைப்பினுமாம். இப்பொரு ட்கு உரிமையென்பது அவாய்நிலையான் வந்தது.

உளதாதலென்னும் ஒருமை தோற்றவீறுகளோடு தனித்தனி சென்றி யையும்.

ஆன்மாக்களேயென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தாற் றொக்கது.

இனி மாயாவாதி முதலியோர் மதத்தை மறுத்தற்பொருட்டு மேற்கொ ண்டதென்பாருமுளர். ‡ அத்துவிதமென்ற சொல்லானே அவரை மறுத்து ஆன்மாக்களைப் பெறுவித்தமையின் ஈண்டு அவர்மதம்பற்றிக் கடா நிகழ்தற் கோரியையின்மையுணர்க.

கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து
விண்படர்ந்தத் தூடு வினையினாற்—கண்செவிகெட்
டுள்ளதே தோற்ற வுளமணுவாய்ச் சென்றுமனந்
தள்ள விழுங்கருவிற் றான்.

எ—து. உ—ம். எ—னின். புனருற்பவமாங்காற்படும் இயல்புகளுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற உளம் அத்தூடு விண்படர்ந்து கண்ட நனவைக் கனவு உணர்வின் மறந்து மனம் தள்ள வினையினால் அணு வாய்ச் சென்று கருவில் விழும் எனக் கொண்டுகூட்டுக.

---

* எதிரதுதழீஇயினவாகக் கோடல்—பின்னரும் தோற்றமும் ஈறும் உள்ளனவாகக் கொள்ளல். † மூலப்பகுதி – பிரகிருதி. ‡ ௫௬-ம் பக்கத்திற்காண்க.

இ - ள். கண் செவி கெட்டு உள்ளதே தோற்ற. எ—து. கண் செவி முதலிய உறுப்புக்களையுடைய இவ்வுடம்பு கெட்டவழித் தனக்குக் கேடின்றிப் படைப்புக்காலந் தொடங்கிச் *சங்காரகாலமளவும் நிலைபெற்றுள்ளதாகிய சூக்குமதேகம் †பூதசாரவுடம்பு ‡முதலியனவாய்க் காரியப்பட,—உளம் அத்தூடு விண்படர்ந்து. எ—து. உயிரானது அப்பூதசாரமுதலிய உடம்பின்கட்பொருந்தித் துறக்கநிரயங்களிற் சென்றநுபவித்து, பின்னர்,—கண்ட நனவைக் கனவு உணர்வின் மறந்து. எ—து. நனவின்கட்கண்டவற்றைக் கனாக்காணுங்காலத்து மறந்து அறிவுவேறுபட்டாற்போல, முன்னைக் கண் செவி கெட்டவாறும் உள்ளதே தோற்ற அத்தூடு விண்படர்ந்தவாறும் ஆண்டநுபவித்தவாறுமாகிய இன்னோரன்னவற்றை மறந்து அறிவு வேறுபட்டு,—மனந் தள்ள வினையினால் அணுவாய்ச்சென்று கருவில் விழும். எ—து. முன்னுடம்பு இறக்குங்கால் அடுத்த வினை காட்டுங் ¶கதிநிமித்தம்பற்றி உயிர் அவாவுமாறு மனஞ்செலுத்துதலான் அக்கதிக்கட் சேறற்கேதுவாய் எஞ்சிநின்ற புண்ணியபாவசேடத்தாற் சூக்குமதேகமாத்திரையாய்ச் சென்று அம்மனந்தள்ளிய கதிக்கு அமைந்த அக்கருவின்கட்படும். எ - று.

இன் உவமவுருபு. தான் அசை. மறத்தற்குச்செயப்படுபொருள் அவாய்நிலையான் வந்தது.

விண்படர்ந்தென்னும் § உபலக்கணத்தால் நிரயம்படர்ந்தென்பதூஉம் பெறுதும். படர்ந்தெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

அத்தூடென்புழி அன்சாரியை விகாரத்தாற்றொக்கது. பொருந்தியென்பது சொல்லெச்சம். வினை ஆகுபெயர்.

உடம்புநீங்கிப்போங்கால் முதற்கட் கெடுவன கண்ணுஞ்செவியுமாகலின், அச்சிறப்புநோக்கிக் கண்செவிகெட்டென் றுபசரித்தார். கெட்டவழியென்பது கெட்டெனத் திரிந்து நின்றது.

ஐம்பெரும்பூதத்தின் காரியமெனப்பட்ட தூலவுடம்பு சூக்குமவுடம்பின்காரியமாமா றென்னை யென்னும் ஐயநீக்குதற்கு உள்ளதே தோற்ற வென்றார். ஏகாரந் தேற்றம்.

ஆகாயமுதலிய தூலபூதங்கள் சத்தமுதலிய சூக்குமபூதங்களின் காரியமாதலின், அதுபற்றியே தன்மாத்திரைமயமாகிய சூக்குமவுடம்பிற் றோன்றுவதாய தூலவுடம்பு ஐம்பெரும் பூதமயமெனப்பட்டதன்றிப் பிறிதில்லையென்பது, ௦ "பூதனு சரீரம் போனாற் புரியட்ட ரூபந் தானே—யாதனு சரீர மாகி" எ—ம். **"சூக்கும வடிவே தென்னிற் றூலகா ரணம தாகும்." எ—ம். ††"தூல மா முருவி னுக்குச் சூக்கும முதல்." எ—ம். ‡‡ "மாறியிவ் வுருவ மெல்லாம் வருவதெங் கேநின் றென்னிற்—கூறிய சூக்கு மத்தாம்." எ—ம். ¶¶"விதிப்படி

* சங்காரம் ஈண்டுமோசங்காரமெனவறிக. † பூதசாரவுடம்பு தேவசரீரம். ‡ முதலிய என்றதனால் யாதனாசரீரமுங்கொள்க. ¶ கதிநான்கு. அவை தேவகதி, மக்கட்கதி, விலங்கின்கதி, நரகர்கதி என்பன. § உபலக்கணம் இனமானபொருளையும் விடாதறிவிப்பது. ௦ சிவஞானசித்தி, இரண்டாஞ்சூத்திரம். ௬௬. ** நான்காஞ்சூத்திரம்.௧௦. †† இரண்டாஞ்சூத்திரம். ௫௦. ‡‡ இரண்டாஞ்சூத்திரம். ௬௭. ¶¶ இரண்டாஞ்சூத்திரம். ௬௯.

சூக்கு மத்தே யுருவரும்." எ-ம். * "மனுதி தருமுடல்." எ-ம். வழிநூலாசிரியரும் இவ்வாறே கூறியவாறு காண்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே யுரைப்ப. அது தோன்றுங்கால், † "கால மூற்று—நீக்கிட மரம்பின் வேரோர் நீண்மர நிகழ்த்து." மாறுபோலச் சூக்குமவுடம்பு கெடாதுநிற்பத் தூலவுடம்பு ‡ "வேறொரு குறியா மாரம் வீரசங் கிலியுமா" தல்போல வினைக்கீடாக அச்சுவேறுபட்டு ¶ "மதிக்கெழு கலைகள் போல வருவது போவதாம்." என்பதூஉம் வழிநூலாசிரியர் கூறியவாற்றானறிக.

அணு சூக்குமவுடம்பு. தள்ள தள்ளுதலானென்க. அக்கருவிலெனச் சுட்டுவருவிக்க. தான் அசை.

உள்ளதேதோற்ற என்றதனால் உடற்றிரிவும், விண்படர்ந்து என்றதனால் இடத்திரிவும், கண்ட நனவைக் கனவுணர்விற் றான்மறந்து என்றதனால் அறிவுத்திரிவும் பெறப்பட்டன.

உள்ளதேதோற்ற என்றதனால் புதிது புதிதாய்த் தோன்றுதல்பற்றிச் சற்காரிய வாதத்திற்கு இழுக்கின்மையும், அத்தூடு விண்படர்ந்தெனவும் அணுவாய்ச் சென்று கருவில் விழுமெனவுங் கூறியதனால் போக்குவரவுபற்றி வியாபகத்துக்கு இழுக்கின்மையும், வினைச்சேடத்தாலென்றதனால் துறக்க நிரயங்களின் அநுபவித்தொழிந்தமைபற்றிப் புனருற்பவகாரணத்திற்கு இழுக்கின்மையும், மனம் தள்ள என்றதனால் அஃதெஞ்சுதற் கேதுவுங்காட்டியவாறு.

வேதத்துட்கூறப்படும் § பஞ்சாக்கினி வித்தையின் இயல்பு உணர்த்துவார் கண் செவி கெட்டவழி விண் படர்ந்து மறந்து அணுவாய்ச் சென்று கருவில் விழுமென்றார். பஞ்சாக்கினிவித்தையின் இயல்பு நீலகண்டபாடியத்திற் காண்க.

---

* பதினொராஞ்சூத்திரம். ௩. அநாதியுட. † இரண்டாஞ்சூத்திரம். ௪௮. சூக்குமங். ‡ இரண்டாஞ்சூத்திரம். ௪௭. மாறியிவ்வுருவ. ¶ இரண்டாஞ்சூத்திரம். ௪௯. விதிப்படி.

§ பஞ்சாக்கினிவித்தையி னியல்பாவது:—பார்ப்பனச்சாதிமுதலியவற்றிற்பிறந்து வேள்விமுதலிய நல்வினைசெய்தவுயிர்கள், அவ்வினையின்பயனுகர்தற்பொருட்டினிவ்வுடம்பினீங்கிச் சூக்கும தேகத்தோடு துறக்கத்திற் சென்று இன்பமனுபவித்தற்குரிய பூதசாரவுடம்பெடுத்து ஆண்டு வைகுங்கடவுளரோடுவாழ்ந்து நல்வினைப்பயன்களனுபவித்துத்தொலைந்தவழி, மீள நிலத்தின்வந்து பார்ப்பனச்சாதிமுதலியவற்றிற் றோன்றி வினைகளையீட்டுதற்கேதுவாய் எஞ்சிநின்ற வினைச்சேடத்தால்அவ்வுடம்பினை நீங்கிச் சூக்குமதேகத்தோடு மேகமண்டலத்தினையெய்தி, ஆண்டுநின்று மழைத்தாரையினோடு கூடி நிலத்தினை யடைந்து நென்முதலிய பைங்கூழின் விரவி நின்று, அவையுணவாய்ப்பரிணமித்தவழி அவற்றோடுகூடித் தந்தைவயிற்றுச்சென்று ஆண்டுச் சுக்கிலமாய்ப் பரிணமித்து, அதனோடுகூடித் தாய்வயிற்றிற்சென்று ஆண்டுக்கருவாய்ப் பரிணமித்துப் பார்ப்பனச்சாதிமுதலியவற்றிற் குரித்தாகிய தூலதேகத்தோடு நிலத்திற்றோன்றுமென்றுணர்க.

ஆன்மாத் தூலவுடம்பினீங்கியவழித் துறக்கமும், மேகமண்டலமும், நிலனும், தந்தையும், தாயுமென்னு மைந்துநிலைக்களத்தும் வைகித் தோன்றுதலின் இவை ஐந்திடமும் அங்கியாகவும், அவற்றினெய்தியவான்மா ஆகுதியாகவும் இங்ஙனந் தியானிப்பதொரு சாதகமாகலின் இது பஞ்சாக்கினிவித்தை. இது திராவிடமாபாடியத்துட்கண்டது. இதனை நீலகண்டபாடியம், ௩-ம் அத்தியாயம், ௧-ம் பாதத்திற்காண்க.

மறந்து விண்படர்ந்தெனக் கூட்டியுரைப்பாருமுளர். துறக்கநிரயங்களிற் படர்ந்து அநுபவிப்புழி அறிவுதிரியாமை புராணங்களுட்காண்க.

அரவுதன் றோலுரிவு மக்கனவும் வேறு
பரகாயம் போய்வருமப் பண்பும்—பரவிற்
குடாகாய வாகாயக் கூத்தாட்டா மென்ப
தடாதுள்ளம் போமா றது.

எ—து. உ—ம். எ—னின். உயிர்க்குப் புனருற்பவமாகாமைக்கு வாதிகளான் எடுத்துக் காட்டப்படுங் குடாகாய வாகாயவுவமைக்குப் பொருள்கூறி மேலதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அரவு தன் தோல் உரிவும் அக்கனவும் பரகாயம் போய் வரும் அப்பண்பும் பரவில் வேறு. எ—து. கண் செவி கெட்டவழி உள்ளதே தோற்ற அத்தூடு விண் படர்தற்குப் பாம்பு தோலுரித்துப் புதிதொருதோல் போர்த்துச் சேறலும், புருடன் நனவுடம்பினீங்கிக் கனவுடம்பிற் சேறலும், யோகிகள் தம்முடம்பு நீங்கிப் பரகாயத்திற் சென்று மீடலுமாகிய இவ்வுவமைகள் மிக்கு வழங்குதற்கண் இவற்றிற்கு மாறாக,—குடாகாய ஆகாயக் கூத்தாட்டு ஆம் என்பது அடாது. எ—து. குடவாகாயங் குடமுடைந்தவழி ஆகாயத்தோடு கூடுமாறு போல்வதோர் கூத்தாட்டாமென்று நீ கூறுதல் பொருந்தாது,—உள்ளம்போம் ஆறு அது. எ—து. சூக்குமவுடம்பு விட்டுப் போமாற்றிற்கே அவ்வுவமை யாகலான். எ-று.

எனவே, உடல்விட்டுப் போமாற்றிற்கு இவ்விருவகையுவமைகளும் ஆகமங்களிற் கூறுதலின், அவை தம்முண் முரணுதவாறு, அரவுதன்றோலுரிவு முதலியன தூலவுடல் விட்டுப் போமாற்றிற்கும், குடாகாயவுவமை சூக்குமவுடம்புவிட்டுப் போமாற்றிற்குமெனக் கோடல் பொருத்தமுடைமையின் அவ்வேறுபாடுணராது குடாகாயவுவமையுந் தூலவுடம்புவிட்டுப் போமாற்றிற்கேபோலுமென மலையற்கவென மேலதனை வலியுறுத்தவாறு காண்க.

மேலைவெண்பாவில் 'கண்ட நனவைக் கனவுணர்விற் றன்மறந்து' என்றது அறிவு வேறுபடுமுறைமைக்கு எடுத்துக்காட்டியதெனவும், ஈண்டு அக்கனவுமென்றது அதனையே உடல் வேறுபடுமுறைமைக்கு எடுத்துக்காட்டியதெனவுந் தெரிந்துகொள்க.

பரவு முதனிலைத்தொழிற்பெயர். இல்லுருபு தொழினிகழ்ச்சிக்கண் வந்த ஏழாவது.

பரவுதல் எல்லார்க்கும் புலனுமாறு மிக்குநிகழ்தல்.

ஈண்டு உள்ளமென்றது சூக்கும உடம்பை.

போமாற்றிற்கு என்னும் நான்காவது விகாரத்தாற் றொக்கது; *"ஐந்தவித்தா னாற்றல்" என்புழிப்போல.

* திருக்குறள், நீத்தார்பெருமை. ரு.

குளவாம்பல் குளாம்பலென மரீஇயினாற்போலக் குடவாகாயங் * குடாகாயமென மரீஇயிற்று.

ஆகாயக் கூத்தாட்டென்பது உவமத்தொகை. இதனை உம்மைத்தொகையாகக்கொண்டு குடாகாய வாகாயமுங் கூத்தாட்டும்போ லென்றுரைப்பாருமுளர்.

மூன்றுமதிகரண முடிந்தது.



## நான்காமதிகரணம்.

## இனி நீக்கமின்றி நிற்குமன்றே யென்றது.

எ—து. மே—ள். எ—னின். அங்ஙனம் புணருற்பவமாதற் கேதுவாய் இருவினைகளைச் செலுத்தி நிற்பதெனப் போந்த ஆணையெனப்படுஞ் சத்தியாவது முதல்வனின் வேறோ அன்றோவென்னும் ஐயப்பாட்டின்கட் பொருட்குச் சத்தி வேறென்னு மீமாஞ்சகர் முதலியோர் மதமும் அன்றென்னும் நையாயிகர்முதலியோர் மதமும் பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். முதல்வன் தனதாணையாகிய சிற்சத்தியோடு †சமவேதமாய் நிற்பன். எ - று.

அன்னியயோக வியவச்சேதம் அயோக வியவச்சேதம் என்றற்றொடக்கத்து வடசொற்கள் பிறிதினியைபு நீக்குதல் இயைபின்மை நீக்குதல் என்றற்றொடக்கத்தனவாக மொழிபெயர்த்து வழங்கப்படுமாறுபோலச் சமவாயமென்னும் வடமொழி தமிழின்கண் நீக்கமின்றி நிற்றலென மொழிபெயர்த்து

* குடம், தமிழியற் சொல்லாதல் "குடந்தம்பட்டு" "குடக்கூத்து" "குடமுழா" என்றற்றொடக்கத்தாற் பயின்றுவருந் தமிழ் வழக்குரைகளானறிக. இன்னும், குடம் தமிழ்ச்சொல்லாகலினன்றே "குடந்தம்பட்டு" எனவரும் ஆற்றுப்படைத்தொடர்க்கு—"வழிபட்டு என்றும், வணக்கம்பட்டு என்றும், உரைப்பர்" என்றும், "குடவென்பது தடவென்பதுபோல் வளைவையுணர்த்துவதோ ருரிச்சொல்லாகலின், அதனடியாகப்பிறந்தபெயருமாம்" என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரைகூறுவாராயினர். குடவு வளைவுப் பொருட்டாதல் "குடாவடியுளியம்" என்னும் குறிஞ்சிப்பாட்டுரையால் நன்கு அறியக்கிடத்தலின் இது தமிழ்ச்சொல்லாதல் தெற்றென உணர்க.

வடமொழி அமரநிகண்டுள் அந்நூலார் 'குடம்' வடமொழியாகக்கொண் டோதுதலின் அது வடவியற்சொல்லுமாம். ஆயினும், அஃதாண்டுத் தமிழிற்போலப் பெருவழக்கிற்றாகாது அருகிவழங்குதலானும், வடநூலார் 'கடாகாசம்' 'மடாகாசம்' எனவழங்குவதன்றி 'குடாகாசமெனயாண்டும் வழங்காமையானும் அதனை வடசொல்லெனவைத்து முடிபுகூறாது, தமிழ்ச்சொல்லெனவைத்து அவ்வாறு மரூஉ முடிபுகொண்டாராசிரியரென்றுணர்க. குடம் பொதுவெழுத்தானாய சொல்லாகலின், இருமொழிக்கண்ணும் அங்ஙனம் வெவ்வேறு பொருள்குறிக்கு மொழியாதற் கேற்குமாறு அறிக.

'குடாகாயம்' வடநூன் முடிபென்று கோடலுமொன்று, எனச் சிவஞானபாடியத்துள் ஆசிரியர் சிவஞானயோகிகள் உரைத்ததுங்காண்க.

† சமவேதம்—சமவாயத்தோடுகூடியது.

வழங்கப்படுமென்றுணர்க. வடமொழி இரண்டாஞ் சூத்திரத்திறுதியின் ஆணை முதல்வனோடு சமவேதமாய் நிற்குமென ஆணைமேல் வைத்தோதியதனை ஈண்டு முதல்வன்மேல் வைத்தோதினர். கண்ணழிப்புழி இருவினை முதல்வன் ஆணையின் வருமெனக் கூறிப்போந்த ஆணை ஈண்டுக் கூறுமையே இனிது விளங்குமென்னுங் கருத்தாற் சொற்பல்காமைப் பொருட்டு அதனை யொழித்தெடுத்துக் கொள்ளப்பட்டது. இப்பொருள் காணமாட்டாதார் சருவவியாபியாய் நிற்றலாலென்னும் ஏதுவின் பொருளே மேற்கோளுக்கும் பொருளாகக் கொண்டுரைப்ப. அது கூறியது கூறலாதலுமன்றி மொழிபெயர்த்தல் யாப்பிற் கேலாமையுமறிக. ஈண்டுச் சமவாயமென்றது தாதான்மிய சம்பந்தத்தை. அஃதாவது பொருளான் ஒன்றேயாயும் ஒருவாற்றாற் பேதமாதற்கு உரிமையுடைமை.

**அவன் ஏகாநேக மிரண்டுமின்றிச் சருவவியாபியாய் நிற்றலான்.**

எ—து. ஏ—து. எ—னின். அதற்குப் பிரமாண மென்னையென்னுங் கடாவை ஆசங்கித்து மேற்கோளை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். அம்முதல்வன் ஒன்றே வேறே யென்னும் இருதன்மையுமின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் எங்கணும் வியாபியாய் நிற்றலான் 'இனி ஆணையினீக்கமின்றி நிற்குமன்றே' என மேற்கொண்டது. எ - று.

* அவினுபாவமுணர்த்துவார் † 'ஏகாநேக மிரண்டுமின்றி' என மேற்கோளிற்போந்தபொருளை அநுவதித்துச் சருவவியாபியாய் நிற்றலானென ஏதுக்கூறினர். சருவவியாபியாய் நிற்றல் 'அவையே தானேயா' யென்னும் அதிகரணத்தாற் சாதிக்கப்பட்டமையின் அதனை ஈண்டேதுவாக வைத்து ஆணையினீக்கமின்றி நிற்குமென்னு மேற்கோளைச் சாதித்தவாறு.

> **எங்குமுள னென்றளவை யொன்றன் றிரண்டென்னி**
> **லெங்கு முளனன் றெவற்றெவனு—மங்க**
> **ணவையவ னன்றில்லைப் பொன்னொளிபோ லீச**
> **னவையுடைமை யாளாநா மங்கு.**

எ—து. உ—ம். எ—னின். ஏதுவும் மேற்கோளுந் தம்முள் அவிநாபாவமாமாறு யாங்ஙனமென்னுங் கடாவை யாசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று. எ-து. யாங்கணும் 'அவையே தானேயா' யென மேற்கூறிய அளவையானே முதல்வன் ஒருபொருளாதல் கூடாது. எ - று.

ஒன்றுயிற் கங்கைக் கரையினின்ற ஒருமானுடனேகாவிரிக்கரையினும் ஒருங்கு நிற்கமாட்டான் அதுபோல ஒருபொருள் ஓரிடத்துளதாதலன்றி யாங்கணும் வியாபித்து நிற்கமாட்டாதென்பதாம்.

---

* அவினுபாவம்—விட்டுநீங்காமை. † ஏகாநேகமின்றி—நீக்கமின்றி.

இரண்டு என்னில் எங்கும் உளன் அன்று. எ - து. அற்றேல் முதல்வன் இருபொருளாய் நிற்குமெனக் கோடுமெனின் யாங்கணும் 'அவையே தானே யா' யுளனாதல்கூடாது. எ - று.

தன்மாட்டே வேற்றுமையுடையானுக்குப் பிறபொருள்களின்கண் வேற்றுமையின்றி வியாபித்து நிற்றல் சாலாதென்பதாம்.

அற்றேல், இவ்விரண்டோடு முரணுதலின் எங்குமுளனல்லனெனக் கோடுமெனின்;—

எவற்று எவனும் அங்கண் அவை அவன் அன்று இல்லை.எ - து. எவ்விடங்களினுள்ள எத்திறப்பொருளுமாகிய அவ்விடத்து அவைகளெல்லாம் 'அகரவுயிரின்றேல் அக்கரங்களில்லை' யாமாறுபோல அம்முதல்வனையின்றியமையாவாகலான் எங்குமுளனல்லனென்றல் பொருந்தாது. எ - று.

ஆகலான்எங்குமுளனல்லனென்றல் பொருந்தாதென்பது *குறிப்பெச்சம்.

அற்றேல், வேறு விடுக்குமாறென்னை யெனின்;—

ஈசன் பொன் ஒளி போல். எ - து. எங்குமுளனாகிய முதல்வன் ஞாயிறும் ஒளியும்போல ஒன்றாதற்கும் இரண்டாதற்கும் பொதுவாய்த் தாதான்மியத் தாற் சிவமுஞ் சத்தியுமென்று இயைந்து நிற்கும். எ - று.

அற்றேல், பசுபாசங்களும் வியாபகமெனக் கோடலின் அவையும் இம்முறைமைபற்றி 'ஏகானேக மிரண்டுமின்றி' முதல்வன்போலத் தத்தஞ் சத்திகளோடு தாதான்மியமாய் நிற்குமென்பது பெறப்படுதலான் முதல்வனொடு சமமாவான் செல்லுமெனின்;—

அவை உடைமை ஆம் நாம் ஆள் அங்கு. எ - து. அவ்வாறாயினும் முதல்வனது வியாபகத்தைநோக்கி வியாப்பியமாகலின் அப்பாசங்கள் உடைமையாம்; பசுக்களாகிய நாம், அடிமையாவேம் அம்முதல்வன் மாட்டு. எ - று.

அன்றெனப் பாடமோதுவாரு முளர்.

பாசங்கள் உடைமையாமாறும் பசுக்கள் அடிமையாமாறும் 'தாரகமாமத்தன்று னிற்றல்' எ - ம். 'அதனி னீறலா வொன்றுபல—வாறே தொழும்பாகும்' எ - ம் மேற்பெறப்பட்டமையின், அவற்றை ஈண்டெடுத்துக்காட்டி ஆசங்கை நீக்கியவாறு.

என்ற என்னும் பெயரெச்சத் தகரம் விகாரத்தாற் றொக்கது; † "புகழ் புரிந்தில்" என்புழிப்போல. அளவையானென ஆனுருபு விரித்துரைக்க.

ஒன்றன்று உளனன்று என்புழி ஒன்று உளன் என்னுந் தருமிவாசகங்கள் ஆகுபெயரால் அத்தருமங்களின் மேனின்றன வாகலான் உளனென்பதும் அஃறிணை யொருமையோடு முடிந்தது.

---

* குறிப்பெச்சம்—குறிப்புப்பொருளை வெளிப்படுத்துந் தொடர்ச்சொல் எஞ்சிநிற்றல். † திருக்குறள், ௬-ம் அதி. வாழ்க்கைத்துணைநலம். ௯.

அன்மை கூடாமைப்பொருட்டு. எவற்றெவனுமென்பது ஏழாம் வேற்றுமைத்தொகை. அஃறிணைக்கண்வரும் * எவனென்னும் வினாவினைக்குறிப்புச் சொல் ஈண்டுப் பெயர்த்தன்மைப்பட்டு எவனுமென எஞ்சாப் பொருண்மை யுணர்த்தி நின்றது.

அன்றி யென்னும் வினையெச்சம் செய்யுளாகலின் அன்றெனத் திரிந்தது.

இன்மை ஈண்டு அமையாமைப்பொருட்டு. பொன் ஆகுபெயர். ஆம் என்பது உடைமையோடு இயையும்.

பொன்னொளிபோலீசனென்பது † தொகையுவமமாகலிற் பொதுவியல்பு விரித்துரைக்கப்பட்டது.

இவ்வதிகாரணத்தாற் போந்த தொகைப்பொருள், முதல்வன் வியாபகனுதலின் வியாபகப்பொருட்கு ஒன்றாய் நிற்றல் கூடாது; அது கூடாமைபற்றி இரண்டாய் நிற்பனெனின் வியாபகனுதல் கூடாது; வியாபியல்லனெனின் பசுபாசங்கள் அவனையின்றி யமைதல் கூடாது; ஆகலான், முதல்வனொருவனே ஞாயிறு மொளியும்போலச் சிவமுஞ் சத்தியுமெனத் தாதான்மியத்தால் இருதிறப்பட்டுச் சருவவியாபியாய்ப் பொதுமையி னிற்பனெனச் சமவேதமாய் நிற்குமாறு தெளிவிக்கு முகத்தானே தாதான்மிய சத்தியுண்மைக்குப் பிரமாணங் கூறியவாறு மென்றுணர்க. அஃதாமாறு,—தன்னை விளக்குவதூஉம் விடயங்களை விளக்குவதூஉந் தானேயாகிய ஞாயிறு ஒன்றுதானே விடயங்களை விளக்குழிக் கதிரெனவுந் தன்னை விளக்குழிக் கதிரோனெனவுந் தாதான்மியத்தால் இருதிறப்பட் டியைந்து நிற்றல்போல, புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய்த் தன்னியல்பினிற்பதூஉம் புறப்பொருளை நோக்கிநின்று உணர்த்துவதூஉமாகிய இருதன்மையையுடைய பேரறிவாய சைதன்னியம் ஒன்றே அங்ஙனம் புறப்பொருளை நோக்கிநிற்கு நிலையிற் சத்தியெனவும் புறப்பொருளை நோக்காது அறிவுமாத்திரையாய் நிற்குநிலையிற் சிவமெனவுந் தாதான்மியத்தால் இருதிறப்பட்டு இயைந்துநிற்குமென வுணர்க.

இனித் தீயின் சத்தியொன்றுதானே சுடுதல் அடுதல் முதலிய தொழில் வேறுபாட்டால் சுடுஞ்சத்தி அடுஞ்சத்தி யென்றற்றொடக்கத்துப் பலவேறு வகைப்படுமாறுபோல, சிவசத்தியொன்றே காரிய வேறுபாட்டால் பரை ஆதி இச்சை ஞானம் கிரியையென்று ஐவகைச் சத்திகளாயும், முறையே ஐந்தும் நான்கும் எட்டும் பதின்மூன்றும் எட்டுமாகிய கூறுபாடுடைய ‡ ஈசானி

---

* நச்சினார்க்கினியாரும் எவனென்னும் வினாவினைக்குறிப்பு, படுத்தலோசையாற் பெயராகுமென்று, "வஃகான்மெய்கெட" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்துக்குரைத்த உரையிற்கூறினர். † தொகையுவமம் பொதுத்தன்மை தொக்கவுவமம்.

‡ ஈசானிமுதலிய ஐவகைச் சத்திகளாவன:—ஈசானி, பூரணி, ஆர்த்தி, வாமை, மூர்த்தி என்பன. இவற்றுள் ஈசானியின் ஐந்து கூறுகளாவன:—சசினி, அங்கதை, இட்டை, மரீசி, சுவாலினி என்பன. பூரணியின் நான்கு கூறுகளாவன:—சாந்தி, வித்தை, பிரதிட்டை, நிவிர்த்தி என்பன. ஆர்த்தியின் எட்டுக்கூறுகளாவன:—தமை, மோகை, சயை, நிட்டை, மிருத்தியு, மாயை, பயை, சரை என்பன. வாமையின் பதின்மூன்று கூறுகளாவன:—இரசை, இரட்சை, இரதி, பாலி, காமை, சம்யமினி, கிரியை, புத்தி,

முதலிய ஐவகைச் சத்திகளாயும், *ஆரணி செனனி முதலிய மூவகைச் சத்திகளாயும், † நிவிர்த்தி பிரதிட்டை முதலிய ஐவகைச் சத்திகளாயும், ‡வாமை சேட்டை முதலிய அட்டசத்திகளாயும், பரவாகிசுவரி அபரவாகிசுவரி மனோன்மனி மகேசை உமை திரு வாணியென எழுவகைச் சிவபேதங்கட்கும் முறையே எழுவகைச் சத்திகளாயும், அத்தியான்மிக மெனப்படும் ¶உன்மனை சமனை முதலிய கலைகளாயும் இன்னும் §பல வேறுவகைப்பட்டு நிற்கும். அவ்வச் சத்திகளோடு புணர்ந்த சிவமும் அவ்வாறே பலவகைப்பெயர் பெற்று நிற்கும். அவ்வச் சத்திகட்கு இடமாய விந்துவும் அங்ஙனம் பலவேறுவகையான் விருத்திப்பட்டு அப்பெயர்பெறும். இவற்றினியல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க.

நான்காமதிகரண முடிந்தது.



## இரண்டாஞ்சூத்திர முடிந்தது.

---

# மூன்றாஞ்சூத்திரம்.



உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா.

எ—து. ரூ—ம். எ—னின். ஆன்மப்பிரகாச முணர்த்துதனுதலிற்று.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக் கருத்துணர்த்துதனுதலிற்று.

இ-ள். மேல் 'அவையே தானே' என்று எடுத்துக்கொள்ளப்பட்ட உயிர் சூனிய முதலியவற்றுள் ஒன்றாகற்பாற்றென அவ்வம்மதம் பற்றி நிகழுங்கடாவை ஆசங்கித்து உயிர் அவற்றிற்கு வேறாயுண்டென்பது கருதலளவையான்

---

காளி, தாத்திரி, பிராம்மணி, மோகினி, பவை என்பன. மூர்த்தியின் எட்டுக் கூறுகளாவன:—சித்தி, இருத்தி, தியுதி, இலக்குமி, மேதை, காந்தி, சுவதை, திருதி என்பன.

* ஆரணி முதலிய சத்திகளாவன:—ஆரணி, செனனி, இரோதயித்திரி என்பன.

† நிவிர்த்திமுதலிய ஐவகைச்சத்திகளாவன:—நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்பன.

‡ வாமைமுதலிய எட்டுச்சத்திகளாவன:—வாமை, சேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி என்பன.

¶ உன்மனைமுதலியகலைகளாவன:—உன்மனை, சமனை, வியாபினி, சத்தி, நாதாந்தம், நாதம், நிரோதி, அர்த்தசந்திரம், விந்து, மகாரம், உகாரம், அகாரம் என்பன. இவற்றோடு அனந்தை முதலிய நாலுகலைகளையும் சேர்த்துப் பதினாறு கலைகள் கொள்வதுமுண்டு.

§ பலவேறுவகைப்பட்டு நிற்றலாவது:—சூக்குமை, அதிசூக்குமை, அமிர்தை, அமிர்தாமிர்தை, இந்திகை, தீபிகை, உரோசிகை, மோசிகை, ஊர்த்துவகை முதலிய பல கலைகளாகநிற்றல்.

விளக்கி மேலைச்சூத்திரத்தின் உயிர்கண்மேல் வைத்தோதிய முதல்வனதிலக்கணத்தை வலியுறுத்துதல் மூன்றாஞ் சூத்திரத்தின் கருத்து. எ - று.

முதன்மையுடைமை பற்றி உலகிற்கு நிமித்தகாரணமாகிய பதிப்பொருளுண்டென்பது முதற் சூத்திரத்துட் கூறி, காரணமாதற் பொதுமையான் இயைபுடைமை நோக்கித் துணைக்காரண முதற்காரணங்களது உண்மையும் அவற்றான் உலகங் காரியப்படுமாறும் இரண்டாஞ் சூத்திரத்துட்கூறி, அவற்றானாய பயன்கோடற்குரிய பசுக்களதுண்மைக்குப் பிரமாணம் ஈண்டுக் கூறுகின்றாரென்றுணர்க. இதனானே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. இலதென்றன்முதலிய அறுவகையேதுக்களானும் மாயாவியந்திரதனுவென்னும் பெயரடையாற் பெறப்படும் * குறிப்பேதுவானும் இவற்றின்வேறாய் இவ்வுடம்பினுள் உயிரெனப்படுவதொன்றுண்டு. எ - று.

இது † பூட்டுவிற்பொருள்கோள்.

உளதென்றது சாதியொருமை. அறிதலினென்றது ஐம்புலனோடுஞ் சென்றியையும்.

'தனுவினு ளான்மா உளது' என்றாரேனும், காணப்பட்ட உடம்பாற் காணப்படாத உயிருக்குண்மை கூறவேண்டுதலின் இவ்வுடம்பு சூனியமுதலியவற்றின் வேறாய ஆன்மாவையுடைத்தென உடம்பின்மேல் வைத்தோதுதல் ஆசிரியர்கருத்து. அற்றாகலினன்றே பதியுண்மை உலகின்மேல் வைத்தோதியதூஉமென்பது.

ஈண்டு மேற்கோள் ஒன்றாயினும் எழுவகைமதங்களை வேறுவேறு மறுக்கு மேதுக்கள் ஏழாகலான் ஆன்மாவுளதென்னும் மேற்கோள் அவற்றோடு தனித்தனிசென்றியைதலின் ஏழதிகரணத்ததாயிற்று இச்சூத்திரமென்றுணர்க. இதனுட்கூறிய ஏதுவே ஏதுவும் மேற்கோளும் அதுவேயாகலான் ஏனைச்சூத்திரங்களுட்போல வேறேதுக் கூறவேண்டாமையின், இவை ஏதுவாமாறும் இவற்றான் மேற்கோளைச் சாதிக்குமாறும் இனிது விளக்கி வலியுறுத்துதன் மாத்திரையே ஈண்டுரைக்கப்படுவதெனக் கொள்க.



## முதலதிகரணம்.

### ஈண்டு இலதென்றலின் ஆன்மாவுளதென்றது.

எ—து. மே—ள். எ—னின். சூனியான்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, அந்தக்கரணான்மவாதி, சூக்குமதேகான்மவாதி, பிராணான்மவாதி,

* குறிப்பேது ஏதுப்பொருளைக் குறிப்பாகக் காட்டிநிற்பது. † பூட்டுவிற்பொருள்கோளாவது:—பொருள்கொள்ளும்வகை எட்டனுள் ஒன்று. அது நாண்பூட்டிய வில்லின் நுனியும் அடியும் அந்நாணாற் றம்முட் சம்பந்தமுடையனவாதல்போல, செய்யுளின் முதலினும் ஈற்றினும் உள்ள மொழிகள் பொருளாற் றம்முட்சம்பந்தமுடையனவாகக் கொள்ளும்பொருள்கோள். ஈண்டு உளது என்னும் முதன்மொழியும் ஆன்மா என்னும் இறுதிமொழியும் பொருளால் தம்முட் சம்பந்தமுடையனவாதல் காண்க.

விஞ்ஞானான்மவாதி, சமுகான்மவாதி என்னுமிவ்விருவர் அந்தக்கரணான்மவாதிகள் ஆன்மாவினதிலக்கணங்கூறும்வழி அநுவாதமுகத்தான் மறுக்கப்படுதலின் அவரையொழித்து, ஒழிந்த எழுவர்மதங்களையும் முறையே மறுத்து உயிருண்மை சாதிப்பான்றொடங்கி, அவற்றுள் இது சூனியமே ஆன்மாவென்னுமாத்தியமிகர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ—ள். வெ—டை.

ஆன்மாவிலதென்றலினென வருவித்துரைக்க.

எவற்றினையும் அன்றன்றென விட்டுஆன்மா இலதென்று நிற்பது உளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

எ—து. பொ—ரை. எ—னின். ஆன்மா இலதென்றலைபற்றி அஃதுண்டெனக் கோடல் முயற்கோடு இல்லையென்று மேதுவால் அஃதுண்டெனச் சாதித்தலோடொக்கும் என்னுங்கடாவை யாசங்கித்து அதன்றாற்பரிய முணர்த்துதனுதலிற்று.

இ - ள். ஆன்மா இலதென்னுஞ் சூனியான்மவாதிகளும் இல்லையெனவாளா கூறுதலமையாமையின் உடல் பொறி விடயம் அனைத்தினையும் முறையானேஇஃதான்மாவன்று இஃதான்மாவன்றென ஒரோவொன்றாகக் கழித்து இவ்வாறாகலின் ஆன்மாவென்பது சூனியமென்று அங்ஙனங் கூறுபவாகலான் அவற்றை ஒரோவொன்றாக விட்டு அங்ஙனங் கூறிக்கொண்டு நிற்பதோரறிவுண்மையின் அவ்வறிவே மேல் 'அவையே தானேயாய்' என்பதனுள் ஆகமவளவையாற் சாதித்துப்போந்த ஆன்மா என்றவாறும். 'ஈண்டிலதென்றலின் ஆன்மாவுளது' என மேற்கொண்டது. எ - று.

அங்ஙனமறியுமறிவுஞ் சூனியமேயெனின், அஃது என்னையின்றாண் மலடியென்பதனோ டொக்குமென்றொழிக வென்பது கருத்து.

இன்மை ஈண்டுச் சூனியப்பொருட்டு. சூனியமாவது உள்ளதுமன்று இல்லதுமன்று இரண்டுமாவதுமன்று வேறுமன்று எனப்படும் பாழ்.

ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

அன்றன் றெனநின் றனைத்தும்விட் டஞ்செழுத்தாய்
நின்றொன் றுளததுவே நீயனைத்து—நின்றின்று
தர்ப்பணம்போற் காட்டலாற் சார்மாயை நீயல்லை
தற்பரமு மல்லை தனி.

எ—து. உ—ம். எ—னின். அவ்வறிவை உடல் பொறி விடயமுதலியவற்றின் வேறாகப்பிரித்துக் காணுமாறும் அதுவே உயிராமாறுந் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். அனைத்தும் நின்று. எ—து. உடல் பொறி விடயமுதலிய அனைத்தினும் அதுவது தானாகநின்று,—அன்று அன்று என விட்டு. எ—து. முறை

யானே இது நானன்று இது நானன்று என ஒரோவொன்றாகக் கண்டு நீக்கிய வழி,—அஞ்சு எழுத்தாய் ஒன்று நின்றுளது. எ—து. அவ்விடத்து அகரமுதலிய சூக்குமபஞ்சாக்கர ரூபமாயறிந்து வந்ததோரறிவு நிலைபெற்றுளதன்றே,—அதுவே நீ. எ—து. அதுவுநானன்றெனக் கழிப்பின் அங்ஙனங் கழித்தஉணர்வு வேறுண்டெனப்பட்டு மேலும் வரம்பின்றியோடுமாகலிற் சூக்குமபஞ்சாக்கர ரூபமாய் நின்றறிந்து வந்த அவ்வறிவுதானே நீயென்பதறிவாயாக.— அற்றேல், மாயையுஞ் சிவமுமுளவென்பது மேலைச்சூத்திரங்களாற் சாதிக்கப்பட்டமையின் அவையே அவ்வறிவினையுமறிந்து நீக்குமெனவமையுமாகலான் வரம்பின்றியோடுமாறில்லையாலெனின்;—சார் மாயை. எ—து. நின்னைச் சாரப்பட்ட மாயை,—அனைத்தும் நின்று இன்று தர்ப்பணம் போல் காட்டலான் நீ அல்லை. எ—து. நிலமுதலிய காரியமனைத்துமாய் நின்னொடு விரவி நின்று இப்பெத்த காலத்துக் கண்ணுக்குக் கண்ணாடிபோல் உனக்கறிவை விளக்கி நிற்றன்மாத்திரையேயன்றி அறிவதன்றாகலான் நீ அம்மாயையல்லை.—தற்பரமும் அல்லை. எ—து. மாயையான் விளங்கி யறியும் நீ அதற்கு அதீதமாகிய சிவமுமல்லை.—தனி. எ—து. அவற்றின்வேறு. எ - று.

விட்டவழியென்பது விட்டெனத் திரிந்துநின்றது.

அவ்வறிவாவது இதுவென்றுணர்த்துவார் 'அன்றன்றென நின்றனைத்தும் விட்ட' வழியென ஏதுப்பொருளை அநுவதித்து அஞ்செழுத்தாயொன்று நின்றுளதென அடையாளங் கூறினார். அஞ்செழுத்தாய் நின்றறியுமாறு வருகின்ற சூத்திரத்துட்பெறப்படும். இதற்குப் பிறரெல்லாங் கூறியது கூறலென்னும் வழுப்பட மேலுமோரியைபின்றி யுரைத்தார்.

'அனைத்துநின்று' என்புழி முன்னர்க் கண்ணுரும் பின்னர் ஆக்கச்சொல்லுந் தந்துரைக்க. ஏகாரந் தேற்றம். தற்பரமென்றது குறிப்பேதுவாய் நின்றபெயர்.

* 'அனைத்து நின்றின்று தர்ப்பணம்போற்காட்டலால் சார்மாயை நீயல்லை † தற்பரமுமல்லை ‡ தனி' என்றதனானே வருகின்ற அதிகரணங்களுக்கெல்லாந் தோற்றுவாய் செய்தவாறுமாயிற்று.

முதலதிகரண முடிந்தது.



## இரண்டாமதிகரணம்.

## இனி எனதுடலென்றலின் ஆன்மாவுளதென்றது.

எ—து. மே—ள். எ—னின். அவ்வறிவு உடம்பின்கணன்றி நிகழக் காணாமையானும் நானுணுகினேன் பருத்தேன் என உடம்பினையே நானென்றுவழங்கக் காண்டலானும் உடம்பே ஆன்மாவெனத் ¶ தேகான்மவாதிகள் கூறுங்க

* இதனால் உ ம், ௩ ம், ச ம், ரு ம் அதிகரணங்களுக்குத் தோற்றுவாய் செய்தார்.
† இதனால் கூ ம் அதிகரணத்திற்குத் தோற்றுவாய்செய்தார்.
‡ இதனால் எ ம் அதிகரணத்திற்குத் தோற்றுவாய்செய்தார்.
¶ உலோகாயதருள் ஒருசாரார்.

டாவை ஆசங்கித்துச் சூத்திரத்தினிரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ - ள். வெ—டை.

நான் பருத்தேன் சிறுத்தேன் கரியேன் மனிதன் பார்ப்பான் என உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும். யானுடம்பு யான்கை யான்கால் என உடம்பை அவ்வாறு வழங்குவாரின்றி எனதென வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக் காண்டலின் அதுவே உயிர் வேறுண்டென்பதனை அறிவுறுக்குமென அவன் வழங்குமுறைபேபற்றி அவனை மறுத்தவாறு.

## என்பதி என்மனையென்றற்போல என்கை என்காலென நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாமென்றது.

எ—து. பொ—ரை. எ—னின். எனதுடலென்பது* பிறிதின் கிழமைப்பொருள்படாது தலைமாத்திரையாய் நிற்குமிராகுவை இராகுவினது தலையென்று வழங்குமாறுபோல அபேதம்பற்றியே வழங்கப்படுமென அமையுமென்னுங் கடாவை ஆசங்கித்து அதன்றுற்பரிய முணர்த்துதனுதலிற்று.

இ - ள். இராகுவினது தலையென்றற்போல்வன சிறுபான்மைவழக்கமாகலின் ஆண்டொற்றுமைப்பொருள் கோடலமையும் ஈண்டவ்வாறன்றி என்பதி என்மனைவி என்பொருள் என்றுவழங்குமாறுபோல என்கை என்கால் என் கண் என்செவி என்பொறி என்பிராணன் என்னறிவு எனப் பலவாற்றானும் பெரும்பாலும் உலகத்து வழங்கக் காண்டலின் இவ்வழக்க மிகுதிப்பாடு *பிறிதின்கிழமைப்பொருட்கணன்றி வாரான்மையான் அங்ஙனங் கூறிக்கொண்டு நிற்கும்பொருள் வேறொன்றுண்டென்பது பெறப்படுதலின் அதுவே மேலுரையளவைபற்றிச் சாதித்த ஆன்மாவென்றவாறும். 'எனதுடலென்றலின் ஆன்மாவுளது' என மேற்கொண்டது. எ - று.

> எனதென்ற மாட்டி னெனதலா தென்று
> துனதலா துன்கைகால் யாக்கை—யெனதென்று
> மென்னறிவ தென்று முரைத்துநீ நிற்றிகா
> ணுன்னிலவை வேறு முணர்.

எ—து. உ—ம். எ—னின். பதி மனைவி முதலிய பொருள்கள் தம்மின் வேறுதல் கண்டு பிறிதின்கிழமைப்பொருள்பட எனதென்றற்போலன்றிக் கைகால் முதலியவற்றைத் †தற்கிழமைப்பொருள்பட எனதென்று கூறிநிற்றலின், அவ்விருவேறுமொழியுந் தம்முளொக்குமா றென்னையென்னுங் கடாவை ஆசங்கித்து அதனைவலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். எனது அலாது என்னுது எனது என்றமாட்டின். எ—து. நீ உலோகாயதநூல் கேட்குமுன்னெல்லாம் பதி மனைவி முதலிய புறப்பொருளை

* பிறிதின்கிழமைப்பொருளாவது:—ஆறும்வேற்றுமைக் கிழமைப் பொருள்களுள் ஒன்று. அது தன்னின்வேறாயது. † தற்கிழமைப்பொருளாவது:—ஆறும்வேற்றுமைக் கிழமைப்பொருள்களுள் ஒன்று. அது தன்னொடொற்றுமையுடையது.

யே உயிரெனக்கொண்டு மயங்கிநின்றுயன்றே,அக்காலத்து அவற்றை எனதன்றென வேறுகாணுது தனித்தனி எனதென்றே தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நின்றாற்போல,—உனது அலாது உன்கை கால் யாக்கை எனது என்றும் என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றி காண். எ—து. உனதன்றாகிய உன் கை கால் யாக்கைகளைத் தனித்தனி எனதென்றும் அங்ஙனமறிந்த பாசவறிவை என்னறிவதென்றுந் தற்கிழமைப்பொருளாகக் கூறிக்கொண்டு நீ யொருபொருள் வேறு நிற்கின்றாய் காண்,—உன்னில். எ—து. உலோகாயத நூல் ஆராய்ந்தபின்னர்ப் பதி மனைவி முதலியபொருள்கள் உனக்கு வேறாதல் கண்டாற்போலக் கை கால் முதலியவற்றி னியல்புகளையும் ஏதுக்கண்முதலியவற்றான் ஆராய்ந்து பார்த்தியாயின்,—அவை வேறாம் உணர். எ—து. அக்கை கான் முதலியன உனக்கு அன்னியமாம் அதனையறிவாயாக. எ - று.

இன் உவமவுருபு. உனதலாதென்பதனைக் கை கால் யாக்கைகளோடு தனித்தனி கூட்டுக.

இரண்டாமதிகரண முடிந்தது.



## மூன்றுமதிகரணம்.

## இனி ஐம்புலனறிதலின் ஆன்மாவுளதென்றது.

எ—து. மே—ள். எ—னின். ஐம்பொறிகள் ஐம்புலன்களை யறியுமென்றல் எல்லார்க்குமொப்ப முடிந்தமையின் அவை உடல்போற் சடமன்மை பெறப்படுதலானும், அவற்றை எனதென்னும் வழக்கம் பெரும்பான்மையன் றாகலானும்,அவையே உயிராதலமையுமென * இந்திரியான்மவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றுங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ—ள். வெ—படை.

**ஐம்புலனாகிய சத்தப்பரிசரூபரசகந்தங்களை இந்திரியங்கள் ஒன்றறிந்ததொன்றறியாமையின் இவ்வைந்தினும் ஐம்பயனுமறிவதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.**

எ—து. பொ—ரை. எ—னின். ஐம்புலனறிதலின் ஆன்மா ஐம்பொறியின் வேறெனச் சாதித்தற்கேதுவாமாறு யாங்ஙனமென்னுங் கடாவை யாசங்கித்து அதன்றாற்பரிய முணர்த்துதனுதலிற்று. இ—ள். வெ—டை.

ஒன்றறிந்த தொன்றறியா தாகி யுடன்மன்னி
யன்றும் புலனுயவ் வஞ்செழுத்தை—யொன்றறித
லுள்ளதே யாகி லது நீ தனித்தனிகண்
டுள்ளலவை யொன்றல்லை யோர்.

எ—து. உ—ம். எ—னின். இந்திரியங்கள் ஒன்றறிந்த தொன்றறியா தென்றதொக்கும் ஐந்தும் ஐந்துயிரெனக் கோடலின் அதனனெமக்காவதோரிழுக்

* உலோகாயதருள் ஒருசாரார்.

கில்லை. இனி இவ்வைந்தையுங்கொண்டு ஐம்புலனையும் ஒருபொருளே யறியுமெனின் அதற்குப் பிரமாணங் கண்டிலம். "குடத்தைக்கண்ட யானே அதனைத் தீண்டினேனென மறித்துணர்வு" நிகழ்தல் ஐந்துமோருடம்பின்கண்ணே நிலைபெறும் ஒற்றுமைபற்றி அமையுமெனக் கோடும் என்னுங்கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். உடல் மன்னி ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி. எ-து. உடம்பின்கண்ணே நிலைபெற்று ஒருவிடயத்தை யறிந்த இந்திரியம் மற்றொரு விடயத்தை அறியாதாய்,—*அன்றும் புலன் ஆய் அவ்வஞ்செழுத்தை. எ-து. அங்ஙனந் தம்முண்மாறுபடுஞ் சத்தமுதலிய புலன்களைச் சூக்குமபஞ்சாக்கரத்தாற் செலுத்தப்பட்டு ஆராய்ந்தறிகின்ற அவ்வைம்பொறிகளின் தொழிற்பாட்டை,—அறிதல் ஒன்று உள்ளதேயாகில். எ-து. கண் உருவத்தை அறிவது செவி ஓசையை அறிவது என்று இவ்வாறுணர்தலை உடையதோர்பொருள் இல்லதோ உள்ளதோவென வினவினார்க்கு இல்லதெனின் அவ்வறிவு நிகழாதாதல்வேண்டுமாகலான் உள்ளதேயாமெனின்,—அது நீ. எ-து. அவ்வாறுணர்வதியாது அதுவே நீயாகிய ஆன்மா,—அவ்வாறுணர்வனவும் அவ்விந்திரியங்களே என்றாற்படு மிழுக்கென்னையெனின்:—அவை தனித்தனி கண்டு உள்ளல். எ-து. அவ்விந்திரியங்கள் தத்தம்விடயங்களை வேறுவேறு கண்டறிதன்மாத்திரையேயன்றி இத்தொழிற்பாட்டை யுடையேம் யாமெனவும் அறியமாட்டா ஆகலான்,—ஒன்று அல்லை ஓர். எ-து. அவ்வைந்தின் தொழிற்பாட்டையுமறிந்து அவற்றின் வரும் பயன்கொள்வதாய நீ யவற்றின் வேறாவை அதனையாராய்ந்தறிவாயாக. எ-று.

ஆகியென்னுஞ் சிறப்புவினை ஆயென்னும் பொதுவினையோடு முடிந்தது; "இவனுமிவளுஞ் சிற்றிலிழைத்துஞ் சிறு பறைபறைந்தும் விளையாடுப" என்றாற்போல. ஆயென்பது வினைத்தொகை. அவ்வஞ்செழுத்தென்க. அஞ்செழுத்தாற் செலுத்தப்பட்ட பொறியை ஆகுபெயரான் அஞ்செழுத்தென்றார். அஃதிருமடியாகு பெயராய் ஐம்பொறியின் தொழிற்பாட்டை யுணர்த்தி நின்றது.

உள்ளல் உள்ளலான் என்க.

இம்மூன்றதிகரணங்களானுஞ் சாக்கிரத்தின் நிகழுமியல்பு பற்றி ஆன்மாவின் உண்மை சாதிக்கப்பட்டது.

மூன்றாமதிகரண முடிந்தது.



## நான்காமதிகரணம்.

## இனி ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென்றது.

எ-து. மே-ள். எ-னின். †"சேதவிந் திரியங் கட்கு நிகழறி விதனாற் காண்டும்" என நின்றுங் கோடலின் அவ்விந்திரியங்களின் வேறாய் அங்ஙனம்

* அன்றல் — இப்பொருட்டாதல் "அன்றினவர் புரமூன்றும் பொடியாய் வேவ" என்னும் திருநாவுக்கரசுநாயனார் தேவாரத்தானு முணர்க. † சிவஞானசித்தியார், உ-ம் சூ. ௬௪. ஓசைசற்பரிச.

அறிவது *புரியட்டக வுடம்பேயாமென அமையும், அது புறத்து நிகழாதாயி னும் அகத்தே நின்று இந்திரியங்களைப் புறத்திற் செலுத்தி அறியுமெனக் கோடுமெனச் † சூக்குமதேகான்மவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத் திரத்தின் நாலாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். ஐம்பொறிகளும் ஒடுங்கின சொப்பனத்தானத்தின் நிகழ்ந்த வற்றை யறிதலின் ஆன்மா வேறுண்டு. எ - று.

ஒடுக்கம் ஆகுபெயர்.

நனவின்கட் கனவுகண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே யவ்வான்மாவாமென்றது.

எ—து. பொ—ரை. எ—னின். சொப்பனத்தின் நிகழ்ந்தவற்றை அறிவதுஞ் சூக்கும தேகமேயாகலின் இது ‡சித்தசாதனமாமாலென்னுங் கடாவை ஆச ங்கித்து அதன் ருற்பரிய முணர்த்துதனுதலிற்று.

இ - ள். வெ—படை.

இஃது என் சொல்லியவாறோவெனின் ஒடுக்கமறிதலின் என்றது ஒடுக்க த்தி னிகழ்ந்தவற்றை நனவின்கண் மயங்கியறிதலென்னும் பொருட்டாதலாற் சித்தசாதனமாதல் யாண்டையதென விடுத்தவாறென்பது. கனவுகண்ட சூக்கு மவுடம்பே நனவின்கண் அதனையறியுமாயிற் கண்டபடி அறியாது மயங்கி அறி தல் கூடாமையின் உயிர்க்காயின் அதுபோல் ஒருதன்மைத்தாகலின்றி அகத் துச் சேறலும் புறத்துச்சேறலும் வேறுபாடுடைமையான் அதுபற்றி மயங்கி யறிதல் கூடுமாகலின் அங்ஙனமறியும் உயிர் வேறுண்டென்பது கண்டுகொள்க.

அவ்வுடலி னின்றுயிர்ப்ப வைம்பொறிக டாங்கிடப்பச்
செவ்விதி னவ்வுடலிற் சென்றடங்கி—யவ்வுடலின்
வேறொன்று கொண்டு விளையாடி மீண்டதனை
மாறலுட னீயல்லை மற்று.

எ—து. உ—ம். எ—னின். கனவின்கட் செல்லுமாறும் ஆண்டு நிகழுமாறும் மீளவருமாறும் உணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். அவ்வுடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் கிடப்ப.எ-து. ¶மேல் உயிரன்றெனக் கூறிப்போந்த தூலவுடம்பினின்று உயிர்ப்பனவாய ஐம் பொறிகள் ஆண்டே உயிர்ப்பொழிந்து கிடப்ப,—அடங்கி அவ்வுடலில் செவ் விதின் சென்று, எ—து. அவை யங்ஙனங்கிடந்தவழிப் புறத்துநிகழுந்தொழிற் பாடெல்லாம் அடங்கி அவ்வுடம்பினுள்ளால் வருத்தமின்றிச் சென்று,—அவ் வுட§லின் வேறு ஒன்று கொண்டு விளையாடி. எ—து. அத்தூலவுடம்புபோல

* புரியட்டகவுடம்பாவது:—காரணதன்மாத்திரைகளைந்தும் மனம் புத்தி அகங் காரமும் என்னும் எட்டினுலும் ஆக்கப்பட்டவுடம்பு. இது சூக்குமதேகமெனவும்படும். † உலோகாயதருள் ஒருசாரார். ‡ சித்தசாதனம் முன்சித்தித்ததைப் பின்னரும் சாதி த்தல். ¶ இச்சூத்திரம். உ-ம் அதிகரணத்திற் காண்க. § இன் உவம உருபு.

அதனின் வேறுபதோருடம்பை எடுத்துக்கொண்டு வேறோராற்றாற் கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று விளையாடி,—மீண்டு அதனை மாறல். எ—து. மீள அதனை மாறி மேற்சேறலான்,— நீ உடல் அல்லை. எ—து. நீ அச்சூக்கும தேகமல்லை அதனின் வேறாவை. எ - று.

உயிர்ப்ப என்றது அன்பெறாத அகரவீற்றுப் பலவறிசொல். உயிர்த்தல் தொழிற்படுதல்.

தாமும் மற்றும் அசை. • மீண்டு மீள. மாறல் மாறலானென்க.

இவ்வதிகரணத்தாற் சொப்பனத்தினிகழு மியல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது.

நான்காமதிகரண முடிந்தது.



## ஐ ந் தா ம தி க ர ண ம்.

**இனிக் கண்படில் உண்டிவினையின்மையின் ஆன்மாவுளதென்றது.**

எ—து. மே—ள். எ—னின். சொப்பனத் தானமாத்திரையினன்றித் தொழிற்படாத சூக்குமதேகம்போலன்றிச் சுழுத்தி துரியங்களினுந் தொழிற்படுவதாய பிராணவாயுவே அடங்குதல் விடுதல் செய்தறிவதாகிய ஆன்மாவாதல் அமையுமெனப் *பிராணான்மவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் ஐந்தாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். வெ—படை.

உண்டிவினை உம்மைத்தொகை. அஃது † "உண்டியும் வினையு மின்றிக் கிடந்து" என வழிநூலாசிரியர் கூறியவாற்றானு முணர்க.

**ஒடுங்கினவிடத்து இன்பத்துன்பஞ் சீவனம் பிரகிருதிக்கின்மையின் ஒடுங்காதவிடத்து இன்பத்துன்பஞ் சீவியாநிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.**

எ—து. பொ—ரை. எ—னின். கண்படைகொண்டவழி 'உண்டிவினை' யில்லை என்றது, உடற்கோ பிராணவாயுவுக்கோ என வினவினார்க்கு உடம்பு உயிரன்மையான் அதற்கு அவை யில்லாமைபற்றி ஈண்டைக்காவதோரிழுக்கில்லை. இனிப் பிராணவாயுவுக்கென்னின் அது துயின்றெழுந்தபின்னர்ச் சுகமாகத் துயின்றேனென்று அறிதல் பிறிதோராற்றாற் பெறப்படாதென்னும் ‡அருத்தாபத்தியான் ஆண்டும் இன்பத்துன்ப நுகர்ச்சியுண்டென்பது பெற்றாம். விழித்

* உலோகாயதருள் ஒருசாரார். † சிவஞானசித்தி, ௪-ம் சூ. ௩0. கண்டுணர்.

‡ அருத்தாபத்தி—பொருட்பேறு. அது பகலுண்ணான் பருத்திருந்தான் என்றவழி இராவுண்டான் என்னும் பொருள் பெறப்படுவதுபோல்வது.

துழிப்போல உறங்குழியும் பிராணவாயு இயங்குதலான் வினையுண்மையுங் கண்டாம் ஆகலின் அதற்கு அவை ஆண்டு இல்லை என்றல் மாறுகோள்போலும் என்னுங் கடாவை ஆசங்கித்து அதன்ருற்பரிய முணர்த்துதனுதலிற்று.

இ - ள். ஈண்டு உண்டியென்றது விடயங்களினிடமாகவரும் இன்பத்துன்ப நுகர்ச்சியை, வினையென்றது உடம்பு சேட்டித்தலை, ஆகலின் இவ்விரண்டும் பிராணவாயுவை யொழித்தொழிந்த கருவிகளெல்லாம் ஒடுங்கிய துயிலிடத்து அஃது இயங்காநிற்பவும் உடம்பின்கண்ணே நிகழ்தலின்மையின் அவையொடுங்காத நனவினிடத்து அவை இரண்டும் அதன்கணிகழ்தலுண்மையின் அவ்வின்மையுண்மைகட்கு ஏதுவாகக் கருவிகளை ஒடுக்கியும் ஒடுக்காதும் நிற்பது யாது அதுவே அவ்வான்மா என்றவாறும். 'கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உளது' என மேற்கொண்டது. எ - று.

பிராணவாயுவை யொழித்து ஒழிந்த கருவிகள் என்பது ஆற்றலான் வந்தது.

இன்பத்துன்ப நுகர்ச்சியை இன்பத்துன்பமென்று உபசரித்தார்.

சீவனம் சீவித்தல். சேட்டித்தலென்றதாம்.

செவ்வெண்டொகை விகாரத்தாற்ருெக்கது.

சீவியாநிற்பதென்பது சீவியாநிற்றலென்னுந் தொழிற்பெயர்மாத்திரையாய் நின்றது; *"உறங்குவதுபோலும்" என்புழிப்போல.

உளதென்றது தனித்தனி சென்று இயையும்.

துயின்றுழியும் விழித்துழியுந் திரிபின்றி ஒருதன்மைத் தாதல்பற்றி உடம்பு †பிரகிருதியெனப்பட்டது. பிரகிருதிக்கென்றது உருபுமயக்கம்.

இரண்டுகாலத்தும் ஒப்ப இயங்குதல்பற்றிப் பிராணவாயுவைப் பிரகிருதியெனக்கொண்டு அதற்கு அவையின்மையின் என்றுரைப்பாரும், பிரகிருதி விகாரமாகிய சித்தத்திற்கு அவையின்மையின் என உரைத்துச் சுழுத்தியின் கண்ணுந் தொழிற்படுவதாய சித்தமே உயிரென்னுஞ் சித்தான்மவாதிகளை மறுத்தற்கு எழுந்தது இவ்வதிகாரணமென்று உரைப்பாருமுளர்.

கண்டறியு மிவ்வுடலே காட்டொடுங்கக் காணுதே
யுண்டிவினை யின்றி யுயிர்த்தலாற்—கண்டறியு
முள்ளம்வே றுண்டா யொடுங்கா துடனண்ணி
லுள்ளதா முண்டிவினை யூன்.

எ—து. உ—ம். எ—னின். துயிலிடத்துக் கருவிகளெல்லாம் ஒடுங்குதலின் இன்பத்துன்ப நுகர்ச்சியுஞ் சேட்டையும் பிரகிருதிக்கில்லையாயின ஆகலான்அதுபற்றிப் பிராணவாயுவை ஆன்மாவென்றற்கு இழுக்கென்னை என்னுங் கடாவை ஆசங்கித்து அதனை வலியுறுத்துதனுதலிற்று.

* திருக்குறள், ௩௩௰-ம் அதி, நிலையாமை. ௯. † பிரகிருதி—இயல்பாயிருத்தல்.

இ - ள். கண்டு அறியும் இவ் உடலே. எ—து. கண்டறிதற்கு நிலைக்களமான இவ்வுடம்பின்கண்ணே,—காட்டுக் காணுதே ஒடுங்க. எ—து. காட்டாய கருவிகள் தொழிற்படாதே ஒடுங்கவும்,—உண்டி வினை இன்றி. எ—று. அவை யொடுங்கியவழி உண்டியும் வினையும் பிரகிருதிக்கு இல்லையாகவும்,—உயிர்த்தலான். எ—து. பிராணவாயு நிலைபெற்று இயங்குதலான்,—கண்டு அறியும் உள்ளம் வேறு உண்டு. எ—து. கண்டறியும் உரிமையையுடைய உயிர் பிராணவாயுவின் வேறாயுண்டு,—ஒடுங்காது உடல் நண்ணில் ஊன் உண்டி வினை உள்ளதாம். எ—து. அவ்வுயிர் ஒடுங்காது அவ்வுடலின்கண் எய்திற்றாயின் அவ்வுடம்பு கருவிகளின் றொழிற்பாட்டாலுய உண்டியும் வினையும்உடைத்தாம்.—ஆய். எ—து. அதனையாராய்ந்தறிவாயாக. எ - று.

இது அருத்தாபத்தியளவை.

*கண்டறிதல் ஒருபொருட்பன்மொழி.

இன்றியென்னும் வினைக்குறிப்புச் செயவெனெச்சத்திரிபு. சிறப்பும்மைகள் தொக்கன. அவை † "அறிந்திடா துடலு றக்கத் தறிவின்மை கரண மின்மை—யறிந்திடு முதலி யாகி னதுநிற்கக் கரணம் போகாது" என்னும் பொருள் விளைத்து நின்றன.

ஊன் ஆகுபெயர்.

உயிர் வேறுண்டென்றதனை வலியுறுத்துவார் உடம்பாட்டு முகத்தானும் ஓதினார்.

இவ்வதிகரணத்தானே சுழுத்தி துரியங்களினிகழும் இயல்புபற்றி உயிருண்மை சாதிக்கப்பட்டது. இதுகாறுஞ் 'சார்மாயை நீயல்லை' என்றதனை வலியுறுத்தியவாறு.

ஐந்தாமதிகரண முடிந்தது.



## ஆ று ம தி க ர ண ம்.

## இனி உணர்த்தவுணர்தலின் ஆன்மாவுளது என்றது.

எ—து. மே—ள். எ—னின். பிரமப்பொருள் மேற்கூறிப்போந்த சடப்பொருள்கள்போலன்றிச் சித்தாகலான் அதுவே உயிராதலமையும் என ‡விஞ்ஞானவாதிகள் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் ஆறாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். தொழிற்படுங்கருவிகள் ஒன்றுமின்றிக் கேவலமாய் அதீதாவத்தையினின்றுழி அறியுமாறின்றிப் பின்னர்க் கலைமுதலிய கருவிகளால் அறிவிக்கவறிந்துவருதல் உண்மையின் எக்காலத்துந் திரிபின்றி அறிந்தாங்கறிந்து நிற்குஞ் சித்தாகிய பிரமத்திற்கு இது தகாமையான் அங்ஙனம் உணரும் ஆன்மா வேறுண்டு. எ - று.

* குழிந்தாழ்ந்தகண் என்புழிப்போல.

† சிவஞானசித்தி, ௩-ம் சூ. ௪. அறிந்திடும். ‡ மாயாவாதிகள்.

உணர்த்தவுணர்தலெனவே முன்னுணராது கிடத்தல் பெற்றும்.

**அவன் அறிந்தாங்கறிவனென் றறிவிக்க அறிந்து உபதேசியாய் நிற்பதுளதாகலின் அதுவே யவ்வான்மாவாமென்றது.**

எ—து. பொ—ரை. எ—னின். அறிந்தாங்கறிவதாகிய பிரமப்பொருள் அவிச்சைக்காலத்துக் கருவிகளோடுங்கூடியன்றி அறியாதெனக் கோடுமாகலின் அதுபற்றி உயிர் வேறுண்டென்றல் பொருந்தாது என்னுங்கடாவை ஆசங்கித்து *'அவ்வளவினவன்மகிழுக' என்னுநியாயத்தால்வேறும் அதன்றுற்பரியம் உணர்த்துதனுதலிற்று.

இ-ள். கருவிகளோடு கூடியவழியுந் தன்னியல்பு உணருமாறில்லாத ஆன்மாவைப்போல அம்முதல்வன் மறந்து மறந்து அறிதலின்றி அறிந்தவாறே அறிந்து நிற்கும் பேரறிவுடையனென வேதாகமங்களான் அறிவிக்கவறிந்து குரவனறிவுறக்கு முபதேசமொழியைப் பெற்றுடையதாய் நிற்பதொன்றுளதாகலின் அதுவே †மேலுரையளவையாற் சாதித்துப் போந்த ஆன்மா என்றவாறும். 'உணர்த்தவுணர்தலின் ஆன்மாவுளது' என மேற்கொண்டது. எ-று.

அறிந்தாங்கென்பது அப்பொருட்டாதல் ‡"எண்ணிய வெண்ணியாங் கெய்துப" என்பதனானுமறிக. இதற்குப் பிறவாறுமுரைப்ப. அவையெல்லாம் பொருந்தாமை யோர்ந்துணர்க.

**அறிந்து மறிவதே யாயு மறியா**
**தறிந்ததையும் விட்டங் கடங்கி—யறிந்த**
**தெதுவறிவு மன்றுகு மெய்கண்டா னென்றி**
**னதுவதுதா னென்னு மகம்.**

எ—து. உ—ம். எ—னின். கருவிகளோடு கூடியவழியும் அவிச்சை நீங்காமையின் விடயங்கண்மாத்திரையே அறியுமன்றித் தன்னியல்பறியுமாறு இல்லை அஃது உபதேசத்தால் அறியற்பாலதேயாமாகலான் அதுபற்றி இழுக்கென்னை என்னுங்கடாவை ஆசங்கித்து அதனையும் மேற்கூறிய நியாயத்தானுடம்பட்டு இன்னுமொருதாற்பரிய முரைக்குமுகத்தானே விடயங்களையறிவுழியும் படும் வேறுபாடுகூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று. அவனறிந்தாங் கறியுமாறும் உயிர் மறந்துமறந்தறியுமாறும் தெரித்துணர்த்தி வலியுறுத்துதனுதலிற்று எனினுமமையும்.

இ-ள். அறிந்தும் அறிவது ஆயும் அறியாது. எ—து. கருவிகளெல்லாவற்றோடுங் கூடிச் சாக்கிரத்தானத்தினின்று விடயங்களையறியுமிடத்தும் ஒருங்கேயறியமாட்டாது ஒன்றனையேயறிந்தும் ஒன்றனையறியப்புகுவதாயும் முன்னறிந்த தொன்றனை அறியாதொழிந்தும்,—அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி. எ—து. இங்ஙனமொரோவொன்றாக அறியப்பட்ட விடயத்தையும் இடையீடின்றி அறியமாட்டாது விட்டுவிட்டாங்கே ஐந்தவத்தைப்பட்டு அட

* இதனைவடநூலார் [illegible] என்பர். † அவையேதானேயாய் என்பதனுட்போந்ததனை. ‡ திருக்குறள், சுஎ ம் அதி, வினைத்திட்பம். சு.

ங்கி,—அறிந்தது எது. எ—து. மீளவறிந்து வருதல் கண்கூடாகக் காணப்படு தலான் அங்ஙனமறிந்து வந்த பொருள் யாது அது சடமன்றென்பது *மேற் காட்டப்பட்டது †முன்னரும் காட்டப்படும்,—அறிவும் அன்று. எ—து. ஒன்றுக இயல்பாக உணர்தலே பேரறிவாகலின் அதுவுமன்றாம்,—மெய் கண்டான் ஒன்றின். எ—து. இனி மெய்யாகிய சித்தாந்தநெறியினையுணர்ந்தோன் வேறெ ன்னையோவென மனமொருங்கியாராயுமாயின்,—அது அது தான் என்னும் அகம் ஆகும். எ—து. காட்டுமொளிக்குவேறாய கண்ணொளிபோல அவ்வறிவி ற்கு வேறாய் அதுவதுவே தானெனச் சார்ந்ததன்வண்ணமாய் நின்று அறியு மியல்பையுடைய உயிராம். எ - று.

அறிந்தும்அறிவதேயாயும் என்னும் உம்மைகள் எண்ணின்கண் வந்தன. அறியாது என்னும் எண்ணும்மை விகாரத்தாற்றொக்கது. அறிந்ததையும் என்னும் உம்மை இழிவுசிறப்பு. அறிவுமென்னும் உம்மை இறந்தது தழீ இயது. ஏகாரம் அசைநிலை.

அங்கு உணர்த்துமுறைமைத் தானமாகிய இலாடத்தின் என்றவாறு.

அறிந்ததையும் விட்டடங்கடங்கி அறியுமாறு ‡வருகின்ற சூத்திரத்திறுதி யினும், அதுவதுதானெனச் சார்ந்ததன்வண்ணமாமாறு ¶உண்மையதிகாரத் தும் பெறப்படும்.

'அறிந்துமறிவதேயாயுமறியாதறிந்ததையும் விட்டடங்கடங்கியறிந்ததெது' என்பதற்கு ஓதியதனை ஓதியபொழுதே உணர்ந்தும் பலகாலோதி உணர்வதா யும் பலகாலோதியுமுணர்தலின்றியும் உணர்ந்ததனையும் பின்னர் மறந்தொழி ந்தும் இவ்வாறு ஓதியுணர்ந்ததுயாது என்றுரைத்தலும் ஒன்று. இப்பொருட்கு அடங்கியென்புழியும் எண்ணும்மை விரித்துரைக்க.

இங்ஙனம் மூவகைப்படுத்துரைப்பவே, உணர்த்தவுணர்தலென்னும் ஏது வான் முறையே அதீதத்தின்கணிகழு மியல்பு பற்றியும் சுத்தத்தின்கணிகழு மியல்புபற்றியும் உணர்த்துமுறைமைக்கணிகழுமியல்புபற்றியும் உயிருண்மை சாதிக்கப்பட்டது.இது'தற்பரமுமல்லை' என்றதனை வலியுறுத்தியவாறுகாண்க.

விஞ்ஞானமே ஆன்மாவென்னும் புத்தரின் யோகாசாரன்மதத்தை மறுத் தற்கெழுந்தது இவ்வதிகாரணமெனக்கொண்டு அதற்கியையவுரைப்பாருமுளர்.

ஆறாமதிகரண முடிந்தது.



## ஏழாமதிகரணம்.

## இனி மாயாவியந்திர தனுவினுள் ஆன்மா வுளதென்றது.

எ—து. மே—ள். எ—னின். உடம்புமுதலியவற்றுள் ஒரோவொன்றே ஆன் மாவாதல் இன்றென்றதொக்கும், அவற்றுள் ஒன்று குறைந்தவழியும் அறிவு

* இச்சூத்திரத்து இரண்டாமதிகரணமுதலியவற்றிற்காண்க. † நாலாஞ்சூத்திரம் முதலியவற்றிற்காண்க. ‡ நாலாஞ்சூத்திரத்து மூன்றாமதிகரணத்திற்காண்க. ¶ ஏழா ஞ்சூத்திரத்திற்காண்க.

நிகழாமையானும் எல்லாங் கூடியவழி அது நிகழ்தலானும் அனைத்துங் கூடிய சமுதாயமே உயிராதலமையுமெனச். சமூகான்மவாதிகளாகிய சௌத்திராந்திகர் வைபாடிகர் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தினிறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ - ள். மாயாகாரியங்களான் யாக்கப்பட்டியன்ற சூத்திரப்பாவைபோலு முடம்பின்கண்ணே அவற்றிற்குவேறாய் ஆன்மாவுண்டு. எ - று.

எனவே அவையெல்லாம் மாயையின்காரியங்களாய் நிலைபெறாதனவாக லின் நிலைபேறுடைய உயிராகாவென்றவாறாயிற்று.

மாயை ஆகுபெயர். இகரம் விரித்தல்விகாரம்.

**அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்.**

எ—து. ஏது. எ—னின். *சித்தமுஞ் சித்தப்பகுதியுமாகிய அகச்சமுதாய மைந்தும் மாயாகாரியமென்பது எம்மனோர்க்கு உடம்பாடன்மையின் அது பற்றி ஆன்மா வேறுண்டெனச் சாதித்தலமையுமாறென்னையென்னுங்கடா வை ஆசங்கித்து 'அவ்வளவினவன் மகிழுக' என்னும் நியாயம்பற்றி வேறு மோராற்றாற் சாதித்தனுதலிற்று.

இ - ள். நீ ஐந்துகந்தமெனக் கொண்ட மாயாகாரியங்கள் ஆன்மாவெனப் பெயர்பெறுமாறின்றி வேறுவேறு பெயர்பெற்று நிற்பனவாகலான் 'மாயாவி யந்திரதனுவினுள் ஆன்மாவுளது' என மேற்கொண்டது. எ - று.

வேறு வேறு என்பது வெவ்வேறெனமரீஇயிற்று.

**கலையாதி மண்ணந்தங் காணிலவை மாயை**
**நிலையாவா நீபமே போல—வலையாமன்**
**ஞானத்தை முன்னுணர்ந்து நாடி லதுதனுவாந்**
**தானத்தின் வேறாகுந் தான்.**

எ—து. உ—ம். எ—னின். அவை தனித்தனி வெவ்வேறு பெயர்பெறினுந் தொக்க சமுதாயத்தின்கண் ஆன்மாவெனப் பெயர்பெறுமெனக் கோடமாக லின் அதுபற்றி இழுக்கென்னையென்னுங் கடாவை ஆசங்கித்து அவை வெவ் வேறுபெயர் பெறும்வழியும் அவர்கூறியவாறு பெயர்பெறாது வேறுபெயர் பெறுமாறும், அவை மாயாகாரியங்களேயாமாறும், அவை தொக்க சமுதாய த்தினும் ஆன்மாவெனப் பெயர்பெறாது வேறுபெயர் பெறுமாறும் உணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். காணின் கலை ஆதி மண் அந்தம் ஆம். எ—து. அங்ஙனஞ் சமுதாய மாதற்குரியவை யாவையென்று அளவைகளா னறியப்புகில் கலைமுதல் நிலமீறா கிய தத்துவங்களேயாம்.—அவை மாயை நிலையாவாம். எ—து. அவையனைத்தும் மாயையின் காரியங்களாகலின் நிலையுதலின்றிச் சிலகாலம் நின்று அழிவன வாம்.—ஞானத்தை அலையாமல் முன் உணர்ந்து நாடில். எ—து. அவை தொக்க

* சித்தம்—உருவக்கந்தம். சித்தப்பகுதி—வேதனை, ஞானம், குறி, வாசனை என்பன.

சமுதாயத்தின் விளங்கித்தோன்றுவதாய ஞானத்தினியல்பை அசையாமற் கருத்தையொருக்கி முன்னுணர்ந்து பின் அச்சமுதாயத்தை யாதென்றுரா யின்,—அது தீபமேபோலத் தனுவாம். எ—து. அச்சமுதாயங் கண்ணுக்கு விளக்குப்போல உயிர்க்குத் தூலசூக்குமபாங்களாகிய உடம்பாம்,—தான் அத்தின்வேறு ஆகும். எ—து. ஆதலாற் கண் விளக்கின் வேறாயினாற்போல உயிர் அவ்வுடம்பின்வேறாம். எ - று.

ஆமென்பது மேலுஞ்சென்றியையும்.

மாயை ஆகுபெயர்.

தானென்பது முன்னையதெழுவாய்; பின்னையது அசை.

அதனினென்பது அத்தினென மரீஇயிற்று, * "இத்தைமெய்யெனக் கருதி" என்புழிப்போல.

இதனானே 'தனி' என்றதனை வலியுறுத்தவாறு.

இவ்வாறு மூன்றுசூத்திரத்தானும் சைவாகமங்களுட் கூறப்படும் பதிமு தலிய பொருள்களதுண்மை அனுமானவளவையான் வலியுறுத்தப்பட்டது. ஆகமவளவையே யமையுமாகலின் அனுமானவளவை மிகையாம்போலுமெ னின்,—ஆகாது: மந்தவுணர்வுடைய மாணுக்கர்க்கு வேற்றுச்சமயநூல்களை நோக்கியவழிச் சைவாகமப்பொருளின் மலைவு நிகழாமைப்பொருட்டும்,கேட் டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டையென்னு நான்குவகையானன்றி ஆகமங்க ளைக் கேட்ட துணையானே அநுபவங் கூடாமையிற் சிந்தனை செய்து வன்மை மென்மைகளையுணர்ந்து தெளிந்துகோடற்பொருட்டும் கருதலளவையும் வேண்டப்படுமாகலானென்க.

ஏழாமதிகாண முடிந்தது.



மூன்றாஞ்சூத்திரமுடிந்தது.



## பிரமாணவியன் முற்றிற்று.



---

* திருவாசகம், அதிசயப்பத்து. எ. பொத்தை.

சிவமயம்.

# இலக்கணவியல்.

## நான்காஞ்சூத்திரம்.

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மாச் சகசமலத் துணரா
தமைச்சர சேய்ப்பநின் றஞ்சவத் தைத்தே.

எ—து. சூ—ம். எ—னின். இதுவுமது.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக்கருத்துணர்த்துதனுதலிற்று.

இ - ள். பிரமாணம் இலக்கணம் இரண்டானும் பொருளுண்மை பெறற்பாற்றென்னும் முறைமைபற்றி மேற்பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட பதி பாச பசுக்களுக்கு இலக்கணம் எதிர்நிரனிறையாக வைத்துக் கூறுவான்றொடங்கி அவற்றுள் இது மேலடுக்கநின்ற ஆன்மாவின் இலக்கணங் கூறுதனுதலிற்று.

சொற்பல்காமைப்பொருட்டும்* ஓத்து வேறுயவழியும் இயைபுடைமையுணர்ந்துகோடற்பொருட்டும் ஈண்டு 'இதுவுமது' என மாட்டெறிந்துரைத்த ஆசிரியர், இங்ஙனம் உரைத்துக் கோடற் கேற்பவன்றே ஆண்டு ஆன்மாவினது உண்மையுணர்த்துதனுதலிற்றெனச் சிறந்தெடுத்தோதாது பொதுப்பட ஆன்மப்பிரகாச முணர்த்துதனுதலிற்று என்றதூஉமென்க. இவ்வாறன்றி மேலைச் சூத்திரத்தின் ஆன்மாவினது உண்மைகூறுமுகத்தாற் றொகுத்தோதிய அஞ்சவத்தை ஈண்டிலக்கணங் கூறுமுகத்தான் விரித்தோதப்படுதலின் 'இதுவுமது' என்றது மேலைச்சூத்திரப்பொருளோடு மாட்டெறிந்ததென்று உரைப்பினுமாம். இதனானுஞ் சூத்திரவியைபு இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. ஆன்மா அந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரஞ் சித்தமென்னும் நான்கனுள் ஒன்றன்றாயினும் நுண்ணுணர்வின்மையிற் சூழ்ச்சித்துணைவராகிய அமைச்சரோடு கூடிநின்று தன்றொழினடாத்தும் அரசன்போல, சகசமலத்தினான் உணர்வின்றிக் கஞ்சுகம் போலுங் கலாதிகளாற் பொதுவகையான் உணர்வு நிகழினுஞ் சிறப்புவகையான் நிகழுமாறு அவற்றாற் பெறப்படாமையிற் சிறப்புவகையானுணருமாறு தனக்குச் சூழ்ச்சித்துணையாகிய அவ்வந்தக்கரணங்களோடு கூடி நின்று சாக்கிரமுதலிய ஐந்தவத்தையுடைத்தாம். எ - று.

---

* ஒத்து—இயல்.

எனவே, அங்ஙனநின்று அஞ்சவத்தைப்படுதல் ஆன்மாவுக்கு இலக்கணமென்றவாறாயிற்று. இஃது உயிர்க்குத் தடத்தலக்கணமெனப்படும் பொதுவியல்பு.

ஒன்றன்றாயினும் சகசமலத்து உணராது அமைச்சரசேய்ப்ப அவற்றோடு சந்தித்ததுநின்று அஞ்சவத்தைத்தாம் என இயையும்.

உணராது சந்தித்தது என்பது காரணகாரியப்பொருட்டாய் நின்றது. சந்தித்தது வினையெச்சமுற்று.

இவ்வாறன்றி, ஆன்மா அவற்றினொன்றன்றாயினும் சகசமலத்துணராமையால் அவற்றோடு சந்தித்தது, சந்தித்தவழி அவையுந்தானும் அமைச்சரசேய்ப்ப நிற்றலான் ஐந்தவத்தைத்தாயிற்று எனவதிகாரணம் பகுத்துக்கோடற்கேற்ப வேறுவேறு வினைமுடிபுசெய்துரைத்தலும் ஒன்று.

வடமொழிச்சூத்திரத்து ஓதுதலின் ஈண்டும் ஆயினும் என வருவித்து ஒருதொடராகவைத்துரைக்க. அந்தக்கரணமவற்றினொன்றன்றாயினும் எனவே, அவற்றினொன்றன்றாதலும் * அநுவாதமுகத்தால் ஈண்டேபெற்றாம். இஃதுணராதார் அந்தக்கரணமவற்றினொன்றன்று என்றதனை வேறுதொடராகவைத்துரைப்ப. அங்ஙனமுரைப்பின், முன் வருவனவற்றை அவாய்நின்று ஒருபொருண்மேல் வாராமையின் ஒருசூத்திரமாதற்கு ஏலாமையறிக.

அவை சந்தித்தது என்புழி ஓடுவுருபு விகாரத்தாற் றொக்கது; இரண்டாவது விரிப்பினும் அமையும்.

ஆன்மா என்பது மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கற்பாலதாகவும், ஈண்டு வேறோதியது ஓத்து வேறாதல்பற்றி என்றுணர்க.

ஆன்மா என்னுஞ்சொற்குப் பொருள் வியாபகமென்பதூஉம் சித்தசித்து என்பதூஉமாம்.

மலத்து மலத்தாலெனவிரிக்க.

அமைச்சரசு அமைச்சரோடுகூடிய அரசு என உருபும் பொருளும் உடன்றொக்கன.

காரணப்பொருட்டாய நின்றென்னும் வினையெச்சம் அஞ்சவத்தைத்து என்னும் வினைக்குறிப்புமுற்றோடு முடிந்தது.

இதனுள் அந்தக்கரணமவற்றினொன்றன்று என்றது ஓரதிகாரணம்; ஒன்றன்றாயினுஞ் சகசமலத்துணராது அமைச்சரசேய்ப்ப அவை சந்தித்தது என்றது ஓரதிகாரணம்; அமைச்சரசேய்ப்பநின்றஞ்சவத்தைத்தே என்றது ஓரதிகாரணம்; ஆக மூன்றதிகாரணத்தது இச்சூத்திரமென்றுணர்க.

* அநுவாதமெனினும் வழிமொழிதலெனினும் ஒக்கும். அநுவாதமாவது முன்னர்ப்பெறப்பட்ட தொன்றனை மற்றொன்று விதித்தற்பொருட்டுப் பின்னருமெடுத்தோதுதல். அதனால் அது கூறியது கூறலென்னுங்குற்றமாகாது வழிமொழிதலென்றாயிற்று.

## முதலதிகரணம்.

**ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தியகங்காரசித்தங்களில் ஒன்றன்று என்றது.**

எ—து. மே—ள். எ—னின். ஏனையவெல்லாம் வெவ்வேறு பெயர் பெற்று நிற்பனவாகலான் உயிராகா வாயினும் மனமுதலிய அந்தக்கரணங்கள் *"சிந்தையைச் சீவனென்றுஞ் சீவனைச் சிந்தையென்றும்" இங்ஙன முயிரென்னும் பெயரானும் வழங்கப்படுதலுண்மையானும் இந்திரியமுதலியவற்றை அவ்வாறு கூறுமையின் அஃதாகுபெயரென்றற்கேலாமையானும் அவையே தனித்தனி ஆன்மாவாமென்றல் அமைவுடைத்தென † அந்தக்கரணான்மவாதிகள் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இது மேலைச்சூத்திரத்துள் ஓதற்பாலதேயாயினும் ஈண்டிலக்கணங்கூறும்வழியும் அவற்றொடு சந்தித்து அமைச்சரசேய்ப்ப நிற்பதென அவத்தைக்கேதுவாக எடுத்தோதவேண்டுதலின் ஈரிடத்தும் எடுத்தோதுதல் ‡ "சில்வகையெழுத்தின் செய்யுட் டாகிச்—சொல்லுங்காலையுரையகத் தடக்கி—நுண்மையொடு புணர்ந்த வொண்மைத்தாகி" என்னுமிலக்கணத்ததாய சூத்திரத்துக் கேலாமையான் அதுபற்றி விதிமுகத்தானன்றி அநுவாதமுகத்தான் ஈண்டுணர்த்தப்பட்டது. இ-ள். வெ—டை.

ஈண்டு அந்தக்கரணமென்றது உள்ளந்தக்கரணமாகிய கலாதிகளினுஞ் செல்லாமைப்பொருட்டு மனோபுத்தியகங்காரசித்தங்களிலெனக் கிளந்தெடுத்துரைத்தார். கலாதிகளுண்டெனக்கொண்டோரின் உயிர் வேறுண்டெனக் கொள்ளாதார் இன்மையின் ஆண்டாசங்கை நிகழாமையானும் அமைச்சரோடு உவமிக்கப்பட்டு ¶அவத்தைக் கேதுவாவன அம்மனாதியேயன்றிக் கஞ்சுகத்தோடு உவமிக்கப்பட்டு அதீதத்தினு நீங்காது உடனிற்பனவாய கலாதிகளன்மையானும் அவற்றை ஈண்டெடுத்தோதவேண்டாமையின் மனமுதலிய புறவந்தக்கரணங்களே ஈண்டுக் கூற நின்றனவென்பது கருத்து.

**அவைதாம் பிரகாசமாய்நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.**

எ—து. எது. எ—னின். § "மனமும் புத்தி யகங்காரஞ் சித்த நான்கு—மருவியான் மாவே யென்ன வரும்" என நீயிருங்கோடலின் உயிர் அவற்றொன்றுதலமையுமென்றுற்படி மிழுக்கென்னை என்னுங்கடாவை ஆசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். அவ்வந்தக்கரணங்கடாம் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாய்நின்றே தம்மை நோக்கி அசித்தாய் நிற்றலால் தன்னை நோக்கியுஞ்சித்தாய் நிற்கும் 'இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி யகங்காரசித்தங்களில் ஒன்றன்று' என மேற்கொண்டது. எ-று.

---

* சிவஞானசித்தி, ச—ம் சூ. உஅ. புந்தியை. † உலோகாயதருள் ஒருசாரார். ‡ தொல்காப்பியம், பொருளதிகாரம், மரபியல். சூ. கOO. ¶ அவத்தை—நிலை. § சிவஞானசித்தி, ச—ம் சூ. உ. கருவியா.

எனவே, உயிரான் அதிட்டிக்கப்பட்டு ஐம்பொறிகளறிந்த விடயங்களுள் ஒன்றனை இஃதியாதாகற்பாற்றெனச் சித்தஞ்சிந்தித்தறியும்; யான் சிந்தித்தேனென்றறியமாட்டாது. மனம் அதனை இஃதின்னதாகற்பாற்றெனவும் அஃதாமோ அன்றோ வெனவும் இவ்வாறு சங்கற்பவிகற்பஞ்செய்தறியும்; யான் சங்கற்ப விகற்பஞ்செய்தேனென்றறியமாட்டாது. அகங்காரம் அதனை இன்னதெனத் துணிவேன் யானென்று ஒருப்பட்டெழுந்தறியும்; யானொருப்பட்டெழுந்தேனென்றறியமாட்டாது. புத்தி அதனை இன்னதிதுவென நிச்சயித்தறியும்; யான் நிச்சயித்தேனென்றறியமாட்டாது. ஆகலான் அவ்வாறின்றி அவற்றொடு கூடி யான் சிந்தித்தேன் பற்றினேன் எழுந்திருந்தேன் நிச்சயித்தேன் என்றும் அதன்பின் அதுவதுவாய்ப் பரிணமித்துச் சுகதுக்க மோகரூபமாய்த் தன்மாட்டு வந்த புத்திதத்துவத்தின் பரிணாமங்களைக் கலாதிகளோடு கூடி நின்று இதுசுகம் இதுதுக்கம் இதுமோகமென்று அறிந்தும் யான்சுகித்தேன் யான்துக்கித்தேன் யான்மோகித்தேன் என்றறிந்தும் இங்ஙனம் பிறவற்றை நோக்கியுந் தன்னை நோக்கியுஞ் சித்தாகிய ஆன்மாத் தம்மை நோக்கிச் சித்தாகாத அந்தக்கரணங்களின் ஒன்றுமாறுயாண்டையதென மறுத்தவாறாயிற்று. * "இவன்றானும் புத்தியுஞ்சித் திவனோமோ புத்தி" என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்புநோக்கி.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன சித்து அசித்தென்னும் பொருளவாம்.

ஏனையோரை நோக்கி அரசனுக்கு அணுக்கராதற் சிறப்புப்பற்றி அமைச்சரை அரசரென்று உபசரித்துக் கூறப்படுமாறுபோலப் புறக்கருவிகளை நோக்கி ஆன்மாவுக்கு அணுக்கமாய் நிற்றற்சிறப்புப்பற்றி 'மனம்புத்தியகங்காரஞ் சித்தநான்குமருவி யான்மாவேயென்ன' உபசரித்துக் கூறப்படுமத்தனையென்றொழிக. சூழ்ச்சித்துணையாதல்பற்றி அந்தக்கரணங்கள் அமைச்சரையொக்குமெனவே, ஏனைக்கருவிகள் ஏனைப்பரிசனங்களை ஒக்குமென்பது பெற்றாம். அது †ஞானாமிர்தத்திற்காண்க.

மேலைச் சூத்திரத்தினோதிய ஏதுக்களே ஈண்டைக்கு மமையுமாயினும், சிறந்தமைபற்றி வேறேதுக்கூறினார்.

> மனமாதி யாலுணர்தன் மன்னு புலன்கண்
> மனமாதி மன்புலனி னல்லன்—மனமே
> லுதித்தொன்றை யுள்ள முணர்த லதனி
> னுதிக்குங் கடற்றிரையை யொத்து.

எ—து. உ—ம். எ—னின். அவ்வந்தக்கரணங்கள் தம்மிற் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும் தம்மின் மேலுள்ளவற்றை நோக்கியுந் தம்மைநோக்கியும் அசித்தாமாறுந் தெரித்துணர்த்தி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். மனம் ஆதியால் உணர்தல் மன்னு புலன்கள். எ—து. மனமுதலிய அந்தக்கரணங்களாலுணரப்படுவன ஐம்பொறிகளாற்றரப்பட்டுப் புறத்தே

* சிவஞானசித்தி, கக-ம் சூ. கக. சிவன் சீவ. † ஞானாமிர்தம், நூல். கூ. கால் கொடுத்து.

நிலைபெற்ற விடயங்களாம்:—உள்ளம் உணர்தல் மனம் மேல் உதித்த ஒன்றை எ—து. ஆன்மாவுணர்வது மனத்துக்கு மேலெனப்படும் புத்திபிற்றோன்றிய தொன்றனையாம்:—*கடற்றிரையை ஒத்து உதிக்கும். எ—து. அவ்விருவேறுண ர்வுங் கடலிடை யெழுந்து கரைசாருந் திரைபோலப் பரம்பரையின் ஆன்மா வின்மாட்டு வந்து தோன்றும்:—அதனின் மனம் ஆதி புலனின் அல்லன். எ—று. அதனானே மனமுதலியன அவ்விடயங்களின் வேறாயினாற்போல ஆன் மாவும் அம்மனமுதலியவற்றின் வேறாம். எ - று.

உதிக்குமென்னும் பயனிலைக்கு உணர்தலிரண்டும் எழுவாய்.

செவ்வெண்டொகை விகாரத்தாற் றொக்கது.

மன்-அசை. புலனின் இன் உவமவுருபு.

அல்லனென ஆடூஉவறிசொல்லாற் கூறியது வடமொழிமதம்பற்றி.

உதித்தவென்னும் பெயரெச்சவீறு விகாரத்தாற் றொக்கது.

புத்தியிற்றோன்றியதொன்றாவது சுகதுக்கமோகரூபவிடயம்.

பரம்பரையிற் றோன்றுதலாவது முன்னர் வாயிற்காட்சியுணர்வு தோன்றி அதன்பின் மானதக்காட்சியுணர்வு தோன்றி அதன்பின்னர்த் தன்வேதனைக் காட்சியுணர்வு உயிரின்கண் வந்து தோன்றுதல்.

இதனானே அந்தக்கரணங் கீழுள்ளவற்றை நோக்கிச் சித்தாமாறும் மே லுள்ளவற்றை நோக்கி அசித்தாமாறும் உயிர் அவ்வாறன்றி யாண்டுஞ் சித்தா மாறுங் கண்டுகொள்க.

சிந்தித்தாய்ச் சித்தந் தெளியாதா யாங்காரம்
புந்தியா யாய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறு தானே துணிந்துள்ள மிவ்வேறு
மவ்வேறும் போதுபோ லாங்கு.

எ—து. உ—ம். எ—னின். மேற்பொதுவகையாற் கூறிப்போந்த அந்தக்கர ணங்களினியல்பு சிறப்புவகையாற் கூறுமுகத்தான் மானதக்காட்சியுள்ளுங் கடற்றிரைபோலப் பரம்பரையின் வெவ்வேறுணர்வு நிகழுமாறுணர்த்தி உயிர்வேறாதலை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். உள்ளம். எ—து. புருடதத்துவமென நின்றவுயிர்,—ஆங்கு. எ—து. வாயிற்காட்சியாற் கண்டவிடயங்களினொன்றனை மனமாதியானுணரும் மான தக்காட்சியின்கண்ணும் ஒருபெற்றித்தாதலின்றி,—சித்தமாய்ச் சிந்தித்து. எ—து. சித்தமாய் நின்று இஃதியாதாகற்பாற்றெனச் சிந்தித்தும்,—மனம் ஆகிப் பந்தித்து. எ—து. அதன்பின் மனமாய்நின்று இஃதின்னதாகற்பாற்றெ னப் பற்றியும்,—ஆங்காரம் ஆய்த் தெளியாது. எ—து. அதன்பின் அகங்கார மாய் நின்று இஃதாமோ அன்றோ இதனை இன்னதெனத் தெளிவேன்யானெ

* ஐம்பொறியும் புத்தியும் கடலையும், அவ்விருவேறுணர்வும் திரையையும், ஆன்மா க்கரையையும் போலும் என்க.

னத் தெளிவுபிறவாதெழுந்தும்,—புந்தியாய் ஆய்ந்து. எ—று. அதன்பின்ன ர்ப் புத்தியாய்நின்று இஃதின்னதெனத் தெளிந்தும்,—வெவ்வேறே துணி ந்து இவ் வேறும். எ—து.இங்ஙனம் வெவ்வேறாகவேபுணர்தலான் அவ்வாறு ணரும் புருடன் இவ்வந்தக்கரணங்களின் வேறும்,—போது அவ் வேறும் போல்.' எ—து. ஞாயிறுமுதலியவற்றோடு கூடிநின்று நாழிகை நாள் பக்கந் திங் கள் யாண்டு முதலியனவாய்ப்படும் பாகுபாடுசெய்யுங் காலதத்துவம் அஞ்ஞா யிறுமுதலியவற்றின் வேறாயினாற்போல். எ - று.

ஆய்தல் ஈண்டு நிச்சயித்தற்பொருட்டு.

துணிதலென்பது அறிதலென்னும் பொருண்மாத்திரையாய் நின்றது.

தான் அசை. ஏகாரந் தேற்றம்.

இவ் அவ் என்பன வகரவீற்றஃறிணைப் பன்மைச் சுட்டுப்பெயர்.

'வேறும் போதுபோல்' எனவே, ஆண்டு நீக்கப்பொருள் ஞாயிறுமுதலிய னவென்பது தானே விளங்கும் என்பது நோக்கி அவ்வெனச் சுட்டியொழிந் தார். சாரியையும் உருபும் உடன்றொக்கன.

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. ஆங்கும் 'வெவ்வேறு தானே துணி ந்து' எனவே மானதக்காட்சியும் இங்ஙனம் நால்வேறுவகைத்தாய் ஒன்றற்கொ ன்று முறையே ஏதுவும் பயனுமாய்க் கடற்றிரைபோலப் பரம்பரையிற் றோன் றுமென்றவாறாயிற்று.

செய்யுளாகலின் முறைபிறழ வைத்தார்.

அகார வுகார மகங்கார ம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

எ—து. உ—ம். எ—னின். அம்மானதக்காட்சியினிகழுஞ் சவிகற்ப வுணர் விற்கு ஏதுவாய் அவற்றை உடனின்று செலுத்தும் அக்கரங்கள் இவையென் பதும் அவற்றான் உணர்வு மாறிமாறித் தோன்றுமாறும் உணர்த்துதனுதலி ற்று. இ—ள். வெ—டை.

* "மன்னு மகார மனஞ்செலுத்தும் புத்தியினை—யுன்னு முகார முபகரி க்கு—முன்னாகு—மாங்கார ந் தன்னை யகாரஞ் செலுத்தியிடு—நீங்காத சித்தம் விந்து நேர்." என்பவாகலானும், ஈண்டோதிய முறையே முறை எனவும், †"அவ்வுட னுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்கா ரங்கள்" என வழிநூலாசிரிய ரோதியது எதிர்நிரனிறைப் பொருளெனவுங் கொள்க. "அவ்வுட னுவ்வு மவ்வு மனம்புத்தி யகங்கா ரங்கள்" என்றதே முறையெனக்கொண்டு அதற்கி யையக்கொண்டுகூட்டி யுரைப்பாருமுளர்.

பகாதிவற்றை நாடிற்பிரணவமாம் எனவும் போன்று ஆமெனவுங்கூட்டுக.

* துகளறுபோதம், நூல். கக. † சிவஞானசித்தி, நான்காஞ்சூத்திரம். ௩.

அந்தக்கரணங்களைச் செலுத்தும் அக்கரங்களைக் கூறுவார் ஒப்புமைபற்றிப் புருடனைச் செலுத்தும் அக்கரமும் உடன்கூறினார்.

உடனின்று செலுத்துதல்பற்றி அபேதமாக வைத்தோதப்பட்டன.

* "நிகழ்ந்திடும் வாக்கு நான்கு நிவிர்த்தாதி கலையைப் பற்றி" அகாரமுதலிய பஞ்சகலைவடிவாய் நின்று இவற்றை வேறுவேறு செலுத்துதல்பற்றிக் கணந்தோறும் நினைப்பும் மறப்புமாகிய சகலகேவலங்கள் அதிநுட்பமாய்க்கறங்கோலைபோல மாறிமாறி நிகழுமெனவும் மாசகலத்தின்கட் கணந்தோறும் அங்ஙனமுணர்வு உதித்தும் ஒடுங்கியும் வருதல் சமுத்திரத்தின்கட் புதிதுபுதிதாய்த் திரைதோன்றியும் ஒடுங்கியும் வருமாறுபோலுமெனவும் உணர்க. கடற்றிரையுவமை மேற் பாரம்பரையாய் உணர்வுவருதற்கு எடுத்துக் காட்டினார்; ஈண்டுப் புதிதுபுதிதாய்வருதற்கு எடுத்துக்காட்டினார்; ஆதலாற் † புனருத்தியன்மை யுணர்க.

எண்ணில வோங்காரத் தீசர் சதாசிவமா
நண்ணிய விந்துவொடு நாதத்துக்—கண்ணிற்
பகரயன்மா லோடு பரமனதி தெய்வ
மகரவுக ரம்மகரத் தாம்.

எ—து. உ—ம். எ—னின். அவ்வக்கரங்களுஞ் சடமாகலின் அவற்றை யதிட்டிக்கும் அதிதெய்வங்கள் இவையென்பதுணர்த்துத லுதலிற்று.

இ-ள். எண்ணிலவோங்காரத்து நண்ணியவிந்துவொடு நாதத்ததிதெய்வங் கண்ணில் ஈசரொடு கூடிய சதாசிவமாம். அகாரவுகாரமகாரத்ததி தெய்வங் கண்ணிற் பகரயன் மாலோடு பரமனும். எ-று.

எண்ணிலவோங்காரம் எண்ணத்தின்கண் நிலவிய ஓங்காரமென வினைத்தொகை. எண்ணம் ஈண்டு மானதக் காட்சி.

ஒடு எண்ணின்கண் வந்தது.

ஈண்டு அயன் மால் பரமனென்றது சுத்தவித்தையின் வைகுவாரை. பரமன் உருத்திரன். அகரவுகாரம் மகரத்தாம்என்புழி மகரம் இசைப்பொருட்டாய் ஒற்றில்வழி யொற்றாய் வந்தது.

முதலதிகாரண முடிந்தது.



## இ ர ண் டா ம தி க ர ண ம்.

## இனி இவ்வான்மாச் சகசமலத்தி னுணர்வின்றென்றது.

எ—து. மே—ள். எ—னின். ஆன்மா அந்தக்கரணங்களி னொன்றன்றாயின் அவற்றொடு சந்தித்து நிற்றற் கேதுவென்னையென ‡ அவர் கூறுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோணுதலிற்று. இ—ள். வெ—டை.

---

* சிவஞானசித்தி, முதற்சூத்திரம். உச. † இதனைத் தமிழ்நூலார் கூறியதுகூறலென்பர். ‡ உலோகாயதருள் அந்தக்கரணான்மவாதிகள்.

* ஆகந்துக மலங்களி னீக்குதற்குச் சகசமலமென விசேடிக்கப்பட்டது: படவே, உயிர் முதல்வனைப்போல் அந்தக்கரணமுதலியவற்றின் வேறாய சேதனப்பொருளாயினுஞ் செம்பிற்களிம்புபோல வேறுகாரணமின்றி மூலமலந் தன்னோடு உடனாய்நிற்றலிற் றன்னியல்பானுணருமாறின்றிக் கருவிகளைக்கூடி நின்றுணர்வதாயிற்றென விடுத்தவாறாயிற்று. இதனானே 'மலத்துளதாம்' என மேற் பிரமாணத்தாற் பெறுவிக்கப்பட்ட மூலமலத்திற்கு ஈண்டிலக்கணங்கூறினாரென்பது பெறுதும். அறியாமையைச் செய்தலாகிய கேவலத்தினிகழுமியல்பே மலத்திற்குத் தன்னியல்பு, கருவிகளோடு கூடி அவத்தைபுறுவதாகியவிபரீதவுணர்வைச் செய்யுஞ் சகலத்தினிகழுமியல்பே பொதுவியல்பு, ஆகலான் மலத்திற்கு இருவகையிலக்கணமும் ஈண்டே பெறப்பட்டன.

அதுதான் † ஞானதிரோதகமாய் மறைத்துக்கொடு நிற்றலான்.

எ—து. ஏது. எ—னின். சகசமலத்தினால் உணர்வின்றியொழியிற் பின்கருவிகளோடு கூடியவழி அறிவுண்டாமாறியாங்ஙனமெனச் சற்காரியவாதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ - ள். அச்சகசமலமாவது ஞானத்திற்குத் திரோதகமாய் அதனையில்லையென்னும்படி மறைத்துக்கொண்டு நிற்றலான் 'இனி இவ்வான்மாச் சகசமலத்தினால் உணர்வின்று' என மேற்கொண்டது. எ - று.

மலத்தினதிலக்கணம் வடமொழிவழக்குப்பற்றிக் கூறுவார் ஞானதிரோதகமாயெனவும் அதனைத் தமிழ்மொழியான் விளக்குவார் மறைத்துக்கொடு நிற்றலானெனவுங் கூறினாராகலான், அது கூறியதுகூறலன்மையுணர்க. திரோதகமென்னும் வடமொழி மறைத்தலைச் செய்வதென்னும் பொருட்டாய் வினைமுதன்மேனின்ற வினைப்பெயர்.

இதனானே ஞானபாவமே அஞ்ஞானமென்பார்மதமும் மறுக்கப்பட்டது; அபாவம் ஒருகாரியத்தைச் செய்யமாட்டாமையின்.

மாயா தனுவிளக்கா மற்றுள்ளங் காணாதே
லாயாதா மொன்றை யதுவதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுண் மறைத்தொன்றாங் காட்டம்
றன்னைமல மன்றணைத ரான். [போற்

எ—து. உ—ம். எ—னின். ஆகந்துகமலமே ஞானதிரோதகமாதலமையும் வேறுமோர் மலமுண்டென்றல் மிகைபோலுமென ஐக்கவாதசைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்து ஆகந்துகமலத்தானுஞ் சகசமலத்தானுஞ் செய்யப்படுங்காரியங்கட்குத் தம்முள் வேற்றுமை பெரிதாமாறுணர்த்துமுகத்தான் ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ - ள். உள்ளம் மாயா தனு விளக்கு ஆக் காணாதேல் ஒன்றை ஆயாது. எ—து. உயிர் ஆகந்துகமலமெனப்படும் மாயாகாரியமாகிய உடம்பு தனக்

* ஆகந்துகமலம்—இடையில்வந்துகூடும் மலம், அவை மாயைகன்மங்கள். † இதனை "அபேதமாகிப் பிரிதராது" என்றாற்போலக் கொள்க.

குக் காட்டாகக்கொண்டு காணுதாயின் ஒருவிடயத்தையு மறிவதில்லையாம்,— மற்று மலம் தன்னை அன்று அணைதல் எ—து. சகசமலம் உயிரை அநாதியே பற்றிநிற்றல்,—அது அது ஆய் வீயாத வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்று ஆம் காட்டம் போல். எ—து. காட்டமுதலியவற்றுள் அதுவதுவேயாய் நின்றுந் தனக்குக் கேடில்லாத வன்னியைத் தனக்குண் மறைத்துவைத்து ஒன்றேயாய் நிற்குங் காட்டம்போலும். எ - று.

எனவே, காட்டாய் நின்று விடயங்களை யறியும் வண்ணம் உயிர்க்கறிவை விளக்குதல் மாயையின் செய்தி; அவ்வறிவைத் தடைசெய்துகொண்டு நிற்றல் மலத்தின் செய்தி; இவ்விரண்டும் இங்ஙனம் ஒளியுமிருளும்போல் இகலி நிற்பனவாகலான் அத்தன்மைத்தாய மாயை இத்தன்மைத்தாய மலமாதல் யாண்டையதென மறுத்தவாறாயிற்று.

மற்றென்பது மலமன்றணைதலென்பதனோடியைந்து *வினைமாற்றின்கண் வந்தது.

முற்றும்மை சிறப்பும்மைகள் தொக்கன.

ஆமுந் தானுங் †கட்டுரைக்கண் வந்த அசை.

வன்னி அதுவதுவாதல் காட்டத்துண் மறைந்துழிக் காட்டமேயாயுஞ் சூரியகாந்தத்துண்மறைந்துழி அதுவேயாயும் இவ்வாறே அவ்வவற்றின் மறைந்துழித் தானென்பதொன்றில்லை யென்னும்படி நிற்றல். அங்ஙனமாகியும் வீயாமை, கடைதல் முதலிய தொழிற்பாடு நிகழ்ந்தவழித் தோன்றுதலாற் பெற்றாம். தன்னுண்மறைத்தல் வன்னியென்பதொன்றில்லை யென்னும்படி பொதிந்துகொண்டு தானேயாதல். ஒன்றாங்காட்டம் ஒன்றேபோல் அத்துவிதமாங் காட்டமென்றவாறு. இவ்வாறு உவமைக்கோதிய ‡அடையுந் தொழிலும் இயைபும் பொருட்கண்ணுங் கூறிக்கொள்க.

மாயைகன்மங்கள்போல ஆதியன்றெனக் காலத்தானும் வேற்றுமை கூறுவார் அன்றணைதலென்றார்.

இங்ஙனங் கூறிப்போந்த மலமாவது ஞானபாவமென்பாரும், பிராந்தி ஞானமென்பாரும், தமோகுணமென்பாரும், ¶பஞ்சக்கிலேசத்துள் ஒன்றாகிய §அவிச்சையென்பாரும், ○மாயைகன்மங்களென்பாரும், சிவசத்தியென்பாரும், ** உயிர்க்குணமென்பாருமாய், அவ்வச் சமயநூல்பற்றி மயங்குவாருமுளர்.

அம்மலத்திற்குப் பற்றுக்கோடாகிய சூனிய முதலியவற்றின் வேறெனப்பட்ட ஆன்மாவும் ††இயற்கையாற் சடமென்பாரும், அறிவுமாத்திரையே

---

* வினைமாற்று முன்சொல்கின்றதொழிய இனி வேறொன்று என்னும் பொருண்மையது என்பர் நச்சினார்க்கினியர். † கட்டுரை—புனைந்துரை. அசைத்தல்—சேர்த்துதல். ‡ அடை அதுவாதல், தொழில் தன்னுண்மறைத்தல், இயைபு ஒன்றாதல் என உணர்க. ¶ பஞ்சக்கிலேசம்—அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, கோபம் என்பன. § சாங்கியர். ○ ஐக்கவாதி பாசுபதி முதலியோர். ** பாடாணவாதிகள். †† இயற்கையாற்சடமென்பார்-வைசேடிகர். குணிப்பொருளன்றென்பார்-சாங்கியர். சுதந்திரவறிவுடைத்தென்

யெனக் குணிப்பொருளன்றென்பாரும், சுதந்திரவறிவுடைத்தென்பாரும், அவ்வவ்வுடம்பளவிற்றென்பாரும், அணுவளவிற்றென்பாரும், உருவென்பாரும், அருவென்பாரும், உருவருவென்பாருமாய் இன்னும் பலதிறப்படக்கூறி மயங்குவாருமுளர். அவையெல்லாம் பொருந்தாமை ஆகமங்களுட் காண்க. ஈண்டுரைப்பிற்பெருகும்.

இச்சகசமலம் ஞானதிரோதகமாய்த், திரவியமாய், அறியாமைக் குணத்ததாய்ச், செம்பிற் களிம்புபோலஉயிரின்குற்றமாய், அநாதிபந்தமாய்ச், சடமுமாய்ப் பலவுமாயின் அழிவெய்துமாகலின் அநாதிபந்தமாதல் பெறப்படாமையின் ஒன்றேயாய், விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலரென்னும் உயிர்ப் பாகுபாட்டிற் கேதுவாய் உயிர்கடோறுந் தனித்தனி வெவ்வேறாய் மறைத்துநின்று தத்தங்காலவெல்லையினீங்குவனவாகிய சத்திகள் பலபலவுடைத்தாய், உயிர்கண் மூன்றவத்தைகளும் படுதற்கு மூலகாரணமாய், நித்தமாய், வியாபகமாய், வியாபகவுயிர் அணுத்தன்மைப்படுமாறு செய்தலின் ஆணவமென்னும் பெயர்த்தாய்ப், *பசுத்துவம் பசுநீகாரம் மிருத்தியு மூர்ச்சை மலம் அஞ்சனம் அவித்தை ஆவிருதியென்றற் றொடக்கத்துக் காரணக்குறிகளுமுடைத்தாய் நிற்பதெனவும், படலம் படர்ந்தகண் ஞாயிற்றின் சந்நிதியினிற்பினும் படலத்தான் அவ்வொளியை யிழந்து இருளினழுந்துமாறுபோல முதல்வன் சந்நிதியினிற்பினுஞ் சோபானமுறையின் அறிவிக்க அறியுந்தன்மைத்தாய உயிர் அநாதியே அறிவித்தால் அறியமாட்டாமையின் அம்மாட்டாமையான் அவ்வறிவை இழந்து அறியாமையாய் அழுந்துதலின் அஃது அவ்வுயிர்க்குப் பந்தமாயிற்றெனவும் உணர்க. அநாதியே மலத்தினீங்குதல் முதல்வன்வினையாய் அநாதி முத்தத்தன்மையென † எண்குணங்களுள்வைத்து எண்ணப்படுவதென்பது சிவாகமங்களுக்கெல்லாம் ஒப்பமுடிந்தாற்போல அநாதியே மலத்தைப்பற்றுதல் உயிரின்வினையாய் உயிர்க்குற்றங்களுள்வைத்து எண்ணப்படுவதென்பதூஉம் அவற்றிற்கெல்லாம் ஒப்பமுடிந்தது. ஈண்டுப்படுங் கடாவிடைகளெல்லாம் ஈரிடத்தும் ஒக்கும்.

இரண்டாமதிகாரண முடிந்தது.



பார்-பாட்டாசாரியர். அவ்வவ்வுடம்பளவிற்றென்பார்-சமணர். அணுவளவிற்றென்பார்-பாஞ்சராத்திரிகள். உரு என்பார்-பௌராணிகர். அரு என்பார்-பாதஞ்சலர். உருவரு என்பார்-கவுளர்.

* இதனை பசுத்வம் பசுநீஹார ம்ருத்யு மூர்ச்சா மலாஞ்ஜனம்| அவித்யாவ்ருதிராக்ரஹாநி பாபமூல க்ஷயாதிபி:|| என்னும் மிருகேந்திரசுலோகத்தானும் உணர்க.

† எண்குணங்களாவன:—தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பனவாம். இவைமுறையே சுவதந்திரத்துவம், விசுத்ததேகம், நிராமயான்மா, சருவஞ்ஞத்துவம், அநாதிபோதம், அலுப்தசத்தி, அநந்தசத்தி, திருப்தி எனப்படும்.

## மூன்றுமதிகரணம்.

**இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்திதுரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்குமென்றது.**

எ—து. மே—ள். எ—னின். இருளினகப்பட்டகண் விளக்கோடு கூடியவழி விடயங்களைக் காண்டலேயன்றி வெவ்வேறவத்தைப்படுமாறு இல்லை, அதுபோல மலத்திலகப்பட்ட உயிர் கருவிகளோடு சந்தித்தவழி ஒருதன்மைத்தாயறிதலே அமைவுடைத்து, அவ்வாறன்றி மேலைச்சூத்திரத்தோதிய முறையான் ஐம்புலனறிந்தும் ஒடுக்கமறிந்தும் உண்டிவினையின்றிக்கிடந்தும் உணர்த்தவுணர்ந்தும் இங்ஙனம் வெவ்வேறு அவத்தைப்படுமாறு யாங்ஙனம் என *அவர் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இறுதிக்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ—ள். வெ—டை.

அவத்தையெனப்படுவன பலவுளவாகலின் அவற்றுள் ஈண்டு ஐந்தவத்தையெனப்பட்டவை யாவையென்னும் ஐயம் நீக்குதற்குக் கிளந்தெடுத்துரைத்தார்.

அவத்திதன் என்னும் வடமொழி ஆடூஉவறிசொல்லாற் கூறியது அம்மதம்பற்றி.

'அமைச்சரசேய்ப்ப நிற்ற'லான் என்பதூஉம் ஈண்டு வருவித்துரைத்துக் கொள்க. கொள்ளவே, † "படைகொடு பவனிபோதும்" வேந்தன் † "கடைதொறும் விட்டுவிட்டுக் காவலுமிட்டு" அந்தப்புரத்திற் செல்லுமாறுபோல ஆன்மா அங்ஙனம் அஞ்சவத்தைப்படுதல் அமைவுடைத்து என விடுத்தவாறாயிற்று.

**அதுதான் மலசொரூபத்தின் மறைந்து அரூபசொரூபியாய் நிற்றலான்.**

எ—து. ஏது. எ—னின். அரசன்போல் உயிர் அங்ஙனம் அஞ்சவத்தைப்படுமாயின் வியாபகத்திற்கு இழுக்காய்முடியும்போலுமென்னுங் கடாவை யாசங்கித்து மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். அவ்வுயிர்தான் மலவடிவின் மறைப்புண்டவழி அருவுடம்பாகிய தத்துவசொரூபியாய் நிற்றலான் அத்தத்துவங்கள் தொழிற்படும் அவத்தைவேறுபாடுபற்றி 'இனி இவ்வான்மாச் சாக்கிரஞ் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீதமாயுள்ள பஞ்சாவத்திதனாய் நிற்கும்' என மேற்கொண்டது. எ-று.

‡ "சீவனே வியாபி யவத்தையி லிழிந்து திரும்புதல் குற்றமாங் கருவி, சேருதல் பிரித லில்லையா முறையிற் செயற்படுங் கருவியே தெரியுந்—தாவிலா வறிவு தங்கின விடமே தகுமுயிர்க் கிருப்பிடம்" என்பதூஉம் இப்பொருள்பற்றியென்க.

---

* உலோகாயதருள் அந்தக்கரணான்மவாதிகள். † சிவஞானசித்தி, ச-ம் சூ. ௩௨. ‡ உலகுடைநாயனார் கழிநெடில். ௩.

தத்துவவன்னரூபனுதல் வீடு பெற்றுழியும் உண்டுபோலும் என்று ஆசங்கை நிகழாமைப்பொருட்டு, 'மலசொரூபத்தின் மறைந்து, என மேற்கூறிப் போந்ததனை வழிமொழிந்துகொண்டு 'அரூபசொரூபியாய் நிற்றலான்' என்று ஏதுக்கூறினர்.

மறைந்தவழியென்றது மறைந்தெனத் திரிந்துநின்றது.

ஒன்றணையா மூலத் துயிரணையு நாபியினிற்
சென்றணையுஞ் சித்த மிதயத்து—மன்றவே
யையைந்தா நன்னுதலிற் கண்டத்தின் வாக்காதி
மெய்யாதி விட்டகன்று வேறு.

எ—து. உ—ம். எ—னின். தத்துவங்கள் தொழிற்படுதற்கண் நிகழும் அவத்தைவேறுபாடு தெரித்துணர்த்தி அஃது ஏதுவாதலை வலியுறுத்துதனுதலிற்று.

நல் நுதலில் வாக்காதி மெய்யாதி மன்ற ஏய் ஐயைந்து ஆம் கண்டத்தின் வாக்காதி மெய்யாதி விட்டு அகன்று வேறு ஐயைந்தாம் இதயத்திற் சித்தஞ் சென்று அணையும் நாபியினில் உயிர் அணையும் அணையா மூலத்து ஒன்று என இயையும்.

இ - ள். சாக்கிரத்தானமெனப்படும் இலாடத்திற் புறவிந்திரியம் பத்தினையுந் தேற்றமாகப் பொருந்திய இருபத்தைந்து கருவி தொழிற்படும்; சொப்பனத்தானமெனப்படுங் கண்டத்தின் அப்பத்தினையும்விட்டு நீங்கி வேறாய இருபத்தைந்து கருவி தொழிற்படும்; சுழுத்தித்தானமெனப்படும் இதயத்தின் அவற்றுள் இருபத்திரண்டு கருவிகளை விட்டு நீங்கி முன்னர்க்கூறப்படும் இரண்டு கருவிகளோடு கூடிய சித்தந் தொழிற்படும்; துரியத்தானமெனப்படும் உந்தியிற் சித்தத்தையும் விட்டுநீங்கி முன்னர்க்கூறப்படும் புருடதத்துவத்தோடு பிராணவாயுக்கூடித் தொழிற்படும்; இக்கருவிகளொன்றும் அணையாத அதீதத்தானமெனப்படும் மூலாதாரத்திற் புருடனொன்றே நிலைபெறும். எ - று.

எனவே, இலாடத்தானம் முதலிய ஐந்தினும் நிற்கும் கருவிகள் முறையே *முப்பத்தைந்தும் இருபத்தைந்தும் மூன்றும் இரண்டும் ஒன்றும் என்பது போந்தவாறுணர்க.

† மன்ற என்பது தேற்றப்பொருட்டாகிய இடைச்சொல்.

---

* இதனை:—"சாக்கிரமா நுதலினிலிந் திரியம் பத்துஞ் சத்தாதி வசனுதி வாயு பத்து—நீக்கமிலந் தக்கரணம் புருட னேடு நின்றதுமுப் பானைந்து நிலவுங் கண்டத்—தாக்கியசொப் பனமதனில் வாயு பத்து மடித்தனசத் தாதிவச னுதி யாக—நோக்குகரணம்புருட னுடனே கூட நுவல்வரிரு பத்தைந்தா நுண்ணி யோரே. சுழுத்தியித யந்தனிற் பிராணன் சித்தஞ் சொல்லரிய புருடனுடன் மூன்ற தாகும்—வழுத்தியநா பியிற்றுரியம் பிராண னேடு மன்னுபுரு டனுங்கூட வயங்கா நிற்கு—மழுத்திமூ லந்தனிற் றுரியா தீத மதனிடையே புருடனென்றி யமரு ஞானம்—பழுத்திடுபக் குவரறிவ ரவத்தை யைந்திற் பாங்குபெறக் கருவிநிற்கும் பரிசு தானே." என்னுந் தாயுமானசுவாமிகள் திருவாக்கானுமுணர்க.

† இதனை "மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்" என்னும் தொல்காப்பியச் சொல்லதிகாரச் சூத்திரத்தானுணர்க.

ஏய்தல் பொருந்துதல்; வினைத்தொகை.

வாக்காதி மெய்யாதியை என இரண்டாவது விரித்துரைக்க. அஃது ஈரிடத்துஞ்சென்றியையும்.

வருகின்ற சூத்திரத்தின் மெய் வாய் கண் மூக்கு எனச் செய்யுட்கேற்ப மெய்யை முற்கூறுதலின் அம்முறைபற்றி ஈண்டுச் 'செவியாதி' என்னாது 'மெய்யாதி' என்றார். அவற்றொடுகூடிய இருபத்தைந்தாவன அவ்விந்திரியம் பத்துக்கும் விடயமாகிய வசனாதி சத்தாதி பத்தும், அவற்றினுக்கு உட்கருவியாகிய அந்தக்கரணங்களான்கும், அவற்றொடு கூடி அவத்தையுறுவதாகிய புருடனொன்றும், அஃது அவத்தையுறுதற்குரிய மதுகைக்கேதுவாய் அகங்காரத்தாற் செலுத்தப்படும் பிராணாதிவாயுக்கள் பத்துமென இவை. ஈண்டுச் சத்தாதியென்றது வசனாதிபோலும்விடயங்களை எனக்கொள்க. எனவே, பூதங்களின் கூறாய் அவற்றுடனின்று தோராழிக்குத் தேருருப்புப்போல இந்திரியங்களின் றொழிற்பாட்டுக்கு மதுகையை விளைத்து நிற்பனவாய புறக்கருவி அறுபதில் ஈண்டுக் கூறிப்போந்த விடயங்கள் பத்தும் வாயுக்கள் பத்தும் ஒழித்தொழிந்த புறக்கருவிகள் நாற்பதும், அவற்றையுடைய பூதங்களைந்தும்,அவற்றிற்கு வலியாய் உடனிற்பனவாய சூக்குமபூதமெனப்படுந் தன்மாத்திரைகளைந்தும் என்னும் ஐம்பதுகருவிகளுங் கீழ்நோக்கிய சாக்கிரத்தானத்தில் தமது சத்திமடங்கி வினைக்கீடாகத் தொழிற்படாதொழியும் எனவும், அவை யொழிந்தவழி அவத்தைக்கேதுவாய் நின்ற ஏனைப் பொறிமுதலிய முப்பத்து நான்கும் அவற்றொடு கூடிய புருடதத்துவமும் இருவகைப் பூதங்களானும் புறக்கருவிகளானுந் தரப்படும் மதுகையின்மையின் ஆண்டுப் பொறிகளின் றொழிற்பாடு மெத்தென நிகழுமெனவுங் கொள்க. கலாதிகளுஞ் சுத்ததத்துவமும் அவத்தைக் கேதுவாகாமையான் உடனெண்ணாராயினர். ஏனையவும் விரிந்தநூல்களுட் கூறியவாறுபற்றி உணர்ந்துகொள்க.

இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ள
மிலாடத்தே யைந்தவத்தை யெய்து—மிலாடத்தே
யவ்வவ விந்திரியத் தத்துறைகள் கண்டதுவே
யவ்வவற்றி னீங்கலது வாங்கு.

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனம் அதீதத்தையெய்திய புருடன் மீளப் பிரேரகவவத்தையாகிய உணர்த்துமுறைமைச்சாக்கிரத்தைத் தலைப்படுமாறு அநுவாதமுகத்தான் விளக்கி அவ்விடத்தினும் முறைமையிற் செலுத்தும் * பிரேரகக்கருவிகளைந்தின் றொழிற்பாடுபற்றி ஐந்தவத்தை நிகழுமென்பதூஉம் அவை இவையென்பதூஉஞ் சுத்தாவத்தையும் இவைபோலுமென்பதூஉங் கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம். எ—று. இலாடத்தானத்தினீங்கி ஆண்டாண்டவத்தைப்பட்டுக் கீழ்ப்போந்து மூலாதாரத்தினெய்தியபின் மீறித்தும் அவ்வாறே ஆண்டாண்டவத்தைப்பட்டு மேற்சென்று இலாடத்தானத்தின் உணர்த்துமுறைமைச் சாக்கிரத்தைத் தலைப்பட்ட புரு

* பிரேரகக்கருவிகளைந்தாவன:-சிவம் சத்தி சாதாக்கியம் ஈசுரம் சுத்தவித்தை என்பன.

டன்,—இலாடத்தே ஐந்து அவத்தை எய்தும். எ—து. ஆண்டுஞ் சாக்கிரச்சாக்கிரமுதலிய ஐந்தவத்தையுறும்:—இலாடத்தே அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டு. எ—து. அவையாவன அவ்விலாடத்தானத்தின்கண்ணே அவ்வப்பொறிகளான் அவ்வவ்விடயங்களை யுணர்ந்து,—அதுவே. எ—து. அப்போதப்போதே,—அவ்வவற்றின் நீங்கல். எ—து. அவ்வவ்விடயங்களின் நீங்குதலாம்.—அது ஆங்கு. எ—து. இனி முன்னர்க் கூறப்படுஞ் சுத்தாவத்தையும் இவைபோல ஐவகைப்படும். எ - று.

மேற்செல்வுழி ஆண்டாண்டுப் படுமவத்தைகளுங் கீழ்ச்செல்வுழிப்போலன்றி விசேட மின்மையின் வருத்தோதாது 'இலாடத்தே சாக்கிரத்தை யெய்திய வுள்ளம்' என அநுவாதமுகத்தாற் கூறியொழிந்தார்.

இழியுங்காலும் ஏறுங்காலுங் கண்டத்தானத்திற் கனாக்காண்ட லுண்டென்பது முறையே * ஞானாமிர்தத்தினும் † போற்றிப்பஃறொடையினுங் காண்க.

அவ்வவ விந்திரியம் ஆண்டாண்டு விடயித்தற்குரிய இந்திரியம்.

அவ்வவ்விடயம் ஆண்டாண்டுப் புலனாதற்குரிய விடயம்.

கண்டு நீங்கலென வியையும்.

அது அவ்வக்காலம். ஈண்டும் அடுக்கிக்கூறிக்கொள்க.

கண்ணுருபு தொகுத்து ஏகாரம் விரித்தார்.

கண்டதென ஒருமொழியாகவைத்து உரைப்பாருமுளர்; குற்றியலுகரத்தின்முன் உடம்படுமெய் பெறுதற்கு ஒத்திலாமையானும் பொருட்சிறப்பின்மையானும் அஃதுரையன்மை யறிக.

அப்போதப்போதே நீங்கலாவது விடயங்களைக் கண்டகண்டபொழுதே அவற்றை அயர்த்துவிடுதல். ‡ "ஒன்றன்பாலும் வருபயன் மாறி மாறி வந்திடும்" என வழிநூலாசிரியர் கூறியதும் இவ்வியல்பு நோக்கி யென்க. ¶ "காரணந்தன்னிற் செயற்றோறுங் கண்டு கொண்ணீ" § "உந்திடுங் காரணந்தன்னிற் செயற்றோறு முணர்ந்து கொள்ளே" என்பனவுமது. இந்நுட்ப முணர்ந்து கோடற்குத் தூலாருந்ததிநியாயம்பற்றிக் o கைப்பொருளை வீழ்த்தித் தெளிதன் முதலிய தூலத்துள் வைத்துக்காட்டுப.

இனி அரூபசொரூபியாய் நிற்புழிப்படும் ஐந்தவத்தையினியல்பு கூறுதற்கு எடுத்துக்கொண்ட இவ்வதிகாரணத்தின் அதனோடியைபில்லாத சுத்தத்தின்கட்படும் ஐந்தவத்தை கூறுதற்கு ஓரியை பில்லையாயினும் அவத்தையெனப்படுவன ஈண்டோதியன மாத்திரையே போலுமென மயங்காமைப்

* க. கால்கொடுத்து ௪0 ம் அடியிற் காண்க. † ௩௩ ம் அடியிற் காண்க. ‡ சிவஞானசித்தி, இரண்டாஞ் சூத்திரம். ௬௪. ஒருபுலனுகரு. ¶ நான்காஞ் சூத்திரம். ௩௫. அறிதரு. § ௩௬. ஐந்து.

o இதனை, "விரும்பு மரும்பொருளை வீழ்த்து மயங்க—விரிந்த வனிலன் பெறுகை—வருந்தறிவு—தோன்றுத லயம் விழுந்தவிடந் தோன்றுதலென்—றுன்றவைந்துஞ் சாக்கிரத்தி ஞம்." என்பதனானுணர்க.

பொருட்டு வேறுமைந்தவத்தையுள அவை முன்னர்க் கூறப்படுமென்னுந் துணையே கூறுவார் 'அதுவாங்கு' என்றொழிந்தார். இக்கருத்தே பற்றி *"பிறிவிலா ஞானத் தோரும் பிறப்பற வருளா லாங்கே—குறியொடு மைந்தவத்தை கூடுவர் வீடு கூட" என்றொழிந்தார் வழிநூலாசிரியரும்.

இவ்விரண்டு வெண்பாக்களானுங் கூறிப்போந்த முத்திறத்தைந்தவத்தைகட்கு முறையே மூலமாய கேவலஞ் சகலஞ் சுத்த மென்ற மூன்றனுள்வைத்துத் †"தன்னுண்மை" யெனப்படுங் கேவலத்தினியல்பு 'சகசமலத்ராது' என்பதனானே பெற்றாம். ஏனைச் சகலத்தினியல்பு வருகின்றசூத்திரத்தினுஞ் சுத்தத்தினியல்பு அப்பாலைச்சூத்திரத்தினும் பெறுதும்.

மூன்றாமதிகரண முடிந்தது.



நான்காஞ்சூத்திர முடிந்தது.



# ஐந்தாஞ்சூத்திரம்.



விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே.

எ—து. சூ—ம். எ—னின். இவ்வான்மாக்களிடத்துத் தமது முதலுபகார மூணர்த்துதனுதலிற்று.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக் கருத்துணர்த்துதனுதலிற்று.

இ-ள். ஐந்தவத்தைப்படும்வழிக் கருவியும் உயிரும் அமைச்சும் அரசுமேய்ப்ப நிற்பின் அவையே அமையுமாகலான் முதல்வனால் ஆண்டைக் காகற்பாலதொரு பயனில்லைபோலும் என்னுங் கடாவை ஆசங்கித்து ஆண்டும் இன்றியமையாது வேண்டப்படுவதாய முதல்வனுடைய உதவியை அறிவிக்குமுகத்தானே இரண்டாஞ் சூத்திரத்தோதிய துணைக்காரண முதற்காரணங்களது இலக்கண முணர்த்துதல் இவ்வஞ்சாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

இதனானே சூத்திரவியையபும் இனிது விளங்கும்.

மாயை கன்மங்கள் திரோதான சத்திக்குக் கருவியாய் அதனுளடங்குதலிற் றமதுமுதலுபகாரமெனப்படுந் திரோதானசத்தியது இலக்கணங் கூறவே அவற்றது இலக்கணமுங் கூறியவாறுதலறிக.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. மேலைச்சூத்திரங்களின் அங்ஙனங் கூறிப்போந்த உயிரானே மெய் வாய் கண் மூக்குச் செவி என்பன தத்

* சிவஞானசித்தி, ச—ம் சூ. ௬௫. அறிதரு. † மேற்படி சூத்திரம். ௬௭ கேவல.

தம் விடயங்களை இஃது இன்னதென்று அளவிட்டறிந்தும் அங்ஙனமறியுந் தம்மையுந் தம்மை அதிட்டித்து நின்று செலுத்தும் அவ்வுயிரையும் அறிய மாட்டா; அவ்விந்திரியங்கள்போல், உயிர்களுந் தமதறிவிற்கு *வியஞ்சகமாகிய முதல்வனது சிற்சத்தியான் மேற் கூறிப்போந்த இருவகை யஞ்சவத்தையினி ன்று வினைப்பயன்களை யறிந்து அநுபவிக்குந் தம்மையுந் தம்மைச் செலுத்தி நிற்குந் திருவருளையும் அறியமாட்டா; உயிர்கள் அவ்வாறுணர்தல் காந்தத் தைக் கண்ட இரும்பு அதன் சந்நிதிமாத்திரையின் வலித்துக்கொள்ளப்படு மாறுபோலக் காணத்தானன்றிச் சங்கற்பத்தான் அதிட்டிக்கும் முதல்வன்சந் நிதிமாத்திரையினும் ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலின்று. எ-று.

ஆகலான் அதுபற்றி முதல்வன் விகாரியாதலின்று என்பது குறிப்பெச்சம்.

செவியென்பது † சொல்லெச்சம்.

ஐம்பொறிகளைக் கூறியது உபலக்கணமாகலின் ஏனைக்கருவிகளும் அவ் வாறுதல் கொள்ளப்படும். அற்றாகலினன்றே ‡ "பொறிபுலன் காணமெல்லாம் புருடனை லறிந்து" என்றார் வழிநூலாசிரியரும்.

விடயங்களை யறிவுழி முதல்வன் உடனின்று செலுத்துவனாயின் அவ் விடயங்களோ டொப்ப முதல்வனையும் அறிதல்வேண்டும் என்பாரை நோ க்கி, 'அளந்தறிந்து' என்றொழியாது 'அறியா' என்றார்.

ஆங்கவை ஒருசொன்னீர்மைத்து. 'தம்முணர்வின்றமி' என்றது தமது முதலென்னும் பொருள்பட வந்த ஆறாம்வேற்றுமைத் தொகை.

ஈண்டு அருளென்றது ஏற்புழிக்கோடலால் திரோதானசத்தியின்மேனி ன்றது. அருளாலெனை விரித்து 'அளந்தறிந்தறியா' என உவமைக்கோதிய வினையைப் பொருளினுங் கூட்டியுரைக்க.

இதனுள் விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண்மூக் களந்தறிந்தறியா என்றது ஓரதிகரணம்; ஆங்கவைபோலத் தாந்தமுணர்வின் றமியருள் காந்தங் கண்ட பசாசத்தவையே என்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திர மென்றுணர்க.



## முதலதிகரணம்.

### ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவாலுணரு மென்றது.

எ—து. மே—ள். எ—னின். தாமரையிலையி னீர்போற் புருடன் பற்றற்று நிற்பப் புருடன் சந்நிதியிற் புத்திதத்துவமே ஐம்பொறிவழியான் விடயங் களை அறியுமெனவமையும் அவ்வாறன்றிக் கருவிகளோடு கூடிப் புருடனே அவத்தைப்படுமென ¶ மேற்கூறிய தமையுமா றென்னையெனச் சாங்கியநூ லார்மதம்பற்றி நிகழுங்கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடலுதலிற்று. இ-ள். வெ—டை.

* வியஞ்சகம்—விளக்குவது. † சொல்லெச்சம் ஒருசொல்லெஞ்சி நிற்பது. ‡ சிவ ஞானசித்தி, ௫—ம். சூ. க. ¶ இந்நூல் ௪-ம் சூ. ௩—ம் அதிகரணத்திற் காண்க.

உணர்விற் கேதுவாகிய பொறிகளை உணர்வென்று உபசரித்தார்.

**அவற்றினுன் ஆன்மா வொற்றித்துக் காணினல்லது அவை ஒன்றையும் விடயியாவாகலான்.**

எ—து. ஏது. எ—னின். அதற்குப் பிரமாணமென்னை *என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ-ள். அவ்வைம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்றறிந்தாலன்றி அவை ஒரு விடயத்தையும் விடயிக்கமாட்டா வாகலான் 'ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவானுணரும்' என மேற்கொண்டது. எ-று.

†ஆன் உடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தது.

உம்மை இழிவுசிறப்பு; முற்றுமாம்.

எதிர்மறைமுகத்தாற் கூறினர் இன்றியமையாமை விளக்குதற்கு.

> **ஐம்பொறியை யாண்டங் கரசா யுளநிற்ப**
> **வைம்பொறிக ளுள்ள மறியாவா—மைம்பொறியிற்**
> **காணுதேற் காணுது காணுமுளங் காணுதேற்**
> **காணுகண் கேளா செவி.**

எ—து. உ—ம். எ—னின். உயிர் அங்ஙன மொற்றுமைப்பட்டுநின்று செலுத்துதலும் அவை உயிரையின்றி அமையாமையும் எற்றாற்பெறுதும் ‡ என்பாரைநோக்கி ஏதுவை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அரசு ¶ஆய். எ—து. அரசன் அத்தாணிமண்டபத்தின் வைகித் தன்கீழ்க் கருமஞ்செய்வாரை அவரவர்க்குரிய காரியங்களிற் செலுத்தி ஆளுமாறுபோல,—உளம் ஐம்பொறியை ஆண்டு அங்கு நிற்ப. எ-து. உயிர் ஐம்பொறிகளை அவ்வவற்றிற்குரிய விடயங்களிற் செலுத்தி ஆண்டு இலாடத்தானத்தில் நிற்றலான்,—ஐம்பொறிகள் உள்ளம் அறியா ஆம். எ—து. அரசனாலேவப்பட்டோர் ஏவிய கருமமாத்திரையினன்றி அதிகத்திற் செல்லமாட்டாமைபோல அவ்வைம்பொறிகள் உயிரை யறியமாட்டாவாயின. அற்றேல், ஐம்பொறிகள் உயிரானன்றி யறிதல் அமையாதாயினும் உயிர் ஐம்பொறிகளானன்றியும் அறிதலமையும்போலுமெனின்,—ஐம்பொறியில் காணுதேல் காணுது காணும் உளம் காணுதேல் காணு கண் கேளா செவி. எ—து. ஒரு கருமஞ் செய்தற்கண் அரசரும் அமைச்சர் முதலாயினருந் தம்முள் இன்றியமையாதவாறுபோல ஒன்றனை விடயித்தற்கண் உயிரும் ஐம்பொறிகளுந் தம்முள் இன்றியமையா. எ-று.

அன்னவாதல் உயிர் ஐம்பொறியினீங்கிச் சொப்பனத்தானத்தி னெய்தியவழிக் கண்டுகொள்க.

---

* சாங்கியர். † "தூங்குகையா னோங்கு நடைய" என்புழிப்போல. ‡ சாங்கியர். ¶ ஆக்கம் ஈண்டு உவமைப்பொருள் குறித்துநின்றது. "ஆள்வா ரிலிமா டாவேனோ" என்புழிப்போல.

நிற்ப என்னுஞ் செயவெனெச்சம் "மழைபெய்யக் குளநிறைந்தது" என் புழிப்போல நிற்றலாலெனக் காரணப்பொருட்டாய் நின்றது. இவ்வாறுரையாக்கால் இஃது ஏதுவின் பொருள் வலியுறுப்பதாய உதாரணமாதற் கேலாமை யறிக.

முதலதிகரண முடிந்தது.



## இரண்டாமதிகரணம்.

### இனி இதுவுந் தமது முதலாலே யுணருமென்றது.

எ—து. மே—ள். எ—னின். கருவி சடமாகலிற் சித்தாகிய உயிரானன்றி அமையா ஆயினுஞ் சித்தாகிய உயிர் முதல்வனது உபகாரத்தை அவாய்நிற்ப தன்று, அவாவுமாயின் முதல்வனும் அவ்வாறே பிறிதொன்றனுபகாரத்தை அவாவுமெனப்பட்டு மேலும் வரம்பின்றியோடும் என ஈசுரவவிகாரவாதி முதலியோர் கூறுங்கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ—டை.

தமது முதலென்பது "யான் எம்மூர் புகுவன் நீ நும்மூர் புகுவை" என் புழிப்போல வேறுமுடிபு கோடலிற் பால்வழுவன்மை யுணர்க.

உம்மை இறந்ததுதழீஇயவெச்சம்.

*இம்முறைமை தமக்கொரு முதலுடையவற்றிற்கேயன்றி ஏனைப்பொருட்கு இன்மையின் வரம்பின்றியோடுமாறு இல்லை என்பார், 'தமதுமுதல்' என்று † உடம்பொடுபுணர்த்தோதினர். 'தம்முணர்வின்றமி' என்றதுமது.

தத்துவங்களும் உயிருந் தமக்கொரு முதலுடையனவாதலும் முதல்வனுக்கு அஃதின்மையும் ‡ மேற்கூறிப்போந்த சூத்திரங்களாற் பெறப்பட்டன என்பது கருத்து.

### இவ்வான்மாத் தன்னுலே யுணரு மிந்திரியங்களைப்போலத் தானுந் ¶ தன்னை யுணராது நிற்றலான்.

எ—து. ஏது. எ—னின். உயிர் ஐம்பொறியிற் சடமன்மையான் அவற்றை யெடுத்துக் காட்டி மேற்கோடல் ஈண்டைக் கமையாது §என்பாரை நோக்கி அதனைச் சாதித்தனுதலிற்று. இ—ள். வெ—டை.

---

* இம்முறைமை—உணர்த்த உணரும் முறைமை. † உடம்பொடுபுணர்த்தல் ஒருத்தி; அது கருத்துடையடைபோல ஒன்று கூறும்போது வேறொருபொருளையும் அதன்பாற் புணர்த்தி வைத்தல். ‡ மேற்கூறிப்போந்த சூத்திரங்கள்:—'எங்குமுள னென்றவை' 'அவனவளதுவெனுமவை' என்பனவற்றை முதலாகவுடைய சூத்திரங்கள். அவற்றுற் பெறப்படல் 'அவையுடைமை யாளாநா மங்கு' 'அந்தமாதி' என்பனவற்றுட்காண்க. வெண்பாவும் சூத்திரம் எனப்படும். அது தொல்காப்பியத்திற் பொருளதிகாரத்துட் செய்யுளியலிற் காண்க. ¶ தன்னை யுணராது என்பதற்குத் தன்னையுந் தன்முதல்வனையுமுணராது எனப் பொருள் கொள்ளப்படும். தன் ஐ—தன்முதல்வன். § ஈசுரவவிகாரவாதிகள்.

சடமுஞ் சேதனமுமாய வேறுபாடுபற்றித் தம்முள் ஒவ்வாவாயினுந் தம்மையுந் தமது முதலையும் அறியமாட்டாமைக்கண் ஐம்பொறியும் உயிருந் தம்முள் ஒக்குமாகலின், அதுபற்றி அங்ஙனம் மேற்கோட லமையுமென்பது கருத்து.

> மன்னுசிவன் சந்நிதியின் * மற்றுலகஞ் சேட்டித்த
> தென்னு மறையி னியன்மறந்தாய்—சொன்னசிவன்
> கண்ணு வுளம்வினையாற் கண்டறிந்து நிற்குங்கா
> ணெண்ணான் சிவனசத்தை யின்று.

எ—து. உ—ம். எ—னின். தன்னையுணரும் இந்திரியங்களை ஈண்டைக்கு உவமை கூறின் அவ்விந்திரியங்கட்கு வரும்பயன் அவற்றினாலொற்றித்துக்காணும் உயிர்க்காயவாறுபோல உயிர்க்குவரும் இன்பத்துன்பப்பயனும் உயிராலொற்றித்துக் காணும் முதல்வனுக் காதல்வேண்டும் †என்பாரை நோக்கி அங்ஙனமாகாமை கூறி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். மன்னு சிவன் சந்நிதியின் உலகம் சேட்டித்தது என்னும் மறையின் இயல் மறந்தாய். எ—து. ‡ஈண்டுக் கூறிய கருதலளவையேயன்றி நிலைபெற்ற முதல்வனது சந்நிதியிற் பிரபஞ்சஞ் செயற்படுகின்றதென்று ஓதும் வேதப்பொருளையும் அறியாது பிணங்குகின்ற பேதாய்,—உளம் சொன்ன சிவன் கண்ணு வினையால் கண்டு அறிந்து நிற்கும் காண். எ—து. உயிராவது (தமக்கெனவோர் காரணமின்றித் தன்பொருட்டே அறிவனவாய அவ்விந்திரியங்கள்போலன்றி) அவ்வேதத்துள் எடுத்தோதப்படும் முதல்வன் தனக்குக் காட்டாகிநிற்பத் தான்செய்த வினைக்கீடாக ஒன்றனையறிந்து நிற்கும், இவ் ¶ வேறுபாடு அறிவாயாக.—இன்று (ஆகலாற்) சிவன் அசத்தை எண்ணான். எ—து. அங்ஙனங் காட்டாகி நிற்பினுந் தனது சந்நிதியின் அசத்தெல்லாஞ் சூனியமாகலான் மங்கலவடிவினனாய முதல்வன் அவ்வுயிர்போல் அவற்றை அநுபவியான். எ - று.

இதனுட் சிவனென்றது ‘மன்னுசிவன்’ என்புழிப் பேரின்பத்துக்குக் காரணனென்னும் பொருட்டாய்த் தனது சந்நிதிக்கண் உலகத்தைச் சேட்டிப்பித்தற்குரிய இயைபுணர நின்றது; ‘சொன்னசிவன்’ என்புழி முற்றுணர்வினனென்னும் பொருட்டாய்க் காட்டாதற்குரிய இயைபுணரநின்றது; ‘எண்ணான் சிவன்’ என்புழித் தூயதன்மையனென்னும் பொருட்டாய் அசத்தை எண்ணாமைக்குரிய இயைபுணரநின்றது. ஆகலாற் கூறியதுகூறலன்மையுணர்க. அஃது அம்முப்பொருளுடைத்தென்பது சோமசம்புபத்ததி வியாக்கியான முதலியவற்றுட் காண்க. §சிவதத்துவவிவேகத்துள் மூவகைப்படுத்தோதிய பொருளும் இவையேயாமாறு கண்டுகொள்க.

---

* மற்று அசை. † ஈசுரவவிகாரவாதிகள். ‡ ஈண்டு—இவ்வதிகரணத்தில். ¶ ஐம்பொறிகள் ஆன்மாவின்பொருட்டு உணர்வன, தம்பொருட்டு உணர்வனவல்ல. ஆன்மாக்கள் தம்பொருட்டே உணர்வன, முதல்வன்பொருட்டு உணர்வனவல்ல. இவையேவேறுபாடு.
§ சிவதத்துவ விவேகம் கடவுள்வாழ்த்து யஸ்யாஹு ராகமவித: பரிபூ

ஈண்டு உலகம் என்றது உயிர்களை.

மறையின் இயலும்பொருளை மறையின் இயலென்று உபசரித்தார்.

இறந்ததுதழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது.

மறந்தாய் என்பது விளியுருபேற்றபெயர்.

ஈண்டுச் சந்நிதி என்றது அவிகாரவாதிகள் கூறும் அபிமுகமாத்திரையன்றென்பார் 'சொன்னசிவன் கண்ணு' வென்றார். சிவசத்தி அவ்வக்காரியங்களின் *உன்முகமாதலாகிய சங்கற்பமே ஈண்டுச் சந்நிதி எனப்படும் என்பதாம்.

'காந்தங்கண்ட பசாசத்தவையே' என்றது ஒருபுடையுவமையாதல்பற்றியே பிறிதன்றென்பது கருத்து.

வினையாலென்றது ஐம்பொறிபோலன்றி உணர்தற்பயன் உயிர்க்கேயாதற்கேதுக் காட்டியவாறு.

கண்டறிதல் ஒருபொருட்பன்மொழி.

எண்ணல் ஈண்டநுபவித்தன்மேற்று.

இன்றென்பது சாதியொருமை.

அவனெதிர் என்பது அவாய்நிலையாய் வந்தது.

ஆகலானென்பது சொல்லெச்சம். இன்றுதல் †"யாவையுஞ் சூனியஞ் சத்தெதிர்" என்புழிப் பெறப்படும். இக்கருத்தேபற்றி ‡"மாயை மருவிடான் சிவன வன்க—ளுறைதரா தசேத னத்தால்" என்றார் வழிநூலாசிரியரும். ¶"உன்னுதாத் தேகிடந்த கீட முறுவதெல்லா—முன்னுடைய தென்னுய்நீ யுற்றனையோ–மன்னுயிர்க—ளவ்வகையே காணிங் கழிவதுவு மாவதுவுஞ்—செவ்வகையே நின்றசிவன் பால்." என்றதும் இவ்வியல்பு நோக்கி.

---

[illegible] எனவரும் சுலோகங்களால் மூவகைப்படுத்தோதிய பொருளும் இவையேயாமாறுணர்க.

* உன்முகம்—எழுச்சி. † இந்நூல் ஏழாஞ்சூத்திரம். ‡ சிவஞானசித்தி, ௫—ம். ௬. ௬. இறைவன்றன். ¶ திருக்களிற்றுப்படியார். அஎ.

வெய்யோ னொளியி லொடுங்கி விளங்காது
வெய்யோனை யாகாத மீன்போல—மெய்யவனிற்
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனைக்
கண்டுடனாய் மன்னுதலைக் காண்.

எ—து. உ—ம். எ—னின். உயிர் அங்ஙனமுணர்த்த வுணருங்கால் முதல்வ னின் வேறுநின்றுணருமோ ஒன்றாய்நின்றே உணருமோ *என்பாரை நோக்கி அவ்விரண்டியல்புமின்றிநின்றுணருமாறுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். வெய்யோன் ஒளியில் ஒடுங்கி.எ—து.ஞாயிற்றினொளியினடங்கி,—விளங்காது. எ—து. அதனின் வேறாய் விளங்கித் தோன்றுதலின்றி,—வெய்யோன் ஆகாத மீன் போல. எ—து. அதுவாயொழிதலுமில்லாத நாண்மீன்கள் அஞ்ஞாயிற்றானே ஒளியுடையவாமாறுபோல,—கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் ஐம்புலனை மெய் அவனில் கண்டு. எ—து. கண்டுங் கேட்டும் உண்டும் உயிர்த்தும் தீண்டியும் அறியப்படும் ஐவகைவிடயங்களையும் உயிர் மெய்ப்பொருளாகிய முதல்வனால் உணர்ந்து,—உடனாய் மன்னுதலைக் காண். எ—து. வேறாதலும் ஒன்றாதலுமின்றி அவ்விரண்டற்கும் பொதுவாய் அடங்கி உடனாய் நிலைபெறுதலை அறிவாயாக. எ-று.

†உவமையடை பொருளினும், பொருள்வினை உவமையினுஞ் சென்றியையும். ஐ சாரியை.

நாண்மீன் முதலியவற்றின் ஒளியெல்லாம் ஞாயிற்றனுடைய ஒளியேயென்பது வேதநூற்றுணிபாகலான் அஃதீண்டைக்கு உவமையாயிற்று.

உயிரென்னும் எழுவாய் மேலைவெண்பாவினின்றும் வருவித்துரைக்கப்பட்டது.

அருளுண்டா மீசற் கதுசத்தி யன்றே
யருளு மவனன்றி யில்லை—யருளின்
றவனன்றே யில்லை யருட்கண்ணார் கண்ணுக்
கிரவிபோ னிற்குமர னேய்ந்து.

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனமாயினும் உயிர்கட்குப் பலவேறுவகைப் பட உணர்வு நிகழ்தலின் அஃது உணர்த்துதல்வேறுபாட்டானுயதெனல்வேண்டும்; வேண்டவே, நிருவிகாரியென்னுஞ் சுருதியோடு முரணி முதல்வன்

* ஈசுரவவிகாரவாதிகள். † உவமை நாண்மீன்; அதனடை, ஞாயிற்றின் ஒளியின் அடங்கி அதனின் வேறாய்விளங்கித்தோன்றுதலின்றி அதுவாயொழிதலு மில்லாமை. அது சிவசத்தியினடங்கி அதனின் வேறாய்விளங்கித்தோன்றுதலின்றி அதுவாய் ஒழிதலுமில்லாத உயிர் எனப் பொருளின்கட் சென்றியையும். பொருள் உயிர்; அதன்வினை முதல்வனால் உணர்தல்; அது ஞாயிற்றினொளியையுடைத்தாதல் என உவமைக்கட் சென்றியையும். பொருள்-உவமேயம். ஆகாத என்பது வினையாயினும் அது மீன்வினையன்றாதலின் உவமைவினை என்னாது உவமையடை எனப்பட்டது.

விகாரியாவான் செல்லும் * என்பாரை நோக்கி விகாரியாகாமை யுணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். அருள் ஈசற்கு அன்றே உண்டாம். எ—து. உயிர்கட்குப் பசுத்துவத்தை நீக்கிச் சிவத்துவத்தை விளக்குதற்கணுளதாகிய இரக்கம் முதல்வனுக்கு அநாதியேயுள்ளது.—அது சத்தி. எ—து. அவ்விரக்கம் வேறுபொருளன்று முதல்வனுக்குளதாகிய சத்தியேயாம்;—அருளும் அவன் அன்றி இல்லை அவன் அருள் இன்று இல்லை. எ—து. †இரக்கமும் அவனுங் குணமுங் குணியுமாகலின் அவ்வருளு முதல்வனையின்றி அமையாது முதல்வனும் அதனையின்றி அமையானுப்,—அருட்கண்ணூர் கண்ணுக்கு இரவி போல் ஏய்ந்து நிற்கும் அரன். எ—து. ஞானக்கண்ணுடையா ருணர்விற்கு ஞாயிறு தன்னொளியோடு தாதான்மியமாயியைந்து நிற்குமாறுபோல அவ்வருளோடு தாதான்மியமாயியைந்துநிற்பன் முதல்வன்; ஆகலாற் றன்வயத்தனுகிய அம்முதல்வன் விகாரமின்றி நின்றே தனது சத்திசங்கற்பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல் கூடும். எ-று.

ஆகலாற் றன்வயத்தனுகிய அம்முதல்வன் விகாரமின்றிநின்றே தனது சத்திசங்கற்பமாத்திரையான் அனைத்துஞ் செய்தல் கூடுமென்பது குறிப்பெச்சம்.

உம்மை எதிரதுதழீஇயது.

இன்றி என்னும் வினையெச்சக்குறிப்பினிகரஞ் செய்யுளாகலின் உகரமாய்த் திரிந்தது. அன்றே அசை.

இவ்வியல்பு சித்தாந்தநெறி யுணர்ந்தார்க்கன்றி விளங்காதென்பார் அருட்கண்ணூர் கண்ணுக்கு என்றார்.

சத்தியதுண்மையும் அதனியல்பும் ‡'நீக்கமின்றி நிற்குமன்றே' என்பதனுள்வகுத்துரைத்தமையின் ஆண்டுக் காண்க.

இரண்டாமதிகரண முடிந்தது.



ஐந்தாஞ்சூத்திர முடிந்தது.



* ஈசுரவவிகாரவாதிகள். * இரக்கமாகிய அருளும் இறைவனும் குணமும் குணியுமாதலை குணஸ்தஸ்ய பராஶக்தி ஸ்தாஶ்ரய குணீ ஶிவ:| என்னும் காலோத்தராகம சுலோகத்தானுமுணர்க. ‡ இந்நூல் உ-ம் சூ.

# ஆருஞ்சூத்திரம்.

இனி, ஆசிரியர் ஆறுஞ்சூத்திரத்திற்கு வார்த்திகப்பொழிப்புரைப்பான் புகுந்து சூத்திரத்தை மொழிபெயர்த்தருளிச் செய்கின்றார்.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

எனவரும்.

பாடத்தை மொழிபெயர்த்துக்கொண்டென்பது சூத்திரம் எனக்காட்டி இனி, அதன் கருத்துரைக்கின்றார்.

எ—து. சூ—ம். எ—னின் சத்தும் அசத்தும் வரைசெய்து உணர்த்துதனு தலிற்று எனவரும்.

மேலைச் சூத்திரத்தில் ஐம்பொறிகள் ஆன்மாவால் அளந்தறிந் தறியாத வாறுபோலத், 'தாந்தமுணர்வின்றமியரு' ளான் அளந்தறிந்தும் அங்ஙனம் அறிவிக்கும் முதல்வனையும் தம்மையும் அறியமாட்டா என்றது பற்றி, (அற்றேல்)முதல்வன் எவ்வாற்றானும் அறியப்படாத பொருளோ என்று ஆசங்கை நிகழ்ந்தவழி, அதனை நீக்கி, இலக்கணவோத்துட் கூறுதற்கு எஞ்சி நின்ற பதிப்பொருளதிலக்கணம் பாரிசேடவளவையானுணர்த்து முகத்தானே, மேற் பொதுவியல்பாற் கூறிப்போந்த ஆன்மாவிற்குச் சிறப்பியல்பு பாரிசேடவள வையான் வருஞ் சூத்திரத்தின் விளக்குதற்பொருட்டு அவ்வான்மாவின் வேறாகிய சத்தினையும், அசத்தினையும் இலக்கணத்தாற் றம்முள் மயங்காத வாறு வரைந்துவைத்துணர்த்தி உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய் தல் இவ்வோத்தின் மூன்றாம்பாதமாகிய ஆறுஞ்சூத்திரத்தின் கருத்தென்க.

ஆசங்கைபற்றிய இயைபான் அதிகரணவியைபு பெறப்பட்டது. மேலை ச்சூத்திரங்களிற் கேவலசகலங்களினியல்பு முறையே விளக்கி ஈண்டுச் சுத்த த்தினியல்பு விளக்குதல் முறைமைபற்றிய இயைபாகலான் அதனானே பாத வியைபு பெறப்பட்டது. பிரமாணவோத்துட் கூறிய பொருள்களுள் ஏனைப் பொருள்களுக்கு இலக்கணங் கூறி எஞ்சிநின்ற பதிப்பொருளுக்கு இலக்கணங் கூறுதல் அவாய்நிலைபற்றிய இயைபாகலான் அதனானே ஒத்தியைபு பெறப் பட்டது.

பதிப்பொருளுக்குப் பொதுவியல்பு மேற்பெறப்பட்டமையின் ஈண்டுக் கூறும் இலக்கணஞ் சிறப்பியல்பெனக்கொள்க. அற்றாகலினன்றே, இதனை முதற்கட் கூறாது உண்மையதிகாரத்தைச் சாரவைத்து இறுதிக்கட் கூறிய தூஉமென்க.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. 'தம்முணர்வின்றமி' ஆகிய முதற் பொருள் அளவைகளான் அறியப்படு மியல்பிற்றெனின்; அங்ஙனம் அறிய ப்படும் பிரபஞ்சம்போல அழிபொருளாகிய அசத்தாம்: எவ்வாற்றானும் அறி

யப்படாத இயல்பிற்றெனின், அங்ஙனம் அறியப்படாத முயற்கோடு ஆமைம யிர்க்கம்பலம் போலச் சூனியமாம்: ஆகலான், இவ்விரண்டு கூறுபாடுமன்றி ஒருவாற்றான் அறியப்படாமையும் ஒருவாற்றான் அறியப்படுதலும் என்னும் இரண்டு வகையானுஞ் சிவமாகிய சத்தாயுள்ளதெனக் கூறுவர் மெய்யுணர்வி னிலைபெற்றுயர்ந்தோர். எ - று.

உணருரு எனின் அசத்து என மாறுக. எனின் என்பதனை உணராதெ ன்பதனோடுங் கூட்டி உரைக்க. இன்மையின்—இல்லையாகலானென்க. முற்றும் மைகள் தொக்கன. அல்லதென்பது வினையெச்சக்குறிப்புமுற்று. அன்றி ஆம் எனக்கூட்டுக. ஒருவாற்றான் அறியப்படாமை பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமை. ஒருவாற்றான் அறியப்படுதல் சிவஞானம் ஒன்றானே அறி யப்படுதல். இரண்டுவகையிற் சிவசத்தாமென இசைக்கும் எனக் கொண்டு கூட்டுக. பாசஞான பசுஞானங்களா னறியப்படாமையிற் சிவமாதலும், பதி ஞானத்தா னறியப்படுதலிற் சத்தாதலும் பெற்றாமென்பார் 'இரண்டுவகை யிற் சிவசத்தாம்' என்றார். சிவசத்து என்னும் இருபெயரொட்டுப் பண்புத் தொகை வடநூன் முடிபு. சடமாகிய சத்தின் நீக்குதற்குச் சிவசத்தென்றார். சிவசத்தென்பது சித்துச்சத்தென்னும் பொருட்டு. உலகென்றது உயர்ந்தோ ரை. எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கப்பட்டது. இரு திறனுமன்றி இரண்டுவகையானுஞ் சித்துமாய்ச் சத்துமாய்நிற்றல் முதல்வ னுக்குச் சிறப்பியல் பென்பது போந்தவாறு கண்டுகொள்க. இன்னும் முத ல்வனுக்குரிய ஏனைச் சிறப்பியல்புக் குணங்களெல்லாம் இவ்விரண்டனுள் அட ங்கும்; அஃதறிந்தடக்கிக்கொள்க.

அற்றேல், *"நின்னைக் காணு மாந்தர்—தம்மையுங் காணுத் தன்மையோ ரே" எனவும், † "தன்னாலே தனைய றிந்தாற்—றன்னையுந் தானே காணுந் தா னது வாகி நின்றே" எனவும், ‡ "மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவா றுயிரின் மேவு ¶ மருளெனி லொளியாய்நிற்கும்" எனவும், § "உன்னரிய திருவருளை யொழியமல முளதென் றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே" எனவும், ○ "சுடரா விருடேடச் சொல்லார்க ளெந் தாய்—சுடரா விருடேடச் சொன்னாய்" எனவும் ஓதியவாற்றான் ஏனைப் பசு பாசங்களுஞ் சிவஞானத்தானன்றி அறியப்படா என்பது போதருதலின், அவையும் அவ்விரண்டுவகையும் உடைமையாற் சிவசத்தாவான் செல்லும் பிற வெனின், செல்லா; என்னை? அவை சிறப்புவகையா னறியப்படுதல் சிவஞான மொன்றானேயன்றி ஆகாதாயினும் பொதுவகையானே ஏனை ஞானங்கட்கு விடயமாதல் உண்மையின் ஒருவாற்றான் உணருருவாதற்கு இழுக்கின்மை யான் என்க.

அஃதெங்ஙனமெனிற் காட்டுதும்:- ** "ஆன்மாவி னுண்மை யுணர்ந்தவர் தமையு ணர்ந்தோர்—தருமிது பசுஞா னம்பின் சிவஞானந் தனக்கு மேலாம்"

* பட்டணத்துப்பிள்ளையார், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை. கூ. மேவிய. † சிவப்பிரகாசம், உண்மை. அ-ம் சூ. உ. தன்னறி. ‡ மேற்படி. எ-ம் சூ. உ. ¶ அருளி னில் என்பதும் பாடம். § மேற்படி, பொது. உ-ம் சூ. கஅ. அந்நிய. ○ சதமணிக் கோவை சுக. ** சிவஞானசித்தி. ச-ம் சூ. உ. கருவியா.

எனவும், *"காதலினு னுன்பிரம மென்னு ஞானங் கருதுபசு ஞானம்." எனவும் ஓதுதலிற், பசுஞானத்தானே உண்மைசுட்டும் உணர்விற்கும் நான்பிரம மென்னும் உணர்விற்கும் ஆன்மா விடயமாதல் பெற்றும். †"வருந்தீப மெனத்தெரிந்தாங்–கொருவி" எனவும், ‡"இவைகீழ் நாடலாலே" எனவும் ஓதுதலின் ஒருவுதலுங் கீழ்நாடுதலுமாகிய அப்பசுஞானத்திற்குப் பாசம் விடயமாதல் பெற்றும். இனி, இதனை யான் அறிந்தேன் அறிகின்றிலேன் என்புழி, இது என்னுஞ் சுட்டுணர்விற்கு விடயம் புறத்தே தோன்றுங் குடமும், யான் என்னும் உணர்விற்கு விடயம் அந்தக்கரணங்களை அதிட்டிக்கும் ஆன்மாவும், அறிந்தேனென்னும் உணர்விற்கு விடயம் அவ்வான்மபோதமும், அறிகின்றிலே னென்னும் உணர்விற்கு விடயம் அறியாமையுமேயன்றி வேறின்மையின், இங்ஙனம் உணரு முணர்வு எல்லார்க்கும் ஒப்ப நிகழ்கின்றமையிற் பசுபாசங்கள் பாச ஞானத்திற்கு விடயமாதல் கண்கூடாகப் பெறப்பட்டது. மெய்யுணர்வில்லாதார் உடம்பு முதலியவற்றை யானென மயக்கத்தான் மதிப்பினும், இதனையானறிந்தேன் என்புழி, யானென்னும் உணர்விற்கு விடயம் ஆன்மாவே என்பது, அநுபவந் தன்மாட்டு நிகழ்தல்பற்றி உணர்ந்துகொள்க. இருளின்கட் கயிற்றை அரவென மதித்து இது கிடக்கின்றதெனக் கூறினும் ஆண்டு இது என்னும் உணர்விற்கு விடயமாய்க் கிடந்தது கயிறேயன்றி அரவன்மை யான் யாண்டும் அவ்வாறே கண்டுகொள்க.

அற்றேல், சிவனுண்டு, சிவனில்லை எனவும் மெய்யுணர் வில்லாதார் வழங்கக் காண்டலின் சிவனும் பொதுவகையான் அவ்வாறே பாசஞானத்திற்கு விடயமாம்போலுமெனின், அற்றன்று; என்னை? குடமுண்டு குடமில்லை என்றவழிக் குடம் புத்திவிருத்தியிற் பரிணமித்துத் தோன்றி ஆன்மாவின்கண்வந்து அநுபவமாமாறுபோல, உலகத்துள்ளார் சிவனுண்டு சிவனில்லை என்றவழிச் சிவப்பொருள் அவ்வாறு பொதுவகையானுயினும் அநுபவத்தா னுணரவாராமையின் இன்னோரன்னவாய் உணர்ந்து உரைப்பனவெல்லாம் பேதைப்பருவத்துப்பெண் காமநூற்பொருளை உணர்ந்துரைக்குமாறுபோல, வாசகஞானமாத்திரையேயன்றி அநுபவஞானமல்ல வாகலானென்க. அநுபவஞானத்திற்கு விடயமாவதே ஈண்டு 'உணருரு' என்றெடுத்துக்கொள்ளப்பட்டது என்றுணர்க.

அற்றேல், ஈண்டுக் கூறியவாற்றானே பசுபாசங்கள் சிறப்புவகையான் உணருரு வல்லவாயினும் பொதுவகையான் உணருருவாமாகலின், முதல்வன் போற் சிவசத்தாவான் செல்லா என்பது பெற்றும். அங்ஙன மாயினும், உணருருவெல்லாம் அசத்தென்றலின் அவையும் அசத்தாவான் செல்லும்; செல்லவே, முப்பொருளுஞ் ¶ "சத்து" என்னுஞ் சைவசித்தாந்தத்தோடு முரணி அவசித்தாந்தமாமாலோ வெனின், அறியாது கடாயினுய், சற்காரியவாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்திற் சத்தின்வேறுய் அசத்தென்ப தொன்றின்மையிற் பிரபஞ்சமுஞ் §சத்தியப்பொருளேயாமென்பது மேலேகாட்டப்பட்டது. அங்ஙனமாகவும், ஒருதன்மைத்தாய் நில்லாது காரிய அவத்தையிற் றூலமாய்

* சிவஞானசித்தி. கூ-ம் சூ. உ. வேதசாத்திர. † மேற்படி. ச-ம் சூ. உ. கருவியா.
‡ மேற்படி. கூ-ம் சூ. உ. வேதசாத்திர. ¶ சத்து - உள்ளது. § சத்தியம் - உள்ளது.

விளங்கி நின்ற பிரபஞ்சம் காரண அவத்தையிற் சூக்குமமாகிய சத்திவடிவாய் விளங்காது நிற்கும் வேறுபாடுடைமை மாத்திரையேபற்றியன்றே பிரபஞ்சம் அசத்தெனப்பட்டது. அவ்வாறே, காரணவவத்தையின் விளங்காது சூக்கும மாய்நிற்குந் தத்தமியல்பினீங்கிக் காரியவவத்தையிற் றூலமாய் விளங்கி நிற்கும் வேறுபாடுமாத்திரையேபற்றிச் சத்தாகிய மாயை கன்மங்களையும், ஒளி முன் இருள்போலப் பெத்தகாலத்து மேற்பட்டு நின்ற தனது சத்தி முத்தி காலத்து மடங்கிச் சூனியம்போல் நிற்றன் மாத்திரையேபற்றிச் சத்தாகிய ஆணவமலத்தினையும், அசத்தென்றற் கிழுக்கென்னை யெனக். இக்கருத்தேபற் றியன்றே * "பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே." எனவும், †"பொய்ம்மாயப் பெருங்கடலுள்." எனவும் பிறாண்டும் இவ்வாறோதியதூஉமென்க. இஃதறி யாது, "பொய்யாவது மெய்க்கெதிர்மறையாவதொன்று." என்னும் நையாயிகர் முதலியோர் மதம் அடாதென்பதூஉம் அபாவவாதத்தில் விரித்துக்காட்டி னும். ஆண்டுக்காண்க.

இனிச் சத்தாகிய ஆன்மாவும் அநாதியே தனக்குரிமையில்லாத மலத்தின் மறைப்புண்டு தனது சத்தி மடங்கிச் சூனியம்போற் கிடத்தன்மாத்திரையே பற்றி அவ்வா றசத்தாதற்கும் முத்திகாலத்தின் மறைப்பு நீங்கியவழித் தனது சத்தி விளங்கித் தனக்குரிய சிவானந்தத்தை அநுபவிக்கும் முதன்மையுடை த்தாய் மீள மலத்தின் மறைப்புண்ணுதலின்றி என்றும் ஒருதன்மைத்தாதல் பற்றிச் சத்தாதற்கும் பொதுவாய் நிற்றலிற், சதசத்தெனப்படும். ‡ "அசத் தைச்—சத்துட னின்று நீக்குந் தன்மையாற் சதசத் தாமே." என்றதும் இப் பொருட்டு. இதனானே, சத்தாகிய ஆன்மாவை ஒருவாற்றான் அசத்தென்ற லும் சத்தாகிய மலம் மாயை கன்மங்களை மேற்கூறியவாறுபற்றி அசத்தெ ன்றலும் அமையுமாகலின் அவை அங்ஙனம் பொதுவகையான் உணருருவாத ல்பற்றிச் சித்தாந்தத்திற் கிழுக்கென்னை என்றொழிக.

அநாதி முத்தனாகிய முதல்வன் ஏனையபோலத் தனது சத்தி மடங்குத லின்றிப் பெத்தத்தும் முத்தியினும் ஒருதன்மையனேயாய் மேம்பட்டுநிற்ற லின் ஆண்டு ஒருவாற்றானும் அசத்தென்றற்கு உரிமையின்மையின் எவ்வாற் றானுஞ் சத்தேயாதலும் எவ்வாற்றானுஞ் சித்தேயாதலும் முதல்வனுக்கேயுரிய இலக்கணமாதல் கண்டுகொள்க. ஆன்மா சித்தாயினும் ¶"அவனுக் கிவனுமசித் தாமே." என்றோதுதலின் முதல்வனை நோக்கச் சித்தாதலின்மையின் எவ்வா ற்றானுஞ்சித்தாதலாகிய இலக்கணம் எவ்வாற்றானுஞ் சத்தாதலாகிய இலக்கண ம்போல ஆன்மாக்கண்மாட்டுச் செல்லாமை கண்டுகொள்க. 'உணருருவசத்து' என்றவழி மலம் மாயை முதலியனவும் உணருருவாகலின் அவையும் அசத் தாவான் செல்லுமால் எனக் கடாயினார்க்கு இங்ஙனஞ் செவ்வனே இறுக்கமா ட்டாதார் அபாவத்தினியல்பாவது நையாயிகர்முதலியோர் கூறியதேபோலும் என மயங்கி முப்பொருளுஞ் சத்தென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணுமைப் பொருட்டு ஈண்டுச் 'சத்தசத்தென்பன' 'சித்தசித்'தென்னும்பொருள எனவும்,

* திருவாசகம், கோயிற்றிருப்பதிகம். ரு. அரைசனே. † திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகம், ௬-ம் திருமுறை. க. ‡ சிவப்பிரகாசம், உண்மை. ரு-ம் சூ. ௬. சத் தித. ¶ சிவஞானசித்தி, கக-ம் சூ. கக. சிவன்சீவன்.

'சுத்த மசுத்தம்' என்னும் பொருள எனவும் இடர்ப்பட்டுத் தமக்கு வேண்டிய வாறே உரைப்ப. மூலமலம் முதலியனபோலப் பிரபஞ்சமும் மெய்ப்பொருளே யாயினுங் காரியவவத்தையினின்ற தூலவடிவம் இத்துணைப்பொழுது நிற்கும் என நம்மனோரால் அறியவாராது நீர்மேலெழுத்தும் கனவும் பேய்த்தேரும் போல நிலைபெறுவதுபோலத் தோன்றிக் காட்சிப்புலனாய் விரையக்கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமைபற்றி அசத்தென்றும், அழிபொருளென்றும் மிக்கு வழங்கப்படுமென்க.

அஃதங்ஙனமாக, ஆசிரியர் வடமொழி ஆறுஞ்சூத்திரத்தோதியவாறே 'உணருருவசித்து' எனச் சூத்திரஞ்செய்யாது 'உணருருவசத்' தெனச் சூத்திரித்தது முதனூலோடு முரணும் பிறவெனின்; முரணாது, அசத்தெனவே *சடம் என்பதுந் தானேபோதருமென்னுங் கருத்தான் அவ்வாறுசூத்திரித்தாராகலானென்க. அக்கருத்துணர்ந்து கோடற்கன்றே †"அறிபொருளசித்த சத்தாம்." எனக் கூட்டி உரைத்தார் வழிநூலாசிரியரும். அற்றேல், அம்முறைமை பற்றி அசித்தெனவே அசத்தென்பதுந் தானேபெறப்படு மென்னுமோவெனின்; என்னும், என்னை? அசித்தாகிய மலமாயைகன்மங்கள் நீர்மேலெழுத்து முதலியனபோல நிலைபெறுவதுபோலக் காட்சிப்புலனாய்த்தோன்றிச் சடிதியின் மறைந்துபோ மசத்தாதலின்மையின் என்றும் ஒருதன்மையனாகிய முதல்வனைநோக்க அசத்தெனப்படுமாயினும் அங்ஙனந் தோன்றி மறைவதாகிய பிரபஞ்சத்தை நோக்கச் சத்தேயாமாகலிற் சிறப்புவகையான் உணருருவாகிய அசத்துப் பொதுவகையான் உணருருவாகிய சடத்தின் வியாப்பியமாவதன்றி வியாபகமாத லின்மையா னென்றொழிக. ஈண்டு அசத்தென்றதற்குப் பக்கம் காரியப்பிரபஞ்சமாத்திரையே யென்பது வருஞ்சூத்திரத்திற் காட்டுதும்.

இதனுள் உணருருவசத்தெனி னுணராதின்மையி னென்பது ஓரதிகரணம்; இருதிறனல்லது சிவசத்தாமென விரண்டுவகையி னிசைக்குமன்னுலகே என்பது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திர மென்றுணர்க.



## முதலதிகரணம்.

அவற்றுட் பிரபஞ்சம்போல முதல்வனும் அளவைகளான் அறியப்படும் பொருளேயாம் என்னும் நையாயிகர் முதலியோர் மதத்தை மறுத்தற் கெழுந்தது முதலதிகரணம்.

**ஈண்டு அறிவினல் அறியப்பட்ட சுட்டு அசத்து.**

எனவரும்.

சுட்டப்படும்பொருளைச் சுட்டென்றார், ஆகுபெயரான். சிவஞானத்தான் அறியப்படும் பொருளினீக்குதற்கு அறிவினலெனவிசேடித்தார். ஈண்டு அறிவு என்றது உலகத்துள்ளாரறியும் அளவையறிவினை, சுட்டென்றதனாற் சுட்டி அறிவதததுவேயாகலின். இஃதுணர்ந்துகோடற்கன்றே ‡"அறிவினா லறிந்த யாவு மசத்தாத லறிதி." என்ற புடைநூலாசிரியர் ¶ "தொன்மை—யறிவுதா

* சடம்-அசித்து. † சிவஞானசித்தி, சூ—ம் சூ. க. அறிவுறு. ‡ சிவப்பிரகாசம், உண்மை. ந—ம் சூ. ச. ¶ சிவப்பிரகாசம், உண்மை. ந—ம் சூ. ச.

றென்றை முந்தி யதுவது வாகக் காணு—மறிவுகா ணசத்து." என மீளத் தெரித்துணர்த்தியதூஉ மென்க.

அற்றேல், இல்லை என்னும் உணர்விற்கு விடயமாய் *அநுபலத்தியைப் பயப்பிப்பதுமாத்திரையன்றே அசத்தாவது; அவ்வாறன்றி, "இது குடம்" "இஃதாடை" என்றாற்போல உள்ளதென்னும் உணர்விற்கு விடயமாய் †உபலத்தியைப் பயப்பிக்கும் பிரபஞ்சமும் அசத்தேயாயிற் சத்து அசத்து என்னும் பாகுபாடே பெறப்படாமையின் உணருருவாதன்மாத்திரையேபற்றி அறிபொருள் அசத்தென்றல் சாலாதென நையாயிகர் முதலியோர் மதம்பற்றி ஆசங்கை நிகழ்ந்தவழி அதனை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கெழுந்த ஏது;

**அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.**

எனவரும்.

இல்லை என்னும் உணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பித்தலன்றே அசத்தினியல்பாவதெனின், நன்றுசொன்னாய்! அங்ஙனம் அநுபலத்தியைப் பயப்பிப்பது முன் உண்டென்னும் உணர்விற்கு விடயமாய் உபலத்தியைப் பயப்பிக்கும் இராசதகுண மிகுதிப்பாட்டின் நின்ற பொருளேயன்றிப் பிறிதன்மையாற் பாவம்போல அபாவமும் பாவப்பொருளின்றன்மை எய்தற்குக் காரணம் பொருட்பெற்றியாகிய தாமதகுண மிகுதிப்பாடே என்பது பெறப்படுதலிற் பொருட்பெற்றியின் வேறாய் அபாவம் என ஒன்றின்மையான் அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்தே என்றற்கு இழுக்கென்னை! என்பதாம்.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாசம் என்பன உபலத்தி அநுபலத்தி என்னும் பொருளவாய் ஆகுபெயரான் அவை நிகழ்தற்கிடனாகிய பொருளை உணர்த்தி நின்றன.

அற்றேல், ஒருசாரன அங்ஙனமாயினும் அறியப்பட்டனவெல்லாம் அவ்வாறசத்தாமென்றல் பொருந்தாது, பிரமாணமின்மையின். அன்றியும் இவ்வேதுவைபற்றி அறியப்பட்டனவெல்லாம் அசத்தெனக்கொண்டு பதிமுதற் பொருள்களினுஞ் செல்லாமைப்பொருட்டு நித்தப்பொருள்கள் அளவைகளான் அறியப்படா எனக் கொள்ளின், ‡"அருளினா லாக மத்தே யறியலா மளவினாலுந்—தெருளலாம்" என்றற் றொடக்கத்துச் சுருதிகளோடு முரணி இந்நூலின் மேற்கோளும் ஏதுவும் எடுத்துக்காட்டுமாக வைத்துப் பதிமுதலிய பொருள்களின் இயல்பு வழியளவையாற் சாதித்தற் கெழுந்த அதிகாரணங்களும் பயனிலவாய் அஃது உமக்கே ¶அவசித்தாந்தமாமாலோ என்னும் ஆசங்கையைநீக்கி ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக்காட்டும் உதாரணம்;

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா
மசத்தாகு மெய்கண்டா னுயின்—

எனவரும்.

---

* அநுபலத்தி - இல்லையென்றறியு மறிவு. † உபலத்தி - உள்ளதென்றறியு மறிவு.
‡ சிவஞானசித்தி, பாயிரம். ரு. ¶ அவசித்தாந்தம் - நிக்கிரகத்தானத்துள் ஒன்று.

கச்செஞ்சொன்—மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் விதியுள்ளே." *"சிந்தையிடை யறுவன்புந் திருமேனி தனிலசையுங்—கந்தமிகை யாங் கருத்துங் கையுழவா ரப்படையும்—வந்திழிகண் ணீர்மழையும் வடிவுபொலி திருநீறு—மந்தமிலாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய." *"கண்டகவு ணிய க்கன்றுங் கருத்திற்பரவு மெய்க்காதற்—றொண்டர்திரு வேடநேரே தோ ன்றியதென் றுதொழுதே." என்பவற்றானறிக. இத் திருவேடம் காமக்கிழத் தியர்வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசீகரித்து இன்பஞ் செய்யுமாறு போல, மெய்யுணர் வுடையாரைக் காட்சி மாத்திரையானே வசீகரித்து இன்பஞ் செய்தல் பற்றித் திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் என்று உபசரித்தார். அது †"சேலுங் கயலுந் திளைக்குங் கண் ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம்—போலும் பொடியணி மார்பி லங் குமென்று புண்ணியர் போற்றிசைப்ப." என்பதனானும் அறிக.

அற்றேல், மெய்யுணர் வுடையார்க்குப் பகுப்பின்றி எங்கணும் பரமே சுரன் எனக் காண்டலே பொருத்த முடைமையானும், ‡நின்றதிருத்தாண்ட கம் முதலியவற்றுள் அவ்வா றோதுதலானும், திருவுருத்திரத்துட் பகுப்பி ன்றி உயிர்ப்பொரு ளுயிரில் பொருள்களை யெல்லாந் தனித்தனி எடுத்தோதி ¶வழிபாடு கூறுதலானும், ஈண்டு இவ்விடங்களின் மாத்திரையே பரமேசுரன் எனக்கண்டு வழிபடுக எனப் பிரித்துக் கூறியது பொருந்தாதா லென்னும் ஆசங்கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற்கு எழுந்த ஏது;

**அவன் மற்றிவ் விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல் லாதவிடத் தப்பிரகாசமாய் நிற்றலான்.**

எனவரும்.

அம் முதல்வன் எங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து மாத்திரையே தயிரினெய் போல விளங்கி நிலைபெற்று அல்லுழிப் பாலினெய் போல வெளிப்படாது நிற்றலான் 'இனிப் பத்தராது திருவேடத்தையும் சிவா லயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக' என மேற்கொண்டது என் றவாறு.

மற்று அப்பிரகாசமாய் நிற்றல் என இயையும்.

அற்றேல், அஃது யாங்ஙனம்? என்னு மாசங்கையை நீக்கிப் பிரகாசமாய் நிற்குமாறும் அல்லாதாரிடத்து அப்பிரகாசமாய் நிற்குமாறுந் தெரித் துண ர்த்தி ஏதுவை வலியுறுத்துதற்கு எடுத்துக் காட்டும் உதாரணம்;

---

* பெரியபுராணம், திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்புராணம். உ௪0. உ௪௧. † சேந்த னார் திருப்பல்லாண்டு. அ. ‡ நின்றதிருத்தாண்டகம் சிவபெருமான் எழுந்தருளி னின்றது இத்தன்மைத்து என்னும் திருத்தாண்டகம்; அஃது "இருநிலனாய்த் தீயாகி." என்பதை முதலாகவுடைய பொதுத்திருப்பதிகம். முதலிய என்றது திருவலிவலத் திருத்தாண்ட கம், திருப்பாசூர்த் திருத்தாண்டகம், திருக்கச்சியேகம்பத் திருத்தாண்டகம் முதலியவ ற்றை. ¶ இதனைத் திருவுருத்திரம் உ-ம் அநுவாகம் முதலியவற்றுட் காண்க.

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றாம் பதி.

எனவரும்.

வாக்கு மனாதீதமாய் நின்ற பரம்பொருள், உலகத்தார் தன்னை அறியும்படி கருணை செய்து தனது வேடமாகிய திருநீறு கண்டிகை முதலிய தனது வடிவத்தைத் தன்னன்பர்க்குக் கொடுத்து அவர்களிடமாக நின்று அங்கங்கே அறிவு விளக்குதலானும், அவர் தம்மைச் சோகம்பாவனையான் உணரச் செய்தலானும், அவரை ஒரு குறியின்க ணிறுத்தித் தனது வியாபகத்துக் குள்ளாக இருத்துதலானும், குறியிறந்து நின்று தன்னை உள்ளவா றுணரும் அன்பாளராகிய அவர்மாட்டுத் தயிரின்கண்ணதாகிய நெய்போல விளங்கித் தோன்றும். பாசக்கட்டு உடையார்க்கு இவ்வியல் பில்லாமையான் அவர் மாட்டுப் பாலின்கண்ணதாகிய நெய்போல விளங்காது நிற்கும் என்க.

இன்மை விளங்காமைப் பொருட்டு. பாசத்தார்க் கென்பது உருபு மயக்கம். கொடுத்துச் செய்து இருத்தலால் நிகழும் என இயையும். செய் தென்பது சொல்லெச்சம். இருத்தல் அல்லீற்றுப் பிறவினைத் தொழிற்பெயர். தன்னுணரும் நேசத்தா ரெனப் பேரடையானு மோரேதுக் கூறப்பட்டது. தன்னை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

அற்றேல், இவ்வியல்புக ளுடைய சங்கம வேடத்தினிடத்து எஞ்ஞான்றும் முதல்வன் பிரகாசமாய் நிற்ப னென்பது பெறப்படும். இவ்வியல்புகளில்லாத *தாவரத்தினிடத்து மந்திர சாந்நித்திய மில்வழிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படாதா லென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற்கு எடுத்துக் காட்டும் உதாரணம்;

கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ னின்றங் குளதாமாற்—கண்டவுருத்
தானதுவா யன்றானன் றானதுவாய்த் தோன்றானே
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

எனவரும்.

† விறகிற்றீ, கடைந்துழி வேறாய் விளங்கும்; அல்லுழி விளங்குவதன்று. அதுபோல, உயிர்கட்குப் புத்தி முத்தி அளித்தற் பொருட்டுக் காணப்பட்ட தாவரத்தின் அருவுருவின்கட் கலப்பினால் அதுவே தானும் அதுவன்றி வேறு பொருளுமா மியல்புடைய முதல்வன், அதுவே தானாய்க் காணார்க்குத் தம்மால் அறியப்பட்டதொரு மந்திர சாந்நித்திய மில்வழி ஆண்டு விளங்காது நின்று அம்மந்திரசாந்நித்தியத்தால் விளங்கித் தோன்றும் பொருளாம். அவ்

* தாவரம் என்றது சிவலிங்கத்தை. † இதனை "விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன்—மறைய நின்றுளன் மாமணிச் சோதியா—னுறவு கோனட் டுணர்வு கயிற்றினான்—முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே." என்னுந் தேவாரத்தானு முணர்க.

வாறன்றி அதுவே தானுய்க் காணப்பெறும் உண்மைத் தவமுடையார்க்கு எப்போதும் அப்படியே விளங்கித் தோன்றுன் கொல்லோ! என்க.

காணுதார்க் கென்பது சொல்லெச்சம். கடைந்துழி அல்லுழி யென்பன ஆற்றலாற் பெற்றும். உவமைக் கோதிய வினையைப் பொருட்கண் எதிர் நிர னிறையாக வைத்துக் கண்டுகொள்க. ஈண்டு உண்மை விளங்குதன் மேற்று. மந்திரத்தா னுளதா மெனு இயையும். ஆல் அசை. ஆனுன் என்பது பெயர். ஓகாரம் எதிர் மறை. தானதுவா யன்றுனுன் என்னும் பெயரடையான் அவ ரவர் பாவனைக் கேற்ப விளங்குதற்கு ஏதுக் கூறப்பட்டது. தானதுவா யன் றுதல் சங்கம வேடத்தினுமொக்கு மேனும் தாவர வுருவின்க ணிகழும் ஆசங் கையை இதனு னன்றி நீக்க லாகாமையின் ஈண்டுக் கூறினர். இஃது ஈரிடத்து மொக்குமென்பது வருகின்ற அதிகாரணத்திற் பெறப்படும்.

மூன்றுமதிகாரண முடிந்தது.



## நான்காமதிகரணம்.

மேலை அதிகரணம் மூன்றுனுஞ் சீவன்முத்தர்க் குரிய ஆசார முணர்த் தியவழி, அற்றேல், இவை சீவன்முத்தர்க்குத் தாமே உளவாவனவாய இலக் கண மாகலின் அநுவாத முகத்தா னுேதற்பாலன வாகிய இவற்றை, களைக, இணங்குக, வழிபடுக, என்று இங்ஙனம் விதிமுகத்தா னுேதிய தெற்றுக்கு? என்னும் ஆசங்கையை நீக்குதற்கு அவற்ற தொழிபா யெழுந்தது நாலா மதிகரணம்.

### இனி இவ்விடங்களின் வழிபடுக என்றது.

எனவரும்.

இவ்விடங்களாவன:—பத்தரது திருவேடமும் சிவாலயமும் என மேற் கூறிப் போந்தன. வழிபடுக என்னும் இசை யெச்சத்தால் அநுவாதமாய்க் கூற வமையு மென்பாரை மறுத்து விதித்தலை வலியுறுத்தவாறு. வழிபடுக என்பது உபலக்கணமாகலிற் களைதல் இணங்குதல்கட்கும் இஃது ஒக்கும்.

அற்றேல், எய்தியதனை விதித்தல் பயனுடைத்தன்று லென்னும் ஆசங் கையை நீக்கி மேற்கோளைச் சாதித்தற் கெழுந்த ஏது;

### நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புரு டன் அவையாகாவாறு அப்புருடனு மாகலான்.

எனவரும்.

நரம்பு நாடி இறைச்சி என்பு முதலிய தாதுக்களின்கண் வேற்றுமை யின்றி அதுவது தானுய் வருகின்ற உயிர், *'நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ' என்று இவ்வாறு †'பைமறியாப்' பார்ப்பார்க்கு நரம்பு நாடி முதலியவை யாகாது அவற்றின் வேறுமாயினுற் போல, உயிர்க் குயிராகிய

* இந்நூல், கூ-ம் சூ. க-ம் அதி. க. † நாலடியார், தூய்தன்மை. உ. தோற்போர்வை.

அம் முதல்வனும் சடசித்துக்க ளெல்லாவற்றினும் அதுவது தானும் அல்ல னும் நிற்ப னாகலான், அதுவது தானாய் நிற்றலைக் காணுங் காட்சி பற்றி எய் திய வழிபாடு அல்லனாய் நிற்றலைக் காணுங்கா லெய்தாமையின் அவ்வழியும் எய்துவிக்க வேண்டுதலான் 'இனி இவ்விடங்களின் வழிபடுக' என விதித்தோ திய தென்றவாறு.

எனவே, எய்தாததனை எய்துவிப்பதூஉம், எய்திய திகந்துபடாமைக்காப் பதூஉம், எய்தியதனை ஒருமருங்கு மறுப்பதூஉம் ஆகிய விதி மூன்றனுள் இஃது எய்திய திகந்துபடாமைக் காத்த தென்றவாறாயிற்று. இது விளங்கு தற் பொருட்டன்றே ஆசிரியர் 'இவ்விடங்களின் வழிபடுக' என ஈண்டு இட மாகவைத் தோதியதூஉ மென்க. 'அவை யாகாவா றப்புருடனுமாம்' எனவே அவ்விடத் தெய்துவித்தல் ஒருதலையான் வேண்டு மென்பது தாற்பரிய மாயி ற்று. சூத்திரத்தில் 'தொழுமே' என்னும் ஏகாரமும் இப்பொருள் குறித்து நின்ற தேற்றம். வாறு உவமவுருபு. முதலானவற்றை என்பது உருபு மயக்கம்.

அற்றேல், முதல்வனுக்கு இவ்வியல்பு எல்லாப் பொருட்கண்ணு முண் மையின் யாங்கணும் வழிபாடு விதித்தலே பொருத்த முடைத்தென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற்கு எடுத்துக் காட்டும் உதாரணம்;

அதுவிது வென்ற ததுவல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—பொதுவதனி
லத்துவித மாத லகண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் றொழு.

எனவரும்.

முதல்வன் சடசித்துக்கண் மாட்டு நிற்கும் நிலைமை அறியப் பெற்றார்க் குக் கண் அருக்கன் போல அது இதுவெனப் *பக்கிசைத் தோதப்படுவதாய பேத நிலைமையனு மல்லனாய், உடல் உயிர்போல அதுவே என்றோதப்படுவதாய அபேத நிலைமையனு மல்லனாய்க், குண குணி போல அதுவே இது என்று பக் கிசையாமல் ஓதப்படுவதாய பேதாபேத நிலைமையனு மல்லனாய், அம்மூன்றற் கும் பொதுமையான் அறிவொளிபோ லத்துவிதமாய் நிற்கு மாற்றாற் சடசித் துக்கண் முழுவதும் அத்தேவனது வடிவேயா மாயினும், அவற்றுள், அன்பு விளையுமிடத்தில் வழிபடுவாயாக; அவ்வத்துவித சித்தாந்தத்தைப் பெற்று டையோய்! என்க.

அதுவிது என்பது முன்னையது உம்மைத் தொகை. பின்னையது இருபெ யரொட்டுப் பண்புத்தொகை. அல்லானென்பதனை மேலுங் கூட்டி என்றது என் பதனை அது என்பதனோடுங் கூட்டி உரைக்க. அல்லான் என்பது வினையெச் சக்குறிப்புமுற்று. என்றதை என்பது †"ஐயீற்றுடைக் குற்றுகரம்." உம்மை இறந்ததுதழீஇயிற்று. பொதுவதென்புழி அது பகுதிப்பொருள்விகுதி. ஆதல் ஆயவாற்றா னென்க. தைவ மென்பது தேவனதுடைமை என்னும் பொ

* பக்கிசைத்தல் - பிரிந்திசைத்தல். † இதனை "ஐயீற் றுடைக்குற் றுகரமு முள வே." என்பதனா னுணர்க.

ருட்டாய வடமொழிப் பெயர்ப் பகுபதம். ஆயினும் என்பது சொல்லெச்சம். அத்துவிதி அண்மைவிளி. அன்பென்றது ஆகுபெயர். ஏழாவது விரித்துரைக்க. *"திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி." யினன்றி *"எங்கு—முருக்காண வொண்ணாத பான்முலைப்பால் விம்மி யொழுகுவது போல்வெளிப்பட் டரு ளூவ" தாகி அடிப்பட்டு வரும் அன்பு வினையாமையின், ஆண்டுச் செய்யும் வழி பாடே அத்துவிதஞானத்தை நிலைபெறுத்துதற் பயத்த தென்பார் 'அத்துவித மாத லகண்டமுந் தைவமே' என்று அநுவதித்து 'அத்துவிதி யன்பிற் றொழு' என்றார். அத்துவிதி என்பது பயனுணர நின்ற குறிப்புப் பெயர். இத னானே விதிக்குப் பயன் கூறியதூஉமாயிற்று. இனி அது விது என்பன அருவு ருவாகிய திருமேனி எனக் கொண்டு அதற்கியைய உரைப்பாரு முளர். அவர் அன்பின் என்றதனை ஏதுப் பொருட்கண் வரும் ஐந்தனுருபேற்ற இயற்பெய ராகவைத்து உரைப்ப.

அற்றேல், இவ் வத்துவித ஞானம் அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்றுகண் டொருவுதலான் உளதாம் பயனாகலின் அதன்பொரு ட்டு வழிபாடு வேறு விதித்தல் மிகையாமா லென்னும் ஆசங்கையை நீக்கி அதனை வலியுறுத்துதற்கு எடுத்துக் காட்டும் உதாரணம்;

> வினையா லசத்து விளைதலான் ஞானம்
> வினைதீரி னன்றி விளையா—வினைதீர
> ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு
> மானத்தா லன்பிற் றொழு.

எனவரும்.

உடம்பின் கண்ணதாகிய பிராரத்த வாசனை உயிர்க்குத் தாக்குவதாயுள்ள வளவும் அதனானே வரும் விருப்பு வெறுப்புக்களும் அவை பற்றிக் காட்சிப்ப டும் மண் முதன் மாயைகளும் அவை பற்றி நிகழும் விபரீத வுணர்வும் ஆகிய அசத்துக்க ளொருவியவழியும் வந்துகூடி மேற்படுவன வாகலான், இவற் றிற் கெல்லாம் மூலமாகிய பிராரத்தவினைவாதனை பற்றறக் கழிந்தா லன்றி அத்துவித ஞானம் மேம்பட்டு நிகழாதாகலின், அது பற்றறக் கழிதற்பொ ருட்டு அம்மெய்யுணர்வுடையாரை நாடி வழிபடவே அவ்வினைத்தீர்வு நிகழ் ந்து அவ்வுணர்வு மேம்படும். ஆகலான் அன்பானே அவரை வழிபடுவாயாக என்க.

அசத்தாயுள்ள வன்ன பேதங்களை அசத்தென்று கண்டவழி உளதாய் நிற்கும் ஞானசொரூபம் நிலைபெறுதல் அவ்வசத்தினது விளைவுக்கு வேராய வினைத்தீர்வின்கண்ண தாகலான், ஆண்டுளதாய் நின்ற மெய்யுணர்வை அவ்வி னைவேரறுத்து நிலைபெறுத்துதற்பொருட்டு அங்ஙனம் அதனை நிலைபெறுத்தி னார்மாட்டுச் செய்யும் வழிபாடு ஒருதலையான் வேண்டப்படும் என்றவாறா யிற்று.

அற்றேல், அவ்வாதனை நீங்கி மெய்யுணர்வு நிலைபெறுதலும் ஸ்ரீபஞ்சாக் கரத்தை விதிப்படி உச்சரிக்கவே உளதா மென்பது அஞ்செழுத் ததிகாணத்

* சிவஞானசித்தி, ௧௨-ம் சூ. ௪.

தில் ஓதியவாற்றானும் *"பந்தமா னவைய றுத்துப் பௌதிக முழுது மெல்லைச்—சந்தியா தொழியா திங்குத் தன்மைபோல் வினையுஞ் சாரு—மந்தமா திகளில் லாத வஞ்செழுத் தருளி னாலே—வந்தவா றுரைசெய் வாரை வாதியா பேதி யாவே." எனப் புடைநூலாசிரியர் கூறியவாற்றானும் பெறப்படுதலின் அதற்கு அதுவே அமையுமால் எனின், அஃதொக்கும்; அவ்வுச்சரிப்பும் வழிபடுதலை யின்றி அமையா தென்பது விதிப்படி உச்சரிக்க என்ற துணையா னொழியா தென்பது, †'அஞ்செழுத்தா லுள்ள மானுடைமை'யின் *'அஞ்செழுத்தா லர்ச்சித்து' என ஆசிரியர் தாமே அகத்து வழிபாடு கூறியவாற்றாற் பெறப்படுதலின் வழிபாடும் அதற்கு ஒருதலையான் வேண்டப்படும் என விடுக்க.

அற்றேல், அஞ்செழுத் ததிகரணத்தையும் இதனைச் சாரவைத்து ஈண்டு ஓதுதலே பொருத்த முடைத்தெனின், அஃதொக்கும்; சிவப்பிரகாசம் திருவருட்பயன் முதலியவற்றினும் அஞ்செழுத்தருணிலையை இன்புறுநிலைக்குப் பின்னாக அணைந்தோர்தன்மையைச் சாரவைத்துக் கூறியவாற்றானும் அதுவே பொருத்த முடைத்தாயினும்,அஞ்செழுத் தோதும் முறைமை சொற்பல்காது விதிப்படி என மாட்டெறிந்துணர்த்தற் பொருட்டு ஆண்டே வைத்து ஓதிய தன்றிப் பிறிதில்லை என்றொழிக. இது சொற்பொருட்பின்வருநிலை. விளையா தென்னுந் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது; "உண்ணாகழியும்." என்புழிப் போல. பின்வந்த ஞானம் ஆகுபெயர். ஆனதனா லென்பது ஆனத்தால் என மரீஇயிற்று; ‡"பெற்றத்தாற் பெற்றபயன்." என்புழிப் போல.

அற்றேல், பயன்பற்றி விதிக்கப்படும் வழிபாடு வேள்வி முதலியன போலப் பயன் வேண்டாமையா னாக பின்னர்ச் செய்து பெறுதுமென்றாக ஒரோவழி ஒழியவும்படுங்கொல்லோ என்னும் ஆசங்கையை நீக்கிச் செய்யாவழிப் படுங் குற்றமும் செய்தல் கடமையா மாறும் உணர்த்தி அதனை வலியுறுத்துதற்கு எடுத்துக் காட்டும் உதாரணம்;

தன்னை யறிவித்துத் தான்றானாச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னாச்செய்துந் தைவமென்று தைவமே
மானே தொழுகை வலி.

எனவரும்.

தன்னுண்மை யறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற்றானும் அதனைத் தெரித்துணர்த்தி எத்தனையு மெளிய அவ்வுயிரை எத்தனையு மரிய தானும் வண்ணஞ் செய்தளித்த பெரியதோ ருதவியை அதன் பின்னர் மறக்குமாயின் அஃதிதற்கு முன் அறியாமையான் மறந்த குற்றம் போலத் தீர்திறனுடைய தொரு குற்றமன் றாகலானும், முதல்வன் அங்ஙனம் தான்றானேயாகச் செய்தாலும் இதுகாறுந் தனக்குச் சுதந்தரமின்றி முதல்

* சிவப்பிரகாசம், உண்மை. ௯௦-ம் சூ. ௧௧. † இந்நூல், ௯-ம் சூ. ௩-ம் அதி. ௧.
‡ திருக்குறள், ௫௩-ம் அதி. சுற்றந்தழால். ௪. சுற்றத்தாற்.

வனது உபகாரத்தை யின்றி அமையாதாய் அடிமையாகிய உயிர் எக்காலத்தும் அவ்வாறடிமையேயா மாகலானுந், தான்றானுச் செய்தளித்த அப்பெரியோனை வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலியாவ தென்க.

தமது முதற்றானே குருவாகலின் 'தான்றானுச் செய்தானை' என்றும், முன்னைமறந்த குற்றம் அறியாது நிகழ்ந்த தாகலிற் கழுவப்படும் இஃது அது போற் கழுவப்படுவதன்றென்பார் 'பின்னைமறத்தல் பிழையலது' என்றும் கூறினார். பின்னை மறத்தல் என்பதனால் முன்னைமறத்தல் பெறப்பட்டது. *"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை—செய்ந்நன்றி கொன்ற மகற்கு." என்னுங் கருத்து நோக்கிக் கூறியதூஉமாம். அலதும் எனப்பாடமோதி இது பிழையாத லன்றியும் என்றுரைப்பாரு முளர். ஏகாரம் முன்னையது அசைநிலை. பின்னையன தேற்றம். செய்தாலென்பது செய்தெனத் திரிந்தது. உம்மை சிறப்பின்கண் வந்தது. தான்றானுச் செய்தல் எதனை எதனைப் பற்றினும் அதுவதுவாமுயிர் தன்னை அறிந்தவழி எண்குணங்களா னிறைந்த தன் வண்ணமாகச் செய்தல். அங்ஙனஞ் செய்தவழியும் உயிர்தானுஞ் சிவானுபவ மொன்றினுக்கே உரித்தென்பார் 'தைவ மென்றுந் தைவமே' என்றார். தைவம் என்னுஞ் சொல்லியல்பு †மேலேயுரைத்தாம். மானே என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. ‡ மான் என்பது வடசொற்றிரிபு. சுட்டு வருவிக்க. வலிதருவதனை வலியென்று உபசரித்தார்.

இவ்வுதாரணங்கள் மூன்றானும் வழிபாட்டிற்கு இடத்துநிகழ் பொருண் மாத்திரையே யன்றி இடவிசேடமும் பெறல்வேண்டும் என அதனை வலியுறுத்து முகத்தான் முறையே சிவலிங்கத்தையும் சிவபத்தர் திருவேடத்தையும் சிவதேசிகனையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

இங்ஙனம் சிவாகமத் துள்ள ஞானபாதப் பொரு ளெல்லாவற்றையும் பொது உண்மை என்று இருவகைப் படுத்துப், பிரமாணவியல் இலக்கணவியல் சாதனவியல் பயனியல் என நான்கியலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞானபோத நூலைக் கோடற் குரிய அதிகாரிக ளாவார் இவரென்பது உணர்த்துதற் கெழுந்தது வருஞ்செய்யுளென்பது.

சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற்—சிவமுண்டா
மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந் நூன் மும்மை மலர்க்கு.

எனவரும்.

தான்றானுச் செய்த வாற்றாற் சீவனென்னும் பெயரினீங்கிச் சிவம் என்று ஓதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தை யுடைய மாணவகனே! ஒன்று மிரண்டுமாய மலங்களையுடைய விஞ்ஞானாகலர்க்கும் பிரளயாகலர்க்கும் முறையே அறிவின்க ணின்று அருட்பார்வையா னோக்குதலானும் தேவகுரு

* திருக்குறள், கக-ம் அதி. செய்ந்நன்றியறிதல். கO. † ககஎ-ம் பக்கத்திற்காண்க.
‡ ஹேரு என்னும் வடசொல் மான் எனத் தற்பவமாயிற்று.

வாய் முன்னின்று செய்யுந் திருநோக்கம் பரிசம் வாக்கு எனப்படுந் தீக்கையானும் பிறவிக்கேதுவாய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்குமாகலான், அவரின் வேறாகிய மும்மலமுடையார்க்கே உரித்து இவ்வுலகத்து அனுபவமுடைய தேசிகராற் போதிக்கப்படும் இச்சிவஞானபோத நூல் என்க.

அந்தம் வேதாந்தம்; அந்ததரம் சித்தாந்தம்; ஆகலின், அதனைப் பெற்றோரது பெருமை கூறுவார் 'சிவமென்னும் அந்ததர' என்றார். என்னும் என்புழிப்படுசொற் றொக்கது. சிந்தை அறிவு. கண்ணுருபு விரித்துரைக்க. நேர்நோக்குதல் முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையானோக்குதல். நோக்க–நோக்குதலானென்க. கண் வாசகங்களைக் கூறவே இனம்பற்றிப் பரிசமும் உடன் கொள்ளப்படும். பவம் ஆகுபெயர். இந்நூல் அநுபவமுடைய தேசிகனு லன்றி விளங்காதென்பார் ஒண் குருவால் என்றார். போதிக்கப்படும் என்பது அவாய்நிலையான் வந்தது. இன்றிந்நூல் என்பது இந்நூ லென்னும் பொருட்டு. இக்காலத்துரைக்கப்பட்ட நூலெனினு மமையும். அது, 'தானுரைத்தான்**இன்று' என வருகின்ற வெண்பாவிற் கூறியவாற்றானு மறிக. மும்மை என்றது ஈண்டு எண்ணின்கணின்றது; "தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்." என்புழிப்போல.

நான்காமதிகரண முடிந்தது.

பன்னிரண்டாஞ்சூத்திர முடிந்தது.



பயனியன் முற்றிற்று.



## சிறப்பியல்பு முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.



### நூலாசிரியர்பெயர்.



எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞானநூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட் டாந்தத்தா லின்று.

## சிவஞானபோதமாபாடியம்

முற்றுப்பெற்றது.



# ஆறுஞ் சூத்திரம்.

உணருரு வசத்தெனி னுணரா தின்மையி
னிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே.

*எ-து. சூ-ம். எ-னின். சத்தும் அசத்தும் வரைசெய் துணர்த்துத னுதலிற்று.*

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக்கருத் துணர்த்துத னுதலிற்று.

இ-ள். மேல் ஐந்துசூத்திரத்தானுங் கூறிப்போந்த பொருள்களுள் யாது சத்து யாது அசத்து என்னும் ஐயம் நீக்குதற்குச் சத்தினியல்பும் அசத்தினியல்பும் இவையென அவ்விரண்டும் இலக்கணத்தாற் றம்முண் மயங்காதவாறு வரைந்துவைத் துணர்த்தி உண்மையதிகாரத்திற்குத் தோற்றுவாய் செய்யும் முகத்தானே இலக்கணவோத்துட் கூறுதற்கு எஞ்சி நின்ற பதிப்பொருளதிலக்கணங் கூறுதல் இவ்வாறுஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

இதனானே சூத்திரவியைபும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. தம்முணர்வின் றமியாகிய முதற்பொருள் அளவைகளா னறியப்படும் இயல்பிற்றெனின், அங்ஙன மறியப்படும் பிரபஞ்சம் போல் அழிபொருளாகிய அசத்தாம்: எவ்வாற்றானும் அறியப்படாத இயல்பிற்றெனின், அங்ஙன மறியப்படாத முயற்கோடு போலச் சூனியப் பொருளாம்: ஆகலான் இவ்விருபகுதியு மன்றி ஒருவாற்றா னறியப்படாமையும் ஒருவாற்றா னறியப்படுதலு மாகிய இரண்டுவகையானுஞ் சிவசத்தாமெனக் கூறுவர் மெய்யுணர்வி னிலைபெற் றுயர்ந்தோர். எ-று.

உணருரு வெனி னசத்தென மாறுக. எனினென்பது முன்னருஞ் சென்றியைந்தது. முற்றும்மைகள் தொக்கன. அல்லதென்பது வினையெச்சக்குறிப்பு முற்று. அன்றி யாமென இயையும்.

ஒருவாற்றா னறியப்படாமை பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமை. ஒருவாற்றா னறியப்படுதல் சிவஞான மொன்றானே அறியப்படுதல். பாசஞான பசுஞானங்களான் அறியப்படாமையிற் சிவமாதலும் பதிஞானத்தால் அறியப்படுதலிற் சத்தாதலும் பெறப்படு மென்பார் 'இரண்டுவகையிற் சிவசத் தாமென விசைக்கும்' என்றார். சிவசத்து என்னும் இருபெயரொட்டுப் பண்புத்தொகை வடநூன்முடிபு. சடமாகிய சத்தி னீக்குதற்குச் சிவசத்து என்றார். சிவசத்து என்பது சித்துச்சத்து என்னும் பொருட்டு.

எழுவாய் மேலைச்சூத்திரத்தினின்றும் வருவித்துரைக்கப்பட்டது. இருதிறனு மன்றி இரண்டுவகையானுஞ் சித்தாதலுஞ் சத்தாதலு முடையனாய் நிற்றல் முதல்வனுக் கிலக்கணமென இலக்கணமும் இதனுட் போந்தவாறுணர்க. முதல்வனுக்குப் பொதுவியல்பு மேற் புனருற்பவ முணர்த்து முகத்தாற்

கூறிப் போந்தமையின் இது சொரூபலக்கண மெனப்படுஞ் சிறப்பிலக்கண மெனக் கொள்க. அற்றாகலினன்றே இதனை இலக்கணவோத்துள் முதற்கட் கூறாது உண்மையைச் சாரவைத்து இறுதிக்கட் கூறியதூஉ மென்க. இன்னும் முதல்வனுக் குளவாகிய * சிறப்பியல்புக் குணங்க ளெல்லாம் இவ்விரண்டனு ளடங்கும். அஃதறிந் தடக்கிக் கொள்க.

† "தன்னாலே தனையறிந்தாற்—றன்னையுந் தானே காணும்" எ—ம், ‡ "உன்னரிய திருவருளை யொழியமல முளதென் றுணர்வரிதா மதனுண்மை தெரிவரிதா முனக்கே" எ—ம், ¶ "மாயை §மா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை—யாயவா றுயிரின் மேவு மருளொளி லொளியாய் நிற்கும்" எ—ம், ஓதியவாற்றால் ஏனைப் பசுபாசங்களுஞ் சிறப்பியல்பு பற்றி யுணர்தல் சிவஞான த்தா னன்றி அமையாதாயினும் ○ "தீப மெனத்தெ ரிந்தாங்—கொருவியான் மாவி னுண்மை யுணர்ந்தவர் தமையு ணர்ந்தோர்—தருமிது பசுஞானம்" எ-ம், ** "இவைகீழ் நாட லாலே—காதலி னான்பிரம மென்னு ஞானங் கருதுபசு ஞானம்" எ—ம், பொதுவியல்பு பற்றி யோதுதலானும், யானிதனை யறிந்தேன் அறிகின்றிலேனென் றறியும் பாசவுணர்விற்கு அவற்றது பொதுவியல்பு விடயமாதல் கண்கூடாகப் பெறப்படுதலானும், அவை ஒருவாற்றா னுணருருவா தலு முடைமையிற் சிவசத்தாவான் செல்லாமை யறிக. சற்காரிய வாதங் கூறுஞ் சைவசித்தாந்தத்தில் அசத்தென்பது சத்துக்கு மறுதலை யன்மையான் அப்பசுபாசங்கள் அங்ஙன மறியப்படும் பொதுவியல்பு பற்றி அசத்து எனப் படுமாயினும் சிறப்பியல்புபற்றி †† அசத்தாதல் செல்லாமையிற் சிறப்பியல்பு நோக்கும்வழி அவை சத்தாதற் கிழுக்கின்மையு மறிக. இங்ஙனஞ் செவ்வனே யிறுக்க அறியாதார் அபாவத்தி னியல்பாவது பாவத்திற்கு மறுதலைப்பொ ருள்போலு மென நையாயிகர் முதலியோர் மதம்பற்றி மயங்கி எல்லாப் பொ ருளுஞ் சத்தென்னுஞ் சித்தாந்தத்தோடு முரணுமைப்பொருட்டு ஈண்டுச் சத்து அசத்து எனப்பட்டன சித்து அசித்து என்னும் பொருளவா மென வும், சுத்தம் அசுத்தம் என்னும் பொருளவா மெனவும் உரைத் திடர்ப்படுவர்.

‡‡ காரியப்பிரபஞ்சம் ஏனைப் பசுபாசங்கள்போ லன்றி இருவகை யியல்பா னுங் காட்சிப்புலனாய் இத்துணைப்பொழுது நிற்கு மென நம்மனோரால் அறிய வாராது நிலைபெறுவது போலத் தோன்றி விரையக் கெட்டு மறைந்துபோதற் சிறப்புடைமை பற்றி அதுவே ஈண்டு 'உணருரு வசத்து' என்றெடுத்துக்கொ ள்ளப்பட்டது. அசத்தெனவே அசித்தென்பதூஉந் தானே போதரும்.

---

* முதல்வனுக்குரிய மற்றைச்சிறப்பியல்புக்குணங்களாவன:—சர்வஞ்ஞத்துவம் முத லாயின. இவற்றின் விரிவை நீலகண்டபாடியத்தில் ௩-ம் அத்தியாயத்து உ-ம் பாதத்தில் உபயலிங்காதிகரணத்திற் காண்க. † சிவப்பிரகாசம், உண்மை. அ-ம் சூ. உ. தன்னறி. ‡ மேற்படி பொது உ-ம் சூ. கஅ. அன்னிய. ¶ மேற்படி உண்மை. எ-ம் சூ. உ. § மாமாயை மாயாகாரியம். ○ சிவஞானசித்தி, ச-ம் சூ. உ. கருவியாமனமு. ** மேற் படி, க-ம் சூ. உ. வேதசாத்திர. †† அசத்து—சத்துக்குவேறு. அகரம் பிறிதென்னும் பொருட்டு. ‡‡ ஏனைப்பசு பாசங்கள் சிறப்பியல்பு பற்றிச் சத்தாதலும் பொதுவியல்பு பற்றி அசத்தாதலும் ஆகிய இருதன்மையும் உடையனவாதல்போலாது காரியப் பிர பஞ்சம் இருவகையியல்பானும் அசத்தேயாம் என்க. இருவகையியல்பு சிறப்பியல்பு பொதுவியல்பு என்பன. இருவகை யியல்பானும் அறியவாராது எனக் கூட்டுக.

இதனுள் உணருருவசத்தெனி னுணரா தின்மையி னென்றது ஓரதிகரணம்; இருதிறனல்லது இரண்டுவகையிற் சிவசத்தாம் என்றது ஓரதிகாணம்; ஆக இரண்டதிகாணத்தது இச்சூத்திரமென்றுணர்க.



## முதலதிகரணம்.

### ஈண்டு அறிவினலறியப்பட்ட சுட்டு அசத்தென்றது.

எ-து. மே-ள். எ-னின். மேலைச் சூத்திரத்தின் அளந்தறிந்தறியா வென்றதனை உடம்படாது பிரபஞ்சம்போல முதல்வனும் அளவைகளான் அளந்தறிபொருளேயாமென நையாயிகர் முதலியோர் கூறுங் கடாவையும், எல்லாப் பொருளுஞ் சத்தாகலின் அளந்தறிபொருளுஞ் சத்தேயா மெனச் சாங்கியர் கூறுங் கடாவைபு மாசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றை கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ - ள். சுட்டறிவினல் அறியப்பட்ட சுட்டுப்பொருளெல்லாம் அசத்து. எ - று.

சுட்டு ஆகுபெயர். சிவஞானத்தாலறியப்படுதலை நீக்குதற்கு அறிவினலென விசேடித்தார்.

ஈண்டு அறிவென்றது ஒன்றை முந்தி அதுவதுவாகச் சுட்டிக்காணும் அளவையறிவினை யென்பது * "அறிவினலறிந்த யாவு மசத்தாத லறிதி" என்ற புடைநூலாசிரியர் மீள அங்ஙனந் தெரித்தோதியவாறுபற்றி யுணர்ந்து கொள்க

### அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலான்.

எ-து. ஏது. எ-னின். உள்ளதென்னு முணர்விற்கு விடயமாய் உபலத்தியைப் பயப்பிக்கும் பிரபஞ்சத்தை இல்லையென்னு முணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பிக்கும் இல்பொருளோ டொப்ப அசத்தென்றல் அமையுமாறு யாங்ஙனம்? எனவும்,சத்தாகிய பிரபஞ்சத்தைச் சுட்டப்படுதன் மாத்திரையான் அசத்தென்றல் சற்காரியவாதத்திற் கிழுக்காம் போலும் எனவும், முறையே அவ்விருவர்மதம் பற்றிக் கூறுவாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ - ள். அச்சுட்டுப் பொருள்கடாம் இராசதகுண மிகுதிப்பாட்டான் உள்ளதென்னும் உணர்விற்கு விடயமாய் உபலத்தியைப் பயப்பித்து நின்று தானே தாமதகுண மிகுதிப்பாட்டான் இல்லையென்னும் உணர்விற்கு விடயமாய் அநுபலத்தியைப் பயப்பித்து நிற்றலான் 'ஈண்டறிவின லறியப்பட்ட சுட்டு அசத்து' என மேற்கோண்டது. எ - று.

---

* சிவப்பிரகாசம், உண்மை. ௩-ம் சூ. ச.

ஈண்டுப் பிரகாசம் அப்பிரகாச மென்பன உபலத்தி அநுபலத்தி யென்னும் பொருளவாய் அவை நிகழ்தற் கிடனாகிய *பொருண்மே னின்றன. இது நையாயிகரை நோக்கி மேற்கோளைச் சாதித்தவாறு.

இனி, இதனையே இரட்டுற மொழிந்துகொண்டு அவைதாங் காரிய வவத்தையிற் றூலமாய் விளங்கி நின்றே காட்சிப்புலனாய்ச் சடிதியின் மறைந்து சூக்குமமாய்க் காரண வவத்தையின் விளங்காது நிற்கும் இவ்வேற்றுமையுடைமையான், அங்ஙனம் புலனாகாத காரணப் பொருள்களை நோக்கிக் காரியப் பிரபஞ்சம் அசத்தாதல் சாலுமாகலின் 'ஈண்டறிவினா லறியப்பட்ட சுட்டு அசத்து' என மேற்கொண்ட தென்றவாறு எனவும் உரைத்துக்கொள்க.

அசத்தறியாய் கேணீ யறிவறிந்த வெல்லா
மசத்தாகு மெய்கண்டா னாயின்—

எ-து. உ-ம். எ-னின். ஒருசாரன அங்ஙன மாயினும் †உபலத்திப்பட்டன வெல்லாம் அவ்வாறு அசத்தா மென்றற்குப் பிரமாண மென்னை? என்னும் நையாயிகரை நோக்கி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். அசத்து அறியாய் நீ கேள். எ-து. அசத்தி னியல்பை யறியாத மடவோனே! யாம் இறுக்கு மிறையை நீ மனம் பற்றிக் கேட்பாயாக,—மெய் கண்டான் ஆயின் அறிவு அறிந்த எல்லாம் அசத்து ஆகும். எ-து. சத்தி னியல்பை யறிந்தோன் ஆராய்ந்தானாயின் அறிவினா லறியப்பட்டன வெல்லாம் அசத்தேயாம். எ-று.

அறியாய் என்பது விளியுருபேற்ற பெயர்.

அசத்தி னியல்பை யறிந்தாயாயின் இவ்வாறு பிணங்குவா யல்லை யென்பார் 'அசத்தறியாய்' என்றும், ‡"எந்தை—தாட்பால் வணங்கித் தலைநின்று கேட்க" என்பார் 'கேள் நீ' என்றும், உபலத்திக்கு விடயமானவை யெல்லாம் அநுபலத்திக்கு விடயமாதல் ஒருதலை யென்பார் 'அறிவறிந்த வெல்லா மசத்தாகும்' என்றும், சத்தி னியல்பு உணர்ந்தார்க் கன்றி அசத்தி னியல்பு உணரவாரா தென்பார் 'மெய்கண்டான்' என்றும், ஆய்தற் கருமை நோக்கி 'ஆயின்' என்றுங் கூறினார்.

அசத்தலாய்
நீரி லெழுத்து நிகழ்கனவும் பேய்த்தேரு
மோரினவை யின்றாமா றொப்பு.

எ-து. உ-ம். எ-னின். இரட்டுற மொழிந்துகொண்டு சாங்கியரை நோக்கி யுரைத்த பொருளை வலியுறுத்துத னுதலிற்று.

---

* ஈண்டுப் பொருள் என்றது சுட்டியறிவதாகிய பிரபஞ்சத்தை. † உபலத்திப்பட்டன உள்ளதென்றறியு மறிவுக்கு விடயமாய பொருள்கள். ‡ திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருப்பாசுரம். ௪. ஆட்பாலவர். எந்தை தாட்பால் தலைவணங்கி நின்று கேட்க என மாறுக. தாள் என்றது சத்தியை.

இ - ள். அசத்து அலாய். எ-து. அசற்காரியவாதி யல்லாத அறிவுடையோனே!—அவை இன்று ஆம் ஆறு ஒப்பு ஓரின். எ-து. அங்ஙனந் தோன்றி மறைவனவாய பிரபஞ்சம் அசத்தாமாற்றிற்கு உவமை யாராயின்,—நிகழ் நீரில் எழுத்தும் கனவும் பேய்த்தேரும். எ-து. நிகழாநின்ற நீர்மே லெழுத்துங் கனவிற் காட்சியும் பேய்த்தேரு மாம். எ - று.

எனவே, அப்போ துள்ளனவாய நீர்மே லெழுத்து முதலியனவற்றை அங்ஙனே சடிதியின் மறைந்துபோதற் சிறப்புப் பற்றி அசத் தென்றல் எல்லார்க்கு மொப்ப முடிந்தமையின், அவ்வியல்புடைய பிரபஞ்சத்தையும் அவை போல் அசத் தென்றல் அமையு மென்றவா றாயிற்று.

* அசற்காரியவாதியை அசத்தென் றுபசரித்தார். நீரிலெழுத்து முதலியன பொய் யென்பாரை மறுத்தற்கு 'நிகழ்' என்று அடை கொடுத்தார்: அஃது யாண்டுஞ் சென்றியையும். குவ்வுருபு விகாரத்தாற் றொக்கது. இன்றென்னு மொருமை அப்பண்பின்மே னின்றது.

நீரிலெழுத்துத் தோன்றிய பொழுதே மறைந்துபோதற்கும், கனப்பொருள் முடிவு பெறுத லின்றி இடையே மறைந்துபோதற்கும், அருஞ்சுரத்தின் முதுவேனிலின் நண்பகற் கடுமை பற்றித் தோற்றி ஞாயிற்றின் கிரணம் முகிற்படலத்தின் மறைந்தவழித் தானும் மறைந்துபோவ தாகிய பேய்த்தேர் ஒரு காரணங் காட்டி மறைந்துபோதற்கும் உவமையாயின.

இவ்வெண்பாவை † 'இலயித்த தன்னில்' என்பது போல இங்ஙனம் இரு தொடராக வைத்துரைத்து மேற்கோள் ஏதுக்களையும் இரட்டுற மொழிந்து கொண்டு இரண்டதிகரணப் பொருள் கோடல் ஆசிரியர் கருத்து என்பது, வழிநூலாசிரியர் ‡ "அசத்தாஞ் சுட்டி யுணர்பொரு ளான வெல்லாம்" எ-ம், ¶ "உலகினை யசத்து மென்பர்" எ-ம், வேறு கூறியவாற்றானு முணர்க. இஃது அறியாது இதனை ஒரு தொடராகவைத் துரைப்பார்க்கு அசத்தறியாய் அசத்தலாய் என்றதனால் ஒரு பயன்படாமையும், ஆயின் ஓரின் என்று இருகாற் கூறுதலும் அசத்தாகும் இன்றாம் என்று இருகாற் கூறுதலுங் கூறியதுகூற லென்னும் வழுவாதலும், அறிக.

இனி, ஒருவாற்றானு முணரப்படாத பொருள் சூனிய மென்பது எல்லாச் சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்தமையின் ஆண்டு அதிகரணத்திற் குரிய ஐயப்பாடு முதலியன நிகழாமையான் அதனை வேறெடுத்துரைத்து மேற்கொள்ள வேண்டா வாயினும், மந்தவுணர்வுடையார்க்கு அதன்கண் ஐயம் நிகழாமைப் பொருட்டு வழிநூலாசிரியர் § "உணராத பொருள்சத் தென்னி லொருபயனில்லை போலும்" என விடுத்தொழிந்தாரென் றுணர்க.

முதலதிகரண முடிந்தது.



* காரணத்தைக் காரியமாகக் கூறுதலான் உபசாரமாற்று. † இந்நூல், க-ம் சூ. உ-ம் அதி. க. ‡ சிவஞானசித்தி, சு-ம் சூ. உ. ஆவதாய். ¶ மேற்படி. சு-ம் சூ. ரு. மண்டனில். § மேற்படி. சு-ம் சூ. ச.

## இ ர ண் ட ா ம தி க ர ண ம்.

இனி இவ்விரண்டு தன்மையு மின்றி வாக்கு மனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்று உணரற்பாற்று.

எ-து. மே-ள். எ-னின். மேல் உணர்பொருளியல்பும் உணராத பொருளியல்புங் கூறும் முகத்தான் அசத்தி னியல்பை வரைசெய் துணர்த்தியவழி, இரண்டும் இவ்வாறுகலான் இவற்றின் வேறாய முதல்வன தியல்பாவது மாயாவாதி கூறும் அநிருவசனம் போலு மென்னுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்தின் பிற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ-ள். வெ-டை.

* வாக்கெனப்படும் நாதம்முடிவான பாசஞானத்தை வாக்கென்றும் அவற்றின் வேறாய பசுஞானத்தை மனமென்றும் உபசாரவழக்காற் கூறினார்.

வாக்குமனாதீத கோசரமாய் நின்ற என்பது அவ்விரண்டின் விருத்திகளைக்கடந்து அதீதமாயும் ஒற்றுமைப்பட்டுநின் றுணரும் அநுபவஞான மாத்திரைக்கே விளங்கிக் கோசரிப்பதாயும் நின்ற என்றவாறு.

அவ்வாறு நின்ற பொருள் இது வென அளவைகளான் அறிய வாராமைபற்றி அதுவே என மகாவாக்கியத்திற் கூறியதனை அநுவதித்துச் சத்தாகிய சிவமாதலைச் செவியறிவுறுத்தார்.

வாக்குமனாதீதம் என்றது தமிழ்நூன் முடிபு: மரவடி மாரடியென மரீஇயினாற்போல மனவதீதம் மனாதீதமென மரீஇயிற்று. அதீதகோசரம் என்பது வடநூன் முடிபு.

வாக்குமனாதீதப் பொருளாகலின் உணருருவாந்தன்மையும், கோசரப் பொருளாகலின் உணராதாந்தன்மையும் இல்லையென்பது பெறப்படுதலின் 'இவ்விரண்டு தன்மையு மின்றி' என்றார். †உணரற்பாற்று என்றார் உணர்தல் அருமை நோக்கி.

பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தின்மையானும் அப்பிரகாசத்தினுக்குப் பிரகாச மின்மையானும்.

எ—து. ஏது. எ—னின். இவ்விரண்டுவகையு மில்லாத பொருள் அநிருவசனமாய் நிற்ப தென்னாது வாக்குமனாதீத கோசரமாய் நிற்ப தென்றற்குப் பிரமாண மென்னை? என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். வாக்குமனங்களா லோதி யுணரப்படுவதாய ‡ நிருவசனப் பொருட்கு முன்னர்க் கூறப்படுஞ் சாதனங்களி னின்று அறியற்பாலதாக வேண்டா

* இதனை, "வேதசாத் திரமிருதி புராணகலை ஞானம் விரும்பசபை வைகரியாதித்திறங்கண் மேலா—நாதமுடி வானவெல்லாம் பாச ஞானம்" என்னுஞ் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானு முணர்க. † சொல்லளவையின் அறிய வாராது என்பார் சொல்லற்பாற் றென்னாது உணரற்பாற் றென்றார். ‡ நிருவசனம்-விசேடமாகச் சொல்லல்.

மையானும், ஒருவாற்றானும் அறியப்படாத அநிருவசனப் பொருட்குச் சாதனத்தி னின்றும் அறியப்படுமா றின்மையானும், 'இனி இவ்விரண்டு தன்மையுமின்றி வாக்குமனாதீத கோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவமென்றுணரற்பாற்று' என மேற்கொண்டது. எ - று.

பிரகாசம் அப்பிரகாசம் என்பன உபசாரவழக்கு.

எண்ணிய சத்தன் றசத்தன்று மென்றாலென்
கண்ணி யுளதென்றன் மெய்கண்டா—னெண்ணி
யறிய விரண்டா மசத்தாதல் சத்தா
மறிவறியா மெய்சிவன்றா ளாம்.

எ—து. உ—ம். எ—னின். பாமார்த்தமாகிய பரப்பிரமப்பொருள் அவிச்சைவயத்தான் ஞாதா வெனவும் ஞேய மெனவும் பகுக்கப்பட்டு முன்னர்க் கூறப்படுஞ் சாதகங்களினின் றறியவும்படும். அவிச்சை நீங்கியவழி அப்பகுப் பின்மையாற் சத்தென்றுதல் அசத்தென்றுதல் ஒருவாற்றானும் ஞேயமாமா றின்றிக் கேவலஞான மாத்திரையேயாய் நிற்பதொன் றாகலான் அது கோசரமாமென்றல் பொருந்தாது *என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ - ள். எண்ணிய சத்து அன்று அசத்து அன்று ஆம் என்றால் உளது என்றல் என் கண்ணி. எ-து. பரமார்த்தமாகிய பரப்பிரமப்பொருள் விவகாரத்திற் கருதப்பட்ட சத்து மன்று அசத்து மன்று என்னின் அங்ஙனமொருபொருளுண்டென்றல் யாது பிரமாணங் கருதியோ? அதனைக் கூறுவாயாக. பிரமாணமுண்டெனின் அதற்கு அது பிரமேய மெனப்பட்டு ஞேயமாவான் செல்லுமென் றஞ்சிப் பிரமாண மில்லை யென்பையாயின்,—மெய் கண்டான் எண்ணி அறிய இரண்டு அசத்து ஆம். எ-து. சத்தி னியல்பை யுணர்ந்தோன் ஆராய்ந்தறியிற் காட்சி முதலிய பிரமாணங்கட்கு விடயமாவதூஉம் ஒருவாற்றானும் பிரமாண மல்லாத சூனியமு மாகிய இரண்டும் மேற் கூறியவாற்றான் † அசத்தேயாம்,—ஆதல் சத்து ஆம் அறிவு அறியா மெய் சிவன் தாள் ஆம். எ-து. ஆதலாற் சாந்தோக்கியம் முதலியவற்றுட் சத்து என்று ஓதப்படுஞ் சுட்டறிவினால் அறியப்படாத மெய்ப்பொருள் சைவ வுபநிடதங்களினுஞ் சைவாகமங்களினும் அன்னிய மின்றிநின் றுணரும் அநுபவமாத்திரையிற் கோசரிப்பதென் றோதப்படுஞ் சிவனருளாவ தன்றி நீ கூறுஞ் சூனிய மன்று. எ - று.

அறிய வென்னுஞ் செயவெ னெச்சம் "மழை பெய்யக் குள நிறையும்" என்புழிப் போலச் செயினென்னு மெச்சப்பொருட்டாய் நின்றது. முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. அசத்து ஆம் என மாறுக. சத்து ஆம் மெய் என வியையும். ‡"அடியளந்தான் றாயது" என்றாற் போல 'அறிவறியா மெய்' என்றது வாளா பெயராய் நின்றது. 'சிவன் தாள்' எனச் சிவசத்தியின்மேல் வைத்து உயர்த்துக் கூறியது உபசாரவழக்கு: ¶"இறைவனர் கமல பாதம்" என்பதுமது.

---

* மாயாவாதிகள். † அசத்து என்பது பிரபஞ்சத்தை புணர்த்தும்வழிச் சத்தின் வேறு எனவும், சூனியத்தை யுணர்த்தும்வழிச் சத்திற்கு மறுதலை எனவும் பொருள்கொள்க. ‡ திருக்குறள். கூகO. மடியிலா. ¶ சிவஞானசித்தி, சுபக்கம், பாயிரம். ச. மறையினால்.

இதனாற் போந்த பொருள் சத்து மன்றி அசத்து மன்றி ஒரு பொருள் உண்டு எனின் அதற்குப் பிரமாணம் என்னை? பிரமாணாதீத மாகிய சூனியம் எனின் சூனியமும் அழிபொருளு மாகிய இரண்டும் அசத்தே யென்பது மேற் காட்டினமையாற் பிரமப்பொருள் அசத்தெனப்பட்டுச் சத்தென்னுஞ் *சுருதி களோடு முரணு மாகலின் அவற்றுட் சத்து என்று ஓதப்படும் பரப்பிரமப் பொருளாவது உண்மைஞானத்திற் கோசரிப்பதென யாங் கூறுஞ் சிவமே யன்றி நீ கூறுஞ் சூனிய மன்றென மாயாவாதியை மறுத்துக் கோசரம் என்ற தனை வலியுறுத்தியவாறு மென்க.

'எண்ணி யறிய விரண்டா மசத்து' என்பதற்குப் பிறரெல்லாம் வருகின்ற வெண்பாவிற் கூறும் பொருள்படக் கூறியதுகூற லாதன் மேலும் ஓரியைபி ன்றி யுரைப்ப.

உணர்ப வசத்தாத லொன்றுணரா தொன்றை
யுணரு நீ தா னுணரா யாயி—னுணருமுனிற்
றனிரண்டா மெய்கண்டான் றன்னா லுணர்தலாற்
றனிரண்டாய்க் காணுன் றமி.

எ—து. உ—ம். எ—னின். †பிரகாசித்த பொருளையும் வேறோராற்றான் அறி துமென வேட்கை சென்றுழி அவ்வாற்றாற் புதுவதாய்ப் பிரகாசிக்க வேண்டு தலிற் பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்கவேண்டுவ தில்லை யென்றல் யாண்டுஞ் செல்லாமையின் வாக்குமனாதீத மென்றல் பொருந்தாது ‡என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். உணர்ப அசத்து. எ-து நின்னா லறிவனவாய கருவிக ளெல்லாம் ¶மேற் கூறியவாற்றான் அசத்தாம். அசத்தெனவே அசித்தாதலும் பெறப்ப டும்,—ஆதல் ஒன்று ஒன்றை உணராது. எ-து. ஆகலான் அவற்றுள் ஒரு கரு வியும் ஒன்றாகிய முதற்பொருளை அறியமாட்டாது,—உணரும் நீ தான் உண ராய். எ-து. அவற்றா னறிந்து வருகின்ற நீதானும் அதனை யறியமாட்டாய்,— ஆயின். எ-து. நீயே யாய்ந்தறிவா யாயின்,—உணரும் உனின் இரண்டு ஆம். எ-து. அவ்வா றுணரப்படும் பொருள்கள் போல் உணர்கின்ற நின்னின் வே றாம்,—மெய்கண்டான் தன்னால் உணர்தலால் தான் இரண்டாய்க் காணான் தமி, எ—து. உயிர்க்கு அறிவு விளங்கு முண்மையை அறிந்தோன் தன்னறிவு அச்சிவனருளி னடங்கி அதுவாய் நின்று அதனானே அதனை யறியு மாகலான் ஏனைப் பொருள்களை யறியுமாறு போல வேறாய்நின் றறிவா னல்லன் அத்த னிமுதற் பொருளை. எ-று.

இதனாற்போந்தது சத்தாகிய சிவம் பாசஞானத்தா னுதல் பசுஞானத்தா னுதல் அறியப்படாது; அறியப்படிற் குடம் முதலாயின போல உயிரின்

* ஓழ தகஉ ஷகஉ முதலியன. † பிரகாசித்தபொருள் (பிரத்தியக்கத்தாற்) பிர காசித்த பொருள். அது வன்னி. வேறோராறு அநுமானம். வேட்கை சென்றுழி அத னான் அநுமிப்பேன் என இச்சை வந்துழி என்பதாம். யாண்டுஞ் செல்லாது என்பது அநுமானத்திற் சிலவிடத்திற் செல்லாது பிரத்தியக்கமாகிய சிலவிடத்திற் செல்லும் என்பதாம். ‡ நையாயிகர். ¶ இதனை கஉச-ம் பக்கத்துக் குறிப்பிற்காண்க.

வேறாய் அவிச்சையான் வருஞ் சுகதுக்கங்களைப் பயப்ப தன்றி அவிச்சையி னீங்கிய நிரதிசய வின்பத்தினைப் பயவா தாகலான் அவ்வுண்மை யுணர்ந்தோன் ஏனைய போல அசத்தாத லின்றித் தனியாய் நின்ற அம்முதற் பொருளை அதனா னுற்றித்து நின்றே காண்ப னென நையாயிகர் முதலியோரை மறுத்து வாக்குமனாதீதமாய் நின்றே கோசரமா மென வலியுறுத்தியவாறு மென்க.

உணர்ப என்பது அகரவீற் றன்றிணைப் பன்மைப் பெயர்ச்சொல்.

ஒன்றும் என்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

உனின் என்னும் இன்னுருபு நீக்கப்பொருட்கண் வந்தது. ஒற்றிறட்டாமை புறனடையாற் கொள்க. தான் அசை.

*பாவகமேற் றானசத்தாம் பாவநா தீதமெனிற்
பாவகமா மன்றென்னிற் பாழதுவாம்—பாவகத்தைப்
பாவித்த றானென்னிற் பாவகமாந் தன்னருளாற்
பாவிப் பதுபரமில் பாழ்.

எ-து. உ-ம். எ-னின். தானே கோசரமாறு லன்றித் தன்னா லறிதல் கூடாமையிற் றன்னாலே தனையுணரு மென்பது †தன்னைப்பற்றுத லென்னும் வழுவாமாகலின் அவ்வா றன்றி வாக்குமனாதீதப் பொருள் யோகநூலிற் கூறுந் தியானபாவனைகளிற் கோசரமா மென்றலே அமைவுடைத்தென யோகமதம்பற்றிக் ‡கூறுவாரை நோக்கித் தன்னா லன்றிக் கோசரமாகாமையை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். பாவகமேல் தான் அசத்து ஆம். எ-து. நீ கூறும் பாவனை ஏனைப் பாவகங்கள் போல மன முதலியவற்றோடு கூடி நின்று பாவிக்கும் பாவகமெனின் அறிவினா லறியப்பட்ட சுட்டாகலான் அப்பொருள் அசத்தாம்,—பாவனாதீதம் எனின் பாவகம் ஆம். எ-து. கருவிகளை நீங்கி நின்று பாவிப்பதாகலின் அப்பாவனையைக் கடந்ததெனிற் கருவிக ணீங்கியவழி ஒன்று மறியுமா றின்றிக் கேவலமா மாகலான் அது பாவக மாத்திரையே யன்றிப் பயன்படுமா றில்லை,—அன்று என்னின் அது பாழ் ஆம். எ-து. இவ்விரு திறனு மன்றி அநிருவசனமாகப் பாவிக்கப்படுவ தெனின் அது சூனியப் பொருளாம்,—பாவகத்தைப் பாவித்தல் என்னின் பாவகம் ஆம். எ-து. அவ்வா றன்றிப் பாவனைக் கெய்தாத பொருளை எய்தியதாக வைத்துப் பாவகஞ் செய்த லெனின் அதுபோலிப் பாவனை யாதலாற் பாவனாதீதம் போலப் பாவனை மாத்திரையே யன்றிப் பயன்படுமா றில்லை. அற்றேல் ஒருவாற்றானும் பாவனைக் கெய்தாத பொருள் பாழா மெனின்,—தன் அருளால் பாவிப்பது பரம். எ-து. அப்பாவகங்களை யொழித்துத் தனது திருவருளாற் பாவிக்கப்படுவதாம் பரம்பொருள்,—பாழ் இல். எ-து. ஆகலான் நீ கூறும் பாவனைக் கெய்தாமை பற்றிப் பாழாத தில்லை. எ-று.

---

* இவ்வெண்பாவின் பொருளைச் சிவஞானசித்தி, சு-ம் சூ. எ-ம் செய்யுளும், சிவப்பிரகாசம், க௦-ம் சூ. எ-ம் செய்யுளும், ஞானாமிர்தம். சுக-ம் அகவலும், இனிது விளக்குமாறு ஆண்டாண்டுக் கண்டு தெளிக. † ஆன்மாச்சிரயதோஷம். ‡ பாதஞ்சலர்.

தான் அசை. பாவகத்தைப் பாவித்த லென்பது *“கறைமிட றணியலு மணிந்தன்று” என்றது போலக் கொள்க.

மேலை வெண்பாவில் தன்னென்றது தனது சத்தியே யாகலால் தன்னைப் பற்றுத லென்னுங் குற்றமாதல் யாண்டையதென விடுப்பார் ‘தன்னருளாற் பாவிப்பது’ என்றார். தன்னருளை யறியுமாறும் அதனாற் பாவிக்குமாறும் ஒன் பதாஞ் சூத்திரத்துட் கூறப்படும்.

யோகநூலார் கூறும் பாவனையாவது இந்நான்கனுள் ஒன்றாகற்பால தன்றி வேறின்மையின் நான்கினையுங் கூறி மறுத்தார்.

அறிய விரண்டல்ல னுங்கறிவு தன்னா
லறியப் படானறிவி னுள்ளா—னறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய்யென்னக்
காட்டா தறிவறிந்து கண்டு.

எ—து. உ—ம். எ—னின். மேற் கூறிப் போந்த பாவனைகட் கெய்தாத பொருளைத் தன்னருளாற் பாவித்தல் வேண்டாம் உயிர் பசுத்துவ நீங்கிய காலத்துச் சிவனைப் போல முற்று முணர்தன் முதலிய எண்குணங்களு முடையதென்று † ஆகமங்களுட் கூறுதலின் ஆண்டு ஆன்மஞானஞ் சிவஞானத்தோடொப்ப தன்றிப் பசுஞான மெனப்படாமையான் அவ்வறிவான் அறியப்படுங் கோசரப் பொரு ளென்றலே அமைவுடைத் தென்னுஞ் சிவசமவாதிகளை நோக்கித் தன்னருளா லன்றிக் கோசர மாகாமையை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். அறிய இரண்டு அல்லன். எ-து. ‡சிவாகமங்களின் அத்துவிதங் கூறுதலின் உயிர் தன்னறிவா னறிதற்குத் தன்னின் வேறல்ல னாகலானும்,—அறிவின் உள்ளான் ஆங்கு அறிவு தன்னால் அறியப்படான். எ-து. சமமாத லின்றித் தூல சூக்கும முறையாற் றன்னறிவுக் குள்ளுமாய் நிற்றலின் அவ்விடத்துத் தன்னறிவினால் அறிய வாரா னாகலானும்,—அறிவுக்குக் காட்டு ஆகி நின்றானை. எ-து. தன்னறிவுக்கு வியஞ்சகமாய்நின் றறிவிக்கும் உயிர்க்குயிராய முதல்வனை,—அறிவு கண்டு அறிந்து காட்டாது. எ-து. ஆன்மஞானமானது தான் கண்டறிந்து தன் குணியாகிய உயிர்க்குக் கோசரமாமாறு காட்டமாட்டாது,—மெய் அறியாக் கண் என்ன. எ-து. தன்னின் வேறின்றித் தனக்குண் ணிற்றலிற் றன்னாற் காணப்படாது தனக்குக் காட்டாகி நின்ற உயிரை யறியமாட்டாத கண்ணொளி போல். எ - று.

காட்டு முதனிலைத் தொழிற்பெயர். அறிவுக்குக் காட்டாகி நின்றா னென்னும் பெயரடையானும் ஏதுக் கூறியவாறு. கண்டறிதல் ¶“குழிந் தாழ்ந்த கண்” என்றாற் போல ஒருபொருட் பன்மொழியாய்ச் சிறப்பின்கண் வந்தது.

* புறநானூறு, கடவுள் வாழ்த்து. ௫-ம் அடி. † ஆகமத்துட்கூறுதலை கஙச-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க. ‡ சிவாகமத்தில் அத்துவிதங்கூறுதலை கஙங-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க. ¶ நாலடியார், தூய்தன்மை. ௬. கழிந்தாரிடு.

மெய் அறியாக் கண் என்ன என இயைத் துரைக்க. கண் முதலியவற்றை நோக்கி உயிர் சத்துச்சித்தா மென்ற வதனை 'மெய்' என்றார். கண் ஆகுபெயர்.

கண் அறியா மெய் என்ன என்பதற்குக் கண்ணையறியாத உடம்பு போல் என் றுரைப்பாரு முளர். உடம்பிற்கு அறியுந் தன்மை யின்மையானும், உடம்பிற்குக் கண் காட்டாதலு மின்மையானும், அஃது ஈண்டு உவமையாதற் கேலாமையின் அது போலியுரையென் றொழிக.

அதுவென்னு மொன்றன் றதுவன்றி வேறே
யதுவென் றறியறிவு முண்டே—யதுவென்
றறிய விரண்டல்ல னுங்கறிவு ணிற்ற
லறியுமறி வேசிவமு மாம்.

எ-து. உ-ம். எ-னின். அத்தன்மையனாகிய முதல்வனைத் தலைப்பட்ட உயிர் அம்முதல்வனோடு ஒன்றாய்ப் போவதே யாகலின் ஆண்டங்ஙன மறிவதூஉம் அறியப்படுவதூஉ மாதல் யாங்ஙனம்? என்னுஞ் சிவாத்துவிதசைவர் சுத்தசைவரை நோக்கி ஒன்றுயவழியும் அறிவதும் அறியப்படுவது முண்டென்ப துணர்த்தி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். அது என்னும் ஒன்று அன்று. எ-து. சத்தாகிய சிவம் ஞேயப் பொருளாய் விசிட்டமாய் நிற்ப தென்பது உமக்கு மொக்கு மாகலான் அச் சிவம் இன்னதென் றறிய வாராது அநிருவசனமாய் நிற்பதொரு நிருவிசேடப் பொருளெனக் கொண்ட மாயாவாதத்தைப் போல அது வென்று அநிருவசனமாய்க் கூறப்படுவதொரு சூனிய மன்று ஆகலான்,—அது அன்றி வேறு அது என்று அறி அறிவும் ஆங்கு உண்டே. எ-து. அந்த ஞேயமாத்திரையே யன்றி அதனின் வேறாக வாக்குமனாதீதமாய் நிற்பதொரு பொருளென் றறிகின்ற ஞாதாவும் ஆண்டுள்ளதேயாம். அற்றேல், ஒன்றுதல் பெறப்படாதா லெனின்,—அது என்று அறிய இரண்டு அல்லன் அறிவுள் நிற்றல் அறியும் அறிவு சிவமும் ஆம். எ-து. உலகத்துப் பொருள் போல் அது வென்று சுட்டியறியுமாறு முதல்வன் தன்னின் வேறல்லனாய் அப்பணைந்த உப்புப் போலத் தன்னறிவின்கண் விரவி வேற்றுமை தோற்றாது நிற்றலான் அறிவிறந் தறிகின்ற அவ்வுயிர் சிவமேயாம். எ-று.

உம்மை சிவமாயுஞ் சிவமாகாமை விளக்கி நின்றது.

அது வென்னு மொன்றன் றாகலா னென ஏதுப்பொருள்படக் கொண்டு உரைக்க. அறிவும் என்ற உம்மை இறந்தது தழீஇயது. அல்லன் என்பது முற்றெச்சம். வேறு முடிபு கோடலிற் பால்வழு வாகாமை யுணர்க. உண்டே யென்னும் ஏகாரம் தேற்றம். ஏனை யிரண்டும் அசைநிலை. நிற்றல் நிற்றலான் என்றவாறு.

இவ்வெண்பாக்க ளேந்தும் முறையே வாக்குமனாதீத மென்றல் பொருந்தும் கோசரமா மென்றல் பொருந்தா தென்னும் மாயாவாதிகளையும், கோசரமா மென்றல் பொருந்தும் வாக்கு மனாதீத மென்றல் பொருந்தா தென்னும் நையாயிகர் முதலியோரையும், பாவனைக்குக் கோசரமா மென்னும் பாதஞ்ச

லரையும், ஆன்மஞானத்திற்கே கோசரமா மென்னுஞ் சமவாதசைவரையும், முத்தியிற் சிவமே யன்றி உயிரென வேறின்மையின் உயிர்க்குக் கோசரமா மாறு யாண்டையது? என்னுஞ் சிவாத்துவிதசைவர் முதலியோரையும் மறுத்து, வாக்குமனாதீத கோசரமாய் நிற்கு மியல்பு வலியுறுத்தி ஒருபொருண் மேல் வந்தவாறு காண்க.

இவ்வாறு நாலாஞ்சூத்திரம் முதலிய மூன்றினும் மேற் பிரமாணத்தாற் கூறிப்போந்த பசுபாசபதிகட்கு இலக்கணங் கூறும் முகத்தான் முறையே கேவலஞ் சகலஞ் சுத்தம் என்னும் மூன்றவத்தையுங் காட்டப்பட்டன. இம் மூன்றனுள், கேவலம் மருட் கேவலமும், சகல கேவலமும், பிரளய கேவலமும், விஞ்ஞான கேவலமும், அருட் கேவலமு மென ஐவகைப்படும். அவற்றுள், மருட் கேவலமாவது அநாதி கேவலம். சகல கேவலமாவது சங்கரித்த பின்னர்ப் புனருற்பவத்திற் கேதுவாய்ப் படுங் கேவலம். ஆண்டுச் சூக்கும வைந்தொழி லுண்டென *மிருகேந்திரத்துட் கூறுதலின் அநாதி கேவலத்தோடு இதனிடை வேற்றுமையாமாறு கண்டுகொள்க. பிரளய கேவலமாவது †மாயையோடு இயைபின்றி ஆண்டுப் படுங் கேவலம். விஞ்ஞான கேவலமாவது மாயை கன்மங்களென்னும் இரண்டனோடும் இயைபின்றி ஆண்டுப் படுங் கேவலம். அருட்கேவலமாவது தத்துவசுத்திப் பின்னர்ப்படுங் கேவலம். அது ‡துகளறுபோதத்திற் காண்க. இனிச், சகலமுஞ் சகலத்திற் கேவலம், சகலத்

---

* இதனை ஸூவெபா்ஷ ஸொயநு ஸொயயொஹநு ரொ யநு ஈந்நு வாஸநு கஜிஃகஃ|ஶாயாஸக்ஷீவவிக்ஷியொஹா: பகஃவநு வஶநுஸவஃஃ யஶாவஷூஜாதழ|| என்னும் மிருகேந்திர சுலோகத் தானுணர்க.

இ - ள். பரமேசுரன் சர்வசங்கார காலத்தினும் அறிவிக்கத்தக்கவர்களை அறிவித்து மறைக்கத் தக்கவர்களை மறைத்து ஆன்மாக்களின் கன்மங்களைப் பக்குவப்படுத்தி மாயாசத்திகளை வெளிப்படத்தகுந்தவைகளாகச் செய்து தோன்றுதற்குரிய எல்லாப்பதார்த்தங்களையும் பார்த்துக்கொண் டிருக்கின்றார் எ - ம்.

இன்னும் இதனை ப்ரஉயெவநஹாதி ஸஜதவதி ஹஜிவ| திரொஷயாதி ஹஹவா ஞகாஞாவெக்ஷயா ஸஹா|| என்னும் பௌட்கராகம சுலோகத்தானும் உணர்க.

இ - ள். பகவானாகிய பரமேசுரன் காலங் கருதாது பிரளயகாலத்தினும் படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் பஞ்சகிருத்தியங்களையும் செய்கின்றார். எ - ம்.

† மா—உற்பத்தி. யா—லயம். மாதி யாதீதி மாயா. பிரபஞ்சம் எதிலே தோன்றி எதிலே ஒடுங்குகிறதோ அது மாயை. இது திராவிட மாபாடியத்துட் கண்டது.

‡ அன்றிவந்த தத்துவங்க ளெல்லா மகன்றிடவே—யொன்றிநின்ற வாணவந்தானென்றுமே—யென்றுந்தா—னீங்கா விருள்விழிபோ னிற்குமே யான்மாவும்—பாங்காக வாங்கே பதிந்து. உக. பகலிழந்த வான்போற் பரவுமல நீயா—யிகலறவே நின்று யிழந்தா—யகலறிவு—வாடாத முத்தியினில் வாய்ந்தவருட் கேவலநீ—நாடாத கேவலமுன் னுள். உஉ.

திற் சகலம், சகலத்திற் சுத்தமென மூவகைப்பட்டு ஒரோவொன்று ஐந்து வகைப்படும். அவற்றுட் சகலத்திற் கேவல மைந்தும் *"ஒன்றணையா மூலத்து" என்றதனுட் காண்க. சகலத்திற் சகல மைந்தும் †"இலாடத்தே சாக்கிரத்தை" என்றதனுட் காண்க. சகலத்திற் சுத்த மைந்தும் ‡"யோகிற் றருவதோர் சமாதி" என வழிநூலாசிரியர் தொகுத்தோதியது ¶சித்தாந்தசாராவலி, யோகபாதத்தின் வகுத்துக் கூறுதலான் ஆண்டுக் காண்க. இனிச் சுத்தமுஞ் சீவன்முத்தி அதிகாரமுத்தி போகமுத்தி இலயமுத்தி பரமுத்தியென் றைவகைப்பட்டுச் சாக்கிரம் முதலிய பெயர் பெறும்; அவற்றை முன்னர் வகுத்தோதுப.

இரண்டாமதிகரண முடிந்தது.

ஆறுஞ்சூத்திர முடிந்தது.



இலக்கணவியன் முற்றிற்று.



# பொதுவியல்பு முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.



---

* இந்நூல். ச-ம் சூ. ரு-ம் அதி. க. † மேற்படி. " " உ. ‡ சிவஞான சித்தி, ச-ம் சூ. ருச. இருவகை. ¶ சகலத்திற் சுத்தமைந்தும் சித்தாந்த சாராவலியில் ஶாஹ்ராங்காரணே என்னும் சுலோக உரையில் வகுத்துக் கூறுமாறு:—பீசாக்கரத்தை உச்சரித்தல் சகலத்திற் சுத்தசாக்கிரம். விந்துகலையைப் பரிக்கிரகித்தல் சகலத்திற் சுத்தசொப்பனம். நாதகலையோடு கூடுதல் சகலத்திற் சுத்தசுழுத்தி. சத்திகலையை யடைதல் சகலத்திற் சுத்ததுரியம். பரசிவதேசசில் இலயப்பட்டுநிற்றல் சகலத்திற் சுத்ததுரியாதீதம் என்றுணர்க.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்பியல்பு.

## சாதனவியல்.

### ஏழாஞ்சூத்திரம்.

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா.

எ-து. சூ-ம். எ-னின். மேலதற்கோர் புறனடை யுணர்த்
துத னுதலிற்று.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக்கருத் துணர்த்துத னுதலிற்று.

இ-ள். * துலாருந்ததி நியாயம் பற்றி மேலை யாறு சூத்திரங்களினுஞ் சிவாகமங்களிற் கூறப்படும் முப்பொருள்களது பொதுவியல்பு பிரமாணமுகத் தானும் இலக்கண முகத்தானும் ஆராய்ச்சிசெய் துணர்த்திய ஆசிரியர், அம் முப்பொருள்களது சிறப்பியல் பெனப்படும் உண்மை சாதன முகத்தானும் பயன் முகத்தானும் ஆராய்ச்சிசெய் துணர்த்துவான் புகுந்து, முதற்கண் மூன்று சூத்திரங்களான் அவற்றை யறிந்து அதனு ளாய பயன் பெறுதற் கேதுவாகிய சாதனங் கூறிய தொடங்கினர். அவற்றுள், இச்சூத்திரம் 'உணருரு வசத்து' எனவும் 'இருதிறனல்லது சிவசத்து' எனவும் மேலைச் சூத்திரத்தான் வரை செய்து உணர்த்தியவழி அங்ஙன மறியும்பொருள் அவ்விரண்டினுள் ஒன்றோ? வேறோ? வென்னும் ஐயப்பாட்டின்கண் அவ்விரண்டினுள் ஒன்றாகற்பால தென்பார் மதம் பற்றி நிகழுங் கடாவை யாசங்கித்துச் சூத்திரத்துக்குப் புற னாக வெடுத்து ஓரொழிபாகிய சதசத்தி னியல்பு வரைசெய் துணர்த்து முக த்தானே சாதித்துப் பயன் பெறுதற்குரிய அதிகாரியி னியல்பாவது இது வென்ப துணர்த்துத னுதலிற்று. எ-று.

அதிகாரமும் ஒத்தும் வேறுயவழியும் இயைபு உணர்ந்துகோடற் பொரு ட்டுக் கருத்துரை அவ்வாறு செய்தா ரென்பது.

---

* இதனை கஅ-எ-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.

இப்புறனடையை வடநூலார் வாக்கியசேடம் என்ப.

இதனுட் கூறப்படும் மூன்றதிகாரணமும் மூன்று புறனடைபோலுவ மன மலையாமைப் பொருட்டு ஓர் புறனடை என்றார். முன்னைய விரண்டும் இறுதி யதிகாரணத்தைச் சாதித்தற் கேதுவாய் ஒரு பொருண்மேல் வந்தனவே யாம் என்பது கருத்து.

ஒன்றனை அறிந்தவழி அதனு னுய பயன் பெறுதற் குரிய முயற்சி செய்ய லுறுவார்க்கு அதனைச் சாதிக்கு மாற்றல் தமக்கு உண்டென்பதூஉம், சாதித் ததனுல் வரும் பயன் இது என்பதூஉம், அதனைப் பயப்பித்தற் குரிய சாத னமாவது இது என்பதூஉம், அது வருவாயும் உணர்ந்தா லன்றி அதன்கண் மன வெழுச்சி செல்லாமையின் ஈண்டு ஓதப்படுஞ் சாதனஞ் செய்து பயன் பெறுதற் குரிமையுடைய அதிகாரியி னியல்பு உணர்த்துவதாய இச்சூத்திரம் முதற்கண் வைக்கப்பட்டது.

இதன் பிண்டப் பொழிப்பு. மேலைச் சூத்திரத்துட் கூறிப் போந்த இரண் டனுள், வாக்குமனாதீதமாகிய சிவசத்தின் சந்நிதியின் உணருரு வாகிய அசத் தெல்லாம் பாழாகலிற் சத்தாகிய சிவம் அசத்தாகிய பிரபஞ்சத்தை அறிதல் செய்யாது: அசத்தாகிய பிரபஞ்சம் அறிவில்லாத சடமாகலிற் சத்தாகிய சிவ த்தை அறிதல் செய்யாது: ஆகலாற் பாரிசேட வளவையான் இருதிற னறிவுள தொன்றுண் டென்பது பெறப்படுதலின் அதுவே சத்தாதற் றன்மையும் அச த்தாதற் றன்மையு மாகிய இரண்டு மன்றிச் சதசத்தா யுள்ள உயிராம். எ - று.

இரண்டனுள் ஒன்றனைப் பிரிக்கின்றமையிற் சத்தே என்னும் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. அசத்து இலதாகலின் என்று உரைக்க.

அசத்துச் சத்தை யறியாமைக்கும் சத்தெதிர் சூனிய மாதலே ஏதுவாத லமையு மாயினும்,அசத்தெனப்பட்ட கருவிகள் முத்தி நிலையிற் சிவகரணமாய் ஆன்ம சந்நிதியை யொட்டி முதல்வன் சந்நிதியி னிற்கப்பெறு மென்பாரை நோக்கி வேறுமோ ரேதுக் கூறினார். இக்கருத்தே பற்றிச் * "சத்தின்மு னிலாமை யானுந்—தனைக்கொடொன் றுணர்த லானும்" என இரண்டேதுவும் உடன் கூறினர் வழிநூலாசிரியரும்.

ஏற்புழிக் கோடலான் அறிதல் என்றது ஈண்டு அனுபவ அறிவின் மேற்று.

† "இனைத்தென வறிந்த" பொருட்கு வினைப்படு தொகுதிக்கண் வேண் டப்படும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது.

இதனுள் யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற் சத்தே யறியாது என் றது ஓரதிகாரணம்; அசத்தில தறியாது என்றது ஓரதிகாரணம்; இருதிற னறி வுள திரண்டலா வான்மா என்றது ஓரதிகாரணம்; ஆக மூன்றதிகாரணத்தது இச்சூத்திரம் என்று உணர்க.



* சிவஞானசித்தி, ௭-ம் சூ. க. அனைத்துஞ். † தொல்காப்பியம், சொல்லதிகாரம், கிளவியாக்கம். ௩௩.

## முதலதிகரணம்.

### ஈண்டுச் சத்தினிடத்து அசத்துப்பிரகாசியாது என்றது.

எ—து. மே—ள். எ—னின். *"தந்திடுஞ் சிவன வன்றன் சந்நிதி தன்னி னின்றே" எ-ம், †"கூடுமொளி வளர்குடிலை மாயை மேவி" எ-ம், ‡'தாரகமா மத்தன்று ணிற்றல்' எ-ம், ¶"விமலனுக்கோர் சத்தியாய்" எ-ம், §"உலகமே யுருவ மாக" எ-ம், 0"அத்துவா மூர்த்தியாகி", எ-ம், **இருநிலனாய்த் தீயாகி நீருமாகி**நின்ற வாறே." எ-ம், கூறப்படு மியல்புடைய பிரபஞ்சத்தைச் சத்தெதிர் சூனிய மென்றல் அவசித்தாந்தமாய் முடியும் போலும் எனவும், †† "மண்டிய வுணர்வு யிர்க்காய் மன்னிநின் றறியும்" எனவுங் கூறுஞ் சிவாத்துவிதசைவர் மதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றிற் போந்த ஏதுவைக் கண்ணழித் துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். சுட்டுணர் வின்றிநின் றறியுஞ் சிவசத்தின் முன்னர்ச் சுட்டியறியப்படும் அசத்தாய பிரபஞ்சம் விளங்கித் தோன்றாது. எ-று.

ஈண்டுச் சூனியம் என்றது விளங்காமைப்பொருட்டு என்பார் 'பிரகாசியாது' என்றார். இக்கருத்தே பற்றி ‡‡"முனைத்திடா தசத்துச் சத்தின் முன்" என்றார் வழிநூலாசிரியரும். முனைத்திடாமை யாவது இது குடம் இஃது ஆடையென நம்மனோராற் சுட்டியறியப்படுமாறு போல முதல்வனாற் சுட்டி அறியப்படுவதாய் வேறு நில்லாமையாம். ஆகவே, ஈண்டுச் சத்தெதிர் யாவையுஞ் சூனியமென்றது கொண்டு அவசித்தாந்தமாதல் யாண்டையது என மறுத்துச் சத்து அறியாது என்றதனை வலியுறுத்தியவாறு காண்க.

### மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

எ—து. ஏது. எ—னின். முற்றுணர்வுடைய சிவத்துக்கு அசத்தை விடயிப்பதாய சுட்டுணர்வும் உண்டென்றுறற் படும் இழுக்கு என்னை? ¶¶என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். தன்னியல் பாகிய இயற்கை யுணர்வின் முன்னர்ப் பொதுவியல் பாகிய செயற்கைச் சுட்டுணர்வு பிரகாசித்து நில்லாமையான் 'ஈண்டுச்சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது' என மேற்கொண்டது. எ-று.

பிரகாசித்து நிற்ற லின்மையாவது இயற்கை யுணர்வோ டொப்ப ஒருங்கு நில்லாமை. எக்காலத்தும் நிலைபெறுவதாய தன்னியல்பே'மெய்'எனவும் இடையே தோன்றி மறைவதாய பொதுவியல்பே'பொய்' எனவுங் கூறப்படுவனவாக

---

* சிவஞானசித்தி, க-ம் சூ. கக. விந்துவின். † சிவப்பிரகாசம், பொது. க-ம் சூ. உ. நீடுபொா. ‡ இந்நூல். க-ம் சூ. உ-ம் அதி. உ. வித்துண்டா ¶ சிவஞானசித்தி, உ-ம் சூ. ௫ங. நித்தமாய். § மேற்படி. ௫-ம் சூ. எ. 0 மேற்படி. க-ம் சூ. ௫சு. ** திருநாவுக்கரசுநாயனுர் நின்ற திருத்தாண்டகம், பொது. சு-ம் திருமுறை. க. †† சிவப்பிரகாசம், உண்மை. ௫-ம் சூ. ங. கண்டறி. ‡‡ சிவஞானசித்தி, எ-ம் சூ. க. அனைத்துஞ். ¶¶ சிவாத்துவிதசைவர்.

லான் அவை ஈண்டைக் கேற்புடைய அறிவின்மே னின்றன. இஃதறியாதார் உரைப்பன எல்லாம் மேற்கோளைச் சாதித்தற் குரிய ஏதுவாதல் செல்லாது கூறியதுகூறலாய் முடியுமென் றொழிக.

அன்னியமி லாமை யரற்கொன் றுணர்வின்று
மன்னியமி லானசத்தைக் காண்குவனே—லன்னியமாக்
காணு னவன்முன் கதிர்முன் னிருள்போல
மாணு வசத்தின்மை மற்று.

எ—து. உ—ம். எ—னின். சுட்டுணர் வின்மையான் முதல்வன் அசத்தை அறியா னெனின் முற்றுணர் வுடைமைக் கிழுக்காம் *என்பாரை நோக்கி இழுக்கின்மை கூறி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். அன்னியம் இலாமை அரற்கு †உணர்வு ஒன்று இன்று ஆம். எ-து. தன்னுள் வியாப்பியமான பசு பாசங்களோடு வேற்றுமை யின்றி உடனாய் நிற்றலையுடைய முதல்வனுக்குச் சுட்டியறியக் கிடப்பதொன் றில்லை ஆகலான்,—அன்னியம் இலான் அசத்தைக் காண்குவனேல் அன்னியமாக் காணுன். எ-து. அத்தன்மையனாகிய முதல்வன் அசத்தை யறியவுறுவனாயின் அறிந்தாங் கறிவனன்றி நம்மனோர் போல வேறாகச் சுட்டியறிவா னல்லன்,—கதிர்முன் இருள் போல அவன் முன் மாணு அசத்து இன்மை. எ-து. ஞாயிற்றின் முன் இருட்டுப் போல அம் முதல்வ னெதிர் நன்மை யில்லாத பிரபஞ்சம் விளங்கி நில்லாது ஆகலான். எ-று.

எனவே, அசத்தை விடயிப்பதாகிய ஏகதேச வுணர்வு முற்றுணர்வைத் தடுப்ப தாகலான் அஃது இல்லாமை முற்றுணர்விற்கு மேம்பாடாவ தன்றி இழுக்காகா தென ஐய மகற்றி ஏதுவை வலியுறுத்தவாறு காண்க.

மாணுமை வியாபக வுணர்விற்கு விடய மாகாமை. இன்மை ஈண்டு விளங்காமை குறித்து நின்றது. மற்று அசை. மற்றுக் காண்குவனேல் என மேலே கூட்டி வினைமாற்றின்கண் வந்த தெனினு மமையும். உணர்வுங் கதிரும் ஆகுபெயர். கதிர்முன் னிருள் ஈண்டு முனையாமை மாத்திரைக்கு ஒருபுடை யுவமையாயிற் றென்பது வழிநூலாசிரியர் ‡"முனைத்திடா தசத்துச் சத்தின் முன்னிரு ளிரவி முன்போல்" என்றவாற்று னறிக.

முதலதிகரண முடிந்தது.



* சிவாத்துவிதசைவர். † உணர்வு உணரக் கிடப்பதாகிய பொருள். ‡ சிவஞான சித்தியார், எ-ம் சூ. க. அனைத்தும்.

## இரண்டாமதிகரணம்.

### இனி அசத்தினுக்கு உணர்வின்று என்றது.

எ—து. மே-ள். எ-னின். சத்து அசத்தையறியாதாயினும் அசத்து எனப் பட்ட தனு கரண புவன போகங்களுள் ஒன்றாய கரணம் விளக்குப் போல் விகார மின்றி நிற்கும் ஆன்ம சந்நிதியிற் பெத்த நிலைக்கண் அசத்தாய விடய ங்களை யறிந்தாற்போல முத்தி நிலையிற் சிவகரணமாய்நின்று சிவத்தை அறியு மென்றலும் கண்ணாடியி னிழல் போல ஆன்ம சந்நிதியின் அதன்க ணறிவு உண்டா மென்றலும் அமைவுடைத்துப் போலு மெனச் சிவசங்கிராந்தவாதி மதம் பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றிற் போந்த ஏதுவைக் கண்ணழித் துரைத்து மேற்கோட னுதலிற்று இ—ள். வெ—டை.

சூத்திரத்தின் இலது என்றது அறிவிலது என்னும் பொருட்டு என்பார் 'உணர்வின்று' என உரைத்தார். ஈண்டு 'அசத்து' என்றது தத்துவப் பிரபஞ் சத்தை; ஏனைப் பிரபஞ்சத்திற்கு அறிவின்மை சாதிக்க வேண்டாமையின்.

### அதுதா னிருபிக்கில் இன்றாகலான்.

எ—து. ஏது. எ—னின். பதிஞான பசுஞானங்களோ டொப்பப் பாசஞான மொன்றெனவைத் தெண்ணப்படு முரிமையுடைய வதனை அறிவுடைத்தன் றென்றல்பொருந்தாது*என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ - ள். அவ்வறிவாவது தூலமாய் நோக்கும்வழி அவ்வசத்துக்கு உள் ளது போலத் தோன்றினும் ஐயந் திரிபின்றி மாசறு காட்சியான் ஆராயும்வழி அதன்கண் இல்லா தாகலான் 'இனி அசத்தினுக்கு உணர்வின்று' என மேற் கொண்டது. எ - று.

எனவே, பாசம் வாயிலாக உயிரின்கண் நிகழும் ஞானமே பாசஞானம் என்று உபசரித்துக் கூறப்படும். அதனைப் பாசத்திற் குளதாகிய ஞான மெனக் காண்டல், நிரூபியாதவழிப் படும் மடமையே பிறிதில்லை என்றவா றாயிற்று.

பேய்த்தேர் நீ ரென்றுவரும் பேதைக்கு மற்றணைந்த
பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்
கண்டுணர்வா ரில்வழியிற் கா ணு மசத்தின்மை
கண்டுணர்வா ரில்லதெனக் காண்.

எ—து. உ—ம். எ—னின். அதனை உவமை முகத்தான் வலியுறுத்துத னுத லிற்று.

இ - ள். பேய்த்தேர் நீர் என்று வரும் பேதைக்கு மற்று அணைந்த பேய் த்தேர் அசத்து ஆகும் பெற்றிமையின். எ-து. பாலைநிலத்தின்கட் காணப் படுவதாய பேய்த்தேரை நீரென்று கருதி அதனை யுண்ண வருகின்ற நீர் வேட்

* சிவசங்கிராந்தவாத சைவர்.

கையுடைய மடவோனுக்கு அதனை யடுத்தவழித் தன்னு லணையப்பட்ட அப் பேய்த்தேர் நீராத'லின்றிப் பொய்யாந் தன்மை போல,—வாய்த்து.எ-து.குர வன் அறிவுறுக்கும் உபதேச மொழி கிடைத்து—அதனைக் கண்டு உணர்வார் இல்வழியின் அசத்து இன்மை காணும். எ-து. அவ்வசத்தி னியல்பை ஆரா ய்ந் தறிவா ரின்றி அறியமாட்டாதார் உள்வழி அவர்க்கு அதன்க ணறிவுள்ள தாய் மதிக்கப்படுஞ் சத்தாந் தன்மையே காணப்படும்,—கண்டு உணர்வார் இல்லது எனக் காண். எ-து. •அவ்வுபதேசமொழி கிடைத்து அதனியல்பை ஆராய்ந்தறிய வல்லார்க்கு அவ்வசத்து அறிவில்லதேயா மென்று அறிவா யாக. எ-று.

மற்று வினைமாற்று. மை பகுதிப்பொருள் விகுதி. இன் உவமவுருபு. வாய்த்தென்பது வாய்ப்ப என்பதன் றிரிவு. வாய்த்தல் நேர்படுதல். ஆண் டைக் கேற்புடைய வினைமுதல் அவாய்நிலையான் வந்தது. அசத்தின்மையா வது சத்தாந்தன்மை. நான்க னுருபு விகாரத்தாற் றொக்கது. அறிவு என்பது அதிகாரத்தான் வந்தது.

இரண்டாமதிகாரண முடிந்தது.



## மூன்றுமதிகரணம்.

### இனி இருதிற னறிவுள திரண்டலா வான்மா என்றது.

எ—து. மே—ங். எ—னின். சிவசத்தின் றன்மையே உயிர்க்குத் தன்மை யாவ தன்றி வேறில்லை யாகலிற் சத்தே அசத்தை அறியு மென்னுஞ் சிவாத் துவித சைவரையும் உயிர்க்குத் தன்மையென்பதொன் றின்மையின் அசத்தே சத்தை அறியு மென்னுஞ் சிவசங்கிராந்தவாத சைவரையும் மறுத்துச் சத்தும் அசத்துந் தம்மு ளறியுமா றில்லையென மேற் சாதித்தவழி இரண்டும் இவ் வாறாயின் இவற்றை யறியும் பொருள் வேறு என்னை? என்பாரை நோக்கிப் பாரிசேட வளவையான் அவ்விரண்டின் வேறாய் உயிர்க்குத் தன்மை யுண்டெ ன்பது விளக்கிச் சதசத்தி னியல்பை வரைசெய்து உணர்த்துத னுதலிற்று. இ-ள். வெ-டை.

ஈண்டு இரண்டலா வான்மா இருதிற னறிவுள தென்றது சத்தெதிர் நில்லாத அசத்துஞ் சத்துந் தம்முள் ஒன்று ஒன்றனை றறியப்படாமையான் இரு திறனறிவுளது இரண்டலா வான்மாவேயாம். தம்முள் ஒன்று ஒன்றனை அநுப விக்கப்படாத ஞாயிற்றையும் விடயத்தையும் அநுபவிக்குங் கண் போலு மென அனுமானங் கூறிக் காண்க. அவை உயிரானும் அறியப்படாதவழிப் பயப்பாடின்றிச் சூனியமாய் முடியு மாகலான் உயிர் அறிதற் றன்மைத்து என் பது தெற்றென உணர்க.

**இவ்விரண்டினையு மறிவதாய் உபதேசியாய் நின்ற அவ் வறிவு இரண்டன்பாலு முளதாய் உள்ள வதுவே அவ்வான் மாவாம் என்றது.**

எ—து. பொ—ரை. எ—னின். இருதிறனறிவு என்னுந் தொகைச் சொல் விரியுங்காற் படும் பொருள் வேறுபாடு விளக்கும் முகத்தான் உயிர்க்குத் தன்னியல்பு வேறுவேறு கூறுஞ் சமயங்க ளெல்லாம் மறுக்கப்படுமா றுணர்த் துத னுதலிற்று.

இ-ள். இவ்விரண்டினையும் அறிவதாய். எ-து. மேற் கூறிப்போந்த சத்தையும் அசத்தையும் அறியுந் தன்மைத்தாய்,—உபதேசியாய். எ-து. அறிவிக்க அறியுந் தன்மைத்தாய்,—அ இரண்டன்பாலும் நின்ற அறிவு உளதாய். எ-து. அவ்விரண்டின்கண்ணும் நிலைபெற்ற அநுபவ வறிவு உள்ளதாய்,—உள்ள அதுவே அவ் வான்மா ஆம் என்றது. எ-து. இவ்வாறுள்ள பொருள் யாது அதுவே சத்தும் அசத்து மல்லாத சதசத்தாகிய உயிர் என்றவாறும். 'இருதிறனறிவுள திரண்டலா வான்மா' என மேற்கொண்டது. எ - று.

ஆய் என்னும் வினையெச்சம் மூன்றும் உள்ள என்னும் பெயரெச்ச வினைக்குறிப்போடு முடிந்தன.

இருதிறனறிவு என்னும் தொகைச் சொல் ஈண்டு மூன்று பொருளின் மயங்கிற் றென்னுங் கருத்தான் இவ்வாறு மொழிந்தார். அவற்றுள், இருதிறனையு மறியு மறிவென்னும் இரண்டாம் வேற்றுமைத் தொகைப் பொருள் பற்றி 'இவ்விரண்டினையு மறிவதாய்' எனவும், இருதிறனால் விளங்கிய வறிவென்னும் மூன்றும் வேற்றுமைத் தொகைப் பொருள் பற்றி 'உபதேசியாய்' எனவும், இருதிறனினு முள்ள வறிவு என்னும் ஏழாம் வேற்றுமைத் தொகைப் பொருள் பற்றி 'நின்ற வறிவு இரண்டன்பாலு முளதாய்' எனவும், உரைக்கப்பட்டன.

'இவ்விரண்டினையு மறிவதா யுள்ள அது' என்பதனால் இரண்டும் இவ்வாறுயின் இவற்றை யறியும் பொருள் வேறு என்னை? என்னுங் கடாவுக்கு விடை கூறி அவ்விருவர் மதங்களையும் அவற்றோடு ஒருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

'உபதேசியா யுள்ள அது' என்றதனால் உயிர் அறிவிக்க வேண்டாது தானே யறியு மியல்பிற் றென்னுஞ் சமவாதசைவர் ஈசுரவவிகாரவாதசைவர் ஐக்கவாதசைவர் மதங்களையும் அவற்றோ டொருதன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

'இரண்டன்பாலு முளதா யுள்ள அது' என்பதனால் ஆன்மாவி னறிவு சத்தோடு கூடுமா றில்லை என்னும் பாடாணவாதசைவர் பேதவாதசைவர் மதங்களையும் சத்தோடு கூடியவழி ஒன்றுய்ப் போதலே யன்றி அதன்பா லுளதாமா றில்லை யென்னுஞ் சுத்தசைவர் மதத்தையும் அவற்றோ டொரு தன்மையவான சமயங்களையும் மறுத்தவாறு.

'இவ்விரண்டினையு மறிவதாய்'எனவே அவ்வறியுந் தன்மை இவ்விரண்டின் றன்மைபோ லன்றி *"இரு ளொளிய லாக்கண் டன்மை" போல வேறுயதோர்

* சிவப்பிரகாசம், உண்மை. ரு-ம் சூ. சு. சத்திது.

தன்மை என்பதூஉம், 'உபதேசியாய்' எனவே அஃதாகாயத்தின் குணமாய ஓசையி னியல்பு போலத் தன்னை விளக்குவதாகிய வியஞ்சக முள்வழி விளங்குவதோர் தன்மை என்பதூஉம், 'இரண்டன்பாலு மூளதாய்' எனவே அத்தன்மை படிகம் போலச் சார்ந்ததன்வண்ணமாய் அழுந்துந் தன்மை என்பதூஉம், பெறப்பட்டன.

அருவுருவந் தானறித லாயிழையா யான்மா
வருவுருவ மன்றாகு முண்மை—யருவுருவாய்த்
தோன்றியுட னில்லாது தோன்றாது நில்லாது
தோன்றன் மலர்மணம்போற் றொக்கு.

எ—து. உ—ம். எ—னின். அம்மூன்றனுள் முன்னையதனை வலியுறுத்தி இரண்டலாமையை விளக்குத னுதலிற்று.

இ-ள். ஆய் இழை ஆய் ஆன்மா அரு உருவம் அறிதல் அரு உருவம் அன்று ஆகும். எ-து. நுணுகிய நூல்களை ஆராய்வதாகிய உயிரே சத்து அசத்து என்னும் இரண்டினையும் அறிவ தாகலான் அஃது அவ்விரண்டுமின்றி அவற்றின் வேறாம். அற்றேல், அவ்விரண்டினையு மறியு முயிர்க்குத் தன்னுண்மை யறியப்படுமோ? படாதோ? எனக் கடாயினார்க்குப் படும் எனில் தன்னோடொப்பட மூன்றனையு மறிவ தென்னாது அவ்விரண்டினையு மறிவதா யென்றல் பொருந்தாது; படாதெனின் அறியப்படாத பொருள் சூனிய மெனப்பட்டு வழுவாமால் எனின்,—உண்மை அரு உருவாய்த் தோன்றி உடன் நில்லாது தோன்றாது நில்லாது மலர் மணம் போல் தொக்குத் தோன்றல். எ-து. அவ்வான்மாவி னுண்மைத் தன்மை அவ்விரண்டும் போல விளங்கித் தோன்றி அவற்றோடொப்ப நிற்பது மன்றாய் விளங்காது சூனியமாய் நிற்பது மன்றாய் மலரின்கண் வாசம் அவ்விருவகையு மின்றி அதன்க ணடங்கித் தோன்றுமாறு போலச் சத்திலும் அசத்திலுஞ் சார்ந்ததன்வண்ணமாய் அடங்கித் தோன்றுவதோ ரியல்பாம். ஆகலான், அஃது அவை போலத் தனித்து அறியப்படுவதொன்றன்றி அவ்விரண்டினையு மறியும் முகத்தான் அறியப்படுவதாம். எ-று.

ஆகலான் அஃது அவை போலத் தனித் தறியப்படுவதொன் றன்றி அவ்விரண்டினையு மறியும் முகத்தான் அறியப்படுவதாம் என்பது குறிப்பெச்சம்.

சுட்டுணர்விற்கு விடயமாகாமை பற்றிச் சத்தை 'அரு' என்றும் அதற்கு விடயமாதல் பற்றி அசத்தை 'உரு' என்றுங் கூறினார். 'உணருரு அசத்து' என் புழி 'உரு' என்றதும் அது நோக்கி. செவ்வெண் டொகை விகாரத்தாற் றொக்கது. தான் அசை.

அறிதலான் அன்றாகு மென இயையும்.

இழை நூலாகலான் ஈண்டுச் சாத்திரத்தை யுணர்த்திற்று.

ஆய்தல்—நுணுகுதல். * "ஒய்த லாய்த னிழத்தல் சாஅ—யாவயி னான்கு முள்ளத நுணுக்கம்" என்றார் தொல்காப்பியனாரும். 'ஆயிழையாய்'எனப் பொருளி னுணுக்கம் நூன்மே லேற்றப்பட்டது; இரண்டாவது விரித்துரைக்க.

* சொல்லதிகாரம், உரியியல். ௩௪.

உயிர்க்கு அறியுந்தன்மை யுண்டாகலா னன்றே வேதாகமம் முதலிய நூல்கள் உளவாயின என அதனை வலியுறுத்துவார் 'ஆயிழையா யான்மா என அதனை யுடம்பொடு புணர்த்து ஓதினார். இக்கருத்தே பற்றி, *"பலகலை யுலகி னிலவுத லானும்" என்றார் புடைநூலாசிரியரும். இவ்வா றன்றி ஆயிழையாய் என மகடூஉ முன்னிலை யாக்குவார்க்கு இவ்வுதாரணம் மேலதனை வலியுறுத்துதற் கெழுந்த தன்றாய்க் கூறியதுகூறல் என்னும் வழுவாய் முடியும் என் றொழிக. தேற்றேகாரம் விகாரத்தாற் றொக்கது. அருவுருவாய் என்புழி ஆக்கச் சொல் உவமைப் பொருள் குறித்து நின்றது; † "ஆள்வா ரிலிமா டாவேனோ" என்றாற்போல. தொக்குத் தோன்றன் மலர் மணம் போல் எனக் கூட்டுக.

மயக்கம துற்று மருந்திற் றெளிந்தும்
பெயர்த்துணர் நீ சத்தாகாய் பேசி—லசத்துமலை
நீயறிந்து செய்வினைக ணீயன்றி வேறசத்துத்
தானறிந்து துய்யாமை தான்.

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனம் அறியும் உயிர் சிவசத்தோ டொப்பச் சித்தாகும் என்பாரை நோக்கி 'உபதேசியாய்' என்றதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். மயக்கமது உற்றும் மருந்தின் தெளிந்தும். எ-து. நின்னறிவை விளக்குதற்கு உரிய வியஞ்சக மில்வழி ஒரு விடயத்தை இன்னதென் றறிய மாட்டாது மயக்கத்தை யுற்றும் பசி நோய்க்கு அன்னம் போல அம்மயக்க நோய்க்கு மருந்தாய வியஞ்சக முள்வழி அம் மயக்கம் நீங்கி அதனை யின்ன தென்று நிச்சயித்தும்,—பெயர்த்து உணர் நீ பேசில் சத்து ஆகாய். எ-து. இங்ஙனம் மாறிமாறி யுணர்ந்து வருகின்ற நீ சொல்லுமிடத்துச் சிவசத்தோடு ஒப்ப அறியுஞ் சத்தியுடையாய் அல்லை. அற்றேல் அசத்த தாவேன் போலும் எனின்,—நீ அறிந்து செய் வினைகள் நீ அன்றி அசத்துத் தான் அறிந்து துய்யாமை அசத்தும் அலை. எ-து. வியஞ்சகம் உள்வழியும் நீ முன் அறிந்து செய்த வினைகளை இப்பொழுது நீயே யறிந்து அநுபவிக்க வல் லையன்றி நின்னின் வேறாய் அசத்தாகிய பாசம் அறிந்து அநுபவிக்கமாட்டா மையான் அதனோ டொப்ப அசத்த தாவாயு மல்லை,—வேறு.எ-து.சத்த குண முடைய ஆகாயம் போல வியஞ்சகம் உள்வழி அறியு மாற்ற லுடைமையும் அஃது இல்வழி அவ்வாற்ற லின்மையு மாகிய இரண்டு முடைய நீ அவ்விரண் டற்கும் வேறாய்ச் சிதசித்தாந்தன்மை யுடையை. எ - று.

'மருந்திற் றெளிந்து'எனவே மயங்குதல் அஃது இல்வழி யென்பது பெற் றாம். வியஞ்சக மில்வழித் தலைப்படுவதூஉம் அஃது உள்வழி நீங்கி நிற்பதூஉ மாகிய மயக்கம் உண்டி யில்வழித் தலைப்படுவதூஉம் அஃது உள்வழி நீங்கி நிற் பதூஉம் ஆகிய இயல்புடைய பசியோ டொத்தலின் அதனைப் பசிநோயாக வும், தீர்த்த லொப்புமை பற்றி வியஞ்சகத்தைப் பசி தீர்க்கும் மருந்தாகவும்

* சங்கற்பநிராகரணம். நிமித்தகாரணபரிணாமவாதிசங்கற்ப நிராகரணம். சஅ-ம் அடி. † திருவாசகம், கோயின் மூத்ததிருப்பதிகம். எ. இரங்கு.

உருவகஞ் செய்தார். இஃது * ஏகதேசவுருவகம். மருந்தெனப் பொதுப்பட உருவகஞ் செய்தா ராயினும் மறித்து மறித்து வேண்டப்படுமாறு ஈண்டைக்கு ஏற்புடையது பசிநோய் தீர்க்கும் மருந்தே யாகலின் அவ்வாறு உரைக்கப் பட்டது.

அது பகுதிப்பொருள் விகுதி. உம்மை எண்ணின்கண் வந்தது. அசத்தும் என்னும் உம்மை இறந்தது தழீஇயிற்று. தான் என்பது முன்னையது எழுவாயுருபுபட நின்றது. பின்னையது அசைநிலை. துவ்வாமை துய்யாமை என மரீஇயிற்று. சத்தியுடைய பொருள் சத்தம், அஃதில்பொருள் அசத்தம் ஆகலின், அவ்வடமொழிகள் ஈண்டு அம்முக் கெட்டுக் குற்றியலுகரவீறாய் நின்றன; † "நாகணையான்" ‡ "பெற்றேன் றுயர்த்த பெருமான்" ¶ "பேது செய்து" § "வாது செயத்திரு வுள்ளமே" என்புழிப் போல.

அசித்துமலே என்பது பாடமாயின், மேற் சத்தாகாய் என்றதனை இசையெச்சமாகக் கொண்டு சத்தாந்தன்மையே யுடையா யல்லே; அதன்மேலுஞ் சித்தாமாறு யாங்ஙனம்? என்று உரைத்து இயைத்துக் கொள்க. இவ்வா றன்றி ஈண்டுச் 'சத்தாகாய்' 'அசத்துமலே' என்பவற்றை மேல் அருவுருவ மன்றாகும் என்றதன் பொருள் படக் கொண்டு உரைப்பாரும் உளர். அவர் ஆண்டே அமைந்து கிடந்த பொருளை மறித்துங் கூற வேண்டாமையும், 'பெயர்த்துணர்தீ' எனவும், 'அறிந்து துய்யாமை' எனவும், அறிவுடைமை அறிவின்மை பற்றிக் கூறும் பொருள் அவையாதல் செல்லாமையும் நோக்கிலர்.

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையா தசத்தாத
லஞ்ஞான முள்ள மணைதல்காண்—மெய்ஞ்ஞானந்
தானே யுளவன்றே தண்கடனீ ருப்புப்போற்
றானே யுளமுளவாத் தான்.

எ—து. உ—ம். எ—னின். அம்மயக்கம் அவ்வுயிரோடு இயைபுடைய முதல்வனுக்கும் உண்டு போலும் எனவும் அதுதான் உயிர்க்கு எக்காலத்து வந்தது எனவும் நிகழுங் கடாவை விடுக்கும் முகத்தான் 'இரண்டன்பாலு முளதாமாறு' வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். அஞ்ஞானம். எ-து. மேற் கூறிப்போந்த மயக்கமாவது,—மெய்ஞ்ஞானந் தன்னில் அசத்து ஆதல் விளையாது. எ-து. ஒருபெற்றித்தாய அறிவு எனப்படுஞ் சிவத்தின் எதிர் கதிர்முன் இருள் போல நிலையுதல் இல்லதாகலின் ஆண்டு உளதாதல் இன்றி,—மெய்ஞ்ஞானம் தானே உள அன்றே. எ-து.

* ஏகதேசவுருவகமாவது ஒருபாகத்தை உருவகஞ்செய்து மற்றைப்பாகத்தை உருவகஞ் செய்யாது விடுதல். வியஞ்சகத்தை அன்னமாக உருவகஞ்செய்து மயக்கத்தைப் பசியாக உருவகஞ் செய்யாமையால் இஃது ஏகதேச வுருவகம். † திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், கோயில். முதலாந்திருமுறை. க. கோணகணையானும். ‡ மேற்படி, திருப்பாசுரம். பொது. கக. அற்றன்றி. ¶ சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம். ௩௨. நீதியா. § திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் தேவாரம், திருவாலவாய். நாலடி மேல்வைப்பு. ௨. வைதிகத்தின்.

அச்சிவம் என்று உள்ளது அன்றே,—தான் ஏய் உளம் உளவா. எ-து. தான் பொருந்துதற்கு உரிமையுடைய உயிர்கள் உள்ளனவாக,—உள்ளம் அணைதல். எ-து. அவ்வுயிர்களைப் பற்றி நிற்றல்,—தண் கடல் நீர் உப்புப் போல் காண் எ-து. தண்ணிய கடலின்கண் உளதாதல் இன்றி அக்கடலிடத்து உளதாகிய நீரைப் பற்றி நிற்கும் உப்புப் போல் என்று அறிவாயாக. எ-று.

விளையாது என்னும் வினையெச்சமறை அணைதல் என்னுந் தொழிற்பெயரோடு முடிந்தது. தானே என்பது கட்டுரைக்கண் வந்தது. 'தானே உளம் உளவாத் தான்' என்புழித் 'தான்' என்பது முன்னையது எழுவாய்; பின்னையது அசைநிலை. ஏய் உளம் என்னும் வினைத்தொகை *"அறிவறிந்த மக்கட் பேறு" போல நின்றது. ஏய்தற்கு உரிமையாவது †மேற் காட்டினும்.

'தண்கடனீ ருப்புப்போல்' என்றதனால் முப்பொருள்களும் வியாபக வியாப்பியங்களாய் நிற்குமாறும் பெறப்பட்டது. இரண்டன்கண்ணும் உயிர்க்கு இயைபுடைமை கூறவே, இரண்டன்பாலும் உளதாதலை வலியுறுத்தவாறு காண்க.

'ஈண்டு இருதிறனையு மறியு மறிவுளது' எனவே இருதிறனாகிய சத்து அசத்து எனப்பட்டன எல்லாம் ‡பிரமேயம் அவற்றை அறியுஞ் சதசத்தாகிய உயிர் ¶பிரமாதா அவ்வுயிரின் அறிவாகிய சிற்சத்தி §பிரமாணம் அவ்வறிவு நிகழ்ச்சி ○பிரமிதி என்பதூஉம், 'இருதிறனால் விளங்கு மறிவுளது' எனவே அவ்விரண்டனுள் அசத்தான் அறிவு விளங்கும்வழித் தனக்கு வேறாய் நின்று விளக்குவனவாய காட்சி அனுமானம் உரை எனப்படும் அசத்தாகிய பாசஞானம் மூன்றும் சத்தான் அறிவு விளங்கும்வழி அன்னியம் இன்றித் தனக்கு ஆதாரமாய் உடன் நின்று விளக்குஞ் சிவஞானமுந் தனக்கு வியஞ்சகங்கள் ஆகலான் அது பற்றி அவையும் பிரமாணம் என்று உபசரித்துக் கூறப்படும் என்பதூஉம், 'இருதிறனினு மறிவுளது' எனவே ஈரிடத்துங் கேடின்றி அசத்தான் விளங்கி அசத்தை அறிவுழி அசத்தின்பாலும் சத்தான் விளங்கிச் சத்தை அறிவுழிச் சத்தின்பாலும் அதுவதுவாய் அழுந்தும் என்பதூஉம் பெறுதும்.

இவ்வாறன்றி வியஞ்சகங்களையே பிரமாணம் என்னுந் தார்க்கிகர் முதலியோர் மதங்கள் **பொருந்தாமையும், அவ்வியஞ்சகங்களான் நிகழும் பிரமிதி வேறுபாடும், அவற்றது இயல்புகளும், ஈண்டு விரிப்பிற் பெருகும்; பௌட்கரம் முதலிய சிவாகமங்களுட் கண்டுகொள்க.

மூன்றுமதிகரண முடிந்தது.



ஏழாஞ்சூத்திர முடிந்தது.

---

* திருக்குறள். ௬௧. பெறுமவற்றுள். † ௯௯-ம் பக்கத்திற்காண்க. ‡ பிரமேயம்-அளக்கப்படும்பொருள். ¶ பிரமாதா-அளப்பவன். § பிரமாணம்-அளவைக்கருவி. ○ பிரமிதி-அளத்தல். ** இதனை ௧௭௯-ம் பக்கத்துக்குறிப்பிற்காண்க.

# எட்டாஞ்சூத்திரம்.

ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே.

எ—து. சூ—ம். எ—னின். ஞானத்தினை உணரும் முறைமை யினை உணர்த்துத னுதலிற்று.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக்கருத்து உணர்த்துத னுதலிற்று.

இ-ள். அவ்வான்மாவின் அறிவாவது மேல் 'இருதிறன்' என்றதனுள் அசத்தான் விளங்கி அசத்தின்பால் உளதாய் அசத்தினை அறிந்து *நின்ற வாறுஞ் சத்தான் விளங்கிச் சத்தின்பால் உளதாய்ச் சத்தினை அறிந்து † நிற்குமாறுந் தரிசிக்கும் முறைமையினை உணர்த்தும் முகத்தாற் சாதித்தற்கு உரிய அதிகாரந் தனக்கு உண்டென மேலைச் சூத்திரத்தான் அறிந்த ஆன்மாவுக்குச் சாதித்ததனாற் பெறப்படும் ‡ பயனும் அதற்குச் ¶சிறந்த சாதனமாவதும் §அது வருவாயும் இவை என்பது உணர்த்துதல் இவ்வெட்டாஞ் சூத்திரத்தின் கருத்து. எ - று.

இதனானே சூத்திர இயையும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப் பொழிப்பு. உயிர் தான் முன்னே செய்து கொள்ளப்பட்ட புண்ணிய விசேடத்தால் தனக்கு அந்தரியாமியாய் இதுகாறும் உள் நின்று உணர்த்தி வந்த பரம்பொருளே இப்பொழுது குரு வடிவமுங் கொண்டு எழுந்தருளி வந்து சிவதீக்கை செய்து, மன்னவ குமாரனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடருட் பட்டு வளர்ந்து நின் பெருந்தகைமையை அறியாது மயங்கி இடர்ப்பட்டாய் நின் பெருந்தகைமையாவது இவ்வியல்பிற்று என்று அறிவுறுப்ப அறிந்த மாத்திரையே அவ்வேடரை விட்டு நீங்கி அன்னியமின்றி அனன்னியமாந் தன்மையின் நிலைபெற்று அம்முதல்வன் திருவடிகளை அணையும். எ - று.

உயிர் என்பது மேலைச் சூத்திரத்தி னின்றும் வருவித்து உரைக்கப்பட்டது. தவத்தினிற் குருவுமாய் வளர்ந்து அயர்ந்தனை என உணர்த்த விட்டுச் செல்லும் என இயையும். புலன் ஆகுபெயர். வளர்ந்து அயர்ந்தனை என்பது "ஈந்து புகழ்பெற்றான்" என்புழிப் போலக் காரணகாரியப் பொருட்டாய் நின்றது. தம் முதல் என்றது வேறு முடிபாகலிற் பால் வழுவின்மை உணர்க.

குருவும் என்ற உம்மை உயிர்க்கு உயிராய் உள் நின்று உணர்த்திய தூஉம் அன்றி என இறந்தது தழீஇயிற்று: சிறப்புமாம்.

---

* அசத்தான் விளங்குதன் முதலியன பெத்தநிலைக்கண்ண ஆகலின் நின்றவாறு என இறந்தகாலத்தாற் கூறினர். † சத்தான் விளங்குதன் முதலியன முத்திநிலைக்கண்ண ஆகலின் நிற்குமாறு என எதிர்காலத்தாற் கூறினர். ‡ பயன் அரன்கழல் சேறல். ¶ சிறந்தசாதனம் ஞானம். § அதுவருவாய் தவம்.

அன்னியமின்மை அத்துவிதம். அஃதாவது சேறலைப் பயப்பித்ததாய் ஆண்டு உளதாகிய இயைபு.

அரனென்றது சுட்டுப்பெயர்பட நின்றது.

வெண்கொற்றக் குடையும் நவமணி முடியுஞ் சிங்காதனமும் மன்னவர்க்கே உரிய சிறப்படையாளமாம்; அது போலப் பிரபஞ்சம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாம் இயல்பாகிய ஒரு பெரு வெண்கொற்றக் குடையும், எவற்றையும் ஒருங்கே ஓரியல்பான் அறியும் போறிவாகிய ஒரு பெருஞ்சுடர் முடியும், அங்கங்கே உயிர்க்கு உயிராய் நின்று எவற்றினையுஞ் செலுத்தும் இயல்பாகிய ஒரு பெருஞ் சிங்காதனமும் பிறர் ஒருவர்க்கு இன்றித் தனக்கே உரிமையாகச் சிறந்தமை பற்றிப், பசுக்களுக்குப் பாசங்களை அரித்தலான் அரன் என்னுந் திருப்பெய ருடைய முதல்வனை, மன்னவனாகவும், அம்முதல்வனது பேரானந்தப் பெருஞ்செல்வம் முழுதுந் தனதேயாகக்கொண்டு அநுபவிக்குஞ் சுதந்திர முடைமையுஞ் சித்து எனப்படுஞ் சாதி ஒருமையும் பற்றி ஆன்மாவை மன்னவ குமாரனாகவும், அவ்வான்மாவை அறிவுப் பெருஞ்செல்வம் முழுதையும் ஆறலைத்துக்கொண்டு சிறுமை உறுத்துதலும் விதி விலக்கை இழப்பித்து இழி தொழிலில் நிற்பித்தலும் ஆகிய இயல்பு பற்றி ஐம்பொறிகளை வேடராகவும் உருவகஞ் செய்தார். இஃது *ஏகதேச உருவகம்.

'ஐம்புல வேடரி னயர்ந்தனை வளர்ந்தென' எனவே ஐம்புல வேடரின் வளர்ந்து அயர்தலும் அநுவாத முகத்தாற் பெற்றாம்.

இதனுள், தவத்தினி லுணர்த்த என்றது ஓரதிகரணம்; தம்முதல் குருவுமாய் என்றது ஓரதிகாரணம்; ஐம்புலவேடரி னயர்ந்தனை வளர்ந்தென என்றது ஓரதிகாரணம்; விட் டன்னிய மின்மையி னரன்கழல் செலுமே என்றது ஓரதிகாரணம்; ஆக நான்கதிகாரணத்தது இச்சூத்திரமென்று உணர்க.



## முதலதிகரணம்.

### ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தான் ஞான நிகழும் என்றது.

எ-து. மே-ள். எ-னின். †மேற் கூறிப் போந்த சாதகராற் செய்யப்படுஞ் சாதனமும் அது வருவாயும் வேறுவேறாகக் கூறுஞ் சமயத்தாரை நோக்கிச் சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ-ள். வெ-டை.

மேற் கூறிப்போந்த இயல்புடைய ஆன்மாக்களுக்கு என்பார் 'இவ்வான் மாக்களுக்கு' என்றார்.

---

* ஐம்பொறிகளை வேடராக உருவகஞ் செய்து முதல்வனை மன்னவனாகவும் உயிரை மன்னவ குமாரனாகவும் உருவகஞ் செய்யாமையால் இஃது ஏகதேச உருவகம்.
† ஏழாஞ்சூத்திரத்தில்.

படிமுறையான் அன்றி இவ்வொரு பிறவியிற் செய்த தவந்தானே அமையாதென்பது உணர்த்துதற்கு 'முற்செய் தவம்' என விசேடித்தார்.

ஈண்டு ஞானம் என்றது குரவன் உணர்த்தியவாறு சிவஞானங் கண்ணாகக் கொண்டு அறிவதாகிய சாதன அறிவின் மேற்று.

நிகழ்தல் ஐயந் திரி பின்றி விளங்குதல்.

மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்னெறியாகிய ஞானத்தைக் காட்டி யல்லது மோக்ஷத்தைக் கொடாவாகலான்.

எ—து. ஏது. எ—னின். தவங்களே சாதனமாதல் அமையும் ஞானம் எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று. இ-ள். வெ-டை.

ஈண்டுத் தவம் எனப்பட்டன பிற அல்ல என்பார் சரியை கிரியா யோகங்களை எனக் கிளந்து உரைத்தார்.

கிரியா யோகங்கள் என்னும் உம்மைத் தொகை வடநூன் முடிபு. கிரியா யோகம் இரண்டற்குந் தீக்கை ஒன்று என்பது தோன்ற அவ்விரண்டனையுந் *தொகுத்து ஓதிச் சரியையைத் தமிழுக்கு உரிய ஈற்றுன் வேறு வைத்தார்.

ஆளுடையபிள்ளையார் முதலாயினோர்க்குத் தவம் இன்றியும் ஞானம் நிகழ்ந்தவாறு என்னை? என்னுங் கடாவை விடுத்தற்கு 'மேற் செய்துழி' என ஈண்டும் வலியுறுத்தார்.

மேலாகிய உண்மைச் சரியை கிரியா யோகங்களை எனினும் அமையும்.

காட்டிக் கொடுக்கும் எனற்பாலதனை எதிர்மறைமுகத்தாற் கூறினார், ஞானத்தை இன்றி அமையாமை உணர்த்துதற்கு. சரியை கிரியா யோகங்களைச் செய்துழி என்றது உபலக்கணம் ஆகலின் தீக்கை பெற்றுழி அதுவும் ஞானத்தைக் காட்டி அல்லது மோட்சத்தைக் கொடாது எனக் கொள்க. அவையெல்லாம் ஞானத்தைக் காட்டி அல்லது மோட்சத்தைக் கொடாமையை வலியுறுத்துவார் 'நன்னெறி யாகிய' என ஞானத்தை விசேடித்தார். நன்மை எனப்படுவன எல்லாவற்றினுஞ் சிறந்த நன்மையாவது வீடுபேறு என்பது. அதனைத் தலைப்படுதற்கு ஏதுவாய்ச் சிறந்த நெறியாகலின் ஞானம் 'நன்னெறி' எனப்பட்டது. வீட்டிற்கு நெறி என அவ்வச் சமயத்தாராற் கூறப்படுவன அனைத்துந் தன்கண்ணே வந்து கூட நின்ற பெரு நெறி ஆகலானும் அது நன்னெறி எனப்பட்டது: நன்னெறி சன்மார்க்கம் என்பன ஒருபொருட் கிளவி.

தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறுப்பா ராகத்—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்றூர்சூழ் சொல்லுமாங் கண்டு.

* தொகுத்தல் - சேர்த்தல்.

எ—து. உ—ம். எ—னின். மேற் சரியை கிரியா யோகங்களைச் செய்தார் அவற்றான் ஞானத்தைக் காணும் முறைமை எவ்வாறு? என்பாரை நோக்கி அஃது ஆமாறு உணர்த்தி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். தவம் செய்தார். எ-து. சரியை முதலியவற்றைச் செய்தார்கள்,— தவலோகம் என்றும் சார்ந்து. எ-து. அவ்வத் தவப்பயன்களைப் பயப்பிக்குஞ் சாலோகாதி பதங்களை ஒருதலையாக நண்ணி ஆண்டு உளவாகிய இன்பங்களை அநுபவித்து,—பற்றுப் பவம் செய்து அறுப்பார் ஆக. எ-து. முன் உடம்பு இறக்கும் நாள் அடுத்த வினை காட்டுங் கதிநிமித்தம் பற்றி எழுந்த அவாவினை மீள நிலத்தின்கட் பிறந்து அநுபவித்து நீக்கிக்கோடற் பொருட்டு,—தவம் செய்த நற் சார்பில் வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலை. எ-து. மீளத் தவஞ் செய்தற்கு உரிய உயர்ந்த குலத்தின்கண் வந்து தோன்றித் தவக்குறை யான் அவ்விடயப் பற்று முறுகாவண்ணம் அறுத்துத் தத்துவ ஞானத்தைத் தலைப்படுவா ராதலை,—கற்றார் சூழ் கண்டு சொல்லும். எ-து. வீட்டு நூல்களைக் கற்றாரது சூழ்ச்சி அந்நூற் கருத்து உணர்ந்து சொல்லும். எ - று.

தவந்தானாக பிறிதொன்றுதானாக இவ்வுலகத்து உடம்பொடுநின்று ஈட்டிய வினை எல்லாம் அவ்வுலகத்திற் செலுத்தித் தத்தம் போகங்களைப் பயந்தேவிடும் ஆகலான் அவற்றை ஒரு ஞான்றும் பிறழுமாட்டார் என்பார் 'என்றுந் தவலோகஞ் சார்ந்து' என்றார்.

ஆக என்னுஞ் செயவெ னெச்சம் "உண்ண வந்தான்" என்புழிப் போலத் தற்பொருட்டாய் நின்றது.

பற்றறுதற்பொருட்டு வந்து உதித்து எனவே ஆண்டுப் பற்றுச் செல்லாதவழி அவ்வுலகத்து நின்றாங்கே ஞானத்தை நண்ணுவர் என்பதூஉம் பெறுதும்.

கற்றாரது சொல்லுதற் றொழில் சூழ்ச்சிமேல் ஏற்றப்பட்டது.

ஆம் அசை. நற் சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுதல் என்ற அருத்தாபத்தியான் இழி குலத்தோர் தத்துவ ஞானத்துக்கு உரியர் அல்லர் என்பது பெறப்பட்டது.

> பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கு
> மிசைத்து வருவினையி லின்ப—மிசைத்த
> விருவினை யொப்பி லிறப்பி றவத்தான்
> மருவுவனு ஞானத்தை வந்து.

எ—து. உ—ம். எ—னின். சரியை முதலிய தவங்களே தத்துவ ஞானத்தைக் காட்டும் என யாப்புறுத்து ஓதியது என்னை? வேதத்துட் கூறிய வேள்வி முதலாயினவுந் தத்துவ ஞானத்தைக் காட்டும் என்றல் அமையும் எனப் பாட்டாசாரியன் மதம் பற்றிக் கூறுவாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். இசைத்து வரு வினையில் இன்பம். எ-து. ஒரு நல்வினை செய்வான் தொடங்கி அறநூலை ஆய்வாரது உணர்வின்கண் விடயமாய் வரும் பொழுதே

தம்மாற் பெறப்படுங் காமியப் பயன்களை உடன் கூறிக்கொண்டே வருகின்றனவாய வேள்வி முதலிய அறங்களின் பயனாகிய இன்பம்,—பசித்து உண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும். எ-து. முன்னர்ப் பசித்து உண்டு பின்னும் பசிப்பானுக்கு அவ்வுண்டியான் வரும் இன்பத்தை ஒக்கும் ஆகலான்,—இசைத்த இரு வினை இறப்பு இல் தவத்தான் ஒப்பில். எ-து. ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்த முறுத்துதற்கட் பொன் விலங்கும் இருப்பு விலங்கும் போலத் தம்முட் சமப்படுத்து உணரப்படுவனவாகிய அறம் பாவம் இரண்டுந் தம்மைப் போல் அநுபவ மாத்திரையாற் கெடுத லின்றி மேன்மேன் முறுகி வளர்வனவாய சரியை முதலிய தவங்களானே நேராக வொத்தால்,—வந்து ஞானத்தை மருவுவன். எ-து. அத்தவ முதிர்ச்சி யுடைமையான் முன்னர்க் கூறப்படும் ஞானகுருவைத் தேடி வந்து ஞானத்தைத் தலைப்படுவன். எ - று.

வேள்வி முதலாயின எல்லாம் அழிதன் மாலையவாய காமியங்களைப் பயப்பன வன்றித் தத்துவ ஞானத்தைப் பயவா என்றற்கு அவற்றை விதித்த நூல்களே சான்று என்பார் 'இசைத்து வரு வினை' என்றும், அவை ஞானத்தைப் பயவாமை மாத்திரையே யன்றித் தீவினை போல அது நிகழவொட்டாது தடை செய்து நிற்றலும் உடைமையின் அவற்றது கழிவே ஈண்டைக்குக் காரண மாவது என்பார் 'இசைத்த விரு வினை யொப்பில்' என்றுங் கூறினார்.

ஒப்பில் என்னும் வினையெச்சம் மருவுவன் என்னும் பிறவினைமுதல்வினை கொண்டது. தேற்ற ஏகாரம் விகாரத்தாற் றொக்கது. ஆம் அசை. *வருதல் இடவழுவமைதி.

பசிப்பான் என்றது ஆகுபெயர். இசைத்து வரு வினை என நூலின் தொழில் வினைமேல் ஏற்றப்பட்டது. மிசைத்த விரு வினை ஒப்பில் எனப் பாடம் ஓதி இருவினைகளுண் மிக்க இருவினையாகிய பிரமக் கொலை பரிமேத வேள்வி போல்வன தம்முள் ஒருங்கே பயன் தருவனவாய் ஒத்த காலத்து என்று உரைப்பாரும் உளர். அஃது ஈண்டைக்குப் பயன் படாமையுஞ் சித்தாந்தத்துக்கு ஏலாமையும் அறிக.

'இசைத்து வருவினையி லின்பம் பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும்' எனவே, இறப்பி றவத்தான் மருவப்படும் ஞானம் பசித்து உண்டு பின்னும் பசித்தல் இல்லாத கடவுளர்க்கு அமிழ்த உண்டியான் ஆய பயனை ஒக்கும் என்பதூஉம் பெறப்பட்டது. படவே, அவ்வமிழ்த உண்டி நரை திரை மூப்பு இன்றி நிலைபெறுதலாகிய பெரும்பயனைத் தருதன் மாத்திரையே அன்றிப் பசி தீர்தலாகிய அவாந்தரப் பயனையுந் தருமாறு போல இறப்பிறவமுந் தத்துவ ஞானத்தைப் பயத்தன் மாத்திரையே. அன்றித் தத்தம் பதமுத்தி ஆகிய அவாந்தரப் பயனைப் பயத்தலும் அமைவுடைத்தாமாறு கண்டு கொள்க.

முதலதிகாரண முடிந்தது.



* வருதல் இடவழுவமைதியாதலை "அவற்றுள், தருசொல் வருசொல்" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தா னுணர்க.

## இ ர ண் ட ா ம தி க ர ண ம்.

### இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதறுனே குருவுமாய் உணர்த்தும் என்றது.

எ—து. மே—ள். எ—னின். மேற் கூறியவாற்றுன் நிகழும் ஞானத்தை உணர்த்துவார் கலை ஞானங்களை உணர்த்துவார் போல நம்மனோரில் ஒருவராதல் அமையும் எனச் சாங்கியர் நையாயிகர் முதலியோர் மதம் பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட ணுதலிற்று.

இ - ள். மேற் கூறியவாற்றுற் சரிகை முதலிய மூன்றும் முற்றிய பின்னர் இம் முற்றுதலானே மல பரிபாகஞ் சத்தி நிபாதம் நிகழ்ந்து தத்துவ ஞானத்தின் அவாவுதலை உடைய உயிர்கட்கு இதுகாறுந் தமக்கு முதலாய் உள் நின்று உணர்த்தி வந்த பரம்பொருளே அப்பருவம் அறிந்து குருமூர்த்தமாய் எழுந்தருளி வந்து அதனை அறிவுறுக்கும். எ - று.

எனவே, ஏனையோர்க்கு அது கூடாது என்றவாறுயிற்று. இக்கருத்தே பற்றி *"அகத்துறுநோய்க் குள்ளின ரன்றி யதனைச்-சகத்தவருங் காண்பரோ தான்" என்றுர் புடைநூலாசிரியரும். ஏகாரந் தேற்றம்.

### அவன் அன்னியமின்றிச் சைதன்னிய சொரூபியாய் நிற்றலான்.

எ—து. ஏது. எ—னின். †"மாயா வுருவன் மாயா வுருவினை—யேயான்" எயு மெனின் எம்மனோரில் ஒருவனும் முடியும் ஆகலின் தமது முதல் குருமூர்த்தி ஆதாரமாகத் தரித்து நின்று உணர்த்தும் என்றலே அமைவுடைத்து எனப் பொதுவகையான் அதிட்டான பக்கங் கூறுவாரை நோக்கிச் சிறப்பு வகையான் ஆவேச பக்கமாமாறு உணர்த்தி மேற்கோளைச் சாதித்தனுதலிற்று.

இ - ள். அம்முதல்வன் பாலில் நெய் போல மறைந்து வேறாய் நிற்றல் இன்றிச் சுத்தான்ம சைதன்னியமே தனக்குச் சொரூபமாகக் கொண்டு தயிரில் நெய் போல ஆண்டு விளங்கி நிற்றலான் 'இவ்வான்மாக்களுக்குத் தமது முதறுனே குருவுமாய் உணர்த்தும்' என மேற்கொண்டது. எ - று.

பாலில் நெய் போல வேறாய் மறைந்து நின்று செலுத்தப்படுவனவற்றினும் பொதுவாய்ச் செல்வதாகிய அதிட்டானபக்கங் கொள்வார்க்கு ஏனைச் சமய குரவருங் குரவராவான் சேறலின் அஃது ஈண்டைக்கு அமைவுடைத்தன்று என்பதாம்.

சைதன்னியம் என்றுர் மாசு தீர்ந்த தென்பது உணர்த்துதற்கு.

---

* திருவருட்பயன், அருளுருநிலை. உ. † சங்கற்பநிராகரணம் சைவவாதி சங்கற்ப நிராகரணம். உகூ. உஎ. அடி.

மெய்ஞ்ஞானந் தானே விளையும்விஞ் ஞானகலர்க்
கஞ்ஞான வச்சகலர்க் கக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்து மன்றிப் பிரளயா கலருக்கு
முன்னுணர்த்துந் தான்குருவாய் முன்.

எ—து. உ—ம். எ—னின். ஒரோ ரிடங்களிற் குருவாய்வந்து உணர்த்துதல் இன்றியும் ஞானம் நிகழுமாறு என்னை? என்பாரை நோக்கி அதனை வரைசெய்து உணர்த்தி வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். *விஞ்ஞானகலர்க்குத் தானே மெய்ஞ்ஞானம் விளையும். எ-து. அம் முதல்வன் மூவகை ஆன்மாக்களுள் விஞ்ஞானகலராயினார்க்குத் தன்மையின் நின்ற வாறே தத்துவ ஞானத்தை விளைவிப்பன்,—அன்றிப் பிரளயா கலருக்குத் தான் குருவாய் முன் உணர்த்தும். எ-து. அவ்வாறன்றிப் பிரளயா கல ராயினார்க்கு நாற்றோளும் முக்கண்ணும் கறைமிடறும் முதலிய உறுப்பிற்றாய் முத்தொழில் நடாத்தி நின்ற தன் இயற்கைவடிவே குருவடிவாகக் காட்டி முன்னாக நின்று தத்துவஞானத்தை உபதேசித்து உணர்த்துவன்,—அஞ்ஞான அச்சகலர்க்கு அக் குரு ஆய்ப் பின் மெய்ஞ்ஞானம் உணர்த்தும். எ-து அவிச்சையை உடைய சகலராயினார்க்கு அவர் வடிவு போலும் வடிவுடைய குருவாகி அவ்வடிவின் பின்னாக மறைந்து நின்று தத்துவஞானத்தை உணர்த்துவன்,—முன். எ-து. அவ்வேறுபாட்டை அறிவாயாக. எ-று.

முன் என்றதனை முன்னைப் பொருள் என்று உரைத்து எழுவாயாகக் கோடலும் ஒன்று.

விளையும் என்பது "அரசன் எடுத்த ஆலயம்" என்புழிப்போல விவ்விகுதி தொக்கு நின்றது. †"உண்ணின் றறுத்தருளி" என்றார் புடைநூலாசிரியரும். இவ்வாறன்றி எளிதின் அடப்படுதல் நோக்கி "அரிசி தானே அட்டது" என்

* விஞ்ஞானகலர் விஞ்ஞானத்தாற் கலையற்றவர். பிரளயாகலர் பிரளயத்திற் கலையற்றவர். சகலர் கலையோடு கூடினவர். இவை காரணப்பெயர். விஞ்ஞானகலர் ஆணவபந்தம் ஒன்றுமே உடையர். பிரளயாகலர் ஆணவம் கன்மம் என்னும் இரண்டு பந்தமுமுடையர். சகலர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று பந்தமு முடையர். இனி, விஞ்ஞானகலர் அநாதியே மலபந்தமாத்திர முடைய விஞ்ஞானகலரும், அனுபவத்தானுதல் விஞ்ஞானத்தானுதல் யோகத்தானுதல் சந்நியாசத்தானுதல் தீக்கையானுதல் இடையே மாயாபந்தம் கன்மபந்தம் முழுவதும் நீங்கி அசுத்தமாயையின்மேல் உள்ள புவனங்களில் நுகரக்கடவனவாகிய போகங்கட்கு ஏதுவாய் நின்ற மலபந்தம் ஒன்றே உடையராகிய விஞ்ஞானகலரும் என இருவகையர். பிரளயாகலர், அநாதியே மல கன்மங்கள் மாத்திர முடைய பிரளயாகலரும் இடையே பரிபக்குவவிசேடத்தால் மாயா பந்தமாத்திரம் நீங்கி ஏனை இரண்டுமுடைய பிரளயாகலரும் என இருவகையர். சகலர், தேவர் மக்கள் முதற் பலவகைப்படுவர். விஞ்ஞானகலருக்குரிய புவனங்கள், அசுத்த மாயைக்கும் சுத்தவித்தைக்கும் இடையே உள்ளன. பிரளயாகலருக்குரிய புவனங்கள், அசுத்தமாயை முதல் அராகம் ஈறான தத்துவங்களில் உள்ளன. சகலருக்குரிய புவனங்கள், மூலப்பகுதி முதற் பிருதிவி ஈறான தத்துவங்களில் உள்ளன. இன்னும் இம்மூவகை ஆன்மாக்கள் இயல்பெல்லாம் ஆகமங்களுட் காண்க. விஞ்ஞானகலர் என்பது விஞ்ஞானகலர் என மரீஇயிற்று. இது திராவிடமாபாடியத்துட் கண்டது. † போற்றிப் பஃறொடை. சுக-ம் அடி.

றுற் போல எளிதின் விளைவிக்கப்படுதல் நோக்கி 'மெய்ஞ்ஞானந்தானே விளையும்' என்றார் எனினும் அமையும்.

ஈண்டு 'அஞ்ஞானம்' என்றது அவிச்சையை என்பது சகலர்க்கே அடையாய் ஓதியவாற்றா னறிக.

அச்சகலர் என்றது 'தவஞ்செய்தார்' என மேல் எடுத்துக் கொள்ளப்பட்ட சகலர் என்றவாறு. 'அக்குரு' என்றது மேற்கோளிற் கூறிப் போந்த குரு என்றவாறு.

'தானே விளையும்' 'முன் உணர்த்தும்' 'பின் உணர்த்தும்' எனவே, விஞ்ஞானகலர்க்குத் தன்மையினும் பிரளயாகலர்க்கு முன்னிலையினும் சகலர்க்குப் படர்க்கையினும் நின்று உணர்த்தும் என வரைசெய்தவாறு காண்க. இவற்றுள் முன்னைய இரண்டும் *நிராதாரம் எனவும் பின்னையது †சாதாரம் எனவுங் கூறப்படும்.

அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்
செறியுமா முன்பின் குறைக—ணெறியிற்
குறையுடைய சொற்கொள்ளார் கொள்பவத்தின்வீடென்
குறைவில்சகன் சூழ்கொள் பவர்க்கு.

எ—து. உ—ம். எ—னின். விஞ்ஞானகலர் முதலிய மூவர்க்கும் ஓரியல்பான் உணர்த்தாது அவ்வாறு தன்மையினும் முன்னிலையினும் பின்னிலையினுமாய் உணர்த்துதல் எற்றுக்கு? என்பாரை நோக்கிக் காரணங் கூறி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். உளங்கள் நெறியின் அறிவிக்க அன்றி அறியா. எ-து. உயிர்களெல்லாந் தமக்கு உரிய படிவழியின் வைத்து முதல்வன் அறிவிக்க அறியும் இயல்பின அன்றி ஒன்று போல் அறிவிக்க அறியும் இயல்பின அல்ல ஆகலான்,—குறைவு இல் சகன் சூழ் கொள்பவர்க்கு. எ-து. அவ்வறிவாற் குறைபாடு இல்லாத சகக்கடவுளது உபதேச மொழியைக் கொண்டு உணரும் இயல்பினராகிய பிரளயாகலர் சகலர்க்கு,—குறைகள் முன் பின் செறியும் ஆம். எ-து. அவ்வறிவித்தால் அறிதலாகிய குறைகள் முன்னிலையினும் பின்னிலையினும் நிகழ்வனவாம்,—குறை உடைய சொல் கொள்ளார் கொள் பவத்தின் வீடு ஆம் என். எ-து. குறைவில் சகனுலாகிய குறையினை யுடைய உபதேச மொழிகொண்டு உணரவேண்டாத விஞ்ஞானகலர்க்கு முதல்வனாற் கொள்ளப்பட்ட தன்னுண்மை மாத்திரையின் வீடு பயக்கும் உணர்வு உண்டு என்று அறிவாயாக. எ - று.

குறை இன்றியமையாப் பொருள்; அது ‡"வினைக்குறை—தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு,, என்பதனுட் பரிமேலழக ருரையானும் உணர்க.

பவம், சம்பவம், உண்மை என்பன ஒருபொருட்கிளவி.

---

* நிராதாரம் - ஆதாரமில்லாதது. சாதாரம் - ஆதாரத்தோடு கூடியது. ஆதாரம்- இடம். ‡ திருக்குறள். சுகஉ. வினைக்கண்.

வீடு பயக்கும் உணர்வை 'வீடு' என்றும், சூழ்ச்சி பயக்கும் உபதேச மொழியைச் 'சூழ்' என்றுங் காரண காரியமாக உபசரித்தார். கொள்பவர் கொள்ளார் என்பனவும் அவை. கொள்ளார்க்கு என்னும் நான்க னுருபு விகாரத்தாற் றொக்கது; *"ஐந்தவித்தா னாற்றல்" என்புழிப் போல.

வீடு ஆம் எனவும் இயையும். வீடாம் எனப் பாடம் ஓதுவாரும் உளர்.

மேலை வெண்பாவின் 'முன்னுணர்த்தும்' 'பின்னுணர்த்தும்' 'தானே விளையும்' எனக் கூறியவற்றை ஈண்டு நெறியின் அறிவிக்க அன்றி அறியா ஆகலான் அது 'முன் செறியும்' 'பின்செறியும்' 'பவத்தினும்' எனக் காரணங் காட்டி வலியுறுத்தினர். இதற்குப் பிறரெல்லாந் தத்தமக்கு வேண்டியவாறே மேலைவெண்பாவோடு இயைபற உரைத்தார். அல்லதூஉம் 'அறிவிக்க வன்றி யறியாமை' உபதேசியாய் என ஆன்மாவின் தன்னியல்பு கூறும்வழிப் பெறப் பட்டதாகலின் அதனை ஈண்டும் புனருத்தியாகக் கூறவேண்டாமையின் மேலது வலியுறுத்துதற்கு ஏற்புடைய அறிவிக்க அறிதற்கட் படும் விசேட மாத்திரையே ஈண்டு எடுத் தோதினரென்று உணர்க. படிவழியின்வைத்து அறிவிக்க அன்றி அறியாமை †"பந்தமும் பிரிவும் தெரிபொருட் பனுவற் படிவழி சென்றுசென் றேறி" என்பதனானும் அறிக.

இல்லா முலைப்பாலுங் கண்ணீரு மேந்திழைபா
லல்லா யுளவாமா னீர் நிழல்போ—லில்லா
வருவாகி நின்றானை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்றானே லுற்று.

எ—து. உ—ம். எ—னின். அம்முத்திறத்துள் ஈண்டைக்கு எடுத்துக்கொண்ட 'அஞ்ஞான வச்சகலர்க் கக்குருவா'தல் உபசாரமே அன்றி ஏனைய போல் உண்மையாதல் செல்லாது என்பாரை நோக்கி உண்மையாதலை உவமைமுகத் தான் வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். நல்லாய். எ-து. அறிவால் நன்மையுடைய மாணாக்கனே!—ஏந்து இழைபால் முலைப்பாலும் கண்ணீரும் இல்லா உள ஆம். எ-து. ஏந்திய இழைகளை யுடையாட்குக் குழவிமாட்டு உளதாகிய அருவாகிய அன்பினைப் பிறர் அறியுமாறு வெளிப்படுத்தும் அவ்வன்பின் உருவாகிய முலைப்பாலுங் கண்ணீரும் அவண்மாட்டுக் குழவியைக் காணுமுன் இல்லாவாய்ப் பின்னுளவாம் அதுபோல,—நீர் நிழல் போல் இல்லா அரு ஆகி நின்றானை ஆர் அறிவார் தானே உரு ஆகி உற்றுத் தோன்றானேல். எ-து. நீரின்கண் நிழல் போல் உயிர்கண் மாட்டுப் புலப்படுத லில்லாது அருவமாய் நின்ற முதல்வனை யார்தாம் அறிவார் அவனே குருவடிவாய் வந்து தோன்றி நின்று உணர்த்தானாயின். எ-று.

ஒருவருமில்லை என்பதாம். இஃது எடுத்துக்காட்டுவமை.

இன்றியமையாமை உணர்த்துவார் 'தோன்றானே லாரறிவார்' என எதிர்மறைமுகத்தாற் கூறினர்.

---

* திருக்குறள். உடு. † கருவூர்த்தேவர் திருவிசைப்பா. திருவிடைமருதூர். ரு.

பொருளுக்கு ஓதியதனை உவமையினுங் கூட்டி ஏற்குமாறு உரைக்க.

முலைப்பாலுங் கண்ணீரும் அன்பை விளக்கும் என்பது * "சுரந்த திரு முலைக்கே துய்யசிவ ஞானஞ்—சுரந்துண்டார் பிள்ளையெனச் சொல்லச்—சுரந்த—தனமுடையா டென்பாண்டி மாதேவி தாழ்ந்த—மனமுடையா ளன்பிருந்த வாறு" என்பதனானும், † "அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்—புன்கணீர் பூச றரும்" என்பதனானும் அறிக. அவ்விரண்டும் அன்பின் வடிவே பிறவல்ல என்பது அன்பு நிகழ்தற்கு உரிய காரணம் உள்வழி வெளிப்பட்டு அஃது இல்வழி வெளிப்படாத ஒற்றுமை நோக்கிக் கண்டுகொள்க. இவ்வொற்றுமை உணர்த்துவார் 'இல்லாவாய் உளவாம்' என்றார்.

இல்லா என்பது முற்றெச்சக் குறிப்பு.

ஆல் அசை. நீர் அகத்து இயங்கும் உயிர்கட்கு இடங் கொடுத்தல் உண்மையான் நீரின்கண் வெளி உண்டு என்பதூஉம், உண்டாகவே, ஆண்டு நீருக்கு நிழல் உண்டு என்பதூஉம், பெறப்பட்டன. அந்நிழல், வேறு நில்லாது நீரோடு விரவி நிற்றலின் நீர் போற் புலப்படா தாயிற்று. அது போலச் சிவசைதன்னியமும் யான் என்னும் உணர்விற்கு விடயமாய்ப் புலப்படும் ஆன்ம சைதன்னியத்தோடு விரவிப் புலப்படாது நிற்பதொன்று என்பார் 'நீர்நிழல்போ லில்லா வருவாகி நின்றானை' என்றார்.

இரண்டாமதிகரண முடிந்தது.



## மூன்றாமதிகரணம்.

### இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை உணரா என்றது.

எ—து. மே—ள். எ—னின். விடய ஞானத்தை விளக்கும் ஐம்பொறிகளே தத்துவ ஞானத்தை விளக்குதற்கும் அமையும் தம்முதல் குருவு மாதல் வேண்டா எனச் சிவசங்கிராந்தவாத சைவர் மதம் பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இவ்வாறு உரையாக்கால், இனி என்பதனான் உணர்த்தப்படும் மேலை அதிகரணத்தோடு உளதாகிய இயைபு பெறப்படாமை அறிக. இ—ள். வெ—டை.

உணர்வு ஆகுபெயர்.

### அவைதாம் பளிங்கில் இட்ட வன்னம்போற் காட்டிற் றைக் காட்டி நிற்றலான்.

எ—து. ஏது. எ—னின். அறிவை விளக்குங் கருவியான் மயக்கம் நிகழுமாறு யாங்ஙனம்? ‡என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

* திருக்களிற்றுப்படியார். ருச. † திருக்குறள். எக. ‡ சிவசங்கிராந்தவாதசைவர்.

இ - ள். படிகத்தின் வைத்த பலவேறுவகைப்பட்ட நிறங்கள் அப்படிக வொளியைக் கீழ்ப்படுத்துத் தத்தம் இயல்பினையே விளக்கி நிற்குமாறு போல அவ்வைம்பொறிகடாம் ஆன்ம சொரூபத்தைக் கீழ்ப்படுத்துத் தம்மாற் காட்டப்பட்ட தத்தம் விடய மாத்திரையே அவ்வான்மாவுக்குக் காட்டி நிற்பன வாகலான் 'இனி இவ்வான்மாக்கள் ஐயுணர்வுகளான் மயங்கித் தம்மை யுணரா' என மேற்கொண்டது. எ - று.

விடயங்களுள்ளும் அவ்வவ்விடய மாத்திரையே அவ்வ விந்திரியங் காட்ட வல்லும் என்பார் 'காட்டிற்றை' என ஒன்றறி சொல்லாற் கூறினர்.

**பன்னிறங் காட்டும் படிகம்போ லிந்திரியந்**
**தன்னிறமே காட்டுந் தகைநினைந்து—பன்னிறத்துப்**
**பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்**
**மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு.**

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனங் காட்டிற்றையே காட்டி நிற்குமாயின், அவ்விந்திரியங்கள் உள்வழித் தம்முதல் குருவுமாய் உணர்த்தினும் உணர்தல் செல்லாது போலும் *என்பாரை நோக்கி உணர்தற்கு உபாயங் கூறி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ - ள். பல் நிறம் காட்டும் படிகம் போல் இந்திரியம் தன் நிறமே காட்டும் தகை நினைந்து. எ-து. தன்னாற் சாரப்பட்ட பன்னிறங்களின் இயல்பையே தன்மாட்டுக் காட்டி நிற்கும் பொதுவியல்புடைய படிகம் போலத் தன்னாற் சாரப்பட்ட இந்திரியங்களின் இயல்பையே சார்ந்த தன்வண்ணமாய்த் தன்மாட்டு விளக்கி நிற்குந் தனது பொது வியல்பை முன்னர்ச் சிந்தித்து அறிந்து கொண்டு பின்பு,—பல் நிறத்துப் பொய்ப் புலனை வேறு உணர்ந்து. எ-து. அந்நிறங்கள் படிகத்துக்கு வேறென்று அறியுமாறு போலப் பலவகை இயல்புடைய பொது வியல்பைச் செய்யும் பொறிகளைத் தன்னின் வேறு எனத் தெளிந்து,—பொய் பொய்யா மெய் கண்டான். எ-து. அவற்றானய அப்பொதுவியல்பு பொய்யாய் ஒழியுமாறு தனது சிறப்பியல்பை உணர்ந்தானாயின்,—வேறு மெய்ப் பொருட்குத் தைவம் ஆம். எ-து. அவ்வசத்தாகிய பொறிகளுக்கு வேறாகிய சிவசத்தினது இயல்பு தன்மாட்டு விளங்கச் செய்யும் ஆகலின் அச்சிவசத்துக்கு அடிமையாம். எ - று.

ஈண்டுப் 'பொய்' 'மெய்' எனப்பட்டன அப்பொருளவாதல் †மேலே காட்டினாம்.

தைவம் என்பது தேவனது உடைமை என்னும் பொருட்டாய வடமொழிப் பகுபதம்.

இதனானே கருவிகள் உள்வழிக் காட்டிற்றைக் காட்டி நிற்றலின் அறிதல் செல்லாது அவை நீங்கியவழிக் கேவலமாய் முடியும் ஆகலின் தன்னுண்மை

---

* சிவசங்கிராந்தவாதசைவர். † ஏழாஞ்சூத்திரத்து முதலதிகரண ஏதுவிற்கு உரைத்த உரையிற் காண்க.

அறியுமாறு யாங்ஙனம்? என்னுங் கடாவை ஆசங்கித்து அவை உள்வழியே தன்னுண்மை அறிதற்கு உபாயங் கூறி, இதுபற்றி அவை காட்டிற்றைக் காட்டி நிற்றற்கு இழுக்கில்லை என வலியுறுத்தவாறும் என்க.

'மெய்ப்பொருட்குத் தைவமாம்' என்றதனால் வருகின்ற அதிகரணத்திற்குத் தோற்றுவாய் செய்தவாறு.

மூன்றாமதிகரண முடிந்தது.



## நான்காமதிகரணம்.

**இனி இவ்வான்மா தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையும் என்றது.**

எ—து. மே—ள். எ—னின். பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய் பொய்யா மெய் கண்டார்க்கு அதுவே அமையும் கருவிகள் நீங்கியவழிச் செய்யக் கடவதொரு முயற்சி கூடாமையின் ஆண்டு மெய்ப்பொருட்குத் தைவமாதல் பெறப்படாது எனப் பேதவாதசைவர் முதலியோர் கூறுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் நான்காங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ-ள். வெ-டை.

இந்திரியத்தின் வேறாயவழிக் கேவலத்தை அணைதலும் உண்மையின் அதனை நீக்குதற் பொருட்டு வேறாக என்று ஒழியாது 'வேறாவான் காண' என்றார். காண்டலே அதற்கு அமையும் என்றலின் ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது.

**ஊசல் கயிறற்றாற் றாய்தரையேயாந் துணையான்.**

எ-து. ஏது. எ-னின். அவ்வாறு காண்டலே சீபாதத்தை அணைதற்குச் சாலும் என்பது யாங்ஙனம்? *என்பாரை நோக்கி உவமையின் வைத்துக் காட்டி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ - ள். ஒருவன் ஏறியிருந்து ஆடுதற்கு ஆதாரமான ஊசல் கயிறு அற்றதாயின் அவனுக்கு உற்றுழி உதவுந் தாய் போல ஆண்டுத் தாரகமாவது நிலனே அன்றிப் பிறிதில்லை என்னும் ஒப்புமையான் 'இனி இவ் வான்மா தன்னை இந்திரியத்தின் வேறாவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும்' என மேற்கொண்டது. எ - று

வியாபகப் பொருட்குக் காட்சிவிசேடமே நீக்கம் ஆகலின் அறுதல் அதற்கு உவமையாயிற்று.

**சிறைசெய்ய நின்ற செழும்புனலி னுள்ளஞ்**
**சிறைசெய் புலனுணர்விற் றீர்ந்து—சிறைவிட்**
**டலைகடலிற் சென்றடங்கு மாறுபோன் மீளா**
**துலைவிலரன் பாதத்தை யுற்று.**

---

* பேதவாதசைவர் முதலியோர்.

எ—து. உ—ம். எ—னின். கருவிகள் நீங்கினவழி வேறு நில்லாது சிவத்தைத் தலைப்படுமாயின் அவ்வுயிர்க்கும், கருவிகள் நீங்கிக் கேவலத்தைத் தலைப்பட்ட உயிர்க்குப் போல மீட்சி உண்டுபோலும் * என்பாரை நோக்கி அஃது இன்றுமாறு கூறி மேலதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். சிறை செய்ய நின்ற செழும் புனலின் உள்ளம். எ-து. ஒருவன் அணையை உயர்த்துக் கட்டித் தடை செய்ய ஆண்டுத் தடையுண்டு தேங்கி நின்ற ஆற்றுநீர் போலக் கருவிகளானுய பாச ஞானந் தனது வியாபகத்தைத் தடைசெய்ய அதன்கண் ஏகதேசமாய் அடங்கித் தடையுண்டு நின்ற உயிர்,—சிறை விட்டு அலைகடலில் சென்று அடங்கும் ஆறு போல். எ-து. அவ்வணை முறிந்து தடை தீர்ந்தவழி இடையீடு இன்றிக் கடலின்கண் முடுகிச் சென்று அந்நீரேயாய் அதனுள் அடங்கி மறித்து வாராத ஆற்று நீர் போல,—சிறை செய் புலன் உணர்வில் தீர்ந்து. எ-து. கருவிகளானுய பாச ஞானத் தடையினின்று நீங்கியவழி,—உலைவு இல் அரன் பாதத்தை உற்று மீளாது. எ-து. தனக்குக் கேடில்லாத சிவபிரானது திருவடியைத் தலைக்கூடி அத்திருவடி நிறைவேயாய் அதன்கண் அடங்கிப் பின்பு மீளுதல் செய்யாது. எ - று.

'சிறை செய்ய நின்ற செழும் புனலி னுள்ளம்' என்றது †தொகையுவமம். இன் உவம உருபு. தேக்கத்தின் மிகுதி உணர்த்துவார் 'செழும்புனல்' என்றார்.

மலசத்திக்குக் கேடு உண்மையின் அதனைத் தலைப்பட்ட உயிர்க்குக் கருவிகளின் மீட்சி கூடும்; சிவசத்திக்கு அஃது இன்மையின் அதனைத் தலைப்பட்ட உயிர் அவ்வாறு மீளுதற்கு ஓரியைபு இல்லை என்பார் 'உலைவி லரன் பாதம்' என விசேடித்தார்.

அடங்கும் என்னும் உவம வினை பொருளினும், மீளாது என்னும் பொருள் வினை உவமையினுஞ் சென்று இயைந்தன.

> எவ்வுருவுந் தானென்னி னெய்துவா ரில்லைதா
> ளிவ்வுருவின் வேறே லிறையல்ல—னெவ்வுருவுங்
> கண்போ லவயவங்கள் காணுவக் கண்ணில்லார்
> கண்பேறே காணக் கழல்.

எ—து. உ—ம். எ—னின். மீளாது என்று விடுத்தல் வேண்டாம் எல்லாஞ் சிவமாகக் கண்டார்க்கு மீண்டால் என்? மீளாக்கால் என்? என்னுஞ் சிவாத்துவிதசைவரை நோக்கி அது விடையாதற்கு ஏலாமை கூறி மறித்தும் மீளாமையை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். எவ்வுருவும் தான் என்னின் தாள் எய்துவார் இல்லை. எ-து. உயிருணர்வே யன்றிப் புலனுணர்வுஞ் சிவமேயாமாயின் விசேடம் இன்மையாற் புலன்வழி ஒழுகுஞ் சகல நிலையைக் கைவிட்டுத் திருவடியைத் தலைக்கூட வேண்டாமையின் ஒருவரும் அதனை எய்துவார் இல்லையாய் முடிந்து

* பேதவாதசைவர் முதலியோர். † தடைப்படுதலாகிய பொதுத்தன்மை தொக்கமையால் தொகை யுவமம்.

* "பாசத்தைப் பசுக்கள் விட்டுப் பதியினை யடைய முத்தி" என்னும் வேதாகமங்கள் போலியாய் முடியும்,—இவ்வுருவின் வேறேல் இறை அல்லன். எ-து. அது பற்றி முதல்வன் புலனுணர்வோடு இயைபின்றி அதனின் வேறாய் நிற்பன் என்னின் அப்புல னுணர்விற்கு அவனால் ஆகற்பால தொன்று இன்மையின் அவன் ஆண்டைக்கிறைவனல்லன் எனப்பட்டு முதன்மைக்கு இழுக்காய் முடியும்; மற்றென்னையோ அதனியல்பு என்னின்,—எவ் உருவும். எ-து. உயிருணர்வு போலப் புல னுணர்வுங் கலப்பினாற் சிவமேயாமாயினும் இரண்டுந் தம்முள் ஒப்பனவல்ல,—அவயவங்கள் கண் போல் காணா. எ-து. உயிர் ஐம்பொறிகளினும் ஒப்ப நிற்பினும் அவற்றுண் மெய் வாய் மூக்குச் செவி நான்கும், கண்ணிந்திரியம் ஒளியான் அவ்வான்ம போதத்தோடு விரவிச் சேய்மைக்கண்ண தாகிய விடயத்தையும் வியாபித்து அறியுமாறு போல வியாபித்து அறியமாட்டாவாய்த் தம்மாட்டுவந்த விடயங்களை நின்றாங்கு நின்று இயைந் தறிதற் றன்மையவே யாம்,—அக்கழல் அக்கண் இல்லார் கண் பேறே காண். எ-து. அக்கண்ணினது வெற்றிப்பாட்டைக் கண்ணொளி இழந்தாரது கண்பேற்றின்கட் கண்டு அறிவாயாக. எ - று.

கண்ணும் அவயவங்களும் ஆகுபெயர். கண்பேறே என ஏழாவது தொகுத்து ஏகாரம் விரித்தார். கழல் அணிவார்க்கு உளதாகிய வெற்றிப்பாட்டைக் 'கழல்' என்று உபசரித்தார். கழல்—காலணிமணிவடம்.

ஈண்டு வெற்றியாவது ஏனை நான்கிந்திரியங்களையும் நோக்கி மேம்படுதல்.

'கண்போ லவயவங்கள் காணாவக் கண்ணில்லார் கண்பேறே காணக் கழல்' என்பது முதல்வன் இரண்டினும் ஒப்ப விரவி நிற்பினும் உயிருணர்வு போலப் புலனுணர்வு வியாபக விளக்கமாதல் இன்றி ஏகதேச விளக்கமாம். உயிருணர்விற்கு உளதாகிய அம்மேம்பாடு அவ்வியாபக உணர்வை இழந்த பசுத்துவ முடையார்மாட்டு அறியப்படாதாயினும் அவரது பசுத்துவம் நீங்கிய சிவப் பேற்றின்கண் அறியப்படும் என்பது தோன்ற நின்றமையின் இஃது † ஒட்டு என்னும் அலங்காரம்.

சிவமாயவழியும் புலனுணர்வு ஏகதேச விளக்கமாவதன்றி உயிருணர்வு போல வியாபக விளக்கமாதல் இல்லை எனவே, அதன்கண் மீளுதல் இழுக்கு என்பது பெறப்பட்டது. இதற்குப் பிறரெல்லாம் இயைபின்றி உரைத்தார்.

ஐம்பொறியி னல்லையெனு மந்த தரசிவனை
யைம்பொறியை விட்டங் கணைசகல—னைம்பொறியி
னீங்கானீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரி
னீங்கானை நீங்கு நினைந்து.

எ—து. உ—ம். எ—னின். சிறை விட்டவழி அலைகடலிற் சென்று அடங்குதலே அன்றி ‡ "ஆற்றா லலைகடற்கே பாய்ந்தநீர் ** அவ்வாற்றான் மறித்" தலும் உண்மையின் அது போல அரன் பாதத்தை உற்ற உயிருக்கு ஒரோவழி

* சிவஞானசித்தி, பரபக்கம். பாஞ்சராத்திரிமதமறுதலை. ௨௫. † இதனை ௧௬௭-ம் பக்கத்துக்குறிப்பிற் காண்க. ‡ திருக்களிற்றுப்படியார். ௧௧.

மீட்சியும் உண்டு என்பது பெறப்படுதலான் அவ்வழி மீளாமை செல்லாது *என்பாரை நோக்கி அம்மீட்சிக்குக் காரணம் இஃது என்பதூஉம், அதனை நீக் குதற்கு உபாயமுங் கூறி வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். ஐம்பொறியின் அல்லை எனும் அந்ததா. எ-து. ஐம்பொறிகள் போல ஏகதேச விளக்கம் உடையாயல்லை யென்று அறிவுறுக்கப்படுஞ் சித்தா ந்த மகாவாக்கியத்தைப் பெற்றுடைய மாணவகனே!—அங்கு ஐம்பொறியை விட்டுச் சிவனை அணை சகலன் ஐம்பொறியின் நீங்கான். எ-து. 'சிறைவிட் டலை கடலிற் சென்றடங்கு மாறுபோல்' என மேற் கூறியவாறே ஐம்பொறிகளா லும் புலனுணர்விற் றீர்ந்து சிவன் திருவடியை உற்ற சகலன் அவ் வைம்பொ றிகளான் மீள அதனை நீங்குவான் அல்லன்,—நீர்ப் பாசி'போல் நீங்கும் மல கன்மம் வரின் நீங்கானை நினைந்து நீங்கும். எ-து. †கல்லெறியும்வழி நீங்கிய நீர்ப்பாசி அது விடும்வழிப் பாக்குமாறு போல அவ்வணைதலின்கண் நீங்கிய மல கன்ம மாயைகள் வாதனைவயத்தால் நிகழும் அயர்ச்சிபற்றி வந்து கூடுமா யின் அது பற்றிப் பொறிவழி மீளாமல் அவ்வழியுந் தன்னை விட்டுநீங்காத முதல்வனை ‡முன்னர்க் கூறப்படும் உபாயங்களில் நின்று சிந்தித்து அவற்றை நீக்கிக்கொள்ளும். எ-று.

வரின் என்றதனால், வருதல் ஒருதலையன்று, வாசனை உள்வழியே என் பது பெற்றாம்.

நீங்கி என்பது பாடம் ஆயின், நீங்கினவாகிய மல கன்மம் எனப் பெய ராக வைத்து உரைக்க.

சித்தாந்தத்தை 'அந்தம்' என்றது தலைக்குறை. 'தாம்' அதன் கண்ண தாய்ச் சிறந்த ஒரு வார்த்தை.

அங்கு மேற்கூறியபடி.

ஐம்பொறியை விட்டு அணைதற்கு உரியான் இவன் என்பது உணர்த்து வார் 'சகலன்' என்றார்.

நீங்கும் என்னும் மகரஞ் சந்தி நோக்கிக் கெட்டது. நீங்கு எனவே பாடங் கொண்டு அணை என வேறு பிரித்து முன்னிலையேவலாக்கி அதற்கு ஏற்ப நீங்காய் எனப் பாடந் திரித்து உரைப்பாரும் உளர்.

மேற் கூறிய மீளாமையை வலியுறுத்துவார் 'ஐம்பொறியி னல்லையெனு மந்ததா சிவனை ஐம்பொறியை விட்டங் கணைசகல னைம்பொறியி னீங்கான்' என்றும், ஒரோவழி உளதா மாயின்,அதற்குக் காரணம் இஃது என்பார் 'நீர்ப் பாசிபோ னீங்குமல கன்மம்வரின்' என்றும், அது நீக்குதற்கு உபாயங் கூறு வார் 'நீங்கானை நினைந்து நீங்கும்' என்றுங் கூறினார். மலகன்மம் எனவே, இனம் பற்றி மாயையுங் கொள்ளப்பட்டது.

* சிவாத்துவிதசைவர். † இதனை, "பாசிபடு குட்டத்திற் கல்லினைவிட் டெறியப் படும்பொழுது நீங்கியது விடும்பொழுதிற் பரக்கும்" என்னும் சிவஞானசித்தித் திருவிரு த்தத்தானும் உணர்க. ‡ முன்னர்க் கூறப்படும் உபாயம் ஸ்ரீ பஞ்சாக்கரத்தைவிதிப்படி உச்சரித்தல் முதலியன.

*"மங்கல மென்ப மனைமாட்சி மற்றத—னன்கல நன்மக்கட் பேறு" என்றாற்போல 'நீங்கானை நீங்கு நினைந்து' என்றதனால் வருகின்ற சூத்திரத்துக்குத் தோற்றுவாய் செய்ததூஉம் ஆயிற்று.

இம்மூன்று உதாரணங்களும் முறையே திருவடிஞானத்தைப் பெற்ற உயிர் புலனுணர்வின் மீடல் இல்லை எனவும், மீடல் இழுக்காம் எனவும், ஒரோ வழிப் பயிற்சி வயத்தான் மீள வருமாயின் மீளாதவாறு செய்து கொள்ளற் பாற்று எனவுங் கூறித் 'தாய்தரையேயாம்' என்னும் ஏகாரப்பொருளை வலியுறுத்தி ஒருபொருண்மேல் வந்தவாறு காண்க.

நான்காமதிகரண முடிந்தது.



எட்டாஞ்சூத்திர முடிந்தது.



# ஒன்பதாஞ்சூத்திரம்.



ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி
யுராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத்
தண்ணிழலாம் பதிவிதி யெண்ணுமஞ் செழுத்தே.

எ-து. சூ-ம். எ-னின். ஆன்மசுத்தி பண்ணுமாறு உணர்த்துத னுதலிற்று.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக்கருத்து உணர்த்துத னுதலிற்று.

இ-ள். தம்முதல் குருவுமாய் உணர்த்தக் கேட்டு அதனைச் சிந்தனை செய்து உணருமாறு உணர்த்தும் முகத்தான் ஐம்புல வேடரின் வளர்ந்த வாலாமை நீக்கி உயிர் தன்னைத் தூய்மைப்படுத்துமாறு உணர்த்துதல் இவ்வொன்பதாஞ் சூத்திரத்தின் கருத்து. எ - று.

சூத்திர இயைபும் இதனானே இனிது விளங்கும்.

சிவப்பிரகாசத்துத் †"தான் பணியை நீத்தல்" என்று ஓதப்படும் ஆன்ம சுத்தியாவது 'இறைபணி நிற்க' என வருகின்ற சூத்திரத்திற் பெறற்பாலது ஆகலானும், அழுக்கு நீக்கமே அறுவைக்குச் சுத்தியாமாறு போலப் பாசக்ஷயமே உயிர்க்குச் சுத்தியாவ தன்றி வேறன்மையானும், பாசக்ஷயம் பண்ணு முன்னர்ச் சுத்தியாதல் கூடாமையானும், வருகின்ற சூத்திரத்தின் கருத்தாய் நின்ற ஆன்மசுத்தி பண்ணுமாற்றைப் 'பதியை நாடி' எனவுந் 'தண்ணிழலாம் பதி' எனவுஞ் சிவதரிசனம் பண்ணுமாறே உணர்த்துதற்கு எழுந்த இச்சூத்திரத்தின் கருத்தாகவைத்து உரைத்தது என்னையோ! என மலையற்க; சிவதரிசனத்தின் நிகழ்வது ஆன்மசுத்தி என்னும் உடனிகழ்ச்சி உணர்த்துதற்கும் தம்முள் வேறுபாடு சிறுபான்மை உடையனவாய இவ்விரு சூத்திரமும் ஒரு

* திருக்குறள். சுO. † சிவப்பிரகாசம். அ-ம் சூ. க. தேசுற.

பொருண்மேலன என்பது உணர்த்துதற்கும் இவ்வாறு உரைத்தாராகலின். அஃது அங்ஙனமாக, *'ஆன்மா தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை யணையும்' என்றலின், அக்காட்சியே அதற்கு அமை யும் சுத்தி எற்றுக்கு எனின், அஃது ஒக்கும்; நிருவிகற்பமாய்க் காண்டலும், இரட்டுறக் காண்டலும், தெளியக் காண்டலும் எனக் காட்சி மூவகைப்படும். இம்மூன்றும் அதிபரிபக்குவ முடையார்க்குக் கேட்ட மாத்திரையே ஒருங்கு நிகழுமாயினும் ஏனையோர்க்குக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னுஞ் சோ பான முறையி னன்றி நிகழாமையின், அவரை நோக்கிச் சிவரூபத்தின் நிகழும் ஆன்மதரிசனத்தின் பின்னாகச் சிவதரிசனத்தின் நிகழும் ஆன்மசுத்தியும் ஒரு தலையான் வேண்டப்படும் என்று உணர்ந்துகொள்க. †"நேசமொடுந் திருவ டிக்கீழ் நீங்காதே தூங்கு நினைவுடையோர் நின்றிடுவர் நிலையதுவே யாகி— யாசையொடு மங்குமிங்கு மாகியல மருவோ ரரும்பாச மறுக்கும்வகை யருளி ன்வழி யுரைப்பாம்" என வழிநூலாசிரியரும் இக்கருத்தே பற்றி ஓதினார்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. குறையுணர்வாகிய பசுவறிவானும் பாசவறிவானும் உணரப்படாத முதல்வனை அவனது திருவடி ஞானத்தால் தன் அறிவின்கண்ணே ஆராய்ந்து அறிக. அத்திருவடி ஞானத்தான் நிலம் முதல் நாதம் ஈறாகிய பாசக் கூட்டம் நின்றுழி நில்லாது பரந்து திரிதற்கண் அதிவேகமுடைய பேய்த்தேரின் இயல்பிற்றாய்க் கழிவதென்று அறிந்து நீங் கவே, அப்பதிஞானம் பிறவித் துயராகிய வெப்பத்துக்குக் குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும்: அவ்வாறு பாசத்தை ஒருவி ஞானத்தைப் பெற்று ஞேயத்தைக் கண்டு, காட்சி சலியாமைப்பொருட்டு அப்பொருள் பயக்குந் திருவஞ்செழுத்து அவ்விதிப்படி அறிந்து கணிக்கப்படும். எ - று.

ஊனம் என்பது அப்பொருட்டாதல் ‡"ஊனமேற் கிரியை வித்தை" என்பதனான் அறிக.

"நன்று மன்னிது நாடாய் கூறி" என்றாற்போல 'நாடி' என்பது இகரவீ ற்று முன்னிலை யேவல்.

உராத் துனை ஏழாம் வேற்றுமைத் தொகை. உரா என்பது முதனிலைத் தொழிற் பெயர்; "பறவாக் குளவி" "பாயா வேங்கை" என்றாற் போல ஒருவரான் ஊரப்படாத வேகத்தையுடைய தேர் எனச் செயப்படுபொருட் கண் வந்த பெயரெச்ச மறையாகக் கொண்டு உரைத்து, "திருத்தார்நன் றென்றேன் றியேன்" என்றாற் போல உரா என்பது குறுக்கல் விகாரம் என் பாரும் உளர். பின்வந்த பதி ஆகுபெயர்.

இதனுள், ஊனக்கண் பாச முணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந் தைநாடி என்றது ஓரதிகாரணம்; உராத்துனைத் தேர்த்தெனப் பாச மொருவத் தண்ணிழலாம் பதி என்றது ஓரதிகாரணம்; விதி யெண்ணுமஞ்செழுத்தே என் றது ஓரதிகாரணம்: ஆக மூன்றதிகாரணத்தது இச்சூத்திரம் என்று உணர்க.



* இந்நூல். அ-ம் சூ. சு-ம் அதிகாரணத்துமேற்கோள். † சிவஞானசித்தி. அ-ம் சூ. ௩௧. பாசிபடு. ‡ மேற்படி. க-ம் சூ. ௬௫. ஞானமேயானா.

## முதலதிகரணம்.

### ஈண்டு அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க என்றது.

எ—து. மே—ள். எ—னின். மேலைச் சூத்திரத்து ஓதியவாற்றான் முதல்வன் பாச அறிவால் நாடப்படுவ னல்ல னாயினும் பசுவறிவால் நாடப்படுவன் என்றற்கு இழுக்கு என்னை? எனச் சிவசமவாதசைவர் மதம் பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற் கூற்றைக் கண்ணழித் துரைத்து மேற் கோட னுதலிற்று. இ-ள். வெ-டை.

ஏகாரம் தேற்றம்.

### அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.

எ—து. ஏது. எ—னின். ஏனை ஞானங்களான் அறியப்படாது சிவஞானத் தான் அறியப்படும் என்றற்குப் பிரமாணம் என்னை? *என்பாரை நோக்கி மேற் கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். வாக்குமனாதீத கோசரமாய் நின்ற அதுவே என்புழி †உரைத் தாம்.

ஆண்டுப் பொதுவகையாற் பெறப்பட்டதனை ஈண்டு ஏதுவாக வைத்து வாக்கு மனாதீதமாயுங் கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாது என்னும் அருத்தாபத்தியான் ஞானக்கண்ணாலே காணப்படும் என்பது தாமே போதரும் என மேற்கோளைச் சாதித்தார்.

நாடியோ வென்போ நரம்புசீக் கோழையோ
தேடி யெனையறியேன் றேர்ந்தவகை—நாடியரன்
றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணா
ரென்னு மெனவறிவா ரின்று.

எ—து. உ—ம். எ—னின். கோசரமாதல் பிறிதொன்றாற் பெறப்படாது என்றது என்னை? பசுத்துவம் நீங்கியவழிச் சுட்டிறந் தறிவதாகிய உயிருணர்வு திருவடிஞானத்தோடு ஒப்பதாகலின் அதன்கட் கோசரமாதல் அமைவுடைத்துப்போலும் ‡என்பாரை நோக்கி அவ்வுணர்வு விளங்குமாறு உணர்த்தும் முகத்தான் அவரை மறுத்து ஏதுப் பொருளை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். நாடியோ என்போ நரம்பு சீக் கோழையோ தேடி எனை அறியேன் தேர்ந்த வகை நாடி. எ-து. நாடி முதலியவற்றுள் யான் யார் என்னைத் தேடியும் அறிகின்றிலேன் என்று இவ்வாறு தேர்கின்ற தேர்ச்சியறிவின்கண்ணே இதனைத் தெளிவிப்பதோர் அறிவு வேறு உண்டென ஆராய்ந்து நோக்கி,—அரன் தன்னாலே தன்னையும் கண்டு தமைக் காணார். எ-து. அவ்வாறு நாடுங்கால் விளங்கித் தோன்றுவதாய முதல்வனது திருவடிஞானத்தால் முதல்வனையும் உணர்ந்து முதல்வனின் வியாப்பியமாய் நின்று அங்ஙனம் அறியும்

---

* சிவசமவாதசைவர். † உரைத்தமையை இந்நூல். ௬-ம் சூ. உ-ம் அதிகரணத்து மேற்கோளுரையிற் காண்க. ‡ சிவசமவாதசைவர்.

பொருளாகிய தம்மையும் உணர்தலைச் செய்யாதார்,—என் என் அறிவார் இன்று. எ-து. மற்றெவ்வியல்பின ரென்று தம்மை அறிய வல்லுநர் இம்முத்தி காலத்து. எ-று.

நாடி என்றது இடை பிங்கலை முதலியவற்றை; நரம்பு எனவே அடங்கு மேனும் தலைமை பற்றி வேறு கூறினார். சீ-புண்ணீர். கோழை-ஐ.

ஓகாரந் தெரிநிலை. என்று என்பது சொல்லெச்சம். வகை ஆகுபெயர்.

ஒற்றுமை பற்றி அரனது ஞானத்தை அரன் என்று உபசரித்தார்.

உம்மை எதிரது தழீஇயிற்று. எவன் என்னும் வினாவினைக்குறிப்புப் பெயர் ஈண்டு ஆகுபெயராய் என் என மரீஇயிற்று. ஆம் அசை.

நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ என்ற உபலக்கணத்தால் ஏனைத் தத்துவ *தாத்துவிகங்களினும் அவ்வாறு தெரிதல் கொள்ளப்படும்.

இது தம்மை அறியுமாறு உணர்த்தும் முகத்தானே தலைவனை அறிந்த பின் அறியப்படுவதாகிய தம்மறிவு கொண்டு தலைவனை அறியுமாறு யாண்டையது என மறுத்து வலியுறுத்தவாறு காண்க.

காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய வுள்ளத்தைக் கண்காணா—காட்டிய
வுள்ளந் தனைக்காணா துள்ளத்தின் கண்ணாய
கள்வன்றா னுள்ளத்திற் காண்.

எ—து. உ—ம். எ—னின். எதிர் முகத்து ஒரு பொருளைக் கண்ட கண்ணே மறித்து நோக்கியவழி வெரிந்புறத்துப் பொருளையுங் காண வல்லும்; அது போல, அங்ஙனந் தேர்ந்து அறிதலைச் செய்த உயிரே தெளிந்தறிதலையுஞ் செய்ய வல்லுமென அமையும் †என்பாரை நோக்கி அதனது மாட்டாமையை விளக்கி 'அரன்றன்னாலே காண்டலை' வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். காட்டிய கண்ணே தனைக் காணா. எ-து. உயிரால் காட்டப்பட்டு ஒரு விடயத்தைக்காண்கின்ற கண்ணானது தன்னியல்பைக்காணமாட்டாது,—கண்ணுக்குக் காட்டு ஆய உள்ளத்தைக் கண் காணா. எ-து. தனக்கு அவ்விடயத்தைக் காண்பித்து முதலாய் நிற்கும் உயிரையும் அது காணமாட்டாது,—காட்டிய உள்ளம் தனைக் காணாது. எ-து. அதுபோல முதல்வனால் மறைந்து நின்று உணர்த்தப்பட்டு ஒன்றனைத் தேர்ந்துணர்கின்ற உயிர் அவ்வாறே தன்னியல்பையும் அறியமாட்டாது; தன்னை உணர்த்தி நிற்கும் முதல்வனையும் அறியமாட்டாது,—உள்ளத்தின்கண் ஆய கள்வன் தான். எ-து. அத்தேர்ச்சியறிவின்கண்ணும் உடனாய் நிற்குங் கள்வன் அம்முதல்வன் ஆகலானே,—உள்ளத்தில் காண். எ-து. அவனை அவ்வறிவின்கண் வைத்து நாடித் தெளிவாயாக. எ-று.

---

* தாத்துவிகம்-தத்துவத்தின் காரியமாகிய புறக்கருவி. † சிவசமவாதசைவர்.

*இது சொற்பொருட் பின்வரு நிலை. ஏகாரம் அசைநிலை. †"முறைகாக்கு முட்டாச் செயின்" என்றாற் போலக் காணாது என்னுந் துவ்வீறு விகாரத்தாற் றொக்கது.

பின் வந்த உள்ளம் ஈண்டுத் தேர்ச்சியறிவின் மேற்று. உள்ளத்தின் கண்ணும் என்னுஞ் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

தோன்றாது நிற்றல் பற்றிக் கள்வன் என்றார். கள்வன் என்றது கண்ணுக்கு உயிர் மறைந்து நின்றே காட்டுவதாகலான் அது தன்னையும் உயிரையும் அறியமாட்டா தாயிற்று; அது போல முதல்வன் இதுகாறும் மறைந்து நின்றே உணர்த்துதலின் உயிர் தன்னையும் முதல்வனையும் அறியமாட்டா தாயிற்று என்பது பட நின்ற குறிப்பு மொழி. உள்ளத்திற் காண வல்லார்க்கு அக்கள்ளந் தீர்தலின் தம்மையும் முதல்வனையுங் காண்டல் கூடும் என்பதாம். ‡"கள்ளரோ டில்ல முடையார் கலந்திடின்—வெள்ள வெளியாமென் றுந்தீபற" என்றதும் இக்கருத்து நோக்கி.

கண்ணுக்குக் காட்டாய வுள்ளத்தைக் கண் காணா என உவமைக்கு ஓதியவாறு பொருளினும் வருவித்து உரைத்துக்கொள்க. இஃது எடுத்துக்காட்டுவமை.

முதலதிகரண முடிந்தது.



## இரண்டாமதிகரணம்.

### இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்து என்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபமென் றுணரற்பாற்று.

எ—து. மே—ள். எ—னின். அம்முதலை ஞானக்கண்ணாலே காண்க என்று உணர்த்தியவழி அந்த ஞானக்கண்ணைப் பெறுமாறு யாங்ஙனம்? என நிகழும் அவாய்நிலையை நீக்குதற்பொருட்டு மேலதற்கோர் புறனடையாய் எழுந்த இச்சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று. இ-ள். வெ-டை.

'பாச மொருவத் தண்ணிழலாம் பதி' என்புழிப் 'பாசம்' என்றது காரியப் பிரபஞ்சத்தை என்பார் 'அசத்தாயுள்ள' என்றும், சொற் பல்காமைப் பொருட்டு ஏதுப் பொருளை உருவகமுகத்தான் உடம்பொடு புணர்த்துக் காட்டுவார் பிரபஞ்சத்தை என்னாது 'வன்னபேதங்களை' என்றும், ¶ வியாபகப் பொருளுக்கு ஒருவுதலாவது உணர்ச்சி விசேடமேயாம் என்பார் அசத்தென்றொழிய என்னாது 'காண' என்றும், தண்ணிழலாய் நிற்றல் புதிதன்று என்பார் 'உளதாய் நிற்பது' என்றும், பதி என்றது ஆகுபெயராற் பதி

* இஃது அலங்காரத்துள் ஒன்று; அஃது ஒருசெய்யுளிலே முன்வந்த சொல்லும் பொருளும் பல இடங்களிலே பின்னும் வருதல். † திருக்குறள். ருசஎ. இறைகாக்கும். ‡ திருவுந்தியார். உரு. ¶ வியாபகப்பொருள் என்றது ஆன்மாவை.

ஞானத்தின்மேல் நின்றது என்பார் 'ஞானசொரூபம்' என்றும், இஃது அநுபவத்தி னன்றிச் சொல்லளவையின் அறிய வாராது என்பார் 'உணரற்பாற்று' என்றும் உரைத்தார். இஃது ஏகதேசவுருவகம்.

இதனுட் பெறப்படும் ஏதுப் பொருளை ஏனையவற்றுட் போல மேற்கோளின் வேறுவைத்துக் காணுமாறு:—

இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபம் என்றது வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பென்று கண்டு கழிப்பின் உளதாய் நிற்பது படிகசொரூபமாந்துணையான் எனவரும்.

இ-ள். படிக சொரூபத்தைக் காட்டாது மறைத்து நின்ற வேற்று நிறங்களை இவை நிலையுத லிலவாகிய வேற்று நிறங்களெனக் கண்டு நிற்பின் அவ்வழி நிலையுத லுடைத்தாய் விளங்கி நிற்பது பளிங்கினது சொரூபமாம் என்னும் ஒப்புமையான், நிலையுதலுடைய தற்சொரூபத்தைக் காட்டாது மறைத்து நிற்கும் நிலையுத லிலவா யுள்ள பிரபஞ்சத்தை இவை நிலையுதலுடையன வல்ல என்று விவேகித்து அறியின் அங்ஙனம் நிராலம்பமயமாய் விளங்கித் தோன்றுவது ஞானசொரூபம் என மேற்கொண்டது. எ-று.

வன்னபேதமாவது சித்திரம் எனக்கொண்டு சுவர் மேல் வைத்து உரைத்தலும் ஒன்று.

அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்து என்று காண்டலாவது ஆசிரியன் அறிவுறுத்த உபதேசப்பொருளின் உறைத்து நின்று "அட்ட குணமெட்டுச் சித்தி கோகனதன் முதல்வாழ்வு குலவுபத மெல்லாம்—வெறுத்துநெறியறுவரையு மேலொடுகீ ழடங்கக்" காரணரூபத்தி னில்லாமையால் *"வெறும் பொயென நினைந்திரு"த்தல்.

நிர்க்குணனாய் நின்மலனாய் நித்தியா னந்தனாய்த்
தற்பரமாய் நின்ற தனிமுதல்வ—னற்புதம்போ
லானா வறிவா யளவிறந்து தோன்றானே
வானே முதல்களையின் வந்து.

எ—து. உ—ம். எ—னின். அசத்தை அசத்து என்று கண்டு ஒருவியவழித் தோன்றுவது சூனியமே அன்றிப் பிறிதில்லை போலும் †என்பாரை நோக்கி ஞான சொரூபத்தி னியல்பு கூறி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். நிர்க்குணன் ஆய். எ-து. அசுத்தப் பிரபஞ்சம்போல முக்குணரூபமாய் அளவிட்டறியப் படுவானும் அல்லனாய்,—நின்மலன் ஆய். எ-து. முக்குணங்களைக் கடந்த மிச்சிரப் பிரபஞ்சம் போல மல கன்ம காரிய ரூபமாய் அறியப்படுவானும் அல்லனாய்,—நித்தியானந்தன் ஆய். எ-து. மலகன்மங்களையுங் கட

* சிவஞானசித்தி. கூ-ம் சூ. சு. குறித்தடி. † மாயாவாதிகள்.

ந்த சுத்தப் பிரபஞ்சம் போல அநித்தியானந்த ரூபனு யறியப்படுவானும் அல்லனுய்,—தற்பரம் ஆய். எ-து. இம்மூன்றனேடுங் கூடிப் பொதுவியல்பு பற்றி அவ்வாறு உணரப்படும் உயிர் போல் அன்றி அதற்கு மேலாய்,—நின்ற தனி முதல்வன். எ-து. இவ்வாறு நிற்றலான் ஒன்றன் இயல்பு பற்றி அறியப்படாத தனிமுதலாகிய இறைவன்,—வான் முதல் களையின். எ-து. ஆகாசம் முதலிய அசத்தை அசத்து என்று கண்டு ஒருவியவழி,—அளவு இறந்து அற்புதம் போல் வந்து. எ-து. பயின்றறிந்து வருந் தனது சுட்டறிவின் அளவினைக் கடத்தலான் இன்னதென்று அறிய வாராத சூனியப் பொருள் போலத் தோன்றி,—ஆனு அறிவு ஆய்த் தோன்றுனே. எ-து. பின்னர்ச் சுட்டிறந்து அறியுந் தன் அறிவின்கண் நீங்காது நிலைபெறுவதாய்ச் * "சோதிக்குட் சோதியாய்" விளங்கித் தோன்றுன் கொல்லோ. எ - று.

தற்பரம் தனக்குப் பரம் என விரியும். தன் என்றது உயிரை.

அற்புதம் ஈண்டுச் சூனியத்தின் மேற்று. முதற்கட் சூனியமாய்த் தோன்றினுஞ் சூனியமன்றென்பார் 'அற்புதம்போல் வந்து' என்றுர். ஆனுமை நீங்காமை.

ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் அசைநிலை.

வானே முதல் எனவே தோற்றமுறை பற்றி வான் முதலாகிய பூதங்களும் ஒடுக்கமுறை பற்றி வான் முதலாகிய ஏனைத் தத்துவங்களும் அடங்கும்.

'நிர்க்குணனுய் நின்மலனுய் நித்தியானந்தனுய்த் தற்பரமாய்' என்புழி ஆக்கச்சொல் உண்மை குறித்து நின்றது வடமொழி மதம். அறிவாய் என்புழி ஆக்கம் வேறுபாடு குறித்து நின்றது.

ஒற்றுமை பற்றி முதல்வனது ஞானத்தை முதல்வன் என்று உபசரித்தார்.

> சுட்டி யுணர்வதனைச் சுட்டி யசத்தென்னச்
> சட்ட வினியுளது சத்தேகாண்—சுட்டி
> யுணர்ந்த நீ சத்தல்லே யுண்மையைத் தைவம்
> புணர்ந்ததனுற் பொய்விட்டுப் போம்.

எ—து. உ—ம். எ—னின். வானே முதல் களைந்தவழி அங்ஙனந் தோன்றுவதும் வேறென்றெனக் கோடும் ஞானசொரூபம் என்றற்குப் பிரமாணம் என்னை? என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ - ள். சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்து என்ன. எ-து. ஏகதேசவுணர்வாற் சுட்டி உணரப்படுவதாய பிரபஞ்சத்தை மேற் கூறியவாறே ஓரோவொன்றுகச் சுட்டி அசத்தென்று கண்டு கழித்துக்கொண்டு சென்றவழி,—இனிச் சட்ட உளது சத்தே காண். எ-து. முடிவின்கட் செம்மையே கோசரமாவது யாது அஃது அவ்வசத்தின் வேறுகிய சத்தேயாம் அதனை அறிவா

* சிவஞானசித்தி. அ-ம் சூ. ௩அ. எங்குந்தா.

யாக. அற்றேல், அசத்தின் வேறாய் அங்ஙனந் தோன்றுஞ்சத்தாவது உயிரே யாம் என அமையும் எனின்,—சுட்டி உணர்ந்த நீ சத்து அல்லே. எ-து. இதுகாறும் அசத்தோடு கூடிச் சுட்டி அறிந்து வந்த நீ அசத்தின் வேறாய் அங்ஙனந் தோன்றுஞ் சத்தாவாய் அல்லே. அற்றேல், இச்சுட்டுணர்வு எனக்கு நீங்குவது இன்று போலும் எனின்,—தைவம் (ஆய்) உண்மையைப் புணர்ந்து. எ-து. அசத்தின் வயப்பட்டு நின்று சுட்டியறிந்து வந்த நீ அதனை ஒழிந்து அங்ஙனந் தோன்றிய சத்தின் வயத்தினையாய் அதனைப் புணர்ந்தால்,—அதனால் பொய் விட்டுப்போம். எ-து. அப்புணர்ச்சியானே சுட்டுணர்வாகிய அப்பொதுவியல்பு நின்னை விட்டு நீங்கும். எ - று.

என்ன என்றது உபசார வழக்கு. சட்ட என்பது செப்பம் உணர்த்தி நிற்பதோர் அகரவீற் றிடைச்சொல். அது சட்டம் என இழிவழக்கின் மகர வீறாய் மரீஇயிற்று. அசத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது. உண்மை சத்து என்பன ஒருபொருட் கிளவி. தைவமாய் என ஆக்கச் சொல் வருவித்து உரைக்க. புணர்ந்தால் என்பது புணர்ந்து எனத் திரிந்தது. உண்மைக்குத் தைவமாதல் புணரின் என உருபுமயக்கமாகக் கொண்டு உரைப்பினும் அமையும்.

பற்றறக் கழிந்தொழியும் என்பார் விடும் என்னாது 'விட்டுப்போம்' என்றார்.

> கண்டதை யன்றன் றெனவிட்டுக் கண்டசத்தா
> யண்டனை யான்மாவி லாய்ந்துணரப்—பண்டணைந்த
> வூனத்தைத் தான்விடுமா றுத்தமனி னொண்கருட
> சானத்திற் றீர்விடம்போற் றான்.

எ—து. உ—ம். எ—னின். அசத்தை அசத்து என்று கண்டு ஒழியுமாறும் ஒழிந்தவழி உண்மையைத் தைவம் புணருமாறும் புணர்ந்தவழி அதனாற் பொய் விட்டுப் போமாறும் யாங்ஙனம்? என்பாரை நோக்கி அவற்றைத் தெரித்துணர்த்தி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ - ள். கண்டதை அன்று அன்று எனக் கண்டு அசத்து ஆய் விட்டு. எ-து. சுட்டி உணரப்பட்ட பிரபஞ்சத்தை இது சத்தன்று இது சத்தன்று என ஒரோவொன்றாக வைத்து நோக்கி அசத்து என்று ஒழித்து,—ஆன்மாவில் அண்டனை ஆய்ந்து. எ-து. அவ்வாறு கண்டு ஒழிந்த தன் அறிவின்கண்ணே சுட்டுணர்வின்றி நின்ற கடவுளை ஆராய்ந்து,—உணர. எ-து. சோகம் எனப் பாவிப்பனாயின்,—உத்தமனின் பண்டு அணைந்த ஊனத்தைத் தான் விடுமாறு. எ-து. அப்பாவகத்தான் அத்துவிதமாய் விளங்கித் தோன்றும் முதல்வனால் அநாதியாய்க் கூடி நின்ற பொதுவியல்பைத் தான் விட்டுநீங்குமாறு,—ஒண் கருட சானத்தின் தீர் விடம் போல். எ-து. ஒள்ளிய கருடதியானத்தில் விளங்கித் தோன்றுங் கருடனால் அப்பாவகன் விடத்தைத் தீர்த்துக்கொள்ளுமாறு போலாம். எ - று.

தான் என்பது முன்னையது எழுவாய். பின்னையது அசை. சானம் பாகதச்சிதைவு.

கருடத்தியானமாவது யாதெனிற் கூறுதும்:—ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், ஆத்தியான்மிகம் எனக் கருடன் மூவகைப்படும். பொருடோறும் இவ்வாறு கண்டுகொள்க. அவற்றுள், உலகத்திற் காணப்படுங் கருடன், ஆதிபௌதிக கருடன், அதற்கு அதிதெய்வமாகிய மந்திரம் ஆதி தைவிக கருடன், அம்மந்திரம் இடமாக நின்று மாந்திரிகனுக்குப் பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிக கருடன் எனப்படும். அம்மூன்றனுள் ஈண்டுக் கருடன் என்றது கருடனுக்கு அதிதெய்வமாய மாந்திரிகன் உள்ளத்தின் அதுபோல் வைத்துத் தியானஞ்செய்து கணிக்கப்படும் மந்திரரூபமாகிய ஆதிதைவிக கருடனே. அதனைப்பாவித்தலாவது நாடோறும் பயின்று வந்த பயிற்சிவிசேடத்தால் அம்மந்திர ரூபமே தானாக அநன்னியபாவனை செய்து தன்னறிவு அதன் வயத்ததாம்படி உறைத்து நிற்றல். அவ்வாறு நின்று அம்மந்திரக்கண் கொண்டு பார்ப்பவே அஃது அவ்விடவேகத்தை மாற்றுதல் ஒருதலையாகலின் அப்பாவனை ஈண்டைக்கு உவமையாயிற்று. புள்ளு விலங்கு மரம் முதலியவற்றுக்கெல்லாம் அதிதெய்வமந்திரம் உள என்பதூஉம், மந்திரங்களைக் கணிப்போன் படிகம் போல மந்திரசொரூபியாவன் என்பதூஉம், *சர்வஞ்ஞானோத்தரம் முதலியவற்றுட் காண்க.

இதனானே கருடபாவனை அசத்தியம் என்பார் மதம் போலியாயவாறும் உணர்க. அல்லதூஉம், பாவனை போலியாயவழி அது பயன்றருமாறு யாண்டையது என்றொழிக.

இரண்டாமதிகரண முடிந்தது.



## மூன்றாமதிகரணம்.

### இனி இவ்விடத்து ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி யுச்சரிக்க என்றது.

எ—து. மே—ள். எ—னின். ஆன்மாவைச் சுத்திபண்ணுதற்குப் பாசம் ஒருவியவழித் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானசொரூபம் ஒன்றே அமையுமாகலின் இவ்விடத்தில் இனிச் செய்யக்கடவதொன்றில்லை என்பாரை நோக்கிச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோடனுதலிற்று.

இ-ள். பாசமொருவி ஆண்டுத் தண்ணிழலாய்ப் பிரகாசித்த ஞானக்கண்ணாற் பதியைச் சிந்தை நாடிய பின்னர் அவ்விடத்துத் திருவஞ்செழுத்தையும் விதிப்படி கணிக்க என மேற்கொண்டது. எ-று.

இறந்தது தழீஇய எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. அற்றாகலினன்றே †"பின்னு—மோசைதரு மஞ்செழுத்தை விதிப்படியுச் சரிக்க" என்றார் வழிநூலாசிரியருமென்க.

* சர்வஞ்ஞானோத்தரத்துட் கூறுமாற்றை கஅ0-கஅக-ம் பக்கத்துக்குறிப்பிற்காண்க. † சிவஞானசித்தி. கூ-ம் சூ. க. பாசஞானத்தாலும்.

ஈண்டு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை என்றது முத்திபஞ்சாக்கரத்தை: திருவஞ்செழுத்தாற் சாதிக்கப்படும் பொருளும் அதுவே ஆகலான் வேறு வகுத்துக் கூற வேண்டாமையின், விதிப்படி என மாட்டெறிந் தொழிந்தார்.

இவ்வாறு ஆசிரியர் மாட்டெறிந்ததூஉம் உணராதார் சாதித்துநிற்கும் முறை வேறே ஓதும் முறை வேறே எனச் சித்தாந்தவழக்கொடு முரணிக் கூறுவர். நிற்கும் முறைமையும் ஓதும் முறைமையும் தம்முள் இயைபில்வழி அஃது அதற்குச் சாதனமாமாறு யாண்டையது என்றொழிக.

மானதம்*மந்தம் †உரை எனக் கணிக்குமாறு மூவகைப்படும். அவற்றுட் சுத்தமானதம் எனப்படும் அறிவாற்கணித்தலே ஈண்டு உச்சரித்தல் என்பார் சூத்திரத்துள் உச்சரிக்க என்னுது ‡'எண்ணுக' என்றுர். வடமொழிச்சூத்திரத்துத் 'தியானிக்க' என்றதும் அது. இன்னும் இதன்கட் படும் இயல்பெல்லாம், உண்மைவிளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிப்பாட்டு, நெஞ்சுவிடுதூது முதலியவற்றுட் காண்க. ஈண்டு விரிப்பிற் பெருகும்.

**இவ்வான்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும் அஞ்ஞானத்தை வேம்பு தின்ற் புழுப் போல நோக்கிற்றை நோக்கி நிற்கும் ஆகலின் அது நீக்குதற்கு எனக்கொள்க.**

எ—து. ஏது. எ—னின். அந்தரங்க வழிபாடாகலின் அசிந்திதனும் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுமாற்றைச் சாரவைத்து ஓதற்பாலதாகிய இதனைச் ¶சித்தசாதனமாய் ஈண்டு விதித்தல் எற்றுக்கு? என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ - ள். வேம்பு தின்ற புழு அதனை ஒருவிக் கரும்பைத் தலைப்பட்டு அதன் சுவை தெரிந்துழியும் பயிற்சிவயத்தான் நோக்கிற்றை நோக்கி நிற்குமாறு போல அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று கண்ட உயிர்களுக்கு அதனுன் ஞானசொரூபம் விளங்கி ஞேயங் காட்சிப்பட்ட விடத்தும் அவை பயிற்சிவயத்தாற் பண்டைச் சிற்றுணர்வை நோக்கி நிற்கும் ஆகலின் அவ்வாதனை நீக்குதற்பொருட்டு ஈண்டைக்கு வேண்டப்படுதலான் 'இனி ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி இவ்விடத்து உச்சரிக்க' என மேற்கொண்டது எனக் கொள்க. எ - று.

இவ்விடத்து என்றதனுல் அணைந்தோர் தன்மையைச் சாரவைத்து மேற்கோடற்குரிய ஸ்ரீபஞ்சாக்கரத்தை என வருவித்துரைத்துக்கொள்க. எனக்கொள்க என்று உடம்படுப்பித்ததும் அதுபற்றி. இக்கருத்து நோக்கியன்றே

---

* இதற்கு உபாஞ்சு என்றும் பெயர். † இதற்கு வாசகம் என்றும் பாஷியம் என்றும் பெயர். ‡ உரை நூறுமடங்கு பலமும், மந்தம் பதினுயிரம் மடங்கு பலமும், மானதம் கோடிமடங்கு பலமும் தருதலால் அப்பலத்தினது மிகுதிப்பாடு நோக்கி மானதமாகச் செபிக்க என்றுர். அது "மானதமா கச்செபிக்கிற் கோடி குணமதிகம்" என்பதனுல் அறிக. ¶ முதலதிகரணத்தில் ஞானக்கண்ணுற் காண்க என்றதும் ஆன்மசுத்தி, இவ்வதிகரணத்தில் ஸ்ரீ பஞ்சாக்கரத்தை உச்சரிக்க என்றதும் ஆன்மசுத்தி ஆதலான் முற்கூறப்பட்ட விஷயமே பின்னும் கூறப்படுதலிற் சித்தசாதனமாமென்பது அவர்கருத்து. அங்ஙனமாகாமை பின்னர்க் கூறுமாற்று னுணர்க.

புடைநூலாசிரியர் அஞ்செழுத்தருணிலையை ஆன்மலாபத்தின் பின்னாக அணைந்தோர் தன்மையைச் சாரவைத்து ஓதியதூஉம் என்க.

* "வானோக்கி வாழும்" * "கோனோக்கி வாழும்" என்றாற்போல ஈண்டு 'நோக்கு' என்றது மனவெழுச்சிவிசேடத்தை.

பிரகாசித்தவழி என்பது பிரகாசித்து எனத் திரிந்தது.

ஈண்டு ஞானம் என்றது அசத்தை அசத்து என்று கண்டவழி விளங்குவது எனப்பட்ட ஞானசொரூபத்தை; அஞ்ஞானம் என்றது அதற்கு மறுதலையாகிய சுட்டுணர்வை என உணர்க. அது நீக்குதற்கெனக் கொள்க எனவே, சித்தசாதனமன்று என்பதும் பெறப்பட்டது.

அஞ்செழுத்தா லுள்ள மர னுடைமை கண்டரனை
யஞ்செழுத்தா லர்ச்சித் திதயத்தி—லஞ்செழுத்தாற்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கி
லண்டனுஞ் சேடனு மங்கு.

எ—து. உ—ம். எ—னின். இஃது அவ்வாசனையை நீக்குதற்குச் சாதனமாமாறு யாங்ஙனம்? என்பாரை நோக்கி அஃதாமாறு கூறி ஏதுவை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். உள்ளம் அரன் உடைமை அஞ்செழுத்தால் கண்டு, எ-து. உயிர் சிவனுக்கு உடைமையாதலை அஞ்செழுத்தை உச்சரிக்கும் முறையில் வைத்து நோக்கி,—இதயத்தில் அரனை அஞ்செழுத்தால் அர்ச்சித்து, எ-து. தன்னுடம்பகத்தே இதயம் உந்தி புருவநடு என்னும் மூன்றனையும் முறையே பூசைத்தானம் ஓமத்தானம் தியானத்தானமாகக் கருதிக்கொண்டு புறம்பே ஞானபூசை செய்யும் முறைப்படி இதயபங்கயத்தில் அவ்வஞ்செழுத்தால் அமைந்த திருமேனியில் அம்முதல்வனைக் கொல்லாமை ஐம்பொறியடக்கல் பொறை அருள் அறிவு வாய்மை தவம் அன்பு என்னும் அட்டபுட்பங் கொண்டு அம்மனுவால் அர்ச்சனை செய்து,—அஞ்செழுத்தால் குண்டலியின் ஓமம் செய்து. எ-து. அத்திருமந்திரத்தானே குண்டலித்தானமான உந்தியில் ஞானவனலை எழுப்பி அதன்கண் விந்துத்தானத் தமிழ்தமாகிய நெய்யைச் சுழுமுனை நாடி இடை நாடி ஆகிய சுருக்குச் சுருவங்களால் ஓமித்து,—கோதண்டம் சானிக்கில், எ-து. விந்துத் தானமாகிய புருவ நடுவிற் சிகர யகர வகரங்கள் மூன்றும் முறையே தற்பதப் பொருளும் துவம்பதப் பொருளும் அசிபதப் பொருளுமாம் முறைமை நோக்கி அதனாற் சிவோகம்பாவனை செய்வனாயின்,—அங்கு அண்டன் ஆம் சேடன் ஆம். எ-து. அப்பாவனைக்கண் அம்முதல்வன் விளங்கித் தோன்றுவன் அப்பாவகன் அவனுக்குச் சேட சேடிய பாவகத்தால் அடிமையாவன். எ - று.

ஓமித்தலுந் தியானித்தலும் பூசைக்கு அங்கம் என அறிக. ஞானசொரூபம் விளங்கியவழியும் பயிற்சிவயத்தான் ஏகதேசப்பட்டுப் புறத்திற்

* திருக்குறள். ருசஉ.

செல்ல நோக்குவதாய தன் அறிவை அங்ஙனம் ஆகாதவாறு மடக்கி அகத்தே ஒரு குறியின்கண் நிறுத்தி நிட்டை கூடும்படி அஞ்செழுத்தோதும் முறையில் வைத்துக் கண்டு சிந்திக்கச் சிந்திக்க அஃது அந்நோக்கத்தைப் பற்றறக் கெடுத்து ஞானசொரூபத்தை இனிது விளக்கிப் பூரணநிலையிற் கொண்டு செலுத்துமாகலின் இஃது ஈண்டைக்குச் சிறந்த சாதனமாயிற்று என்பது.

இந்துவிற் பானுவில் ராகுவைக் கண்டாங்குச்
சிந்தையிற் காணிற் சிவன்கண்ணு—முந்தவே
காட்டாக்கிற் றோன்றிக் கனல்சே ரிரும்பென்ன
வாட்டாணு மோதஞ் செழுத்து.

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனம் ஒரு குறியின்கண் வைத்தன்றி முதல்வனைக் காண்டல் செல்லாதவாறும் அவ்வாறு கண்டவழி முதல்வன் தன்மாட்டு விளங்கித் தோன்றுமாறுந் தோன்றியவழித் தான் அம்முதல்வனுக்கு அடிமையாமாறும் உவமையில் வைத்து உணர்த்தி அதனை வலியுறுத்துதனுதலிற்று.

இ-ள். இராகுவை இந்துவில் பானுவில் கண்டாங்கு. எ-து. அந்தரத்தியங்கும் நவக்கோள்களுள் ஏனைய போலக் காணப்படாத இராகு கேதுக்களை *உபராகத்திற் சந்திராதித்தர் மாட்டுக் கண்டாற் போல,—சிந்தையில் காணில். எ-து. முப்பொருள்களுள் யான் இதனை அறிந்தேன் அறிகின்றிலேன் என்னும் உணர்விற்கு விடயமாகிய பசுபாசங்களோடு ஒப்ப வேறு உணரப்படாத முதல்வனைத் தன் இதயபங்கயத்தின் அஞ்செழுத்தின் முறையின் வைத்துக் காணுமாயின்,—உந்தவே காட்டாக்கின் சிவன் தோன்றிக் கண் ஆம். எ-து. கோலை நட்டுக் கயிற்றினாற் சுற்றிக் கடையவே †காட்டத்தினின்று அங்கி தோன்றுமாறு போல அம்முதல்வன் ஆண்டுத் தோன்றி அறிவுக்கறிவாய் விளங்கி நிற்பன்,—தான் கனல் சேர் இரும்பு என்ன ஆள் ஆம். எ-து. அப்பொழுது தானும் எரி சேர்ந்த இரும்பு போலத் தனது சுதந்திரத்தை விட்டு அம்முதல்வனுக்கு அடிமையாம்,—அஞ்செழுத்து ஓது. எ-து. ஆகலான் அத்திருவஞ்செழுத்தை விதிப்படி ஓதுவாயாக. எ - று.

கேது சாயாக்கிரகமாகலின், வேறு கூறாராயினர்.

கண் அறிவு. தோன்றி ஆம் என இயையும். உந்துதல் ஈண்டுக் கடைதன்மேற்று. காட்டாக்கி வடமொழிச்சிதைவு. இகரம் விகாரத்தாற் றொக்கது. இன் உவமவுருபு.

ஈண்டும் 'ஓதஞ்செழுத்து' என்றது வலியுறுத்தவாறு.

---

* இதனை உ0க-ம் பக்கத்துக்குறிப்பிற்காண்க. † இக்கருத்தேபற்றி "விறகிற்றீயினன்***முறுகவாங்கிக் கடையமுன் னிற்குமே" என்று அருளிச்செய்தார் ஆளுடைய பிள்ளையாரும்.

மண்முத லுளமலர் வித்தை கலாரூப
மெண்ணிய வீசர் சதாசிவமு—நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலையதிலா மச்சிவன்றா ணோர்.

எ—து. உ—ம். எ—னின். தத்துவம் முப்பத்தாறுக்கும் மேற்பட்ட முதல்வனை இதயபங்கயத்திற் கண்டு அர்ச்சிக்குமாறு யாங்ஙனம்? என்பாரை நோக்கி அவ்விதயபங்கயத்தின் இயல்பு உணர்த்தி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். நண்ணில். எ-து. அவ்விதயபங்கயத்தின் இயல்பை அறியப்புகின்,—மண் முதல் நாளம். எ-து. நிலம் முதலிய இருபத்துநான்கு தத்துவமும் உந்தியி னின்றுந் தோன்றி எண்விர லளவைத்தாயுள்ள நாளவடிவாம்,—வித்தை மலர். எ-து. வித்தியாதத்துவங்கள் ஏழுஞ் சுத்தவித்தையும் என்னும் எட்டுத் தத்துவமும் எட்டிதழ் வடிவாம்,—எண்ணிய ஈசர் சதாசிவமும் கலா ரூபம். எ-து. அத்தத்துவங்களுக்கு மேலாகக் கருதப்பட்ட ஈசுரஞ் சதாசிவம் என்னும் இரண்டு தத்துவமும் அறுபத்துநான்கு எனப்படுங் கேசர வடிவாம்,—சத்தி கலை உருவாம். எ-து. சத்தி தத்துவம் அக்கேசரங்களுக்கு உள்ளாகிய பொகுட்டு வடிவாம்,—நாதம் அதன் கண்ணும். எ-து. சிவ தத்துவம் அப்பொகுட்டிற் காணப்படும் ஐம்பத்தொரு வீச வடிவாம்,—அதில் அச்சிவன் தாள் நிலையாம். எ-து. ஆகலான் அவ்வியல்பிற்றாகிய இதயபங்கயத்தின் முப்பத்தாறு தத்துவமும் ஆசனமாகவுடைய அச்சிவனது சத்தி நிலைபெறும்,—ஓர். எ-து. அதனை அறிந்து திருவஞ்செழுத்தால் அர்ச்சிப்பாயாக. எ-று.

இதனானே *"அண்டபிண்ட மவைசம மாதலால்." புறத்துக் காணப்படும் முப்பத்தாறு தத்துவமும் அகத்தினிற் சூக்குமமாய் உண்டென்பது காட்டி முதல்வனுக்கு இந்நிலையே அந்நிலை எனத் தெளிவித்தவாறு.

வித்தை என்பது இரட்டுற மொழிதலான் அவ்வாறு உரைக்கப்பட்டது. சிவஞான சித்தியில் †"மூட்டுமோ கினிசுத்த வித்தைமல ரெட்டாய்" என்புழி மோகினி என்றதூஉம் ஆகுபெயரான் அதன் காரியமாய கலாதிகளின் மேல் நின்றது.

இவ்வாறன்றி நிலம் முதலிய முப்பத்தொரு தத்துவம் எனப்படும் எட்டுக்கொத்தும் எண்விரல்நாளவடிவும், அசுத்தமாயா தத்துவம் நாளத்துக்கும் மலருக்கும் நடுக்கண்ட மாகிய கிரந்தி வடிவும் அதற்குமேற் சுத்தவித்தையின் வாமை முதலிய எட்டும் எட்டிதழ் வடிவுமாம் என்றுரைப்பாரும், முப்பத்தொன்றுக்குமேல் அசுத்தமாயை கிரந்தியின் அதச்சதனம் சுத்தமாயை ஊர்த்துவச் சதனம் அதற்குமேல் ஈசுரதத்துவத்தில் அனந்தன் முதலிய எட்டும் எட்டிதழ் வடிவம் சதாசிவதத்துவம் ஒன்றுங் கேசர வடிவம் எனக் கொண்டு

* கோயிற்புராணம், பதஞ்சலிச்சருக்கம் எ0. வலங்கைமான். † சிவஞானசித்தி, சுபக்கம். கூ-ம் சூ. க. நாட்டுமிதய.

அதற்கியையக் கொண்டுகூட்டி உரைப்பாரும், கலாரூபம் என்றது பஞ்சகலை களை எனவும் அஃது யாண்டுங் கூட்டியுரைக்கப்படும் எனவுங் கொண்டு மண் முதலுள மலர் என்பதற்கு மண்ணாகிய நிவிர்த்திகலாரூபம் நாளமும், மண்ணை முதலாக உடைய ஏனை இருபத்து மூன்று தத்துவ மாகிய பிரதிட்டாகலா ரூபம் மலருமாம் எனவும், வித்தை யெண்ணிய வீசர் சதாசிவமுங் கலையுரு வமாம் என்பதற்கு வித்தியாதத்துவமாகிய வித்தியாகலாரூபங் கலை எனப் படுங் கேசரமுஞ் சுத்தவித்தையோடு கூட்டி எண்ணப்பட்ட ஈசுரதத்து வஞ் சதாசிவதத்துவ மாகிய சாந்திகலாரூபங் கலைக்குள் உரு எனப்படும் பொகுட்டுமாம் எனவும், நாதமாஞ் சத்தி யதன் கண்ணும் என்பதற்குச் சிவ தத்துவஞ் சத்திதத்துவ மாகிய சாந்தியதீதகலாரூபம் பொகுட்டின்கண்ணா கிய வீசமாம் எனவும் உரைப்பாரும் உளர். இவை யெல்லாம் அவ்வவ்வாக மபேதம் பற்றிக் கொள்ளப்படும்.

கலை அறுபத்துநான்கு ஆகலான் அறுபத்துநான்காகிய கேசரங்களுக் குத் தொகைபற்றிக் கூறப்படும் ஆகுபெயராயிற்று.

ஈசர் ஆகுபெயர்; கலையுரு கலைக்குள் உருவென உள்ளுருபு விரித்துரை க்க. அதில் என்புழி அன் சாரியை விகாரத்தாற் றொக்கது.

இது நாளம் முதலாக மேல்நோக்கித் தோன்றும் உலகத்துக் கமலம் போ லாது கண் முதலாகக் கீழ் நோக்கித் தோன்றியதோர் திப்பிய கமலம் எனக் கொள்க.

'சிவன்றாள் அதினிலையாம்' எனவே சிவன் சத்திக்கு மேலாய் நிற்பன் என்பதூஉம் பெறப்படும்.

மூன்றாமதிகரண முடிந்தது.



ஒன்பதாஞ்சூத்திர முடிந்தது.



சாதனவியன் முற்றிற்று.



சிவமயம்.

# பயனியல்.

## பத்தாஞ்சூத்திரம்.

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னாகி யிறைபணி நிற்க
மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.

எ-து. சூ-ம். எ-னின். பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்துத னுதலிற்று.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக்கருத்து உணர்த்துத னுதலிற்று.

இ-ள். மேல் ஏழாஞ்சூத்திரம் முதலிய மூன்றானும் முறையே சாதிக்கும் பொருள தியல்புஞ் சாதித்துப் பெறப்படும் பொருள தியல்புஞ் சாதிக்குமாறும் உணர்த்தி, இனி அச்சாதனத்தானாய பயனியல்பு வகுத்துக்கூறுவான் எடுத்துக்கொண்டார். அப்பயனாவது பாசவீடுஞ் சிவப்பேறும் என இருவகைப்படும். அவ்விரண்டனுட் சுட்டுணர்வி னாகிய ஏகதேச நோக்கத்தைத் திருவஞ்செழுத்தினது உச்சரிப்பாற் பற்றறத் துடைத்தவழிப் பெறப்படுவ தாகிய மேலைச் சூத்திரத்தின் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்திப் பயனாகிய பாசவிடுதியைச் செய்துகொள்ளுமாறு மேற் சிந்தனை செய்த பொருளைத் தெளியுமாறு உணர்த்து முகத்தான் உணர்த்துதல் இப்பத்தாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

இதனானே சூத்திர இயைபும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. ஞானக்கண்ணாற் காணப்பட்ட அம்முதல்வன் தான் உடனாய்நின் றறியவும் வேறு காணப்படுமா றின்றி யானே அறிந்தேன் என்னும்படி உயிர் தானேயாய் ஒற்றுமைப்பட்டு உயிரின் வழி நின்ற அப்பெத்தநிலை போல்,ஈண்டு உயிர் அம்முதல்வனோடு உடனாய் நின்று அறியினுந் தானென வேறு காணப்படுமாறின்றி அவனோடு ஒற்றுமைப்பட்டு அவ்விறைபணியின் வழுவாது நிற்பின், மலமாயை என்னும் இரண்டனோடு வலிய கன்ம மலமும் இல்லையாய் ஒழியும். எ-று.

அவனே தானே என்னும் ஏகாரம் இரண்டனுள் முன்னையது பிரிநிலைக்கண்ணும் பின்னையது தேற்றத்தின் கண்ணும் வந்தன.

நெறி உவம உருபு.

மலமாயையொடு கூடிய வினை என்றாராகலின் *'இன்றே' என்றார்.

உவமைக்கு ஓதியது பொருளினும், பொருளுக்கு ஓதியது உவமையினுஞ் சென்று இயைந்தன.

ஈண்டு ஒற்றுமைப்படுதலாவது, குடமுடைந்தவழிக் குடாகாயமும் ஆகாயமும்போல ஒருபொருளாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றிக் குற்றியை மகன் என்பதுபோலத் திரிவுகாட்சியான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி மண்ணே குடம் என்பதுபோல ஒன்றுதிரிந்தொன்றாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றி வெள்ளையுந் தாமரையும்போலக் குணகுணித்தன்மையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றித் தீயும் இரும்பும்போல ஒன்றினொன்று விரவுதலான் ஒற்றுமைப்படுதலோ, அன்றிப் பாலும் நீரும்போலப் பிரிக்கப்படாத சையோகத்தான் ஒற்றுமைப்படுதலோ, அன்றிக் கருடனும் மாந்திரிகனும்போலப் பாவனைமாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றிக் காய்ந்த இரும்பின் நீர்போல ஒன்றினொன்று இலயமாய் ஒற்றுமைப்படுதலோ, அன்றிப் பேயும் பேய்பிடியுண்டவனும்போல ஆவேசத்தான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி இந்தனத்தின் எரிபோல விளங்காமையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி ஞாயிற்றினொளியின் விளக்கொளிபோலச் சத்தி கெட்டுநிற்றலான் ஒற்றுமைப்படுதலோ, அன்றித் தலைவனுந் தலைவியும்போல இன்பநுகர்ச்சி மாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி நட்டாரிருவர்போல நட்புமிகுதியான் ஒற்றுமைப்படுதலோ, அன்றி ஆவும் ஆமாவும்போல ஒப்புமைமாத்திரையான் ஒற்றுமைப்படுதலோ என்று அவ்வச் சமயவாதிகண் மதம்பற்றி நிகழும் இன்னோரன்ன ஐயப்பாடுகளை எல்லாம் நீக்குதற்பொருட்டு, 'அவனே தானே யாகிய வந்நெறி' என உவமையெடுத்துக் காட்டி ஓதினார். ஈண்டுக் கூறிய ஒற்றுமைக்கட் படும் இயைபாவ தென்னை? எனின் அது வருகின்ற சூத்திரத்திற் பெறப்படும்.

இதனுள், அவனே தானே யாகிய வந்நெறியேகனாகி என்றது ஓரதிகாரணம்; இறைபணி நிற்க மலமாயை தன்னொடு வல்வினை யின்றே என்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதிகரணத்தது இச்சூத்திரம் என்றுணர்க.



## முதலதிகரணம்.

**ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற † முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்க என்றது.**

எ—து. மே—ள். எ—னின். ஞானம் பிரகாசித்து முதற்பொருளைக் காண்டன்மாத்திரையே வீடுபேற்றிற்கு அமையும் எனச் சிவசமவாதசைவர் முதலியோர் மதம்பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ—ள். வெ—டை.

**அவ்வாறு நிற்கவே யான் எனது என்னுஞ் செருக்கற்று அவனது சீபாதத்தை அணையு மாகலான்.**

* "சிறப்பொடு பூசனை செல்லாது" என்புழிப்போல. † முறைமையான்-முறைமைபோல. இஃது இப்பொருட்டாதல் 'ஆகிய அந்நெறி' என்பதனானறிக.

எ—து. ஏது. எ—னின். அஃது எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அங்ஙனம் ஒற்றுமைப்பட்டு நின்றாலே யானும் எனதும் எனப் பகுத்து நிற்கும் மயக்கவுணர்விற்கு ஏதுவாய மலம் நீங்கி அம்முதல்வனது திருவடியாகிய சிவானந்தத்தைப் பெறுமாகலான் அச்செருக்கறுதிக்குக் காரணமாதல்பற்றி, 'ஈண்டுப் பரமேசுரன் இவ்வான்மாவாய் நின்ற முறைமையான் அவனிடத்து ஏகனாகி நிற்க' என மேற்கொண்டது. எ - று.

அவ்வாறு நில்லாதவழி மலம் அறாது அஃது அறாதவழிச் சீபாதத்தை அணைதல் பெறப்படாது என்பார் நிற்கவே எனத் தேற்றேகாரத்தாற்கூறினார்.

யான் எனப்படுவது * ஞாதிரு. எனது எனப்படுவன ஞான ஞேயங்கள்.

ஆறுவது பண்பின் கிழமையும் உணர்ச்சிக் கிழமையும் பற்றி வந்தது.

ஒருமை தனித்தனி சென்று இயையும். செருக்கு ஆகுபெயர்.

அற்று அணையும் என்றது "மழைபெய்து குளநிறையும்" என்றாற்போலக் காரணகாரியப் பொருள்பற்றி வந்த செயவெனெச்சத் திரிபு.

நானவனென் றெண்ணினர்க்கு நாடுமுள முண்டாத
றானெனவொன் றின்றியே தானதுவாய்—நானெனவொன்
றில்லென்று தானே யெனுமவரைத் தன்னடிவைத்
தில்லென்று தானு மிறை.

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனம் பகுத்துநின் றுணரு முணர்வை மயக்க உணர்வென்றது என்னை? என்பாரை நோக்கி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். நான்அவன் என்று எண்ணினர்க்கும் நாடும் உளம் உண்டாதல் தான் என ஒன்று இன்றியே தான் அது ஆய். எ-து. யானென்றும் அவனென்றும் ஞாதிரு ஞேயங்களைப் பகுத்துணர்ந்து நிற்பார்க்கும் யானே என நிற்பார்க்குப் போல அவ்வா றெண்ணுகின்ற உயிருணர்வு முனைத்துத் தோன்றுமாகலான், அவ்வழித் தான் என்று ஒருமுதல் காணப்படுமாறு இன்றித் தான் அவ்வுணர்வேயாய்,—நான் என ஒன்று இல் என்று தானே எனும் அவரைத் தன் அடி இல் என்று வைத்து தான் ஆம் இறை. எ-து. இனி யானென் றொருமுதல் காணப்படுமா றில்லையென் றுணர்ந்து முழுவதுந் தானே எனக் காணுந் தெளிவுடையாரைத் தனது திருவடி வியாபகத்துள் அடங்கிநிற்கச் செய்து அவ்வாறேயாவன் முதல்வன். எ - று.

ஆய் ஆம் என இயையும். ஆயாம் என்புழிச் செய்தெனெச்சம் "நள்ளார்க்கு நஞ்சொத்து நட்டார்க் கமிழ்தொக்கு மிவன்" என்றாற்போலத் தன்வினையாதலுணர நின்றது. எண்ணினர்க்கும் என இறந்ததுதழீஇய எச்சவும்மை சந்திநோக்கி மகரங் கெட்டு நின்றது.

---

* இவற்றை உ0கூ-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.

நாடு முள முண்டாயவழித் தான் இலனாதலும் அஃதில்வழித் தான் உளனாதலும் யாங்ஙனம்? பெறுதும் எனிற் காட்டுதும்:—

* தூல ஒளியாகிய கண்ணொளியுஞ் சூக்கும ஒளியாகிய விளக்கொளியும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலை உற்றுநோக்க வல்லார்க்குப் பிரித்தறிய வாராமையிற் கண்ணொளியாக் காணுங்காற் காணுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின் அவ்வழி விளக்கொளி இருந்தும் இல்லைத்தானே, அன்றி விளக்கொளியாக் காணுங்காற் காட்டுந்தன்மையே முனைத்துத் தோன்றுமாகலின் அவ்வழிக் கண்ணொளி இருந்தும் இல்லைத்தானே; இனிக் கண்ணொளியும் விளக்கொளியும் எனப் பகுத்துக் காணப்புகினும் காணுந்தன்மையே முற்பட்டுத் தோன்றுதலின் அவ்வழி விளக்கொளி திரிவுபுலனாக் காட்சிப்படுவ தல்லது தெளிவுபுலனாக் காட்சிப்படுமா றில்லை. அதுபோலத் தூல அறிவாகிய உயிருஞ் சூக்கும அறிவாகிய சிவமும் அத்துவிதமாய்க் கலந்து நிற்கும் நிலையும் பிரித்தறிய வாராமையின் ஆண்டும் இவ்வாறே கண்டுகொள்க.

இக்கருத்துப்பற்றியன்றே † "கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடுங் கருத்தொன் றன்றே" எ-ம், ‡ "காண்பானுங் காட்டுவதுங் காண்பதுவு நீத்துண்மை—காண்பார்க ணன்முத்தி காணார்கள் - காண்பானுங்—காட்டுவதுங் காண்பதுவுந் தங்கடந்தைச் சம்பந்தன்—வாட்டுநெறி வாரா தவர்" எ-ம் கூறினார் புடைநூலாசிரியரும்.

அற்றேல், இவ்விரண்டனுள் யாது திரிவுகாட்சி? யாது தெளிவுகாட்சி? எனின்,—கண்ணொளியோடு கூடியவழியும் இது விளக்கொளி இது ஞாயிற்றொளி இது திங்களொளி என அவ்வப்பெற்றியவேயாய்க் காணப்படும் விளக்கொளி முதலியவற்றின் காட்சி தெளிவுகாட்சி எனவும், அவ்வொளிகளோடு கூடியவழி அவ்வாறு ஒருபெற்றித்தாய்க் காணப்படாத கண்ணொளியை வேறு காண்டல் திரிவுகாட்சி எனவும் கண்கூடாக விளங்கக் கிடத்தலின் இவ்வாறே பொருளினும் வைத்துணர்ந்துகொள்க.

இவ்வாறன்றி, விளக்கொளி முன்னர்க் கண்ணொளி சத்திமடங்கிப் போதலின் அது விளக்கொளியைப் போலக் காட்சிப்புலனாகா தாயிற்று என்னாமோ எனின்; என்னாம்: என்னை? கண்ணொளி சத்திமடங்கிற்றாயின் விளக்கொளி காட்சிப்புலனாதல் பிறிதொன்றாற் பெறப்படாமையின்.

அற்றேல், மின்மினித் துணையாயினுந் தானே விளங்கும் இயல்பில்லாத கண்ணுக்கு ஒளிக்குணம் உண்டென்பதற்குப் பிரமாணம் என்னை எனின்,—அறியாது கடாயினாய்: ஆகாயத்தின்கண்ணதாகிய சத்தகுணம் வியஞ்சகத்தானன்றித் தினைத்துணையானுந் தானென விளங்குமா றின்மையின் அதுபற்றி எதிரொலி வடிவாய அவ்வோசையை ஆகாயத்தின் குணமன்று வியஞ்சகப் பொருளின் குணமென்பார் யாரும் இல்லை. அதுபோலக் கண்ணின்கண்ணதாகிய ஒளியும் வியஞ்சகமுள்வழி விளங்கி அல்வழி விளங்காமை மாத்திரையே

* தூலவொளி - வியஞ்சகத்தை அபேக்ஷித்து நின்று விளங்கு மொளி. சூக்குமவொளி - வியஞ்சகத்தை அபேக்ஷியாது நின்று விளங்கு மொளி. † சிவப்பிரகாசம், உண்மை. ௩-ம் சூ. எ. கண்ணொளி விளக்க ளித்து. ‡ வினாவெண்பா. கக.

பிறிதில்லை யாகலான் அதனைக் கண்ணின் குணமன்று என்றல் அறிவிலாதார் கூற்றேயாம் எனவும், அக்கண்ணொளியாவது தன்னை விளக்குதற்குரிய வியஞ்சகப்பொருள் ஏகதேசமாயின் ஏகதேசமாய் விளங்கியும் அது வியாபகமாயின் வியாபகமாய் விளங்கியும் நிற்பதோ ரியல்பிற்றெனவும் உணர்க.

அஃதங்ஙனமாக, *"கண்ணொளி விளக்கின் சோதி கலந்திடும்" என்றற்குப் பிரமாணம் என்னை? ஒரு விடயத்தின் வீழ்ந்த பல கண்ணொளிகட்குத் தம்முள் இயைபில்லாதவாறு போல ஒருவயிற்பட்ட கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முள் இயைபில்லை என்றலே பொருத்தமுடைத்துப் போலும் எனின்,—அஃது அறியாதார் கூற்றேயாமென் றொழிக. என்னை? ஒரு விடயத்தின் வீழ்ந்த கண்ணொளிகள் தம்முள் ஒன்றனை ஒன்று காணுமாறும் இல்லை காட்டுமாறும் இல்லை ஆகலான் அவை தம்முட் கலத்தற்கு ஓரியைபின்றென்பது ஒக்கும். அவ்வாறன்றிக் கண் விளக்கினைக் காண்டலும் விளக்குக் கண்ணுக்குக் காட்டலும் ஆகிய இயைபு உண்மையானும், இவ்வியைபு தம்முட் பெறப்படாத கண்ணொளிமுதலாயின ஈண்டைக்கு உவமையாதல் செல்லாமையானும், இந்திரியங்கள் தத்தம் விடயத்தோடு இயைந்தன்றிச் சந்நிதிமாத்திரையான் அவற்றை அறிதல் செல்லா என்பது ஆகமங்களுக்கெல்லாந் துணிபாகலானும் அத்தன்மையவாய கண்ணொளி விளக்கொளிகட்குத் தம்முட் கலப்பில்லை என்றல் காண்டல்விரோத மாகலின், இவ்வாறு உவமைக் கோதியன வெல்லாம் பொருட்கண்ணு மாமாறு உணர்ந்து உய்த்துரைத்துக் கொள்க.

அற்றேல், ஈண்டு எடுத்துக்காட்டிய கண்கள் தம்முள் ஒன்றனையொன்று காணுமா றின்மைபோல உயிர்களுந் தம்முள் ஒன்றனையொன்று அறியுமாறு இல்லைபோலும் எனின், அறியாது கூறினாய்; கண்கள் தம்முள் ஒன்றுெனொன்று காணப்படுமாறு இல்லையென்றது விளக்கும் விடயமுங் காணப்படுமாறு போல வேறியைந்து தனிப்பொருளாய்க் காணப்படுமா றில்லை என்றதுணையே அன்றிப் பிறிதின்மையின், விளக்கொளியைக் கண் காணுங்கால் அதுவதுவாய் நின்று காணும் பெற்றித்தாய்த் தன்னையும் அவ்விளக்கொளிவண்ணமாய்க் காண்டல் உண்டென்பது கண்கூடாக அறியக் கிடத்தலின், ஏனைக் கண்களையும் அவ்வாறு காண்டல் அமையுமாகலான் அதுபோலத் தம்முட்டனித்தியை பில்லாத உயிர்களுஞ் சிவத்தோடு இயைந்து நின்று தம்மையும் பிறவுயிர்களையும் இவ்வாறு உணர்தல் அமைவுடைமையான் என்பது.

† 'நாடியரன்—றன்னாலே தன்னையுங் கண்டு தமைக்காணு—மென்னு மெனவறிவார்' எ-ம், ‡ "தன்னாலே தனையறிந்தாற்—றன்னையுந் தானே காணுந் தானது வாகி நின்றே" எ-ம், ¶ "அதிலறி வடங்கி—மன்னிட வியாபியாய வான்பயன் றோன்றும்" எ-ம், § "என்னையுங் கண்டேன் பிறரையுங்

* சிவப்பிரகாசம், உண்மை. ௯-ம் சூ. எ. கண்ணொளி. † இந்நூல். ௬-ம் சூ. ௧-ம் அதி. ௧. நாடியோ. ‡ சிவப்பிரகாசம், உண்மை. ௮-ம் சூ. உ. தன்னறி. ¶ " ௬-ம் சூ. ௯. இந்நிலை. § பட்டணத்துப்பிள்ளையார், திருவிடைமருதூர் மும்மணிக்கோவை. ௧௯. மேவிய.

கண்டே—னின்னிலை யனைத்தையுங் கண்டே னென்னே—நின்னைக் காணு மாந்தர்—தம்மையுங் காணுத் தன்மை யோரே" எ-ம். பிறுண்டும் இவ்வா றேதும் அநுபவமுடைய தேசிகர் திருவாக்குக்களானும் இவ்வுண்மை உணர்ந்து கொள்க.

முதலதிகரண முடிந்தது.



## இ ர ண் ட ா ம தி க ர ண ம்.

## இனி இறைபணி வழுவாது நிற்க என்றது.

எ—து. மே—ள். எ—னின். உடம்பு நிற்குங்காறும் அது கொண்ட வினைப் பயனும் அதனை அனுபவித்தற்குத் துணைக்காரணமாய் உடனிற்கும் முயற்சியும் ஒருவாற்ருனும் நீக்கலாகாமையின் அவை அவ்வழி ஏகனுகி நிற்றற்குத் தடையாதலைக் கடக்குமா றில்லைபோலுமெனச் சுத்தசைவரூயினுர் மதம் பற்றி நிகழுங் கடாவை ஆசங்கித்துச் சூத்திரத்தின் இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ-ள். வெடை.

நிற்றலாவது சலியாது நிலைபெறுதல் என்பார் 'வழுவாது நிற்க' என்றூர்.

ஈண்டு இறைபணி என்றது யாதெனின்,—அஃது ஆசிரியர்தாமே *முன்னர்த் தெரித்துரைக்கின்றமையின் இனிது விளங்கும்.

**அவனருளால் அல்லது ஒன்றையுஞ் செய்யாஞகவே அஞ்ஞானகன்மம் பிரவேசியா ஆகலான்.**

எ-து. ஏது. எ-னின். ஏகனுகிநிற்றலே அமையும் இறைபணி நிற்றல் எற்றுக்கு என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். தன்செய்திக்கு முதல்வன்செய்தியை இன்றி அமையாத ஆன்மா செய்வன வெல்லாம் அவனருளின்வழி நின்று செய்யுமாயின் மாயேய முங் கன்மமும் ஏகனுகி நிற்றற்குத் தடையாய் வந்து தாக்கா ஆகலான், அவை தாக்காமைப் பொருட்டுச் செய்யப்படும் உபாயமாதல்பற்றி 'இனி இறைபணி வழுவாது நிற்க' என மேற்கொண்டது. எ-று.

அஞ்ஞான கன்மம் உம்மைத்தொகை.

மலமின்றுதல் † மேற் பெறப்பட்டமையின் ஈண்டு அஞ்ஞானம் என்றது மாயையின் காரியமாகிய மயக்கத்தை என்பது பெற்றும். உடம்பு நசிக்குமளவும் அவை மாய்வனவன்மையின் அறும் என்னுது 'பிரவேசியா' என்றூர்.

நாமல்ல விந்திரிய நம்வழியி னல்லவழி
நாமல்ல நாமு மரனுடைமை—யாமென்னி
லெத்தனுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை
முற்செய்வினை யுந்தருவான் முன்.

* இதனை உ௧0-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க. † முதலதிகரணத் தேது.

எ—து. உ—ம். எ—னின். உடம்பொடு நிற்பார் நுகர்தற்கு வேண்டப்படும் பிராரத்தவினையும் அதுபற்றி ஏறும் ஆகாமியவினையும் ஒருதலையா னுண்மை யின் இறைபணிநிற்றல் பற்றி அவை பிரவேசியா என்றல் அமைவுடைத்தன் றுபோலும் என்பாரைநோக்கி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். இந்திரியம் நாம் அல்ல. எ-து. வினைகளை நுகர்தற்கும் ஈட்டுதற்குங் கருவியாகிய இந்திரியங்கள் மாயேயமாவனவன்றி யாமாவனவல்ல,—நம் வழி யின் அல்ல. எ-து. அவை தொழிற்படுதலும் முதல்வன்வயத்தா னன்றிநம்வய த்தானல்ல,—வழி நாம் அல்ல. எ-து. வினைநிகழ்ச்சிக்கு வாயிலாகிய விடயாதி களும் அவ்விந்திரியங்கள்போல மாயேயமாவனவன்றி யாமாவனவல்ல,—நம் வழியின் அல்ல. எ-து. அவை சேட்டித்தலும் முதல்வன் வயத்தா னன்றி நம் வயத்தா னல்ல,—நாமும் அரன் உடைமை.எ-து.அவற்றோடு இயைந்து நின்று வினைகளை ஈட்டுதற்கும் நுகர்தற்கும் வினைமுதலாகிய யாமும் ஞானச்செய்தி களை முதல்வன் விளக்கியவழி விளங்கி அல்லுழி விளங்குமா றின்மையான் அம்முதல்வன் வயத்தாராவே மல்லது சுதந்திரராவே மல்லேம்,—ஆம் என்னில். எ-து.என்று இங்ஙனம் பசுபாசங்களது இயல்பை உள்ளவாறு உணர்ந்து செய் வனவெல்லாம் அவனருளின்வழி நின்று செய்யுஞ் செயலாகக் கண்டுகொண் டிருப்பாராயின்,—இறை பணியார்க்கு எத் தனுவின் நின்றும் வினை இல்லை. எ-து. இவ்வடிமைத்திற முடையார் எவ்வுடம்பி னின்று எவ்வினைகளைச் செய் யினும் அவர்க்கு அவை பந்தமாத லில்லை,—முன் செய் வினையும் தருவான் முன். எ-து. அவ்வாகாமியவினையை அவினுபாவமாய் உடன்கொண்டு வருவ தாகிய பிராரத்த வினையுந் தன்னைக் கூட்டுவிக்கும் முதல்வன் சந்நிதியின் உட லூழாய்க் கழியும்.எ - று.

நம் வழியி னல்ல என்பது வழி என்பதனோடுங் கூட்டி உரைத்துக்கொ ள்ளப்படும்.

மகனன்று குற்றி என்றாற்போல் அன்மைச்சொல் தழுவப்படும் பொரு ண்மே னின்றது. * "அன்மைக் கிளவி வேறிடத் தான" என்பதோத்தாகலின்.

நின்றும் உம்மை சிறப்பு; ஏனை உம்மைகள் இறந்தது தழீஇயின.

சஞ்சிதவினை தீக்கைசெய்தமாத்திரையே எரிசேர்ந்த வித்துப்போலக் கெட்டொழிதலின் ஈண்டு முற்செய்வினை என்றது ஏற்புழிக்கோடலாற் பிரா ரத்தவினைமேற் றாயிற்று.

† தருதல் இடவழுவமைதி. கழியுமென்பது சொல்லெச்சம். உடலூழாய் என்பது அவாய்நிலையான் வந்தது.

சார்ந்தாரைக் காத்த றலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்துஞ் சலமிலனாய்ச்—சார்ந்தடியார்
தாந்தானாச் செய்துபிறர் தங்கள்வினை தான்கொடுத்த
லாய்ந்தார்முன் செய்வினையு மாங்கு.

---

* தொல்காப்பியம் சொல்லதிகாரம், கிளவியாக்கம். ௨௫. தன்மை சுட்டலு.
† இதனை ௨௯௧-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.

எ—து. உ—ம். எ—னின். இறைபணியார்க்கு உளவாகிய முற்செய்வினை ஏனையோர்க்குப்போ லன்றித் தருவான்முன்னு மொழியுமாயின் அங்ஙனம் இருவேறு வகைப்படச் செய்யுமுதல்வன் நடுவுநிலைமை யின்றிக் கோட்டமுடைய னெனப்பட்டு வழுவாம்போலு மென்பாரை நோக்கி வழுவன்மை கூறி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். சார்ந்தாரைக் காத்தல் *தலைவர் கடன் ஆதல் சார்ந்தாரைக் காத்தும். எ-து. தம்மாட்டு அடைக்கலமெனச் சார்ந்தாரை அவர்க்கு வரும் ஏதத்தை நீக்கிக் களைகணாய் நின்று காப்பது தலைமைக் குணமுடைய ராயினார்க்குக் கடமை யாகலான் முதல்வன் ஏனையோரை யொழித்துத் தன்னைச் சார்ந்தாரை அங்ஙனம் பாதுகாப்பானாகியும்,—சலம் இலன் ஆய்.எ-து. அதுபற்றிக் கோட்டமுடைய னல்லனாய்,—சார்ந்து அடியார் தான் ஆச் செய்து பிறர்தங்கள் வினை கொடுத்தல். எ-து. தன்னைச் சார்ந்து தன் அடித்தொழில் செய்வார் தன்போல் ஆகாமியவினைத் தொடக்கிலராகச் செய்து பிறர்க்கு வரும் ஆகாமிய வினையை அவர்க்குக் கொடுப்பா னாகலான்,—ஆய்ந்து ஆர் முன் செய்வினையும் ஆங்கு. எ-து. அவ்விருதிறத்தோர் மாட்டும் நுணுகி வந்து கூடுவதாய பிராரத்த வினையும் அவ்வாறே செய்வோர் செய்திக்குத் தக்க பயனாய் இருவேறு வகைப்படச் செய்வன். எ-று.

இறைபணியார்க்கில்லை வினை முற்செய் வினையுந் தருவான் முன் என்றது பற்றி ஏனையோர்க்கு நியதிசெய் தூட்டி இறைபணியார்க்கு வினையின்றாகச் செய்தல் இறைவனுக்கு நடுவுநிலைமையன் றென்பாரை நோக்கி அதனை உடன்பட்டே அமைதி கூறுவாராய்ச் 'சார்ந்தாரைக் காத்த றலைவர் கடன்' எனப் பழமொழி யெடுத்துக் காட்டி இஃதவ்வாறு நடுவன்மையு மன்றென வலியுறுத்துவார் 'சார்ந்தடியார் தானாச் செய்து பிறர்தங்கள் வினை கொடுத்தல்' என வேறுவமை யெடுத்துக்காட்டினார். சார்ந்தடியார் தாந்தானாச்செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல் உண்டென்பதூஉம், அது கோட்டமின்று நடுவு நிலைமையேயாம் என்பதூஉம், ஏனைச் சமயத்தார்க்கும் ஒப்ப முடிந்தமையின் அஃது ஈண்டைக்கு உவமையாயிற்று.

உம்மை சிறப்பின்கண் வந்தது. சலம்-வஞ்சனை; அஃது ஈண்டுக் கோட்டத்தின்மேல் நின்றது. சார்ந்து என்னும் வினையெச்சம் அடியார் என்னும் வினைக்குறிப்புமுற்றுப்பெயர் கொண்டது. சார்ந்த என்னும் பெயரெச்சத் தகரந் திரிந்துமுடிந்ததெனினு மமையும். தாமும் பின் வந்த தானும் அசை. ஆதல் கொடுத்தல் என்புழி ஆனுருபு விரித்துரைக்க.

தானாச்செய்து என்புழி ஆக்கம் உவமவுருபின்பொருள் குறித்து நின்றது. பிராரத்தவினை அதிசூக்குமமாய் வருவதாகலின் அதனியல்பு அறிதல் அரிது என்பார் 'ஆய்ந்தார்முன் செய்வினையும்' என்றார். ஆய்தல் அப்பொருட்டாதல் †மேற்காட்டினாம். ஆர் வினைத்தொகை. உம்மை இறந்தது தழீஇயிற்று.

* தன்னைச் சார்ந்தாரைக் காத்தல் தலைவர்க்குக் கடனதலை "தன்னை யடைந்தார் வினைதீர்ப் பதன்றோ தலையா யவர்தம் கடனாவதுதான்" என்னும் தேவாரத்தானும் உணர்க. † இதனை. உகஉ-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க.

இங்குளி வாங்குங் கலம்போல ஞானிபான்
முன்செய் வினைமாயை மூண்டிடினும்—பின்செய்வினை
மாயையுட னில்லாது மற்றவன்றான் மெய்ப்பொருளே
யாயவத னாலுணரு மச்சு.

எ—து. உ—ம். எ—னின். இறைபணி நிற்பார்க்குப் பிராரத்தவினை தாக்குதல் உண்டென்பதற்குத் * "தினைத்துணை யேனும் பொறேன்றுய ராக்கையின் றிண்வலையே" என்றற்றொடக்கத்தான் அவர் கூறுந் திருவாக்குக்களே சான்றாகலின், அஃது அவர்க்குச் செய்வோர்செய்திப் பயனும் ஒழியும் என்றல் அமையாமையின் அஃது உண்டாகவே அதுபற்றி நிகழும் ஆகாமியமும் பிறவிக்கு வித்தாய் நிலைபெறுதல் உண்டுபோலும் என்பாரை நோக்கி ஆண்டுப் பிராரத்தவினை தாக்குதற்கு ஏதுக் கூறி அதுபற்றிச் செய்வோர் செய்திப் பயனும் ஒழிதற்கு இழுக்கில்லை என வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். இங்குளி வாங்கும் கலம் போல. எ-து. தன்பால் வைத்து எடுக்கப்பட் டொழிந்த பெருங்காயத்தி னின்றும் அதன் வாசத்தை வாங்கிக்கொள்ளும் பாசனத்தின்கண் அவ்வாசம் மங்கிப்போய் மெலிதாய்க் கந்திக்குமாறு போல,—ஞானி பால் முன் செய் வினை மாயை மூண்டிடினும். எ-து. இறை பணி நிற்குந் தத்துவஞானிக்குப் பயிற்சிவயத்தான் ஒரோவழி நாடுமுளம் உண்டாதலும் உண்மையின் அதுபற்றிப் பிராரத்தவினையும் அதற்கு வாயிலாகிய உடம்பு முதலிய மாயையும் மங்கிப்போய் வாசனை மாத்திரையாய் மெலிதாய் வந்து மூளுமாயினும்,—பின் செய் வினை மாயையுடன் நில்லாது. எ-து. அம் மூட்சி பற்றி ஒருதலையான் நிகழ்வதாகிய ஆகாமியவினை மேலைக்கு வித்தாய் நிலைபெற்று முறுகுத லின்றித் தனக்கு வாயிலாகிய மாயையத்தோடு கெட்டொழியும்,—அவன் தான் மெய்ப் பொருளே ஆய அதனால் மற்று அச்சு உணரும். எ-து. இறை பணி நிற்கும் அவன் சத்தாயுள்ள சிவமேயாயவாற்றால் ஒரோவழி அவ்வாசனை பற்றிப் பிறழுவரினும் பிறழுவொட்டாத அவ்வச்சினையே நோக்கி நிற்பனாகலான்- எ - று.

ஒளி இருளைத் துரக்குமாறு போல அவ்வுணர்வு அவ்வாகாமியத்தைத் துரக்கும் என்பதாம். † "தொல்லையில் வருதல் போலத் தோன்றிரு வினையதுண்டே—லல்லொளி புரையு ஞானத் தழலுற வழிந்து போமே" எனப் புடைநூலாசிரியர் ஓதியதூஉம் அது.

உளி ஐந்தாம்வேற்றுமை உருபுபட நின்றது. ‡"மந்திரவிதியின் மரபுளி வழாஅ—வந்தணர் வேள்வி" என்றாற்போல. முற்றுகரக்கேடு இலேசாற் கொள்க.

வாங்குதற்குச் செயப்படுபொருள் அவாய்நிலையான் வந்தது.

மூண்டிடினும் எனவே, மூளுதல் ஒருதலையன்று என்பது பெற்றாம்.

* திருவாசகம், நீத்தல்விண்ணப்பம். ௬௧. தனித்துணை. † சிவப்பிரகாசம், உண்மை. ௧0-ம். ௬. ௧0. எல்லையில்பிறவி. ‡ திருமுருகாற்றுப்படை, திருச்சீரலைவாய். ௧௮-ம் அடி.

மாயை ஆகுபெயர். மற்று வினைமாற்றின்கண் வந்தது. தான் என்பது அநுவதித்தற்கண் வந்த இடைச்சொல்.

பிறழுவிடாமைபற்றி மெய்ப்பொருளை அச்சாக உருவகஞ்செய்தார்.

நண்ணனல் வேவாத நற்றவர் தம்மினும்
பண்ணமர மாச்செலுத்தும் பாகரினு—மெண்ணி
யரனடி யோர்பவ் ரைம்புலனிற் சென்று
மவர்திற னீங்கா ரதற்கு.

எ—து. உ—ம். எ—னின். முன்செய்வினை மாயை மூண்ட வழியும் அந்நிலையிற் பிறழுவொட்டாத அவ்வச்சினையே உணர்ந்து நிற்றல் யாங்ஙனம்? என்பாரை நோக்கி உவமை முகத்தான் அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். நள் அனல் வேவாத நற்றவர் தம்மினும் பண் அமர மாச் செலுத்தும் பாகரினும். எ-து. அங்கித்தம்பனத்தால் நண்ணனல் வேவாமைக்கு ஏதுவாகிய நற்றவமுடையார், அவ்வனலுட் கிடப்பினுந் தந்திறலில் நீங்காதவாறு போலவும் பண்ணுதல் அமரப் பரிமா ஊர்தற்குரிய பாகனால் கற்றுவல்லார் அப்பரிமாவின் வேகத்துட்படினுந் தந்திறலில் நீங்காதவாறு போல்வும்,— எண்ணி அரன் அடி ஓர்பவர். எ-து. ஐம்புலன்களில் அகப்படாமைக்கு உபாயம் யாதென்று எண்ணி முதல்வன் திருவடியாகிய அச்சை உணரவல்லார்,— ஐம்புலனில் சென்றும் அதற்கு அவர் திறல் நீங்கார். எ-து. முன்செய்வினை மாயை மூட்சிபற்றி ஐவகைப்பட்ட விடயங்களிற் சென்றாராயினும் அதனால் அவர் தந் திறலிற் றீர்ந்து பந்தத் தொடக்குறுவார் அல்லர். எ-று.

பொருள்வினை உவமையினுஞ் சென்று இயைந்தது.

நண்ணனல் *"கீழ்நீர்" போல முன்பின்னாகத் தொக்க ஆறும்வேற்றுமைத் தொகை. நள்ளனல் நண்ணனல் என மரீஇயிற்று; † "நீணுலகெலாம்" என்றாற்போல. தம்மால் நண்ணப்படும் அனல் என்றுரைப்பினும் அமையும்.

பண்ணுதல் சுதிப்பித்தல். இன் இரண்டும் உவமவுருபுகள். உம்மை எண்ணும்மை. சென்றும் என்னும் உம்மை சிறப்பு. அதற்கு என்பது உருபு மயக்கம்.

சதசத்தா மெய்கண்டான் சத்தருளிற் காணி
னிதமித்தல் பாசத்தி லின்றிக்—கதமிக்
கெரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்தி
னருகணையார் சத்தணைவா ராங்கு.

எ—து. உ—ம். எ—னின். சார்ந்ததன்வண்ணமாய்ச் சதசத்தெனப்படும் இயல்புடையார் அரனடி யோரினும் ஐம்புலனிற் சென்றுழி அவற்றிற் றொடக்

* திருக்குறள். ௬௨௪. களித்தானை. † திருநாவுக்கரசுநாயனார் தேவாரம், கோயிற் குறுந்தொகை. ௪. மாணிபால்.

குண்ணுது திறலுடையராதல் யாங்ஙனம்? என்பாரை நோக்கிச் சார்ச்சிக்கட் படும் விசேடங் கூறி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். சதசத்து ஆம் மெய் கண்டான் சத்து அருளின் காணின். எ-து. தன்னுற் சாரப்படுவனவாகிய சத்தினும் அசத்தினும் அதுவதுவா தல் பற்றிச் சதசத்து என்னுந் தன்னுண்மையை உணர்ந்தோன் சத்தா கிய முதல்வன் திருவருளா லல்லது ஒன்றையுங் காணுய் அவ்வருளின்வழி நின்று காணுமாயின்,—பாசத்தில் இதமித்தல் இன்றி. எ-து. அவ்வழிப் பாசமாகிய அசத்தின் இதஞ்செய்த லின்மையால்,—சத்து அணைவார் கதம் மிக்கு எரி கதிரின் முன் இருள் போல் ஆங்கு அலா அசத்தின் அருகு அணை யார். எ-து. சத்தாகிய முதல்வனைத் தலைப்பட்டு நிற்பார் சிற்றமிக் கெரியா நின்ற சுடரின் முன்னர் அந்தகாரம் போலச் சத்தெதிர் தனது சத்தி ஏற்க மாட்டாத அசத்தாய ஐம்புலனின்மாட்டு எய்தி நிற்பரல்லர். எ-று.

வேறு முடிபாகலின் ஒருமைப்பன்மைமயக்க மின்மை உணர்க.

அருளின் என்னும் இன்னுருபு ஏதுப்பொருட்கண் வந்தது.

இதமித்தல் பெயரடியிற் பிறந்த வினைப்பெயர். இதஞ்செய்தல்—பற்றுச் செய்தல்.

இன்றி என்னுஞ் செய்தெனெச்சக் குறிப்புக் காரணப் பொருட்டாய் நின்றது.

இன்மைக்கு ஏதுக் கூறுவார் 'கதமிக் கெரிகதிரின் முன்னிருள்போ லேலா வசத்து' என்றார். கதமிக் கெரிகதிர் என்றது ஒப்புமைபற்றிய உபசாரவ ழக்கு. * "எல்லை யில்லவ னெரிதுள்ளி ஞெலென வெகுண்டான்" என்பதனு னும் ஒப்புமையாதல் உணர்க.

இதனுற் போந்தது, சத்தும் அசத்துந் தம்முட் சமமல்ல வாகலான் அர னடியோர்பவர் ஐம்புலனிற் சென்றாலும் அதுபற்றி அவர் திறல் நீங்கார் என மேலது வலியுறுத்தவாறும் என்க.

'ஏகனாகி நிற்றலான்' மலம் இன்றாதலும் 'இறைபணி நிற்றலான்' மாயை வினைகள் இலவாதலும் பெறப்பட்டமையின் மலமாயை தன்னொடு வல்வினை யின்றே என்பதனை வேறோர் அதிகாரணமாகவைத்து ஓதாராயினர்.

இரண்டாமதிகாரண முடிந்தது.



பத்தாஞ்சூத்திர முடிந்தது.



* பெரியபுராணம், அமர்நீதிநாயனர் புராணம். ௨௬. நல்ல.

# பதினொராஞ்சூத்திரம்.

காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற்
காணவுள் ளத்தைக் கண்டு காட்டலி
னயரா வன்பி னரன்கழல் செலுமே.

என்-து. சூ-ம். என்-னின். பரமேசுரனது சீபாதங்களை அணையுமா றுணர்த்துத னுதலிற்று.

என்-து. க-ரை. என்-னின். சூத்திரக்கருத்து உணர்த்துத னுதலிற்று.

இ-ள். அங்ஙனம் ஏகனாகி இறைபணி நிற்பார்க்கு அறிவிச்சைசெயல்கள் விடயித்தற்கு உரியதோ ரியைபு ஆண்டுப் பெறப்படாமையின் விடயமாவதொன் றில்லைபோலும் என்னும் வாதிகளை நோக்கி விடயித்தல் இல்வழி ஆண்டுப் புத்தர் கூறும் ஆலயவிஞ்ஞானம் போலச் சூனியமாம் எனப்பட்டுக் *குணஞ் சூனியமாகவே குணியுஞ் சூனியமாய்முடியு மாகலான் அஃது ஏலாமையின் ஆண்டு அவை இயைபுபற்றி விடயிக்குமாறு உணர்த்தும்முகத்தானே பயன் இரண்டனுள் முடிவாய் எஞ்சிநின்ற சிவப்பேறு கூடுதலாய நிட்டையினியல்பு உணர்த்துதல் இப்பதினொராஞ் சூத்திரத்தின் கருத்து. எ - று.

இதனானே, சூத்திர இயைபும் இனிது விளங்கும்.

அற்றேல், ஏகனாகி இறைபணி நின்றார்க்கு இனிச் செய்யக்கடவதொன்றின்மையானும், இருணீக்கமும் ஒளி விளக்கமும் உடனிகழ்ச்சியாயவாறு போலப் பசுத்துவ நீக்கமுஞ் சிவத்துவ விளக்கமும் இடையீடின்றி உடனிகழ்வன வாகலின் வேறோத வேண்டாமையானும், முதனூலுட் சுவாநுபூதியாகிய சிவப்பேற்றைப் பத்தாஞ்சூத்திரத்துட் பாசநீக்கத்தோடு ஒருங்குவைத்தே யோதலானும் அதனை ஈண்டு வேறுவைத்தோதல் அமையாதுபோலும் எனின்;—அறியாது கடாயினாய்: ஏகனாகி இறைபணி நிற்பது துரியநிலைக்கண்ணதாகிய அருணிலையே ஆகலின் ஆண்டு மலம் நீங்கிய துணையானே சுகப்பிரபை மாத்திரையே விளங்குவ தன்றி அதீதநிலைக்கண்ணதாகிய சிவத்துவ விளக்கம் எனப்படும் பரமசுகம் விளங்காமையின் அது விளங்குதல் அவனருளாலல்ல தொன்றையுஞ் செய்யாமை மாத்திரையால் அமையாமையின் அதற்கு வேறும் ஆண்டுச் செய்யக்கடவது உண்டென்பது தானே போதருதலானும், இருணீக்கத்தின் ஒளிவிளக்கம் போலப் பசுத்துவநீக்கத்தின் அருள்விளக்கமாத்திரையே அன்றி ஆனந்த விளக்கமும் உடன் நிகழாமையானும், அவ்விரண்டற்கும் வேறுபாடு முன்னர்க் காட்டப்படுமாகலானும், முதனூலிற் பாசக்ஷயம் பண்ணுமாறு உணர்த்தியவழிப் பாசநீக்கமாத்திரையே முத்தி எனக்கொண்ட வாதிகளை மறுத்தற்பொருட்டுப் பாசநீக்கம் பெற்றோன் சுவாநுபூதியுடையவனுவன் எனப் பதினொராஞ்சூத்திரஞ் செய்தற்குத் தோற்றுவாயாந் துணையே பத்தாஞ்சூத்திரத்திற் செய்துவைத்துச் சுவாநுபூதி நிகழ்ச்சிக்கண் ஓதற்பாலன எல்லாம் பதினொராஞ் சூத்திரத்துட் கூறுதலின் ஒன்பதாஞ்சூத்

* குணம் - அறிவு இச்சை செயல்கள். குணி - ஆன்மா.

திரத்தின் எடுத்துக்கொண்ட ஆன்மசுத்தி பண்ணுமாறு பத்தாஞ்சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப்பெற்றாற் போலப் பத்தாஞ்சூத்திரத்தின் எடுத்துக் கொண்ட சுவாநுபூதிநிலை பதினொராஞ்சூத்திரத்திற் சென்றியைந்து முற்றுப் பெறுதலான் அதன்கண் மலையாமைப்பொருட்டு ஆசிரியர் சுவாநுபூதிமானு வன் என்பதனையும் 'அரன்கழல்செலும்' எனப் பதினொராஞ் சூத்திரத்தானே ஒருங்குவைத் தோதினாராகலின் அதுமாறன்மையானும், அவ்வாறின்றி *மொழிபெயர்த்தல் யாப்பால் நூல்செய்துரைப்பான் புகுந்த ஆசிரியர், வேறுபடச் செய்துரையா ராகலானும் என்பது. இதனானே, முதனூலிற் சுவாநுபூதிமான் எனா வாளா கூறியதனைப் பதினொராஞ்சூத்திரத்துப் 'பத்திசெய்க' என்றதன் பின்னாகக் கொண்டுகூட்டிவைத்து உரைத்தலே அதன் கருத்தென்பதூஉம் பெறப்பட்டது. அற்றாகலினன்றே, பத்தாஞ்சூத்திரம் பாசக்ஷயம் பண்ணு மாறு உணர்த்திற்று எனவும், பதினொராஞ்சூத்திரம் பரமசிவனது சீபாதங் களை அணையுமாறு உணர்த்திற்று எனவுங் கருத்துரை செய்ததூஉம் என்க. இஃதறியாதார் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. காட்டக் காணுந் தன்மையுடைய கண் உருவத்தைக் காணும்படி அதனோடு ஒருங்கியைந்து நின்று காட்டி அவ் வுருவத்தைக் காண்கின்ற ஆன்மாப் போல அறிவிக்க அறியும் இயல்பை யுடைய அவ்வான்மா விடயத்தை அறியும்படி முதல்வன் அதனோ டொருங் கியைந்து நின்று அறிவித்து அறிந்து வருதலான் அவ்வத்துவித நிலையை மற வாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பானே அம்முதல்வன் திருவடியாகிய சிவானந்தாநுபூதியைத் தலைப்படும். எ - று.

காணும் என்னும் உவமையடை பொருளினும், கண்டு என்னும் பொரு ள்வினை உவமையினும் சென்றியைந்தன. காண என்பதனை ஈரிடத்துங் கூட்டுக.

†"வேர்த்து வெகுளார் விழுமியோர்" என்பதுபோலக் கண்டு காட்டல் என்பது மாறி வைத்து உரைக்கப்பட்டது. இக்கருத்து நோக்கி யன்றே, இதனை விரித்துக் கூறுவான் புகுந்த வழிநூலாசிரியர் ‡"காட்டிக்கண் டிடுமா போலக்**காட்டிக் கண்டிடுவன்" என்றதூஉம் என்க.

அயராமைக்குச் செயப்படுபொருள் அதனை என்று எடுத்துக்கொள்க. அயராவன்பு என்றது அயராமையானாகிய அன்பு என "ஆறு சென்ற வியர்" போல நின்றது. அது ‡"இத்தை-யாயுமறி வுடையனு யன்பு செய்ய" என வழிநூலாசிரியர் கூறியதனானும் உணர்க.

உள்ளத்தை என்பது உருபு மயக்கம்.

அறிவிச்சைசெயல்களின் நிகழ்ச்சியாகிய அயராமையும் அன்பும் செல வும் முறையே காரணகாரியங்களாய் அவ்வொருபொருண்மேல் ஒருங்கு நிக ழும் என்பார் 'அயரா வன்பி னரன்கழல் செலுமே' என்றார்.

---

* இது நால்வகை யாப்பினுள் ஒன்று. அது "தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்ப்-பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப." என்னுஞ்சூத்திரத்தா னுணர்க.
† நாலடியார், சினமின்மை. ௪. நேர்த்து. ‡ சிவஞானசித்தி, ௧௧-ம் சூ. ௧. காயமொழி.

இஃதென்சொல்லியவாறோ எனின்:—உயிரையின்றி அமையாத கண் உருவத்தைக் காணுங்கால் உயிரினது உணர்வு, கண்ணொளி எனத் தானென வேற்றுமையின்றி உடனாய் விரவி நின்று கண்ணுக்குக் காட்டிய அதனைக் கண் கண்டதென்றுங் கண்ணை அதிட்டித்து நின்ற உயிர் கண்டதென்றும் பகுத்தறிய வாராது இரண்டன் காட்சியும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாகி ஒருங்கே நிகழுமாறு போல, முதல்வனையின்றி அமையாத உயிர் ஒருவிடயத்தை அறியுங்கால் முதல்வனது சிற்சத்தி, ஆன்மசிற்சத்தி யெனத் தானென வேறின்றி உடனாய் விரவி நிற்ப முதல்வனும் அவ்வாறு விரவி நின்று ஆன்மாவிற்கு அறிவித்ததொன்றனை அவ்வான்மா அறிந்தது என்றும், அதனை அதிட்டித்து நின்ற தான் அறிந்தான் என்றும் பகுத்தறிய வாராது இருவகையறிவும் ஒன்றனையொன்று விடாது அத்துவிதமாய் ஒருங்கே நிகழுமாறு செய்து வரும் இவ்வுபகாரம் பெத்தம் முத்தி இரண்டினும் ஒருபெற்றித்தாய் உண்மையின் ஏகனாகி இறைபணி நிற்கும் உயிர் முதல்வன் அங்ஙனம் அத்துவிதமாய் உபகரித்து நிற்கும் உரிமையை நோக்குமாயின் நோக்குந்தோறும் நோக்குந்தோறும் அப்பொருட்கட் செல்லும் இச்சை அடங்காது மீதூருமாகலின் அவ்வழி அவ்விச்சையே தானாக விளங்கித் தோன்றும் பேரானந்தத்தை அநுபவிக்கப்படுமென அறிவிச்சைசெயல்கள் மூன்றுங் கண்டு விடயிக்குமாறு உணர்த்தி அதீதநிலையியல்பு கூறியவாறும் என்க.

அத்துவிதமாவது பேதப்பொருள் இரண்டுந் தம்முள் அபேதமாதற்குரிய சம்பந்தவிசேடம். இக்கருத்தேபற்றி *"அறிவொளிபோற் பிறிவருமத்துவிதம்" என்றார் புடைநூலாசிரியரும். †"அங்கியு மொன்றிற் றங்கிநின் றல்லது,—தன்றொழி னடத்தா" தாகலின், அதுபோல முதல்வனும் உயிரை அதிட்டித்து நின்று எத்தொழிலுஞ் செய்வனென் றுணர்க. உயிர் ஒன்றனை அறிதல் முதல்வன் உடனின்றறிதலை யின்றி அறிவித்தன் மாத்திரையான் அமையா தென்பது ‡"தொண்டனே னினையுமா நினையே" "விரும்புமா விரும்பே" "தொடருமா தொடரே" "நுகருமா நுகரே" என்று இவ்வாறு முத்திநிலைபற்றி ஓதிய திருவாக்குக்களானும் அறிக. இவ்வியல்பு நோக்கி யன்றே ¶"அறிவானுந் தானே யறிவிப்பான் றானே" என்றோதிய அம்மை ¶ "அறிவா யறிகின்றான் றானே" எனவும் ஓதியதூஉ மென்க. முன்னறிதல் அறிவித்தற்பொருட்டெனவும் பின் அறிவாயறிதல் விடயத்தில் அழுந்துவித்தற்பொருட்டெனவுங் கொள்க. இதனை ஈண்டு வைத்தார் அத்துவித நிலை இனிது விளங்குதற்கு.

இவ்வாறன்றிக் காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற் காண வுள்ளத்தைக் கண்டு காட்டல் என்பதற்குக் காட்டுமுபகார முணர்த்தன் மாத்திரையே கருத்தென் றுரைப்பாரு முளர். இதனைக் கண்ணழித்துரைப்புழி அவனும் அவற்றது விடயத்தை உணரும் எனக் காணு முபகாரமாத்திரையே எடுத்துக்கொண்டு உரைத்த ஆசிரியர்கருத்தன் றாகலானும், காணு முபகாரங்

* சிவப்பிரகாசம், பாயிரம். ௭. புறச்சமயத்தவர். † சங்கற்பநிராகரணம், சிவசமவாதி சங்கற்பநிராகரணம். ௪௫-௪௯-ம் அடி. ‡ திருமாளிகைத்தேவர் திருவிசைப்பா, கோயில். ௧௧. ௧௦. ௯. ௭. ¶ காரைக்காலம்மையார், அற்புதத்திருவந்தாதி. ௨௦.

காட்டு முபகாரத்தின் பின்னர்த்தாய் நிகழும் என்பது உணர்ந்துகோடற் பொருட்டு அதுவும் உடன் கூறப்பட்டதன்றி 'வேறின்மையானும், அவ்வா றன்று என்பார்க்கு ஐந்தாஞ் சூத்திரத்துட் பெறப்பட்டதனை ஈண்டுக் கூறுதல் புநருத்தியாய் முடியு மாகலானும், அவ ருரைப்பன வெல்லாம் போலியுரை யென் றொழிக.

அற்றேல், முதனூலிற் பதினொராஞ் சூத்திரத்துட் "காட்டுவன்" என் பது மாத்திரையே யன்றிக் காண்பன் என்பது கூறிற்றில்லையால் எனின்;— அறியாது வினாயினாய்: ஆண்டுக் காட்டுவானும் என்ற உம்மை காண்பானுமாம் என எதிரதுதழீஇ நிற்றலின், கூறுமை யாண்டையதென் றொழிக. அவ் வும்மைக்குப் பொருள் காணமாட்டாதார் பாடம் வேறாக ஓதுப.

இதனுள், காணுங் கண்ணுக்குக் காட்டு முளம்போற் காண வுள்ளத் தைக் காட்டிக் காண்டல் என்றது ஓரதிகரணம்; அதனை அயரா வன்பி னரன்கழல் செலும் என்றது ஓரதிகரணம்; ஆக இரண்டதி கரணத்தது இச் சூத்திரமென்று உணர்க.



முதலதிகரணம்.

ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும் என் றது.

எ—து. மே—ள். எ—னின். முதல்வன் உயிர்க்குக் காட்டு முபகாரமாத்தி ரையே உள்ளது என்னும் வாதிகளை நோக்கி அத்துவிதநிலை உணர்த்துதற்கு எடுத்துக்கொண்ட சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற் கோட னுதலிற்று.

இ-ள். முதல்வனும் உயிர்களா னுணரப்படும் விடயத்தை உடனின்று உணருவன். எ - று.

உம்மை உயிர்கள் உணர்தலே யன்றி என இறந்தது தழீஇயிற்று.

இஃதறியாதார் ஈண்டு 'உணரும்' என்றது அறிவித்தற்கு ஏதுவாய் அறி யும் என்று உரைப்பாருமுளர். அவ்வாறுரைப்பிற் சித்தசாதனமாம் ஆகலா னும், ஈண்டைக்கு இயைபின்மையானும் அது போலியென் றொழிக.

*'அவையே தானேயாய்' எனவும் †'தாந்த முணர்வின் றமியருள்' என வும் மேற் பொதுவகையாற் கூறிப்போந்த அத்துவிதத்தை ஈண்டுக் காணு முபகாரத்தின்வைத்து உணர்த்தி இனிது விளக்கியவாறு.

இவ்வான்மாக்கள் அவனை யின்றி யமைந்து ஒன்றையும் விடயியா வாகலான்.

எ—து. ஏது. எ—னின். கண் சடமாகலானும் காண்டற் பயன் உயிர்க்கே யாகலானும் கண் காண்புழி உயிரும் உடனின்று காண்டல் பெறப்படும் கண் போல் உயிர் சடமன்மையானும் உணர்தற்பயன் உயிர்க்கே ஆகலானும்

* இந்நூல். உ-ம் சூத்திரம். † மேற்படி. ௬-ம் சூ. விளம்பிய.

அதனை எடுத்துக்காட்டி அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றல் அமையா தென்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ - ள். விளக்கொளி கண்ணொளியோடு கலந்து கண்ணொளியோடு கூட உருவத்தினுங் கலந்தா லன்றி அஃதவ்வுருவத்தைக் காண்ட லின்றாயவாறு போல அறிவிக்க அறியும் இயல்பினவாய உயிர்களும் முதல்வனதுணர்வு தம்மோடு விரவி நின்று தம்மோடு கூடச் சென்று விடயத்தினும் விரவி நின்றால் அறிவு விளங்கி அதனையறியும் இயல்பினவன்றித் தனித்து அமை யவும் மாட்டா தனித்து ஒன்றனை விடயிக்கவும் மாட்டா வாகலான் அறிவு விளங்குதன் மாத்திரைக்கே அன்றி விடயத்தைப் பற்றுதற்கண்ணும் முத ல்வன் உடனின்றறிதல் ஒருதலையான் வேண்டப்படுதலான் 'ஈண்டு அவ னும் அவற்றது விடயத்தை உணரும்' என மேற்கொண்டது. எ - று.

அவனையின்றி அமையாமையிற் காட்டு முபகாரம் விளங்கினாற்போல அவனையின்றி ஒன்றையும் விடயியாமையிற் காணு முபகாரமும் இனிது விள ங்கும் என்பார் 'அவ்னை யின்றி யமைந் தொன்றையும் விடயியா வாகலான்' என்றார்.

அமைந்து விடயியா என்றதனைக் *"சந்தித்துச் சுழலும்" என்றாற்போ லக் கொள்க.

உம்மை முற்றும்மை.

விடயியா என்றது பெயரடியிற் பிறந்த எதிர்மறைவினை. † "எவ்விடத்து மிறையடியை யின்றியமைந் தொன்றை யறிந்தியற்றி யிடாவுயிர்க ளீசன் றானுஞ்—செவ்வினி னுளம்புகுந்து செய்தியெலா முணர்ந்து சேட்டிப்பித் தெங்குமாய்ச் செறிந்து நிற்ப—னிவ்வுயிர்க டோற்றும்போ தவனையின்றித் தோற்றா விவற்றினுக்கம் முதலெழுத்துக் கெல்லாமாய் நிற்கு—மவ்வுயிர்போ னின்றிடுவ னாத லாலு மரனடியை யகன்றுநிற்ப தெங்கே யாமே" என வழிநூ லாசிரியர் இதனை விரித்தோதியவாறும் உணர்க. "எவ்விடத்தும்" என்றது பெத் தம் முத்தி இரண்டினும் என்பதாம். இதனுள், "இறையடியை யின்றியமைந் தொன்றை யறிந்தியற்றி யிடாவுயிர்கள்" எனவும், "ஈசன்றா னெங்குமாய்ச் செறிந்து நிற்பன்" எனவுங் கூறியது விடயத்தின்கட் படும் நிகழ்ச்சிக்கு என வும் "இவ்வுயிர்கடோற்றும்போ தவனையின்றித் தோற்றா" எனவும், "அவ்வுயிர் போ னின்றிடுவன்" எனவுங் கூறியது உயிரின்கட் படும் நிகழ்ச்சிக்கு எனவுங் கொள்க. அவ்வாறு கொள்ளாக்கால் இருகாற் கூறுதல் புநருத்தியாய் முடியு மென்று ஒழிக. இனி, விளக்கொளி கலத்தல் ஈரிடத்தும் வேண்டப்படும் என் பதூஉம், "விளக்கொளி கலந்தவற்றை" எ-ம், ‡"விளக்கின் சோதி கலந்தி டும்" எ-ம் புடைநூலாசிரியர் வகுத்தோதியவாற்றா னுணர்க. அஃதங்ஙனமாக, பரமுத்தியில் உயிர்க்கு விடயமாவது ஒன்றின்மையின் வழிநூலாசிரியர் எவ்வி டத்தும் என்றது அமையுமாறு என்னை? எனின்;—அறியாது கூறினாய்: '¶'சுத்

* சிவஞானசித்தி, ௧௦-ம் சூ. ௬. அங்கித். † மேற்படி, ௧௧-ம் சூ. எ. ‡ சிவப்பிர காசம், உண்மை. ௩-ம் சூ. எ. கண்ணொளி. ¶ உண்மைவிளக்கம். ௫௦. முத்திதனில்.

தவறு பேர்கத்தைத் துய்த்தலனு" எ-ம், *"ஒன்றிநின் றுணரு முண்மை." எ-ம் பிறுண்டும் இவ்வாறே ஓதுப வாகலின், பர்முத்தியில் உயிர் சிவானந்தா நுபூதியை விடயித்தல் உண்டெனவும், அது முதல்வனையின்றி ஆகாமையின் அவனும் ஆண்டு அவ்வநுபூதியை உடனின் றறிவன் எனவும் உணர்க.

ஐந்தையு மொக்க வுணரா தவற்றுணர்வ
தைந்தும்போ னின்றுணரு மாகலா—னைந்தினையு
மொன்றொன்றாப் பார்த்துணர்வ துள்ளமே யெவ்வுலகு
மொன்றொன்றாப் பார்க்கு முணர்ந்து.

எ—து. உ—ம். எ—னின். அவனும் அவற்றது விடயத்தை உடனின் றுணரு மாயின் அவற்றோடு அவனிடை யறிதற்கட்படும் வேற்றுமை இல்லைபோலும் என்பாரை நோக்கி வேற்றுமையுங் காட்டி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். உள்ளம். எ-து. ஆன்மாவாவது,—அவற்று ஐந்தும் போல் நின்று உணர்வது உணரும் ஆகலான். எ-து. சுவையொளியூறோசைநாற்ற மென்னும் ஐந்தினும் ஐம்பொறி போல் அதுவதுவாய்ச் செறிந்து நின்று உணர்தற்பால தனை உணருந்தன்மைத்தாகலான்,—ஐந்தையும் ஒக்க உணராது ஐந்தினையும் ஒன்று ஒன்று ஆப் பார்த்து உணர்வது. எ-து. அவ்வைம்புலன்களையும் ஒருங்கே உணரமாட்டாது அவ்வைந்தினையும் ஒரோவொன்றாய் அறிந்தநுபவிப்ப தாம்,—ஒன்று எவ்வுலகும் ஒன்று உணர்ந்து பார்க்கும். எ-து. அதுபோலச் சார்ந்ததன்வண்ணமாய்ப் பலதிறப்படுத லின்றி என்றும் ஒருபெற்றித்தாகிய சிவம் எல்லாவுயிர்களுடைய எல்லாவிடயங்களையும் பொதுவகையான் ஒருங்கே உணர்ந்து அவ்வுயிர்களுடன் நின்று சிறப்புவகையானு மறியும். எ-று.

இது சொற்பொருட்பின்வரு நிலை.

சிவத்தைப் பிரித்தமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

ஒன்று என்பது குறிப்பேதுவாய்நின்ற பெயர்.

ஏகமாய் நின்றே யிணையடிக ளொன்றுணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினு—னேகமா
யுள்ளத்தின் கண்ணுனு னுள்குவா ருள்கிற்றை
யுள்ளத்தாற் காணுனே வற்று.

எ—து. உ—ம். எ—னின். ஆன்மா ஐம்புலனை விடயிப்புழிப்போல முதல்வனை விடயிப்புழியும் முதல்வன் அவ்வாறு உடனின்று தன்னைத் தான் விடயிப்ப னெனின் ஆன்மாச்சிரய மென்னுங் குற்றமா மாகலின் அது பெறப்படாமையான் அவனும் அவற்றது விடயத்தை உணரும் என்றல் யாண்டுஞ் செல்லாது என்பாரை நோக்கி ஆண்டும் அவ்வாறுணர்தல் உண்டென்பது உணர்த்தி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். ஒன்று ஏகம் ஆய் நின்று இணை அடிகள் உணரவே தான் போகம் ஆய் விளைந்த பொற்பினுன். எ-து. முதல்வனைச் சார்ந்தவழி அவ்வண்ணமே

* சிவப்பிரகாசம், உண்மை. ௪௦-ம் சூ. அ. ஒன்றிரண்டாகி.

யாய் ஒருபெற்றிப்பட்ட ஆன்மா அவனோடு ஒற்றுமைப்பட்டு நின்று அவன தடியிணைகளை உணரவே தான் அவ்வான்மாவுக்குப் பரபோகமாய் மேன்மேல் விளைகின்ற பொலிவினையுடைய னாகலானும்,—உள்ளத்தின்கண் ஏகம் ஆய் ஆனான். எ-து. அங்ஙன முணருங்கால் அவ்வான்ம ஞானத்தினிடத்து ஏகமாய் விட்டுநீங்காதவன் ஆகலானும்,—உள்குவார் உள்கிற்றை உள்ளத்தான் உற்றுக் காணானோ. எ-து. கருதுவார் கருதிய பொருளாகிய தன்னை அவரறிவோடு கூடிநின்று அறியான்கொல்லோ. எ - று.

. 'போகமாய்த் தான் விளைந்த பொற்பினான்' 'ஏகமா யுள்ளத்தின் கண்ணா னான்' என்னும் பெயரடைகள் ஏதுப்பொருளவாய் நின்றன; யாண்டுஞ்சேற லுணர்த்துதற்கு.

உள்குவா ருள்கிற்றை என்றார். *"வேண்டுவார் வேண்டியதே யீவான்" என்றாற்போல.

ஆனுருபு உடனிகழ்ச்சிப்பொருட்கண் வந்தது. ஓகாரம் எதிர்மறை.

ஆன்மாக்கள் முதல்வனை விடயிக்குங்கால் அவற்றானு விடயமாகிய அவன் தன்னாலும் உடனின்று உணரப்படுவன், உள்குவாருள்கிய பொருளாகலின்; மேலைவெண்பாவிற் கூறிப்போந்த ஐம்புலன்போல. என்று அனுமானவள வை காட்டுவார் 'உள்குவா ருள்கிற்றை யுள்ளத்தா னுற்றுக் காணானோ' என்றும், உள்குவா ருள்கிற்றுதல் ஈரிடத்தும் ஒக்கும் என்பார் 'ஏகமாய் நின் றே யிணையடிக ளொன்றுணரப் போகமாய்த் தான்விளைந்த பொற்பினான்' என விடயித்தற்கட் படும் இயல்பும் 'ஏகமா யுள்ளத்தின் கண்ணானான்' என அறிவு விளங்குதற்கட்படும் இயல்பும் எடுத்தோதினார்.

பரபோகமாய் என்னாது 'போகமாய்' என்றதும் ஒப்புமை இணங்குதற் பொருட்டு. சேற்றுநில மிதித்துச் சென்றானுக்கு வன்னிலம் போலப் பர போகவிளைவு, செயற்கைப்பொருளாய் நிற்றலின் ஆக்கமுங் காரணமும் அடுத்து வந்தது. இணையடிக ளுணருந்தோறும் போகம் மேன்மேல் விளை தல் † "புணர்ந்தாற் புணருந் தொறும்பெரும் போகம்பின் னும்புதிதாய்—மணந்தாழ் புரிகுழ லாளல்குல் போல வளர்கின்றதே." என அப்பொருண் மேல்வைத் தோதிய திருவாக்கானும் அறிக.

தெளிவுபற்றி விளைந்த என இறந்தகாலத்தாற் கூறினார்.

கண் கண்ணாடி யினின்றுந் தன்னை விடயித்தாற் போல முதல்வன் ஆன் மாவுட னின்று தன்னை விடயித்தல் பொருத்த முடைமையின், ஆன்மாச்சிர யம் என்னும் குற்றம் இன்னோரன்னவற்றிற் கெய்தாதென் றுணர்க. கண்ணா டிக்குள்ளாகத் தோன்றுவது போலும் எதிர்விம்பமாவது விம்பமே யன்றி வேறன் றென்பது சிவாகமநூற் றுணிபு என்க.

* திருநாவுக்கரசுநாயனார், திருமறைக்காட்டுத் திருத்தாண்டகம். ௬. தூண்டுசுடர்.
† திருச்சிற்றம்பலக்கோவையார். ௧. உணர்ந்தார்க்.

இதனுள் அவனும் அவற்றது விடயத்தை உணருமெனவுணர்வேபற்றி ஓதினாரேனும் *"எத்திற ஞானமுள்ள தத்திற மிச்சைசெய்தி" என்பவாகலின், அவற்றிற்கும் இஃதொக்கும்: ஒக்கவே, பெத்தம் முத்தி இரண்டினும் ஆன்மா விடயிக்கப்படும் விடயங்களை முதல்வன் உடனின்று விடயிப்பன் என்பதூஉம், பெத்தத்தின் அவனிவனாய் நின்று விடயித்தலின் விடயங்கள் அவனுக்கன்றி இவனுக்காயின முத்தியின் இவனவனாய் நின்று விடயித்தலின் அவனொழிந்த விடயங்கள் எல்லாம் இவனுக்கின்றி அவனுக்காயின என்பதூஉம், இனிது விளங்கும். இம்முறைமை நோக்கி யன்றே, உலகத்துள் ஒன்றனை ஈவாரும் ஏற்பாருஞ் சிவார்ப்பணம் எனக் கருதாதவழிக் குற்றமென்று ஆகமங்கள் ஓதியதூஉம், †"யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வமாகி யாங்கே—மாதொரு பாக னார்தாம் வருவர்" என்றதூஉம், அவ்வுண்மை யறிந்தவழி ‡'எத்தனுவி னின்று மிறைபணியார்க் கில்லைவினை—முற்செய்வினை யுந்தருவான் முன்.' எ-ம், ¶"பெற்றசிற் றின்பமே பேரின்பமாய்" எ-ம், §உடம்புடைய யோகிகடா முற்றசிற் றின்ப—மடங்கத்தம் பேரின்பத் தாக்கி" எ-ம், o"காணுங் கரணங்க ளெல்லாம்பே ரின்பமெனப்—பேணு மடியார்" எ-ம், "எல்லாஞ் சிவமா யிருந்ததே" எ-ம் இவ்வாறோதியதூஉம் என்க.

முதலதிகரண முடிந்தது.



## இரண்டாமதிகரணம்.

### இனிப் பத்தியினான் மறவாது ஏத்த அவனது சீபாதத்தை அணையுமென்றது.

எ—து. மே—ள். எ—னின். ஏகமாகி நின்றார்க்கு அவ்வினையுபற்றி அறிவிச்சைசெயல்கண் மூன்றும் ஆண்டு விடயிக்குமாறு யாங்ஙனம்? என்பாரை நோக்கி நிட்டையின் இயல்பு உணர்த்துதற்கு எடுத்துக்கொண்ட இரண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று.

இ-ள். சூத்திரத் துரைத்தவாறு பற்றி உரைத்துக்கொள்க.

**"இத்தை—யாயுமறி வுடையனா யன்பு செய்ய" என வழிநூலாசிரியரும் ஓதுதலின் ஈண்டும் மறவாது பத்தியினாலேத்த எனச் சூத்திரப்பொருட்கேற்ப மாறிவைத்து உரைத்துக்கொள்க. ††ஏத்த என்றது உபசாரவழக்கு.

அன்பு பத்தி காதல் என்றாற் போல்வன இச்சை மீதூர்தற் பொருள ஆகலான், அது பரமுத்தியினும் உண்டென்பது உணராதார் பத்தியாவது சீவன்முத்திநிலைக்கே செய்யப்படுவதொரு சாதனம்போலும் என மயங்கித் தத்தமக்கு வேண்டியவாறே உரைப்ப. பரமுத்தியின்கண் இச்சை நிகழாத

* சிவஞானசித்தி. ௧-ம் சூ. ௬௨. சத்திதன்வடி. † மேற்படி. உ-ம் சூ. ௨௫. ‡ இந்நூல். ௧௦-ம் சூ. உ-ம் அதி. ௧. நாமல்ல. ¶ திருவுந்தியார். ௩௩. § திருக்களிற்றுப்படியார். ௭௬. o திருவாசகம், பண்டாயநான்மறை. ௬. ** சிவஞானசித்தி. ௧௧-ம் சூ. ௧. காய. †† ஏத்தல் - அருள்வழி நிற்றல்.

வழிச் சிவபோகம் அநுபவமாதல் செல்லாமையானும், சீவன்முத்திநிலைக்கே கூறுவதொன்றாயிற் "செம்மலர் நோன்றாள்" என்னுஞ் சூத்திரத்து ஒருங்குவைத் தோத அம்மையுஞ் சூத்திரம் வேறு செய்யவேண்டாமையானும், அவ்வுரை போலியென்று ஒழிக.

**அவன் அன்னியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்.**

எ—து. ஏ—து. எ—னின், பத்தியினான் மறவாதேத்தினும் அவனது சீபாதத்தை அணைதல் பரமுத்தியினன்றி முடியாது என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அம்முதல்வன் வேறு நில்லாது செய்வோர் செய்வனவற்றை அறிந்துஅவ்வச்செய்திக்குத் தக்க பயனை மிகச் செய்யலாயின் அவ்வப்பொழுதே விளைவித்தும் அல்லுழிக் காலாந்தரத்தில் விளைவித்தும் உடனாய் நிற்ப னாகலான் 'இனிப் பத்தியினான் மறவாதேத்தவே அம்முதல்வனது சீபாதத்தை அணையும்' என மேற்கொண்டது. எ - று.

> அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்
> கிருட்கண்ணே பாசத்தார்க் கீச—னருட்கண்ணாற்
> பாசத்தை நீக்கும் பகலலர்த்துந் தாமரைபோ
> னேசத்திற் றன்னுணர்ந்தார் நேர்.

எ—து. உ—ம். எ—னின். அரன் கழல் சேறல் உடம்பி னீங்கியபின் னன்றி உடம்புடையவழியுங் கூடுமாயின் அது ஞாயிற்றி னொளிபோல, மருங்குள்ளார்க்குப் புலனாதல் வேண்டும் என்பாரை நோக்கி அது கூடாமையுங் கூடுமாறும் உவமைமுகத்தா னுணர்த்தி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். அருக்கன் நேர் நிற்பினும் காணார்க்கு அல் இருளே. எ-து. ஞாயிறு எல்லார்க்கும் ஒப்ப நிற்பினும் அது காட்சியுடையார் கண்ணுக்கன்றி அஃதில்லாதார் கண்ணுக்கு இரவின்கண்ணதாகிய இருளேயாம் அதுபோல,— ஈசன் பாசத்தார்க்கு இருட் கண்ணே. எ-து. முதல்வன் எங்கணும் ஒப்ப நிற்பினும் மலம் நீங்கிய முத்தர்க்கன்றி அஃதுடையார்க்கு அவன் அம்மலத்தின் கண்ணே யாவன். சீவன்முத்தரும் ஏனையோர்போல் உடலுடைமையிற் பாசத்தாராகலின் வேற்றுமையின்றால் எனின்,—பகல் அலர்த்துந் தாமரை போல். எ-து. ஏனைத் தாமரைகளோ டொப்ப ஒருங்கு நிற்பினும் பக்குவமுடைய தாமரையைக் கூம்புதலை நீக்கி அலர்த்தும் ஞாயிறு போல,—நேசத்தில் தன் உணர்ந்தார் நேர் அருட் கண்ணால் பாசத்தை நீக்கும். எ-து. ஏனையோர்போல் உடம்போடு நிற்பினும் பருவமுடையராய்ப் பத்தியினாற் றன்னைமறவாது உணர்வார்க்கு முதல்வன் தனது திருவருட்பார்வையாற் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்தும் ஆகலான் உடம்புள்வழியும் அவர் பாசத்தாரல்லர். எ - று.

ஆகலான் உடம்பு உள்வழியும் அவர் பாசத்தாரல்லர் என்பது குறிப்பெச்சம். ஏகாரந் தேற்றம்.

திணிந்த இருள் என்பார் 'அல்லிருள்' என்றார். மலத்திற்குக் கண்ணுவது அறியாமை. காணும் பகலும் ஆகுபெயர். அருக்கன் எடுத்துக்காட்டுவமை.

தன்னை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. ஏழாம்வேற்றுமைப் பொருட்கண் வரும் நேர் என்பது உருபுமயக்கமாய் நான்காவது உணர்த்திற்று.

நீக்குதலும் அலர்த்துதலும் ஏனையிடத்துஞ் சென்றியைதலின், ஈரிடத்துஞ் செயப்படுபொருள் ஏற்பன வருவிக்கப்பட்டன.

மன்னு மிருளை மதிதுரந்த வாறன்பின்
மன்னு மரனே மலந்துரந்து—தன்னின்
வலித்திரும்பைக் காந்தம் வசஞ்செய்வான் செய்தல்
சலிப்பில் விகாரியலன் றான்.

எ—து. உ—ம். எ—னின். நேசத்திற் றன்னுணருஞ் சீவன்முத்தர்க்குப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்துதல் பரமுத்தியினன்றி இல்லை என முரணிக் கூறும் வாதிகளை நோக்கிப் பாசத்தை நீக்கி அறிவை அலர்த்தும் முறைமை இவ்வாறென்று உணர்த்தி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். அன்பின் மன்னும் அரனே மன்னும் இருளை மதி துரந்தவாறு மலம் துரந்து. எ-து. உயிரைத் தானுக்கிக்கோடற்கண் உளதாகிய இச்சைமிகுதியான் அவ்வுயிரோடும் அநாதியே நிலைபெறும் முதல்வன் கண்ணின்கண் நிலைபெறும் இருளைப் பிறைமதி நாடோறுஞ் சிறிது சிறிதாக நீக்கி ஓட்டுமாறு போல் அவ்வுயிரின்கண்ணதாகிய மலசத்தியை அவ்வப் பருவந்தோறுஞ் சிறிது சிறிதாகச் சோபானமுறையின் நீக்கிப் பற்றறத் துரந்து,—காந்தம் இரும்பைத் தன்னின் வலித்து வசம் செய்வான் செய்தல் சலிப்பு இல். எ-து. காந்தக்கல் இரும்பைத் தன்கண் ஈர்த்துத் தன்வசமாகச்செய்தல்போல மலம் அங்ஙனந் துரக்கப்படுந்தோறும் அம்முறையே அச்சத்தி பதிவித்து உயிரைத் தன்கண் வலித்துக்கொண்டு தன்வசமாகச் செய்து வருஞ் செய்கையின் அவனுக்கு ஒருஞான்றுஞ் சலிப்பில்லை,—விகாரி அலன் தான். எ-து. அங்ஙனஞ் சலியாது செய்து வருதல் பற்றி விகாரியாவானு மல்லன் காந்தம்போலத் தனது சந்நிதிமாத்திரையிற் செய்யும் அம்முதல்வன்.எ - று.

மதி என்றது ஏற்புழிக்கோடலான் ஈண்டு வளர்பக்கத்திற் றிங்களின் மேற்றாயிற்று. *"அந்த வருளுனக்கிங் காதார மாயல்லி,—னிந்து வெனவெறித் திட்டு" என்றதும் அது.

மலந் துரத்தல் உயிரின்செயலா ஞவதன் றென்பதுபட நின்றமையின் ஏகாரம் பிரிநிலைக்கண் வந்தது.

†வான் பான் பாக்குக்கள் தொழிற்பெயர்விகுதியுமாம் என்பது ‡"காப்பாக் கறிந்து" என்பதனு னுணர்க.

---

* துகளறுபோதம். ௩௩. † வான் தொழிற்பெயர்விகுதியுமாதலை உ௨௯-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க. ‡ திருக்குறள். ௧௧௨௭. கண்ணுள்ளார்.

உவமவுருபு விரித்துரைக்க. சலித்தல் வேசறுதல். செய்தற்கண் என ஏழனுருபு விரித்துரைக்க.

மதி துரந்தவாறு மலந் துரந்து என்ற இதனானே மலம் நீங்குவது பின் என்பார் மதம் மறுக்கப்பட்டவாறு காண்க.

சோபான முறையின் நீக்குதலா னன்றே, *சத்தி நிபாதஞ் *சிவபுண்ணி யம் முதலாயின நால்வேறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளும் ஓரோவொன்று நந்நான்காய்ப் பதினாறுவகைப்பட்டதூஉம், அவற்றுள்ளும் ஓரோவொன்று பலவேறுவகைப்பட்டு விரிந்ததூஉம் என்க.

நசித்தொன் றி னுள்ள நசித்தலா லொன்று
நசித்திலதே லொன்றுவ தில்லை—நசித்துமல
மப்பணைந்த வுப்பி னுளமணைந்து சேடமாங்
கப்பின்று மீசன் கழல்.

எ—து. உ—ம். எ—னின். உயிருக்குக் குணம் போல அநாதியாயுள்ள சகச மலம் அவ்வுயிரின் வேறாய்த் துரக்கற்பாலதன் றாகலின் மலந் துரந்து என்றது அமையாது என்னும் பாடாணவாதசைவரை நோக்கி அருத்தாபத்தி யளவை யான் அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்று நசித்திலதேல் ஒன்று ஆவது இல்லை. எ-து. அரன்கழல் செல்லுங்கால் அதனை ஆன்மா கெட்டு ஒன்றுமோ? கெடாது ஒன்றுமோ? எனக் கடாயினார்க்குக் கெட்டு ஒன்றுமெ னின், ஆன்மா கெட்டுப்போகலான் ஒன்றமாட்டாது; கெடாது ஒன்றுமெ னின், கெடாதவழி இருபொருளாய் நிற்றலின் ஒன்றுமா றில்லை; ஆகலான் அருத்தாபத்தி யளவையானே,—அப்பு அணைந்த உப்பின் மலம் நசித்து உளம் ஈசன் கழல் அணைந்து சேடம் ஆம். எ-து. உப்புத் தனது கண்டிப்பு நீங்கி நீரின் ஒன்றுமாறு போலத் தனது சகசமலங் கெட்டொழிய ஆன்மா அரன்கழலை ஒன்றி அவ்வரன்கழற்குச் சேடமாம்,—கப்பு இன்று ஆம். எ-து. அங்ஙனஞ் சேடமாகிய ஆன்மாவுக்கு மீளக் †கவர்ச்சி இல்லை. எ-று.

ஒன்றுது என்னுந் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது.

பின் வந்த நசித்து என்பது செயவெனெச்சத் திரிவு.

யாதொன்று யாதொன்றன் பொருட்டேயாய்த் தனக்கெனச் சுதந்திர மின்றி நிற்கும் அஃது அதற்குச் சேடமென்பது அறிக. ‡'அவையுடைமை யாளாநா மங்கு' என ஓதுதலின், ஏனைப் பசுபாசங்கள் முதல்வனுக்குப் பொ துவகையாற் சேடமாம். ஆயினும், இதுபோலச் சிறப்புவகையாற் சேடமாத லின்மையின் இதனை வேறெடுத்து ஓதினார்.

முத்திநிலை கூறி முடிந்தமையின் இறுதிக்கட் 'கப்பின்றும்' என ¶அவினா விருத்தியுங் கூறினார்.

---

* இவற்றின்விரிவை முறையே ௩௬௪, ௩௬௨, ௩௬௦-ம் பக்கங்களிற் காண்க. சிவ புண்ணியம் - சரியை முதலியன. † கவர்ச்சி - பிரிவு. ‡ இந்நூல் உ-ம் சூ. ச-ம் அதி. க. எங்கு. ¶ அவினாவிருத்தி - விட்டுநீங்காதிருத்தல்.

பொன்வாண்முன் கொண்மூவிற் புக்கொடுங்கிப் போயகலத்
தன்வாளே யெங்குமாந் தன்மைபோன்—முன்வாண்
மலத்தின் மறைந்துள்ள மற்றுலகை யுண்ணு
மலத்திரித்துச் செல்லும் வரத்து.

எ—து. உ—ம். எ—னின். நான்காஞ்சூத்திரம் முதல் இதுவரையிற் கூறிப் போந்த கேவல சகல சுத்தம் என்னும் முத்திறத் தவத்தைகளினும் ஆன்மா தன்னியல்பிற்குக் கேடின்றியே நிற்கு மென்பது உவமையின் வைத்துக்காட்டி மேலதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். பொன் வாள் முன் கொண்மூவில் புக்கு. எ-து. ஞாயிறு காலைப் போதின் முகிற்படலத்துண் மறைந்து,—ஒடுங்கி. எ-து. அம்முகிற்படலம் ஒருபுடை நீங்கியவழித் தன்னொளி ஏகதேசமாய் ஒடுங்கித் தோன்றி,—போய் அகல எங்கும் தன் வாளே ஆம் தன்மை போல். எ-து. அம்முகிற்படலம் பெருங்காற்றான் அடியுண்டு முழுவதும் விட்டொழிந்தவழி எங்கணுந் தன்னொளியேயாய்த் தோன்றும் பெற்றிபோல,—உள்ளம் முன் வாள் மலத்தின் மறைந்து. எ-து. ஆன்மா அநாதியே தன்னறிவு மலத்துண் மறைப்புண்டு கேவலப்பட்டு,—மற்று 'ஒடுங்கி' உலகை உண்ணும்.எ-து.பின்பு கருவிகளோடு கூடி ஏகதேசமாய் அறிவு விளங்கி ஐம்புலன்களை விடயிக்கும்,—மற்று மலத்து இரித்து 'எங்குமாய்வாள்' வரத்துச் செல்லும்.எ-து. பின்பு அம்மலத்தை முதல்வனருளாற் பற்றறக்களைந்து வியாபகமாய் அறிவு விளங்கி அவனது சீபாதத்தை அணைந்து சுத்தப்படும். எ - று.

தன்மை என்றார் கொண்மூவிற் புக்குழியுங் கேடின்மையின்.

ஏகாரந் தேற்றத்தின்கண் வந்தது. பின் வந்த வாள் ஆகுபெயர்.

வினைமாற்றின்கண் வந்த மற்று என்னும் இடைச்சொல் மலத்திரித்து என்பதனோடும் இயைந்தது. சாரியை யுள்வழித் தன்னுருபு நிலையாது வந்தது *இலேசாற் கொள்க.

†உவமைவினைகள் பொருளினுஞ் சென் றியைந்தன.

அறிவு மறைந்தும் ஒடுங்கியும் மறைப்பு நீங்கியே எங்குமாய் நிகழ்தன் மாத்திரைக்கே பொன்வாள் உவமை என்பார், 'உலகை யுண்ணும்' 'வரத்துச் செல்லும்' என வேற்றுமையும் உடன் கூறினார்.

மலம் நசித்தலாவது தனது மறைத்தற்சத்தி மடங்கிக் கீழ்ப்படுதன்மாத்திரையே பிறிதன்று என்பதூஉம் உவமையாற் பெறுதும்.

இரண்டாமதிகரண முடிந்தது.



பதினொராஞ் சூத்திரமுடிந்தது.

---

* இதனை. உஉஉ-ம் பக்கத்துக் குறிப்பிற் காண்க. † ஒடுங்குதலும், வாள் எங்குமாதலும், உவம வினைகள்.

# பன்னிரண்டாஞ்சூத்திரம்.

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேயு மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

எ-து. சூ-ம். எ-னின். அசிந்திதனுய் நின்ற பதியைச் சிந்திதனுகக் கண்டு வழிபடுமாறு உணர்த்துத னுதலிற்று.

எ—து. க—ரை. எ—னின். சூத்திரக்கருத்து உணர்த்துத னுதலிற்று.

இ-ள். அயரா வன்பி னரன் கழல் சென்ற முத்தர்க்குச் சீவன்முத்தி நிலைக்கண் அவ்வறிவிச்சைசெயல்கள் ஒரோவழிப் புறத்துச் செல்லுங்கால் அவை செல்லுமிடம் இவை என்பது உணர்த்தும் முகத்தான் வாக்குமனதீத மாய்ப் பத்தியினுன் மறவாதேத்த நின்ற முதல்வனை வாக்குமனக்கோசர மாம்படி தெளியக் கண்டு வழிபடுமாறு உணர்த்துதல் இப்பன்னிரண்டாஞ் சூத்திரத்தின் கருத்து. எ-று.

சூத்திர இயையும் இனிது விளங்கும்.

இச்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்பு. அயரா வன்பி னரன் கழலணைந்த சீவன்முத்தனுவான் செங்கமலமலர்போல விரிந்து விளங்கிய முதல்வனது நோன்றாளை அணைய வொட்டாது அயர்த்தலைச் செய்விக்கும் அவ்வியல்பினை யுடைய மும்மல அழுக்கை ஞானநீராற் கழுவி அங்ஙனம் அயராவன்பு செய்யும் மெய்ஞ்ஞானிகளோடு கலந்துகூடி மலமயக்கம் நீங்குதலான் அன்புமிக்குடைய அவரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் முதல்வ னெனவே கண்டு வழிபட்டு வாழும். எ-று.

எழுவாய் மேலைச் சூத்திரத்தினின்றும் வருவிக்கப்பட்டது. சீவன்முத்தன் என்பது ஏற்புழிக்கோடலாற் பெறுதும்.

நோன்றாள் வினைத்தொகை. நோன்றல் பொறுத்தல். *"எடுத்துச் சுமப்பானை" என்றார் புடைநூலாசிரியரும்.

கழீஇ என்றது குறிப்புருவகம்.

'மாலற நேய மலிந்தவர்' என்றது அம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇயினார் என்னும் பொருடந்து சுட்டுப்பெயர் மாத்திரையாய் நின்றது.

நேய மலிதல் கூறவே, வழிபாடும் பெறப்படும். தான் அசை.

'அம்மலங்கழீஇ' என்றதனுல் அறிவு வியாபரிக்கு மிடமும், 'அன்பரொடு மரீஇ' என்றதனுல் இச்சை வியாபரிக்கு மிடமும், 'தொழும்' என்றதனுற் செயல் வியாபரிக்கு மிடமும், பெறப்பட்டன. படவே, சீவன்முத்தார்க்கு

* திருவருட்பயன், உயிர்விளக்கம். ௫. கிடைக்க.

அறிவிச்சைசெயல்கள் ஏனை விடயங்களிற் செல்லா என்பதூஉம் பெறப்பட்டது. இம்மூன்றும் பிரிப்பின்றி ஓரிடத் தொருங்கு நிகழ்வன வாகலின், விடயவேற்றுமை யின்மையும் உணர்க.

தொழுக என்னாது 'தொழும்' என்றமையின், இஃது அணைந்தோரது தன்மை என்பது பெற்றாம். அற்றாகலினன்றே இதனைச் சாதனவோத்தின் வையாது ஈண்டு வைத்தார் என்பது. இனித், தொழும் என்றதனை இரட்டுறமொழிந்துகொண்டு விகுதிப்பொருள்பட நின்ற முன்னிலையேவ லாக்கியுமுரைத்துக்கொள்க. என்னை? செல்வப்பெருக்க முடையார்க்கு உணவாகிய ஆன்பால் உடம்பு நோயின்றி வளரச்செய்யும் மருந்துமாதல்போல, இவ்வழிபாடு மலவாசனை சிறிதுந் தாக்குதலின்றிச் சிவாநந்தம் மேன்மேல் வளரச்செய்யுஞ் சாதனமாதலு முடைமையின். கண்ணழித்துரைபற்றி விதியாக வைத்து உரைத்தலும் அதுபற்றி.

இதனுள், செம்மலர் நோன்றாள் சேர லொட்டா வம்மலங் கழீஇ என்றது ஓரதிகரணம்; அன்பரொடு மரீஇ என்றது ஓரதிகரணம்; மாலற நேயமலிந்தவர் வேடமு மாலயந் தானு மரனெனத் தொழும் என்றது ஓரதிகரணம்; ஆகமூன்றதிகரணத்தது இச்சூத்திரமென்று உணர்க.



## முதலதிகரணம்.

### ஈண்டு ஆணவ மாயை கான்மிய மென்னு மலங்களைக் களைக வென்றது.

எ—து. மே—ள். எ—னின். சீவன்முத்தர்க்கு ஒருதலையான் முன்னர்ச் செய்யக்கடவது இது எனச் சூத்திரத்தின் முதற்கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ-ள். வெ-டை.

கன்மமலமே தன் மூலத்தை நோக்கிக் கான்மியமெனவும் படும். காமியமெனப் பாடமோதி, ஆகாமியங் காமியமெனத் தலைக்குறையென் றுரைப்பாரு முளர்.

### அவைதாம் ஞானத்தை புணர்த்தாது அஞ்ஞானத்தை புணர்த்து மாகலான்.

எ—து. எ—து. எ—னின். 'மலமாயை தன்னொடு வல்வினை யின்றே' எனப் பாசநீக்கம் மேலே பெறப்பட்டமையின், மெய்யுணர்ந்து நிட்டைகூடியபின் அவை களையக்கிடத்தல் யாங்ஙனம்? என்பாரை நோக்கிச் சூத்திரத்தின் உடம்பொடு புணர்த்தோதிய பொருளைத் தெரித்துணர்த்தி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ-ள். அம்மலங்கண் மூன்றும் மெய்யுணர்ந்து நிட்டைகூடினூர் மாட்டும் யாதானுமோ ராற்றா னுழைந்து தம் மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாகிய பண்டை விபரீதவுணர்வை மேற்படுத்துவனவாம் ஆகலான்,

அஃது அவர்க்கு ஆகாமையின் 'ஈண்டு ஆணவ மாயை கான்மிய மென்னு மலங்களைக் களைக' என மேற்கொண்டது. எ - று.

உணர்த்துதல் உணர்விற்கேதுவாதல்.

ஈண்டு அஞ்ஞானம் என்றது விபரீதவுணர்வை.

புண்ணிய பாவம் பொருந்துமிக் கான்மியமு
மண்முதன் மாயைகாண் மாயையுங்—கண்ணிய
வஞ்ஞானங் காட்டுமிவ் வாணவமு மிம்மூன்று
மெய்ஞ்ஞானிக் காகா விடு.

எ—து. உ—ம். எ—னின். அவை அஞ்ஞானத்திற்கு ஏதுவாய் வந்து நுழையுமாறும் அஃது அவர்க் காகாமையுந் தெரித்துணர்த்தி ஏதுவை வலியுறுத்துத னுதலிற்று.

இ - ள். புண்ணிய பாவம் பொருந்தும் இக் கான்மியமும். எ-து. *புண்ணிய பாவப் பயனும் புண்ணிய பாவ காரணமாயும் பொருந்துகின்ற இக் கன்ம மலமும்,—மண் முதல் மாயை காண் (இம்) மாயையும். எ-து. நிலம்முதல் மோகினி ஈறுகக் காணப்படுகின்ற இம்மாயாமலமும்,—கண்ணிய அஞ்ஞானங் காட்டும் இவ்வாணவமும். எ-து. சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வைப் பயக்கும் இவ்வாணவ மலமும்,—இம்மூன்றும் மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு. எ-து. இம்மலங்கண் மூன்றும் மெய்யுணர்வுடைய உனக்காகாமையான் அவற்றை விடுத்தொழிவாயாக. எ - று.

எல்லா மலங்களும் பற்றறத் துடைத்து மெய்யுணர்ந்து நிட்டைகூடினார்க்கு உடம்பு நிற்குமளவும் பிராரத்தவினை அவ்வுடம்பைப் பற்றி நிற்றலான் அஃது அவர்க்கு ஓரோவழி வாசனைவயத்தான் இங்குளி வாங்குங் கலம் போல வந்து தாக்கும்; அவ்வழிப், † "பிற்செயா தநுப விப்ப தின்று" ஆகலின் அதுசார்வாக விருப்பு வெறுப்புக்கள் உளவாம்; அவை உளவாகவே, ‡ "பரமே பார்த்திருப்பார்" க்கு நிலம் முதலிய ஏகதேசப்பொருள் காட்சிப்படும்; படவே, அவற்றைச் சுட்டியறிவதாகிய விபரீதவுணர்வு மேற்பட்டு மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்துப் பிறவிக்கு வித்தாம்: இவ்வாறு இம்மூன்றும் அறிவற்றம் பார்த்து இம்முறையானே வந்து தலைப்படுமெனக் காட்டிக் கூறுவார் கன்மம் மாயை ஆணவம் என்று இம்முறையின் வைத்து அவ்வக் காரிய நிகழ்ச்சிகளை எடுத்தோதிச் சுட்டிக் கூறினார். இகரச்சுட்டு இடையினும் வந்தியையும்.

புண்ணிய பாவம் என்றது உபசாரம்.

முன் வந்த மாயை முப்பத்தொராம் எண்ணுமுறைமைக்கண் நின்ற தத்துவத்தை உணர்த்தி விடாதவாகுபெயராய்த் தன்னை ஈறுகவுடைய ஏனைத் தத்துவங்களையுந் தழீஇயிற்று.

---

* புண்ணிய பாவம் என்பன இன்பத்துன்பங்களையும் நல்வினை தீவினைகளையும் உணர்த்தின. † சிவஞானசித்தி ௨-ம் சூ. ௧௧. முற்செயல். ‡ மேற்படி. ௧௧-ம் சூ. ௨. பரஞானத்தாற்.

காண்மாயை செயப்படுபொருளோடு முடிந்த வினைத்தொகை.

இவை சிவபோகப் பெருவாழ்வை இழப்பித்தலின் மெய்ஞ்ஞானிக் காகா வாயின.

மேன்மேன் முறுகுவனவாய இவற்றைத் தோன்றும்பொழுதே துடை யாக்கால் * "களைகுநர் கைகொல்லுங் காழ்த்த விடத்து" என்னும் முறை மைத்தாய் முடியு மென்பது பற்றி 'விடு' என ஈண்டும் வலியுறுத்தப்பட்டது.

விடுதலாவது, அவை அம்முறையான் நிகழ்ந்தவழி இவ்வஞ்ஞானம் ஏக தேசக் காட்சியான் ஆயதெனவும், அக்காட்சி விருப்பு வெறுப்புக்களது தோ ற்றத்தான் ஆயதெனவும், அத்தோற்றமும் பிராரத்தவினை நுகர்ச்சிக்கட் சென்ற தற்போதத்தால் ஆயதெனவும், அறிந்து அங்ஙனஞ் செல்வதாகிய தற்போதம் முனையாதவாறு பரிகரித்துச் சிவஞானத்துள் அடங்கிச் சிவாநு பவம் சுவாநுபூதிகமாம்படி ஞானநிலையில் உறைத்து நிற்றல்.

மாயை கன்மங்கள் அஞ்ஞானங் காட்டுதல் ஆணவமலச்சார்வா னுய செயற்கை என்பது உணர்த்துதற்கு, மூன்றற்கும் பொதுவாக ஏதுவுட் கூறிப்போந்த அதனை ஈண்டு ஆணவமாத்திரைக்கே சிறந்தெடுத் தோதினர்.

முதலதிகரண முடிந்தது.



## இரண்டாமதிகரணம்.

### இனிச் சிவபத்தர்களோ டிணங்குக வென்றது.

எ—து. மே—ள். எ—னின். அம்மலங் கழீஇயினார்க்கு அதனை நிலைபெறு த்துவதாய் அதன்பின்னர்ச் செய்யக்கடவது இஃது எனச் சூத்திரத்தின் இர ண்டாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோட னுதலிற்று. இ-ள். வெ-டை.

ஈண்டுச் 'சிவபத்தர்' என்றது பத்தியினான் மறவாதேத்தி முதல்வனது சீபாதத்தை அணைந்த சீவன்முத்தர் மேற்று.

இணங்குதல் நட்புச்செய்தல். 'சிவபத்தர்களோ டிணங்குக' எனவே, எதிர்மறை முகத்தான் ஏனையரோ டிணங்கற்க என்பதூஉம் பெறப்பட்டது.

### அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துவ ராகலான்.

எ—து. ஏது. எ—னின் உறவும் பகையும் ஒழித்த மெய்ஞ்ஞானிகள் சிலர் மாட்டு நட்புஞ் சிலர்மாட்டு நட்பின்மையு முடையராதல் சால்பன்று என் பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று. இ-ள். வெ-டை.

அல்லாதார் அஞ்ஞானத்தை யுணர்த்துமாறு † "தெய்வ மென்பதோர் சித்தமுண் டாகி—முனிவி லாததோர் பொருளது கருதலு—மாறு கோடி

* திருக்குறள். ௮௭௯. இளைதாக. † திருவாசகம், போற்றித்திருவகவல். 'நான் முகன்.

மாயா சத்திகள்—வேறு வேறுதம் மாயைக டொடங்கின—வாத்த மானு ரயலவர் கூடி—நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்—சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்—பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்—விரத மேபர மாகவே தியருஞ்—சரத மாகவே சாத்திரங் காட்டினர்—சமய வாதிக டத்த மதங்களே—யமைவ தாக வரற்றி மலைந்தனர்" என்றற் றொடக்கத்துத் திருவாக்குக்களான் அறிக.

மும்மலங்கள் அஞ்ஞானத்தை உணர்த்துதல் இலக்குவாய்த்துழி ஏது வாதன் மாத்திரையே; சிவபத்த ரல்லாதார் அவ்வாறின்றி இலக்கு வாயாத வழியும் வாய்க்குமாறு செய்துகொண்டு பலவகை உபாயங்களானுந் தம்மோ டொப்ப விபரீத வுணர்வைச் செலுத்தியேவிடுவர் ஆகலான் அம்மலங்களி னுங் கொடியராகிய இவரை அவற்றினும் அஞ்சி விட்டொழிதலே அறிவு டைமைக்குச் சால்பு என்பதாம்.

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ்
சிறப்பிலார் தந்திறத்துச் சேர்வை—யறப்பித்துப்
பத்த ரினத்தாய்ப் பர னுணர்வி னாலுணரு
மெய்த்தவரை மேவா வினை.

எ—து. உ—ம். எ—னின். அஞ்ஞானத்தை யுணர்த்துமவரோடு இணங்கா மைமாத்திரையே அமையும் சிவபத்தர்களோடு இணங்குதல் எற்றுக்கு? என் பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். தம்மை மறப்பித்து மலங்களின் வீழ்க்கும் சிறப்பு இலார் தம் திறத்துச் சேர்வை அற. எ-து. முதல்வன் காட்டியுங் கண்டும் உபகரித்து நிற்கும் அத்துவிதநிலையை மறவாது கடைப்பிடிக்குந் தமது ஞானக்கண்ணை இழப்பித்துத் தீய நெறிக்கட் கொண்டுசென்று மலங்களாகிய பிறவிக்கு ழியில் வீழ்வித்துத் துயருறுத்துவா ராகிய அன்பில்லார் கூற்றிலே தொன்று தொட்டுப் பயின்று வந்த சேர்ச்சி அறும்படி,—பத்தர் இனத்துப் பித்து ஆய்ப் பரன் உணர்வினால் உணரும் மெய்த் தவரை, எ-து. அம்மறவியை மாற்றி ஞானக்கண்ணை உதவிப் பிறவிக்குழியினின்றும் எடுத்து நன்னெறிக் கட் செலுத்தி வாழ்விக்குஞ் சிவபத்தரது கூற்றிலே பேரன்புடையராய் அவ்வன்பு சார்பாக விளங்குஞ் சிவஞானக் கண்ணால் அந்நிலை கடைப்பிடித்து உணரப்பெற்ற மெய்த்தவராயினாரை,— வினை மேவா. எ-து. எல்லா வநத்தங் கட்கும் மூலமாய் வந்து சிறப்பில்லார்தந் திறத்துச் சேர்வையைப் பயப்பிக் கும் பிராரத்தவினைகள் வாதியா. எ-று.

'மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்குஞ் சிறப்பிலார்' என மேற் சொல்லிய பொருளையே அநுவதித்து விரித்தோதினார்; அதன் எதிர்மறை முகத்தாற் சிவபத்தரது பெருந்தகைமை உணர்ந்துகோடற் பயன் நோக்கி.

மலம் ஆகுபெயர்.

வீழ்க்கும் என்றது உருவகங்குறித்து நிற்றலின், அவ்வாறு உரைக்கப் பட்டது.

எல்லாவற்றினும் அன்பு சிறந்தமையின் அதனைச் 'சிறப்பு' என்றார். பித்துப் போறலின், அன்பு பித்தெனப்பட்டது.

ஏனைத் தவங்கள் எல்லாம் மெய்யாதலின்றி மலநடையாய்ப் போதலின், பரனுணர்வினால் உணருந் தவமொன்றே மெய்த்தவம் எனப்பட்டது.

வினை பால்காஅஃறிணைப்பெயர். சிவபத்தர்மாட்டு அன்புடையாராய் மனஞ்சொற் செய்கைகளான் அவர் வழி நிற்பார்க்கு உலகியலுணர்வு மாறிச் சிவாநுபூதி உணர்வே மேம்பட்டு நிகழும்: அது நிகழவே பௌதிக உடம்பைப் பற்றி வரும் பிராரத்தவினைகள் அவர்க்கு நுகர்ச்சியாதல் செல்லாமையின் வரிதிக்கமாட்டா: மாட்டா தொழியவே, அவை பற்றுக்கோடாக நிகழுஞ் சிறப்பில்லார்தந் திறத்துச் சேர்வை பற்றறக்கெடும் என்பார் 'சேர்வை—யறப் பித்துப்—பத்த ரினத்தாய்ப் பரனுணர்வி னாலுணரு—மெய்த்தவரை மேவா வினை' என்றார். எனவே, வீட்டுணர்வை நிலைபெறுத்துஞ் சிவபத்தர்களோடு இணங்கின லன்றி வினை பற்றுக்கோடாகத் தொன்றுதொட்டுப் பயின்று வந்த சிறப்பில்லாரது இணக்கம் அறாமையின் அவ்விணக்கம் ஒருதலையான் வேண்டுமென வலியுறுத்தவாறாயிற்று.

இரண்டாமதிகரண முடிந்தது.



## மூன்றாமதிகரணம்.

### இனிப் பத்தரது திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுக வென்றது.

எ—து. மே—ள். எ—னின். அன்பரொடு மரீஇயினார்க்கு அம்மருவுதலை நிலைபெறுத்துவதாய் அதன் பின்னர்ச் செய்யக்கடவ திதுவெனச் சூத்திரத்தின் மூன்றாங் கூற்றைக் கண்ணழித்துரைத்து மேற்கோ ளுதலிற்று. இ - ள். வெ-டை.

காண்டல் ஐயுறவின்றித் தெளிதல்.

காமக்கிழத்தியர் வடிவிற் காணப்படும் ஆடை சாந்து அணிகலன் முதலாயின காமுகரை வசிகரித்து இன்பஞ் செய்யுமாறுபோல மெய்யுணர்வுடையாரைக் காட்சிமாத்திரையின் வசிகரித்து இன்பஞ்செய்தல்பற்றித் திருவேடத்தையுஞ் சிவாலயத்தையும் என்று உபசரித்தார். அது * "சேலுங் கயலுந் திளைக்குங்கண் ணாரிளங் கொங்கையிற் செங்குங்குமம்—போலும் பொடியணி மார்பிலங் குமென்று புண்ணியர் போற்றிசைப்ப" என்னுந் திருவாக்கானும் அறிக. திருவேடத்தி னியல்பு † "தூயவெண் ணீறு துதைந்த பொன் மேனியுந் தாழ்வடமு—நாயகன் சேவடி தைவரு சிந்தையு நைந்துருகிப்—பாய்வது போலன்பி னீர்பொழி கண்ணும் பதிகச்செஞ்சொன்—மேயசெவ் வாயு முடையார் புகுந்தனர் வீதியுள்ளே" ‡ "சிந்தையிடை யறாவன்புந் திருமேனி தனிலசையுங்—கந்தைமிகை யாங்கருத்துங் கையுழவா

* திருப்பல்லாண்டு. அ. † பெரியபுராணம், திருநாவுக்கரசுநாயனார் புராணம். கஅ0.
‡ மேற்படி, திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் புராணம். உஎ0. உஎக.

ரப்படையும்—வந்திழிகண் ணீர்மழையும் வடிவுபொலி திருநீறு—மந்தமி லாத் திருவேடத் தரசுமெதிர் வந்தணைய" "கண்டகவு ணியக்கன்றுங் கருத் திற்பரவு மெய்க்காதற்—றொண்டர் திரு வேடநேரே தோன்றியதென் றுதொ ழுதே" என்றற் றொடக்கத்துத் திருவாக்குக்களானும் அறிக.

அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல் லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.

எ—து. ஏது. எ—னின். மெய்யுணர்வுடையார்க்குப் பகுப்பின்றி எங்க ணும் பரமேசுரனெனக் காண்டலே பொருத்தம் உடைமையானும் நின்றதிருத் தாண்டகம் முதலியவற்றுள் அவ்வாறு ஓதுதலானும் திருவுருத்திரத்துட் பகு ப்பின்றி உயிர்ப்பொருள் உயிரில் பொருள் எல்லாவற்றையுந் தனித்தனி எடுத் தோதி வழிபாடு கூறுதலானும் ஈண்டிவற்றை மாத்திரையே விதந்துகொண் டோதியது என்னை? என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ - ள். அம்முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டி டத்துமாத்திரையே, தயிரின் நெய்போல விளங்கி நிலைபெற்று அல்லுழி யெல் லாம் பாலின் நெய்போல வெளிப்படாது நிற்றலான் 'இனிப் பத்தராது திருவே டத்தையுஞ் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுக' என மேற் கொண்டது. எ - று.

மற்று உரையசை.

எப்பொருட்கண்ணும் இறைவன் கலந்துளன் என்பது தெளிந்துகோட ற்பொருட்டுத் திருவுருத்திரத்தின் அவ்வாறு ஓதப்பட்டது எனக்கொள்க.

தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான்கொடுத்துத்
தன்னுணரத் தன்னு ளிருத்தலாற்—றன்னுணரு
நேசத்தர் தம்பா னிகழுந் ததிநெய்போற்
பாசத்தார்க் கின்றும் பதி.

எ—து. உ—ம். எ—னின். திருவேடத்தின் இறைவன் பிரகாசமாய் நிற்கு மாறு யாங்ஙனம்? என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ - ள். பதி. எ-து. அசிந்திதனாய் நின்ற பரம்பொருளே,—தன் உணர வேண்டி. எ-து. உலகத்துள்ளார் தன்னை அறிதற்பொருட்டு,—தனது உருவைத் தான் கொடுத்து. எ-து. திருநீறு கண்டிகை முதலிய திருவேடமாகிய தனது திருவடிவத்தைத் தன் அன்பர்க்குக் கொடுத்தலானும்,—தன் உணர. எ-து. அவ்வன்பர் தன்னைச் சிவோகம்பாவனையால் அறியச் செய்தலானும்,—தன் னுள் இருத்தலால். எ-து. அங்ஙனம் ஒருகு றியின்கண் நின்றுணரும் அவரைத் தனது வியாபகத்துள்ளாக இருத்துதலானும்,—தன் உணரும் நேசத்தர் தம் பால் ததி நெய்போல் நிகழும். எ-து. குறியும் இறந்துநின்று தன்னை உள்ளவாறு உணரும் அவர்மாட்டுத் தயிரின்கண்ணதாகிய நெய்போல விளங்கித் தோன்

றும்,—பாசத்தார்க்கு இன்று ஆம். எ-து. அவ்வியல்பில்லாத பாசக்கட்டு உடையார்மாட்டுப் பாலின்கண்ணதாகிய நெய்போல விளங்காது நிற்கும். எ-று.

செய்து என்பது சொல்லெச்சம். இருத்தல் அல்லீற்றுப் பிறவினைத்தொழிற்பெயர். கொடுத்துச் செய்து இருத்தலான் நிகழுமெனை இயையும்.

தன்னுணரு நேசத்தர் எனப் பெயரடையானும் ஓரேதுக் கூறப்பட்டது. தன்னை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது.

உணர்தலை மூவிடத் தோதுதலின் இஃது அங்ஙனம் வேறுவேறு உரைக்கப்பட்டது.

பாசத்தார்க்கு என்பது உருபுமயக்கம். இன்மை ஈண்டு விளங்காமைகுறித்து நின்றது.

கண்டதொரு மந்திரத்தாற் காட்டத்தி லங்கிவே
றுண்டல்போ லின்றங் குளதாமாற்—கண்டவுருத்
தானதுவா யன்றானன் றானதுவாய்த் தோன்றானோ
தானதுவாய்க் காணுந் தவர்க்கு.

எ—து. உ—ம். எ—னின். சங்கமவடிவிற்குக் கூறிப்போந்த இயல்பில்லாத தாவரவடிவின் மந்திரசாந்நித்தியம் உள்வழி யன்றிப் பிரகாசமாய் நிற்றல் பெறப்படா தென்பாரை நோக்கிச் சிவாலயத்தி னிடத்தும் இறைவன் பிரகாசமாய் நிற்றலை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். காட்டத்தில் அங்கி வேறு உண்டல் போல். எ-து. விறகிற்றீ கடைகோலாற் கடைந்துழி வேறாய் விளங்கும் அல்லுழி விளங்குவதன்றாற் போல,—கண்ட உருத் தான் அது ஆய் அன்று ஆனன். எ-து. உயிர்கட்குப் புத்தி முத்தி அளித்தற்பொருட்டுக் காணப்பட்ட தாவரவடிவின்கட் கலப்பினால் அதுவே தானாய் அதுவன்றி வேறு பொருளுமாம் இயல்புடைய முதல்வன்,—கண்டது ஒரு மந்திரத்தால் இன்று அங்கு உளது ஆம். எ-து. அதுவே தானாகக் காணாதார்க்குத் தம்மால் அறியப்பட்டதொரு மந்திரசாந்நித்தியம் இல்வழி அவ்வடிவின்கண் விளங்காது நின்று அஃதுள்வழி விளங்கித்தோன்றும் பொருளாம்,—அது தான் ஆய்க் காணும் தவர்க்கு அது தான் ஆய்த் தோன்றானோ. எ-து. அவ்வாறன்றி அவ்வடிவே அவனாகக் காணப்பெறும் உண்மைத் தவமுடையார்க்கு அப்பெற்றியனேயாய் விளங்கித் தோன்றான்கொல்லோ. எ - று.

காணாதார்க்கு என்பது சொல்லெச்சம்.

மந்திரத்தால் என்னும் பொருளடைக்கேற்ப உவமையினும் வருவித்துரைக்கப்பட்டது. உண்டாதல் ஈண்டு விளங்குதன்மேற்று. ஆல்—அசை. ஆனன் என்பது பெயர். ஓகாரம் எதிர்மறை. பொருண்மைபற்றி உளதெனவும் அன்றெனவும் கூறினார்.

'தானதுவா யன்றுஞன்' என்னும் பெயரடையான் அவரவர் பாவனைக் கேற்ப விளங்குதற்கு ஏதுக் கூறியது. தானதுவா யன்றுதல் சங்கம வடிவிற்கு மொக்குமேனும், தாவர வடிவின்கண் நிகழுங் கடாவை இதனானன்றி நீக்க லாகாமையின் ஈண்டுக் கூறினர். இஃது ஈரிடத்தும் ஒக்குமென்பது முன்ன ரப் பெறப்படும்.

மூன்றுமதிகரண முடிந்தது.



## நான்காமதிகரணம்.

## இனி இவ்விடங்களின் வழுபடுக வென்றது.

எ—து. மே—ள். எ—னின். மேற்கூறிப் போந்த மூன்றுஞ் சீவன்முத்தர்க் குத் தாமே உளவாம் இலக்கணமாகலின் அநுவாதமாகவைத் துணர்த்தற் பாலனவாகிய இவற்றைக் 'களைக' 'இணங்குக' 'வழிபடுக' என விதியாக வைத்தோதியது ஏற்றுக்கு? என்பாரை நோக்கி அதனை அவற்றது ஒழிபாகக் கொண்டு சாதித்தற்கு மேற்கோட னுதலிற்று. இ - ள். வெ-டை.

இவ்விடங்கள் என்றது மேற்கூறிய இரண்டனையும்.

வழிபடுக வென்னும் எடுத்தலோசையான் அநுவதித்து உணர்த்துவதே அமையும் என்பாரை நோக்கி விதித்தலை வலியுறுத்தவாறு. இனம்பற்றிக் களை தல் இணங்குதல்கட்கும் இஃதொக்கும்.

**நரம்பு நாடி முதலானவற்றைத் தானதுவாய் வரும் புருடன் அவையாகாவாறு அப்புருடனு மாகலான்.**

எ—து. ஏது. எ—னின். எய்தியதனை விதித்தல் பயனுடைத்தன்றுபோ லும் என்பாரை நோக்கி மேற்கோளைச் சாதித்த னுதலிற்று.

இ - ள். நரம்பு முதலிய தாதுக்களின்கண் வேற்றுமை இன்றி அதுவது தானய் வருகின்ற உயிர் நாடியோ என்போ நரம்புசிக் கோழையோ என்று இங்ஙனம் *''பைமறியாப்'' பார்ப்பார்க்கு அந்நரம்பு நாடி முதலியவை ஆகாது அவற்றின் வேறுமாயினற்போல உயிர்க்குயிராகிய அம்முதல்வனும் உயிர்ப் பொருள் உயிரில்பொரு ளெல்லாவற்றினுங் கலப்பான் அதுவது தானுகியும் பொருண்மையான் அல்லனுகியும் நிற்பனுகலான் அதுவது தானய்க் காணுங் காட்சி பற்றி எய்திய வழிபாடு அல்லனய் நிற்றலைக் காணுங்கால் எய்தாதாக வின் அவ்வழியும் எய்துவிக்க வேண்டுதலான் 'இனி இவ்விடங்களின் வழிப டுக' என விதித்தோதியது. எ - று.

'அவையாகாவாறு அப்புருடனும்' எனவே அவ்விடத்து எய்துவித்தல் ஒருதலையான் வேண்டும் என்பது தாற்பரியமாயிற்று.

* நாலடியார், தூய்தன்மை. உ. தோற்போர்வை.

மேற்கோளின் இவ்விடங்களை என்றது இவ்விடங்களினென வேற்றுமைப்படுத் தோதியதூஉம் இஃதுணர்ந்து கோடற்பொருட்டு. இதனானே, *எய்தாத தெய்துவிப்பதூஉம், எய்தியதிகந்துபடாமற் காப்பதூஉம், எய்தியதனை ஒருமருங்கு மறுப்பதூஉம் என்னும் விதிமூன்றனுள், இஃது எய்தியதிகந்துபடாமற் காத்ததென்பது போந்தவாறு உணர்க.

வாறு உவமவுருபுபடநின்றது. முதலானவற்றை என்பது உருபுமயக்கம்.

அதுவிது வென்ற தல்லான் கண்டார்க்
கதுவிது வென்றதையு மல்லான்—பொதுவதனி
லத்துவித மாத லகண்டமுந் தைவமே
யத்துவிதி யன்பிற் றொழு.

எ—து. உ—ம். எ—னின். முதல்வனுக்கு அவ்வியல்பு எல்லாப் பொருட்கண்ணும் உண்மையின் அவற்றுள் இவ்விடங்களின் மாத்திரையே வழிபாடு விதித்தது என்னை? என்பாரை நோக்கி அதனை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். கண்டார்க்கு. எ-து. முதல்வன் உயிர்ப்பொருள் உயிரில் பொருளெல்லாவற்றினும் நிற்கும் நிலைமை அறியப்பெற்றோர்க்கு,—அது இது என்றது அல்லான். எ-து. கண் அருக்கன்போல் அதுவும் இதுவும் எனப் பக்கிசைத் தோதப்பட்ட பேத நிலைமையனும் அல்லனாய்,—அது என்றது அல்லான். எ-து. உடல் உயிர்போல் அதுவே யென்று ஓதப்பட்ட அபேத நிலைமையனும் அல்லனாய்,—அது இது என்றதையும் அல்லான். எ-து. குண குணிபோல் அதுவாகிய இது என்று பக்கிசையாமல் ஓதப்பட்ட பேதாபேத நிலைமையனும் அல்லனாய்,—பொதுவதனில் அத்துவிதம் ஆதல் அகண்டமும் தைவமே. எ-து. அறிவொளிபோல் அம்மூன்றற்கும் பொதுமையான் அத்துவித நிலைமையனாதலான் எல்லாப் பொருளும் அவன் வடிவேயா மாயினும்,—அத்துவிதி அன்பின் தொழு. எ-து. அவற்றுள்ளும் அன்பு விளையுமிடத்தின் வழிபடுவாயாக அவ்வத்துவிதசித்தாந்தத்தைப் பெற்றுடையோய். எ - று.

அது இது என்றது முன்னையது உம்மைத்தொகை; பின்னையது இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

அல்லான் என்பதனை மேலுங் கூட்டி, என்றது என்பதனை அது என்றதனோடுங் கூட்டி உரைக்க. அல்லான் என்பது முற்றெச்சக்குறிப்பு.

என்றதை ஐயீற்றுடைக் குற்றுகரம். உம்மை இறந்தது தழீஇயிற்று. பொதுவது என்னும் அது பகுதிப்பொருள்விகுதி. தைவம் என்னுஞ் சொல்லியல்பு † மேலே உரைத்தாம். ஏகாரம் தேற்றம். ஆயினும் என்பது சொல்லெச்சம். அன்பு ஆகுபெயர். ஏழாவது விரித்துரைக்க.

---

* எய்தாத தெய்துவிப்பது - அபூர்வவிதி. எய்தியதிகந்துபடாமற் காப்பது நியமவிதி. எய்தியதனை ஒருமருங்கு மறுப்பது - பரிசங்கியாவிதி. இது திராவிடமாபாடியத்திற் கண்டது. † ககஎ-ம் பக்கத்துக்குறிப்பிற் காண்க.

*''திருக்கோயி லுள்ளிருக்குந் திருமேனி'' யினன்றி *''எங்கு—முருக் காண வொண்ணாதப் பான்முலைப்பால் விம்மி யொழுகுவது போல்வெளிப்பட் டருளுவ'' தாகி அடிப்பட்டுவரும் அன்பு வினையாமையின் ஆண்டுச் செய்யும் வழிபாடே அத்துவித ஞானத்தை நிலைபெறுத்தற் பயத்ததென்பார் 'அத்துவி தமாத லகண்டமுந் தைவமே' என அநுவதித்து 'அத்துவிதியன்பிற் றொழு' என்றார். அத்துவிதி என்னும் அண்மைவிளி பயனுணர நின்ற குறிப்புப்பெயர். இதனானே விதிக்குப் பயன்கூறியதூஉ மாயிற்று.

இனி, அது இது என்பன அருவுருவாகிய திருமேனி எனக்கொண்டு அதற்கியைய உரைப்பாருமுளர்: அவர், அன்பின் என்றதனை ஏதுப்பொருட் கண் வரும் ஐந்தனுருபேற்ற இயற்பெயராகவைத்து உரைப்ப.

வினையா லசத்து விளைதலான் ஞானம்
வினைதீரி னன்றி விளையா—வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே யதுநிகழு
மானத்தா லன்பிற் றொழு.

எ—து. உ—ம். எ—னின். அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்தென்று கண்டு ஒருவவே ஞானசொரூபம் உளதாய் அத்துவிதத்தை உணர்த்தும் ஆக லான் அதன்பொருட்டு வழிபாடு வேறு விதித்தல் எற்றுக்கு? என்பாரை நோ க்கி அதனை வலியுறுத்துத லுதலிற்று.

இ-ள். வினையால் அசத்து விளைதலான் வினை தீரின் அன்றி ஞானம் விளையா. எ-து. உடம்பின்கண்ணதாகிய பிராரத்தவாசனை உயிர்க்குத் தாக்குவ தாயுள்ள துணையும் அதனான் வரும் விருப்பு வெறுப்புக்களும் அவைபற்றிக் காட்சிப்படும் மண் முதன் மாயைகளும் அவைபற்றி நிகழும் விபரீத உணர்வும் ஆகிய அசத்துக்கள் ஒருவியவழியும் வந்துகூடி மேம்படுவனவாகலான், அவ்வ ளவிற்கெல்லாம் மூலமாகிய பிராரத்தவாசனை பற்றறக் கழிந்தாலன்றி அவ்வச த்தைக் கீழ்ப்படுத்து மெய்யுணர்வு மேம்படுதல் கூடாதாகலின்,—வினை தீர ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும். எ-து. அவ்வாசனை பற்றறக் கழி தற்பொருட்டு அம்மெய்யுணர்வுடையாரை நாடி வழிபடவே அவ்வினை நீங்கி மெய்யுணர்வு மேம்பட்டு நிகழும்,—ஆனத்தால் அன்பின் தொழு. எ-து. ஆக லான் அன்பினால் அவரை வழிபடுவாயாக. எ-று.

அசத்தை ஒருவியவழி உளதாகிய ஞானசொரூபம் நிலைபெறுதல் அவ் வசத்தினது விளைவிற்கு வேராகிய வினைத்தீர்வின்கண்ணதாகலான், அவ்வினை வேர் அறுத்து மெய்யுணர்வை நிலைபெறுத்துதற்பொருட்டு அதனை அங்ஙனம் நிலைபெறுத்தினார்மாட்டுச் செய்யும் வழிபாடு ஒருதலையான் வேண்டப்படும் என்பதாம். அற்றேல், அதன்பொருட்டு ஸ்ரீபஞ்சாக்கரத்தை விதிப்படி உச்ச ரிக்க என்ற அதுவே அதற்கு அமையும் எனின், அஃது ஒக்கும்; அவ்வுச்சரி ப்பும் இவ்வழிபாட்டை இன்றி அமையாது என்க. அற்றாகலினன்றே, ஆண்டு

* சிவஞானசித்தி. கஉ-ம் சூ. ச.

*'அஞ்செழுத்தால்' எனவும், † 'மண்முதனுளம்' எனவும், அகத்து வழிபாட்டை உடன் கூறியதூஉம் என்பது.

விளையாது என்னும் துவ்விகுதி விகாரத்தாற் றொக்கது. பின் வந்த ஞானம் ஆகுபெயர். ஆனதனுல் என்பது ஆனத்தால் என மரீயிஇற்று.

தன்னை யறிவித்துத் தான்றனுச் செய்தானைப்
பின்னை மறத்தல் பிழையலது—முன்னவனே
தானேதா னுச்செய்துந் தைவமென்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

எ—து. உ—ம். எ—னின். அங்ஙனம் பயன்பற்றி விதிக்கப்படும் வழிபாடு வேள்வி முதலியனபோலப் பயன்வேண்டாமையானுதல் பின்னர்ச் செய்து பெறுதும் என்றுதல் ஒரோவழி ஒழியவும்படுங்கொல்லோ என்பாரை நோக்கி, அது செய்யாவழிப் படுங் குற்றமும் செய்தல் கடமையாமாறும் உணர்த்தி விதித்தலை வலியுறுத்துத னுதலிற்று.

இ-ள். தன்னை அறிவித்துத் தான் தான் ஆச் செய்தானைப் பின்னை மறத்தல் பிழை அலது. எ-து. தன்னுண்மையை அறியமாட்டாது குருடாய்க் கிடந்த உயிர்க்குப் பலவாற்றுனும் அதனைத் தெரித்துணர்த்தி எத்தனையும் எளிய அவ்வுயிரை எத்தனையு அரிய தானும்வண்ணஞ் செய்தளித்த பெரியதோருதவியை அதன்பின்னர் மறக்குமாயின் அஃது இதற்குமுன் அறியாமையான் மறந்த குற்றம்போலத் தீர்திறனுடையதோர் குற்றமன்று ஆகலானும்,—முன்னவன் தானே தானுச் செய்தும் தைவம் என்றும் தைவமே மான் தொழுகையே வலி. எ-து. முதல்வன் அங்ஙனந் தான்றனேயாகச் செய்தாலும் இதுகாறுந் தனக்குச் சுதந்திரமின்றி முதல்வனது உபகாரத்தை இன்றியமையாதாய் அடிமையாகிய உயிர் எக்காலத்தும் அவ்வாறு அடிமையேயாம் ஆகலானும் தான்றனுச் செய்தளித்த அப்பெரியோனை வழிபடுதலே அவ்வுயிர்க்கு வலியாவது. எ - று.

தமது முதற்றனே குருவாகலின் 'தான்றனுச் செய்தானை' என்றும், முன்னைமறந்த குற்றம் அறியாது நிகழ்ந்ததாகலின் கழுவப்படும் இஃது அதுபோற் கழுவப்படுவதன்று என்பார் 'பின்னை மறத்தல் பிழையலது' என்றுங் கூறினுர். பின்னை மறத்தல் என்றதனுல் முன்னை மறத்தல் பெறப்பட்டது. ‡"எந்நன்றி கொன்றூர்க்கு முய்வுண்டா முய்வில்லை—செய்ந்நன்றி கொன்ற மகற்கு" என்னுங் கருத்து நோக்கிக் கூறியதூஉமாம்.

அலதும் எனப் பாடமோதி இது பிழையாதலன்றியும் என்றுரைப்பாருமுளர்.

ஏகாரம் முன்னையது அசைநிலை; பின்னையன தேற்றம். செய்தாலென்பது செய்தெனத் திரிந்தது. உம்மை சிறப்பின்கண் வந்தது.

---

* இந்நூல். கூ-ம் சூ. ௩. அதி. க. † மேற்படி. ௩. ‡ திருக்குறள். ௧௧௦.

தான்றுனுச் செய்தல் எதனை எதனைப் பற்றினும் அது அதுவாம் உயிர் தன்னை அறிந்தவழி எண்குணங்களால் நிறைந்து தன்வண்ணமாகச் செய்தல். அங்ஙனஞ் செய்தவழியும் *"உயிர்தானுஞ் சிவாநுபவ மொன்றினுக்கு முரித்தே" என்பார் 'தைவமென்றுந் தைவமே' என்றார். †தைவம் என்னுஞ் சொல்லியல்பு மேலே உரைத்தாம்.

மானை என்னும் இரண்டனுருபு விகாரத்தாற் றொக்கது. ‡மான் என்பது வடசொற்றிரிபு. சுட்டு வருவிக்க. வலிதருவதனை வலி என்று உபசரித்தார்.

இவ்வுதாரணங்கண் மூன்றுனும், வழிபாட்டிற்கும் இடத்துநிகழ்பொருண் மாத்திரையே அன்றி இடவிசேடமும் பெறல்வேண்டும் என அதனை வலியுறுத்துமுகத்தானே, முறையே சிவலிங்கத்தையுஞ் சிவபத்தர் வேடத்தையுஞ் சிவதேசிகர்களையும் அறிந்து வழிபடுமாறு கூறப்பட்டது.

சிவமென்னு மந்ததர சிந்தைநேர் நோக்கப்
பவமின்றாங் கண்வா சகத்திற்—சிவமுண்டா
மொன்று மிரண்டு மலத்தார்க்கிங் கொண்குருவா
லின்றிந்நூன் மும்மை மலர்க்கு.

எ—து. செ—ள். எ—னின். இங்ஙனஞ் சிவாகமத்துள் ஞானபாதப் பொருளெல்லாவற்றையும் பொது உண்மை என்று இருவகைப்படுத்துப் பிரமாண இயல் இலக்கண இயல் சாதன இயல் பயன் இயல் என நான்கியலாக வைத்துப் போதிப்பதாகிய இச்சிவஞானபோத நூலைக் கோடற்கு உரிய அதிகாரிகளாவார் இவர் என்பது உணர்த்துத னுதலிற்று.

இ-ள். சிவம் என்னும் அந்ததர. எ-து. தான்றுனுச் செய்தவாற்றாற் சீவனென்னும் இயல்பினீங்கிச் சிவம் என்று ஓதப்படும் வேதாந்தத் தெளிவாகிய சித்தாந்தத்தை உடைய மாணவகனே! ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு. எ-து. ஒன்றும் இரண்டும் ஆய மலங்களை உடைய விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்கும்,—சிந்தை நேர் நோக்கக் கண் வாசகத்தின் பவம் இன்று ஆம் சிவம் உண்டாம். எ-து. முறையே அறிவின்கண் நின்று அருட்பார்வையால் நோக்குதலானும் தேவகுருவாய் முன்னின்று செய்யுந் திருநோக்கம் பரிசம் வாக்கு எனப்படுந் தீக்கையானும் பிறவிக்கு ஏதுவாய பசுத்துவம் நீங்கிச் சிவத்துவம் விளங்கும் ஆகலான்,—மும்மை மலர்க்கு இங்கு ஒண் குருவால் இன்று இந் நூல்.எ-து. அவரின் வேறாகிய மும்மலம் உடையவர்க்கே உரித்து இவ்வுலகத்து அனுபவமுடைய தேசிகராற் போதிக்கப்படும் இச்சிவஞானபோத நூல். எ - று.

அந்தம் வேதாந்தம், அந்ததரம் சித்தாந்தம் ஆகலின், அதனைப் பெற்றாரது பெருமை கூறுவார் 'சிவமென்னுமந்ததர' என்றார்.

என்னும் என்புழிப் படுசொற் றொக்கு நின்றது. சிந்தை—அறிவு. கண்ணுருபு விரித்துரைக்க.

* சிவஞானசித்தி. ௧௧-ம் சூ. ௫0. செம்பிரத. † ௧௧௯-ம் பக்கம். ‡ மீகான் என்பது மான் எனத் தற்பவமாயிற்று.

நேர்நோக்குதல் முன்னை மருட்பார்வையை மாற்றி அருட்பார்வையால் நோக்குதல். நோக்க நோக்குதலான் எனக.

கண் வாசகங்களைக் கூறவே இனம் பற்றிப் பரிசமும் உடன் கொள்ளப் படும்.

பவம் ஆகுபெயர்.

இந்நூல் அநுபவம் உடைய தேசிகனால் அன்றி விளங்காது என்பார் 'ஒண் குருவால்' என்றார்.

போதிக்கப்படும் என்பது அவாய்நிலையான் வந்தது.

இன்றிந்நூல் என்பது இந்நூல் என்னும் பொருட்டு. இக்காலத்து உரைக்கப்படும் நூல் எனினும் அமையும். அது 'தானுரைத்தா னின்று' என வருகின்ற வெண்பாவாற் கூறியவாற்றானும் அறிக.

மும்மை என்றது ஈண்டு எண்ணின்மேல் நின்றது, "தெரிமாண் டமிழ் மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல.

நான்காமதிகரண முடிந்தது.

பன்னிரண்டாஞ்சூத்திர முடிந்தது.



பயனியன் முற்றிற்று.



## சிறப்பியல்பு முற்றுப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.



## பாயிரம்.



எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய்
நந்தி யுரைத்தருளு ஞான நூல்—சிந்தைசெய்து
தானுரைத்தான் மெய்கண்டான் றாரணியோர் தாமுணர
வேதுதிருட் டாந்தத்தா லின்று.

இ-ள். எந்தை சனற்குமரன். எ-து. எந்தையாகிய சனற்குமார முனிவர்,—ஏத்தித் தொழ. எ-து. அடியேற்கு ஞானபாதப்பொருளை உபதேசித்தருளுக என்று அன்பு செய்து துதித்து வணங்கிப் பிரார்த்திக்க,—இயல்பு ஆய் நந்தி. எ-து. அப்பொருளினியல்புகளைச் சீகண்டதேவர்பாற் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த நந்திபெருமான்,—உரைத்தருளும் ஞான நூல். எ-து. அந்நாளிலே அவர்க்கு உபதேசித்தருளிய சிவஞானபோதமென்னும் வடநூலை,—

மெய்கண்டான் சிந்தித்து. எ-து. மெய்கண்டதேவநாயனார் சிந்தித்து மொழி பெயர்த்து,—ஏது திருட்டாந்தத்தால். எ-து. கருத்துரை மேற்கோள் ஏது உதாரணங்களோடு சேர்த்து,—தாரணியோர் தாம் உணர். எ-து. தாரணியின் கணுள்ளோர் உணர்ந்து உய்யும் பொருட்டு,—இன்று உரைத்தான். எ-து. இந்நாளிற் கூறியருளினார். எ - று.

எந்தந்தை என்பது எந்தை என மரீஇயிற்று. தொழ என்பது உரைத்த ருளும் என்னும் பிறகருத்தாவின் வினைகொண்டது. ஆய்நந்தி வினைத்தொகை. ஆய்தல் ஈண்டுக் கேட்டுச் சிந்தித்துத் தெளிதலை உணர்த்திற்று. தான் தாம் என்பன கட்டுரைச்சுவைக்கண் வந்த அசைகள். ஆல் ஒடுருபின் பொருட்டு.

மகவெனப் பல்லுயிர்களையும் பேணும் மகனும் நாமெல்லாம் நல்வழிபெற் றுய்யும்பொருட்டு ஞானபாதப் பொருளை நிலைபெறுத்தி வைத்தலாற் றந் தையை நிகர்ப்பார் என்பது போதர 'எந்தை' என்றும், குருபத்தியினும் பக் குவமுதிர்ச்சியினுஞ் சிறந்தவர் என்பது போதர 'ஏத்தித்தொழ' என்றும் கூறினார்.

தாரணி என்றது ஈண்டுத் தமிழ்வழங்கும் நிலத்தை, என்னை? அந்நிலத் தாரேதமிழ்நூல் உணர்த்தற்குரியராகலின். ஏத்தி என்றும், தொழ என்றும், வாக்கின் தொழிலும் காயத்தின் தொழிலும் கூறவே இனம்பற்றி மனத்தின் றொழிலாகிய அன்பு செய்தலும் பெறப்பட்டது.

சிந்தைசெய்தல் என்பது பரஞ்சோதிமுனிவர்பால் தாம் கேட்ட பொ ருளை மொழிபெயர்த்துக் கூறுதற்கண் வழுவாது மனத்திலே நினைத்தமைத் தலை உணர்த்திற்று. அல்லதூஉம் நாதனாருள் பெறும் நந்தியந்தேவர் சனற் குமாரமுனிவர்க்கும், சனற்குமாரமுனிவர் சத்தியஞானதரிசனிகளுக்கும், சத்தியஞானதரிசனிகள் பரஞ்சோதிமுனிவர்க்கும், பரஞ்சோதிமுனிவர் தம க்கும் உபதேசித்த முறையைக் கடைப்பிடித்துத் தாமும் அவ்வாறே பின்னை யோர்க்கும் பிரயோசனமாமாறுரைக்கத் திருவுளங் கொண்டு என்றலுமாம். அல்லதூஉம் "யான்பெற்ற வின்பம் பெறுகவிவ் வையகம்" என்று கருணைமீக் கூர்ந்து என்றலுமாம். அல்லதூஉம் அநித்தியம்பற்றி விரைந்து செயற்பால தெனச் சிந்தித்து என்றலுமாம்.

'தாரணியோர் தாமுணர' எனவே, தேவர்முனிவர் முதலியோர் உணரு மாறு இந்நூல் முன்னர்த் தேவபாடையிலே உரைக்கப்பட்டிருந்தது என்ப தூஉம், இப்போது தமிழ்ப்பாடையிலே உரைக்கப்பட்டது என்பதூஉம், 'ஏது திருட்டாந்தத்தால்' எனவே, பூவுலகோர் இனிதுணருமாறு ஏதுக்களையும் உதாரணங்களையுந் விசேடமாகத் தாமே செய்து சேர்த்துக் கூறினார் என்ப தூஉம் பெறப்படும். ஏது திருட்டாந்தங்கள் என்றது வார்த்திகம் எனப்படும் உரைச்செய்யுளினும் வெண்பாவாகிய பாச்செய்யுளினும் அமைந்தவைகளே. ஏது திருட்டாந்தத்தால் எனவே இனம்பற்றிக் கருத்துரையும் மேற்கோளும் கொள்ளப்பட்டன.

இனி, எந்தைபால் இயல்பு ஆய் நந்தி எனக் கொண்டுகூட்டி எமது பரம பிதாவாகிய சீகண்டதேவர்மாட்டுச் சிவாகமப்பொருள்கள் ஒன்றோடொன்று முரணுவனவாக மலைந்து அப்பொருட்டன்மையை வினவிய நந்திபெருமான் எனினும் அமையும். இப்பொருட்கு ஏழாவது வருவிக்க. ஆய்தல் - ஈண்டு வினவுதல்.

எனவே அம்மலைவுதீர்தற்பொருட்டுச் சீகண்டதேவரால் நந்திபெருமானுக்குச் சிவஞானபோதம் உபதேசிக்கப்பட்டதென்பது தானே போதரும்.

'எந்தை சனற்குமர னேத்தித் தொழவியல்பாய் நந்தி யுரைத்தருளு ஞானநூல்' என்பதனாற் சிவஞானபோதநூல் உபதேசிக்கப்பட்டு வந்த வரலாறும் அதன் பெருமையும் கூறப்பட்டவாறறிக.

'மெய்கண்டான்' எனவே ஆக்கியோன் பெயரும், 'நந்தியுரைத்தருளும்' எனவே வழியும், 'தாரணியோர்' எனவே தமிழ்வழங்கும் நிலமே இந்நூல் வழங்கும் நிலம் என எல்லையும், 'ஞானநூல்' எனவே நூற்பெயரும் நுதலிய பொருளும் பயனும், 'ஏதுதிருட்டாந்தத்தால்' எனவே இலக்கிய இலக்கணங்கற்றுத் தருக்கநூல் பயின்று வல்ல பக்குவரே இந்நூல் கேட்டற்குரியாரவரெனக் கேட்போரும் யாப்பும் போந்தவாறுணர்க.

பாயிர முடிந்தது.

இது புத்துரை.

## சிவஞானபோதச்சிற்றுரை

## முற்றுப்பெற்றது.

---

உ

சிவமயம்.

# சிவஞானசுவாமிகள்

சிற்றுரையில்

வெளிப்படையென விடுத்தவற்றிற்கு

ஸ்ரீ ல ஸ்ரீ

# சுப்பிரமணியதேசிகமூர்த்திகள்

## இயற்றிய வுரை.



## முதற்சூத்திரம்.

**ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று என்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி திதி நாசமுடைத்து என்றது.**

இ - ள். ஈண்டு. எ-து. இம்மூன்று அதிகாரணங்களின்வைத்து இம்முதல் அதிகாரணத்துள்,—ஒருவன் ஒருத்தி ஒன்று என்று உளதாய்ச் சுட்டப்பட்ட பிரபஞ்சம். எ-து. ஒருவனென்றும் ஒருத்தியென்றும் ஒன்றென்றும் இவ்வாறு அவயவப்பகுப்புடைத்தாயும் பலவேறுவகைத்தாய்ச் சடமாயும் முயற்கோடுமுதலியன போலத் திரிவையங்களானன்றி மெய்யாகச் சுட்டியறியப் பட்டபிரபஞ்சம் இம்மூன்று ஏதுவானும்,—உற்பத்தி திதி நாசம் உடைத்து என்றது. எ-து. தோன்றி நின்று அழிதலையுடைத்து. எ - று.

[இனி உலகமுள்ளது என்றது.]

இ - ள். உலகம். எ-து. மேற் சாதிக்கப்பட்ட முத்தொழிலுக்குரிய பிரபஞ்சம்,—உள்ளது என்றது. எ-து. உள்பொருளாம். எ - று.

[இனி உலகஞ் செய்வோனையுடைத்து என்றது.]

இ - ள். உலகம். எ-து. மேல் உள்பொருளெனச் சாதிக்கப்பட்ட பிரபஞ்சம்,—செய்வோனை உடைத்து என்றது. எ-து. தொழிற்படுத்தும் நிமித்த காரணனாகிய முதற்கடவுளையுடைத்து. எ - று.

## இரண்டாஞ்சூத்திரம்.

**ஈண்டு இவ்வான்மாக்கள் பலவும் முதல்வன்றானேயாய் நிற்கும் என்றது.**

இ - ள். ஈண்டு. எ-து. இவ்வதிகாரணம் நான்கனுள்வைத்து இம்முதலதிகரணத்துள்,—முதல்வன். எ-து. கடவுள்,—இவ்வான்மாக்கள் பலவும் ஆய். எ-து. கலப்பினால் இவ்வுயிர்களேயாய்,—தானே ஆய். எ-து. பொருட்டன்மை

யால் அவற்றின் வேறுமாய்,—இவ்வான்மாக்கள் பலவும் தானேயாய். எ-து. உடனாய் நிற்றலின் இவ்வுயிர்கள் பலவுந்தானேயாய்,—நிற்கும் என்றது. எ-து. நிற்பன். எ - று.

இனி இவ்வான்மாக்களுக்கு இருவினை முதல்வனாணை யின் வரும் என்றது.

இ - ள். இவ்வான்மாக்களுக்கு. எ-து. முதல்வன் இவ்வாறு மூவகையு மாய் நிற்றற்குரிமையுடைய உயிர்களுக்கு,—இருவினை. எ-து. முற்பிறவிகளின் ஈட்டப்பட்டு மாயையிற் கட்டுப்பட்டுக்கிடந்த புண்ணியபாவங்கள்,— முதல் வன் ஆணையின். எ-து. இறைவனுடைய சிற்சத்தியால்,—வரும் என்றது. எ-து. வரும். எ - று.

இனி இவ்வான்மாக்கள் மாறிப் பிறந்து வருமென்றது.

இ - ள். இவ்வான்மாக்கள். எ-து. இருவினைப்பயன்களை நுகர்தற்குரிய உயிர் கள்,—மாறிப் பிறந்து வரும் என்றது. எ-து. இறந்து மீளப் பிறந்து இவ்வாறே வரும். எ - று.

மூன்றாஞ்சூத்திரம்.

ஈண்டு இலதென்றலின் ஆன்மா வுளதென்றது.

இ - ள். ஈண்டு. எ-து. இவ்வேழதிகரணத்துள்வைத்து இம்முதலதிகா ணத்துள்,—இலது என்றலின். எ-து. இஃதான்மாவன்று இஃதான்மாவன்று என்றுசொல்லும் பொருளுண்மையான்,—ஆன்மா உளது என்றது. எ-து. இதனின்வேறாய் உயிரெனப்படுவதொன்றுண்டு. எ - று.

இனி எனதுடலென்றின் ஆன்மா வுளதென்றது.

இ - ள். எனது உடல் என்றலின். எ-து. நான் பருத்தேன் சிறுத்தேன் கரி யேன் மனிதன் பார்ப்பான் என உடம்பின் குணவிசேடங்களை உபசாரத்தால் உயிருக்கேற்றி வழங்கினும் யான் உடம்பு யான் கை யான் கால் என உடம் பை அவ்வாறு வழங்குவாரின்றி எனதென வேற்றுமைப்படவே யாவரும் வழங்கக் காண்டலின், அதனால்,—ஆன்மா உளது என்றது. எ- து. இவ்வுடம் பின் வெறாய் உயிரெனப்படுவதொன்றுண்டு. எ -று.

இனி ஐம்புலனறிதலின் ஆன்மா வுளதென்றது.

இ - ள். ஐம்புலன் அறிதலின். எ-து. ஐம்புலன்களையும் அறிதலான்,— ஆன்மா உளது என்றது. எ-து. இவ்விந்திரியங்களின்வேறாய் உயிரெனப்படுவ தொன்றுண்டு. எ - று.

ஐம்புலனாகிய சத்தப்பரிசரூபரசகந்தங்களை இந்திரியங் கள் ஒன்றறிந்த தொன்றறியாமையின் இவ்வைந்தினானும் ஐம்பயனுமறிவ துளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

இ-ள். ஐம்புலனாகிய சத்தப்பரிசரூபரசகந்தங்களை. எ-து. ஐந்துவிடயங்களாகிய ஓசை ஊறு ஒளி சுவை நாற்றங்களை,—இந்திரியங்கள். எ-து. சுரோத்திரம் முதலிய இந்திரியங்களுள்,—ஒன்று.எ-து. ஒருவிடயத்தை,—அறிந்தது. எ-து. அறிந்த இந்திரியம்,—ஒன்று. எ-து. மற்றொருவிடயத்தை,—அறியாமையின். எ-து. அறியாதாதலான்,—இவ்வைந்தினும். எ-து. இவ்வைந்து இந்திரியங்களாலும்,—ஐம்பயனும். எ-து. ஐம்புலன்களையும்,—அறிவது உளதாகலின். எ-து. அறியும்பொருள் உண்டாதலான்,—அதுவே. எ-து. அவ்வாறறியும் பொருளே,—அவ்வான்மாவாம் என்றது. எ-து. மேல் உரையளவை பற்றிச் சாதித்த ஆன்மா என்றவாறும். ஐம்புலனறிதலின் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

நனவின்கட் கனவு கண்டாமென்றுங் கண்டிலமென்றும் நிற்பதுளதாகலின் அதுவே அவ்வான்மாவாம் என்றது.

இ-ள். கனவு. எ-து. சொப்பனத்தினை,—கண்டாம் என்றும். எ-து.காணப்பெற்றேம் என்றும்,—கண்டிலம் என்றும். எ-து. காணப்பெற்றிலேம் என்றும்,—நனவின்கண். எ-து. சாக்கிரத்தின்கண்,—நிற்பது உளதாகலின். எ-து. மயங்கியறியும் பொருள் உண்டாதலான்,—அதுவே. எ-து. அவ்வாறு மயங்கி அறியும் பொருளே,—அவ்வான்மாவாம் என்றது. எ-து. மேல் உரையளவை பற்றிச் சாதித்த ஆன்மா என்றவாறும். ஒடுக்கமறிதலின் ஆன்மாவுளதென மேற்கொண்டது. எ-று.

இனிக் கண்படில் உண்டிவினை யின்மையின் ஆன்மா உளது என்றது.

இ-ள். கண்படில். எ-து. துயிலிடத்து,—உண்டி. எ-து. விடயங்களிடமாக வரும் இன்பத்துன்பநுகர்ச்சியும்,—வினை. எ-து. உடம்பு சேட்டித்தலும்,—இன்மையின். எ-து. இல்லாமையால்,—ஆன்மா உளது என்றது. எ-து. இப்பிராணவாயுவின் வேறாய் ஆன்மா உண்டு. எ-று.

## நான்காஞ் சூத்திரம்.

ஈண்டு இவ்வான்மாவாவது அந்தக்கரணங்களா யுள்ள மனோபுத்தி யகங்கார சித்தங்களில் ஒன்றன்று என்றது.

இ-ள். ஈண்டு. எ-து. இம்மூன்றதிகாரணத்துள்வைத்து இம்முதலதிகரணத்து,—இவ்வான்மா ஆவது. எ-து. மேற்கூறிப்போந்த உயிராவது,—அந்தக்கரணங்களாய் உள்ள மனோ புத்தி அகங்கார சித்தங்களில். எ-து. புறவந்தக்கரணங்களாகிய மனம் புத்தி அகங்காரம் சித்தங்களாகிய இவற்றின்,—ஒன்று அன்று என்றது. எ-து. வேறும். எ-று.

அகார வுகார மகங்காரம் புத்தி
மகார மனஞ்சித்தம் விந்துப்—பகாதிவற்றை
நாத முளவடிவா நாடிற் பிரணவமாம்
போதங் கடற்றிரையே போன்று.

